உ

திருச்சிற்றம்பலம்

மெய்கண்ட தேவன் மெல்லடி வாழ்க.

# திருவாசகம்

## மெய்கண்ட உரை

பகுதி — க

[இந்திய அரசு, தமிழக அரசுகளின் பொருளுதவியினால்
ஆக்கி, அச்சிட்டு வெளிவருகிறது.]

வெளியிடுபவர் :

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்,

திருநெல்வேலி.

வள்ளுவர் – 1998.

உ

சிவமயம்

மாவட்டங்களின் ஆட்சித் தலைவராகவும், இந்து அறநிலையங்களின் ஆணையாளராகவும் இருந்து ஓய்வு பெற்றுள்ள சைவத் திருவாளர்

**அ. உத்தண்டராம பிள்ளை, ஐ. ஏ. எசு., அவர்கள்**

எழுதிய

# முன்னுரை.

'தேவர் குறளும் திருநான் மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் — கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்.'

என்பது ஔவையார் அருள் வாக்கு.

'தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லலறுத்து ஆனந்த மாக்கியதே — எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.'

என்பது

இறையனுர் அருளிய திருவாசகத் துதிப்பா என்பர். சைவ சமையக் குரவர்கள் நால்வருள் ஞான மார்க்கம் என்னும் சன்மார்க்கத்தை உலகினுக்கு அருளிய மாணிக்கவாசக அடிகளாரின் திருவாசகமும் திருக்கோவையாரும் ஒப்புயர்வற்ற ஞானப் பனுவல்கள்.

செய்யுள் வடிவில் உள்ள இத்தெய்வத் தமிழ் மறையின் கவிதை நுட்பங்களையும், கருத்து நயங்களையும், இதில் பொதிந்துள்ள தத்துவங்களையும், உள்ளத்தையும் உணர்வையும் உயர்த்தும் பண்புகளையும், சாத்திர புராண விளக்கங்களையும் முழுதும் உணர்த்த யாராலும் இயலாது என்பது ஆன்றோர் புலவர்ற் பலகாலும் வற்புறுத்திக் கூறப் பெற்றிருப்பினும்

எல்லா மக்களும் உய்த்துணர்ந்து உய்தல் வேண்டு மாயின் முறையான உரைகள் மிக மிக இன்றி யமையாதன என்பதை யாரும் மறுக்க முடியாது.

'திருவாசகமென்பது பிறிதொன்றிற் கில்லாத அழகினையுடைய வாசகம்; தன்னைக் கற்பார் உள்ளத்தை உருகச் செய்து அவரைப் பேரின்பப் பெருக்கின்கண் ஆழ்த்துதற்கட் பிறிது எந்நூலுக்குமில்லாத அழகினைப் பெற்றது திருவாசக நூல்' என்றுர் மறைமலையடிகளார். பண்டிதமணி கதிரேசன் செட்டியாரவர்களும், "திருவாசகமென்பது அழகிய தெய்வத் தன்மை வாய்ந்த சொற்களால் ஆகிய செய்யுள் நூல் என்னும் பொருளை யுடையதாகும். இத்திருவாசகத் திருப்பாட்டுக்கள் தெய்வநலங் கனிந்த சொற்களாலும், சொற்றொடர் களாலும் அமைந்தவை. இனிமை, எளிமை, ஆழ முடைமை என்னும் குணங்கள் தம்பால் அமையப் பெற்றவை. மெய்யன்புடன் ஓதுவார், கேட்பார், உணர் வார் எல்லோரையும் மிக்க பேரின்பத்தில் திளைப்பித்துப் பரவசப் படுத்தும் இயல்பின. அனுபவ உண்மைகளைத் தெளிவுண்டாகும்படி விளக்குவன" எனத் தம் "கதிர்மணி விளக்கப் பேருரை"யிற் கூறியுள்ளனர்.

"அறிவாற் சிவனே" என்று ஆன்றோர் மணிவாசகப் பெருமானைப் புகழ்ந்துள்ளனர். திருவாசகம், முழுமையும் ஊன்றிக் கற்போருக்கு மாணிக்கவாசகர் தம் அருளனு பவத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைத் தாமே எழுதித் தாம் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற வேண்டுமென்ற பெருநோக்குடன் அருளிய ஞானவரலாருகவே திகழ் கின்றது. கற்பார் நிலைக்குத் தக்கவாறு உணர்ந்து பயன்பெறும் வகையில் அமைந்த ஒப்புயர்வற்ற ஞான நெறி நூல்; தலைசிறந்த பேரிலக்கிய நூல்; எல்லோராலும் எக்காலத்திலும் ஏற்றுக் கொள்ளப் பெறும் உண்மை களையும், நெறிகளையும், கருத்துக்களையும், தத்துவங் களையும் தன்னகத்தே கொண்டுள்ள தமிழ் மறைநூல் திருவாசகமென்னும் திருஅருள் நூல்!"

'திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்பது அநுபவத்தின் பயனாக உருவாகிய பழமொழி; அன்பைப் பெருக்கி என்பை உருக்கி இறைவர்க்கே ஆளாக்கும் இன்பத் திருவாசகமும் திருக்கோவையாரும் சைவத் திருமுறைகளுள் எட்டாந் திருமுறையாக அமைந்துள்ளன. பன்னிரு திருமுறை களும் சிவஞானபோதச் சூத்திரங்களுக்குப் பிரமாணங் களாகக் கருதப் பெறுகின்றன.

'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த விட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே',

என்னும் எட்டாஞ் சூத்திரத்துக்கு விளக்கமாக அமைந்துள்ளன, மாணிக்கவாசகப் பெருமான் புராண வரலாறும் திருவாசகப் பாடல்களின் உட்பொருளும் என்பர் ஆன்றோர். உயிரின் இருவினையொப்பு, சத்திநிபாதம், மலபரிபாகம் என்னும் பக்குவ நிலை கண்டு இறைவனே குருவடிவாக வந்து அகப்பற்று புறப்பற்றுக்களை நீக்கித் தன்னையடையுமாறு பணித்த முறையை உணர்த்துவன சிவஞானபோத எட்டாஞ் சூத்திரமும், திருவாசகமென்னும் தெய்வத்தமிழ் மறையும், மணிவாசகர் வாழ்க்கை வரலாறும்.

'பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து—மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தே.'

என்பது திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் அருளிய திருக்களிற்றுப்படியாரில் உள்ள புகழ்மாலை.

தில்லையில், கூத்தப்பிரானே அந்தணர் வடிவில் தோன்றி அடிகள் வாயிலாகத் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் பாடச்செய்து தமது திருக் கரங்களாலேயே ஏட்டில் எழுதி, 'அழகிய திருச்சிற்றம்பல முடையான்' என்று கையெழுத்திட்டுச் சுவடிகளைக்

கனகசபையில் வைத்துத் தில்லைவாழந்தணர்கள் மூலம் மாணிக்கவாசகப் பெருமானை அழைப்பித்துத் தன்னடியிற் சேர்த்துக்கொண்ட வரலாறு உலகறிந்ததே. கோவை, திருவாசகத்துக்குப் பொருள் கேட்ட தில்லைவாழ் அந்தணருக்கு அம்பலக் கூத்தரைக் காட்டி அவரே பொருளென்று விளக்கி மணிவாசகப் பெருந்தகையார் ஆனி மக நன்னாளில் அனைவருங் காணச் சிவசாயுச்சிய மடைந்தாரென்பது வரலாறு. இதை மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளையும் "கடையூழிவருந் தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள், உடையார் உன் வாசகத்தில் ஒரு பிரதி கருதினதே" என்று நயம்படக் குறிப்பிடுகின்றார். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையும்,

"எழுதிடும் வேலை பூமேல் இருப்பவன் இயற்றப் போக்கி
எழுதுதல் இல்லா நூல்சொற்று இனிதமர் தருமா தேவை
எழுதெழு தெனப்பல் பாச்சொற்று இயைதரப் பெயரும் ஈற்றில்
எழுதிடச் செய்தகோமான் இணையடி முடிமேல் வைப்பாம்"

என்று பாடியுள்ளார்.

மாணிக்கவாசகப் பெருமான் அன்பு நெறிகாட்டிய அடியவர் என்பதும் அவர் அருளிய திருவாசகமே அன்பு நெறிக்குத் துணை என்பதும்

"வருவா சகத்தின் முற்றுணர்ந்தோனை வண்டில்லை மன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவை கண்டேயும் மற் றப்பொருளைத்
தெருளாத உள்ளத்தவர் கவிபாடிச் சிரிப்பிப்பரே."

என்னும் நம்பியாண்டார் நம்பிகள் திருவாக்கால் நன்கு விளங்கும்.

'உருவெளி தான் வாதவூர் உத்தமர்க்கல் லாலினமுங்
குருவழி நின்றார்க்கு முண்டோ கூறாய் பராபரமே'

என்றும்

'போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூர் ஐயன் அன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ'

என்றும் தாயுமானசுவாமிகள் இறைவன் திருப் பெருந்துறையில் குருந்த மரத்தடியில் குருவடிவாக

எழுந்தருளித் திருவாதவூரரை ஆட்கொண்ட சிறப்பினை யும் ஞான மயமான தில்லையம்பதியில் ஊமைப் பெண்ணைப் பாடவைத்துத் திருச்சாழற் பதிகத்தின் மூலம் புத்தரை வாதில் வென்ற அற்புதத்தையும் புகழ்ந்து போற்றியுள்ளார். தாயுமான சுவாமிகளைப் பெரிதும் கவர்ந்த திருவாசகப் பாடல் கோவில் திருப்பதிகத்தில் உள்ள ஏழாவது பாடல்

'இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின்றன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே?'

இதன்கண் உள்ள 'நினைப்பற நினைந்தேன்,' என்னும் அரிய சொற்றொடர் தாயுமான சுவாமிகளை மிகவும் கவர்ந்தது வியப்பன்று. நினைப்பற நினைத்த லாவது தற்போதம் கெட்டு சிவபோத அனுபூதி பெறும் பொழுது உள்ளும் புறமும் இறைவனையன்றி வேறொன் றும் காணாது வேறொரு நினைப்புமில்லாமல் இருக்கும் நிலையில் மறந்து பின் நினைத்தல் இன்றி எப்பொழுதும் நினைத்துக் கொண்டே இருக்கின்ற நிலை என்று உரை யாசிரியர் நன்கு விளக்கியுள்ளார்.

சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றும் தன்மையே தத்துவங்களெல்லாவற்றையும் களைந்து சென்று உயிர் இறைவனிடங் கலந்து ஏகனாகி நிற்கின்ற நிலை.

'நினைப்பறவே தான் நினைந்தேன் என்றநிலை நாடி
அனைத்துமாம் அப்பொருளில் ஆழுநாள் எந்நாளோ?"
சென்று சென்றே யணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாகி
நின்றுவிடும் என்றநெறி நிற்குநாள் எந்நாளோ?"

என்பது தாயுமானவர் அருள்வாக்கு. உரையாசிரியர்,

தணிகைப் புராணத்தினின்றும் மேற்கோள் காட்டி யுள்ளார்.

'தேயுந் தொறுந் தொறும் இன்பந் தரும் சந்து
ஆயுந் தொறுந் தொறும் இன்பந் தருங் கலை ஆங்கறிவு
மாயுந் தொறுந் தொறும் இன்பந் தரும் வள்ளல் வார்கழல்கள்,

(திருத்தணிகைப் புராணம்)

தாயுமான சுவாமிகளைக் கவர்ந்த மற்ருெரு பாடல் திருவெம்பாவையில் வரும் முதற் பாடல்.

"ஆதியந்த மில்லா அரியபரஞ்சோதி என்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்குநாள் எந்நாளோ ?"

என்பது அவர் அருள்வாக்கு. 'ஆதிபகவன் முதற்றே யுலகு.' இறைவன் ஆதியந்தமில்லாப் பரம்பொருள். உயிர்கள் தோன்றவும் ஒடுங்கவும் நிலைக்களனுக உள்ள இறைவன் ஆதியந்தமில்லாது அங்கிங் கெனுதபடி எங்கும் பிரகாசமாய் நீக்கமற நிறைந்திருக்கும் அரிய பெரிய ஒளிப்பிழம்பு; அலகில் சோதியன்; கேழில் பரஞ்சோதி, மல நீக்கம் பெருத உயிர்களுக்கு அரியவன். மெய்ஞ்ஞானியர் உள்ளத்து எழுகின்ற ஞாயிறே போன்ற பேரொளி. அருட்பெருஞ்சோதி தனிப் பெருங்கருணை. 'அவ்வரிய பரஞ்சோதியிற் கலந்து ஏகனுகி நிற்கும் நாள் எந்நாளோ ?' என்று பாடுகிருர் தாயுமான சுவாமிகள்.

திருவாசகப் பாடல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த மேனுட்டறிஞர் போப்பையர் வாயிலாகத் தமிழ் மொழியின் பெருமையையும் திருவாசகத்தின் சிறப்பையும் உலகம் நன்கு அறிந்தது.

நம்மவரிற் சிலரும் திருவாசகத்தையும் மாணிக்க வாசகரையும் பற்றி இம் மொழிபெயர்ப்பு மூல மாகவே தெரிந்து கொண்டனர் என்ருல் அப்

பெரியாருக்குத் தமிழுலகம் எவ்வளவு கடமைப்பட்டுள்ள தென்று சொல்லவும் வேண்டுமோ? 'இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க' என்ற சொற்றொடர் அவரை மிகவும் கவர்ந்ததென்பர். அவர் திருவாசகத்தை 'நெஞ்சுருக்கி' என்றழைத்தனர். போப்பையர் தமிழில் கடிதங்கள் எழுதும் போது திருவாசகத்தின் ஒரு தொடருடன் தொடங்குவது வழக்கமாம். அவ்வாறு ஒரு முறை முன்னாள் நீதிபதி சர். S. சுப்பிரமணிய ஐயர் அவர்கட்கு எழுதிய பொழுது அவரையுமறியாமற் கண்ணீர் மல்கிக் கடிதத்தில் விழுந்து சில எழுத்துக்களை மறைத்து விட்டாலும் திருவாசகத்தால் எழுந்த கண்ணீரும் புனிதமானதே என்று எண்ணி அப்படியே அனுப்பியதாக எழுதியிருந்தாராம். பிறநாட்டில் தோன்றி பிறமதப் பிரசாரத்தில் திளைத்திருந்த ஒருவரின் மனத்தையே கரைக்கும் ஆற்றல் பெற்ற திருவாசகத்தை 'மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகம்' என்று பேராசிரியர் சுந்தரம் பிள்ளை கூறுவது சாலப் பொருத்தமேயன்றோ! திருவாசகம் போன்று ஒருவர் மனத்தை உருக்கிக் கண்ணீர் மல்கச் செய்ய வல்ல நூல் வேறொன்றுமில்லை. இவ்வுண்மையைக் கருதியே,

'திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துருகக் கண்கள்
தொடு மணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம் மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி மன்பதை யுலகின் மற்றைய ரிலரே',

என்றார் சிவப்பிரகாச சுவாமிகள்.

இராமலிங்க சுவாமிகள் திருஞானசம்பந்தப் பெருமானையே தமக்கு ஆசிரியராகக் கொண்டிருந்தாலும் திருவாசகத்திலேயே அவருக்குத் தனிப்பற்றுதல் இருந்தது என்பது அவர் அருளிய 'ஆளுடையவடிகள் அருண்மாலைப்' பாடல்களிலிருந்து நன்கு விளங்குகிறது. அடிகள் தமது திருமணத்தன்று இரவு முழுவதும் திருவாசகத்தையே பாடிக்கொண்டிருந்தாரென்பது வரலாறு.

'வருமொழி செய் மாணிக்கவாசக நின் வாசகத்தில்
ஒருமொழியே யென்னையு மென்னுடையனையு மொன்றுவித்துத்
தருமொழியா மென்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே.'

என்பது அவர் புகழ் மாலை.

ஏனைய சமையங்களில் சமைய முதல்வர்களின் அருள் வாக்குகளை மற்றவர் மூலமாக அறிகிறோமேயன்றி அவர்கள் இயற்றிய நூல்களைக் காண்கிலோம். தேவார திருவாசக ஆசிரியர்களோ 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற குறிக்கோளுடன் எல்லோரும் அப்பேரின்பப் பேற்றை எளிதிற் பெற்று இன்புற்றிருக்குமாறு தென்தமிழ்மறையாகிய அருட் பாடல்களை வாரி வழங்கியுள்ளனர்.

பரஞ்சோதி முனிவர், கச்சியப்ப சிவாசாரியார், அதிவீரராம பாண்டியர், காளிங்கப் புலவர், நிரம்ப அழகிய தேசிகர், சைவ எல்லப்ப நாவலர், வைத்திய நாத தேசிகர், திரிகூடராசப்பக் கவிராயர், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர், மகா வித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை, தாண்டவராய சுவாமிகள், இராமலிங்க அடிகளார், கடவுள் மாமுனிவர் முதலியோர் மாணிக்கவாசக சுவாமிகளைப் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

அண்மையில் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயர், மறைமலையடிகள் முதலியோர் திருவாசகத்துட் சில பாடல்களை மிகவும் விரும்பிப் பாடி வந்தனர் என்று அறிகிறோம். ஆறுமுக நாவலரைக் கவர்ந்த பாடல்

'அல்லிக் கமலத் தயனும் மாலும்
அல்லா தவரு மமரர் கோனும்
சொல்லிப் பரவு நாமத் தானைச்
சொல்லும் பொருளு மிறந்த சுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் னமுதை யமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே.'

என்ற புணர்ச்சிப்பத்து நாலாவது பாடல்.

மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத ஐயரவர்கள்

'பிணக்கி லாதபெருந் துறைப்பெரு
மானுன் னாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோ ரின்ப மேவருந்
துன்ப மேதுடைத் தெம்பிரா
னுணக்கி லாததோர் வித்து மேல்விளை
யாம லென்வினை யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே'

என்று தொடங்கும்

திருக்கழுக்குன்றப் பதிகத்தைப் பாடியும் கேட்டும் இறைவனடி எய்திய வரலாறு யாவரும் அறிந்ததே.

மறைமலையடிகள் நாள்தோறும் அம்மையப்பரைத் தொழுது பாடிய பாடல்

''தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையு முடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ!''

(திருக்கோத்தும்பீ-18-வது பாடல்)

அம்மையப்பர் திருக்கோலத்தை இத்திருப்பாடல் மிக அழகாகச் சித்திரிக்கின்றது. வலப்பாகத்தில் புலித் தோலும் குழையும் திருநீறும் சூலமும்; இடப்பாகத்தில்

துகிலும் சுருள் தோடும் சாந்தும் பசுங்கிளியும் வளைகளும்; அம்மையப்பர் திருவடிவத்தைப் படம் பிடித்துக் காட்டுவதுபோல் இது அமைந்துள்ளது.

மாணிக்கவாசகர் வாழ்க்கை வரலாற்றினைத் திருவிளையாடற் புராணத்தினின்றும், திருவாதவூர்ப் புராணத்தினின்றும், திருவாசகப் பாடல்களின்றும் ஓரளவு அறிகிறோம். அவருடைய பிறப்பு, அவர் பாண்டிய மன்னனிடம் அமைச்சராக இருந்தது, பாண்டியனால் குதிரைகள் வாங்கும் பொருட்டு அனுப்பப் பெற்றது, அவரைத் திருப்பெருந்துறையில் இறைவன் குருவடிவாக வந்து ஆட்கொண்டது, அவர் பொருள்களையெல்லாம் திருப்பணிகளிற் செலவிட்டமை, அவர் பொருட்டு இறைவன் நரியைப் பரியாக்கிப் பரியை மீண்டும் நரியாக்கித் திருவிளையாடல் புரிந்தமையும், பாண்டிய மன்னனால் மணிவாசகர் துன்புறுத்தப் பட்டதும், அவருக்காகவும், வந்திக்காகவும், வைகை வெள்ளத்தைத் தடுக்கக் கூலியாளாய் வந்து பிரம்படி பட்டு மறைந்து அவ்வடி அரசனுட்பட அண்ட பேரண்டங்களில் உள்ள எல்லா உயிர்கள் மேலும் பட்டதும் மணிவாசகர் பெருமையையும் வந்தியின் பத்தியையும் உலகுக்கு அறிவித்தமையும்; திருவாசகம், திருக்கோவையார் என்னும் அருள் நூல்களைப் பாடி இறை பணி நின்று இறைவனுடன் இரண்டறக் கலந்தமையும் அவர் வாழ்க்கை வரலாற்றில் நாம் காணும் தன்மைப் பகுதிகள். இறைவன் அவரைத் திருப்பெருந்துறையில் குருவடிவாய் வந்து குருந்த மரத்தடியில் ஆட்கொண்ட அருட் செயலுக்குத் திருப்பெருந்துறையில் 'செழுமலர்க்குருந்த மேவிய சீர் அத்தனே' என்ற அவர் பாடலே சான்றாக அமைந்துள்ளது. நரியைப் பரியாக்கிய நிகழ்ச்சிக்கு

"நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞால மெல்லா நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெலலாம்
பிச்சதேற்றும் பெருந்துறையான்"

போன்ற அடிகளே அகச்சான்ருய் உள்ளன. பிட்டுக்கு மண் சுமந்து பிரம்பாலடிபட்ட திருவிளையாடலுக்கு அகச் சான்றுகள் பல உள்ளன. அவற்றுட் சில,

"ஆங்கது தன்னில் அடியவட்காகப்
பாங்காய் மண் சுமந்து அருளிய பரிசும்".

(கீர்த்தித் திருஅகவல் 46-47)

"பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்துறைப் பெரும் பித்தனே!".

(திருக்கழுக்குன்றப் பதிகம் 2)

"மண்பான் மதுரையில் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ".

(திருப்பூவல்லி 16)

"கண்சுமந்த நெற்றிக்கடவுள் கலிமதுரை
மணசுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மாஞய்".

(திரு அம்மானை 8)

மாணிக்கவாசக சுவாமிகள் இன்னின்ன பகுதிகளை இன்னின்ன இடத்திற் பாடினுர் என்பதிற் கருத்து வேறு பாடு உண்டு. திருவாதவூரர் புராணம், திருவிளையாடற் புராணம், மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள் எழுதிய திருப்பெருந்துறைப் புராணம் இவற்றுட் காணும் முறைகள், மறைமலையடிகள் கூறும் முறை, இப்பொழுது பதிப்புகளிற் காணும் முறை இவைகளில் வேறுபாடுகள் காண்கிருேம். ஆனுல் திருப் பெருந்துறையிலும் தில்லையிலுமே பெரும் பகுதிகள் பாடப் பெற்றன என்பதில் ஐயமில்லை.

மணிவாசகப் பெருமான் வரலாற்றில் அரசன் குதிரைக்காகக் கொடுத்த பொருள்களையெல்லாம் குருபரன் பணித்தவாறே திருப்பணிகளிற் செலவிட்டமை பொருந்துமா? என்ற வினவிற்கு விடை காண்பது எளிதல்ல. முதற்கண் மாணிக்கவாசகர் குதிரைகள் வாங்குவதற்காகக் கொடுத்த பொருளைச் செலவிடும் பொழுது இருந்த நிலை என்ன என்பதை ஆராய்ந்தறிதல் வேண்டும். குருவடிவாய் எழுந்தருளிய இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுத் தமது பசுபோத நிலை மாறிச் சிவபோத நிலையில் இருந்த பொழுது தமது முன்னைய அமைச்சு நிலையை முற்றிலும் மறந்து, தம் உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் இறைவனுக்கு உடைமையாக்கி அவ்விறைவன் ஆணைப்படியே பொருளைச் செலவிட்டார். உலகிற் பகையையும் போர்களையும் விலக்குவதற்கு இறையுணர்வும் உயிர்க் கருணையுமே சிறந்த முறைகள், போர்க் கருவிகளையும் படைகளையும் பெருக்குவதன்று என்பதை வலியுறுத்தவே இறைவன் திருவருளால் இச்செயல் நிகழ்ந்தது என்றே கொள்ள வேண்டும். குருவடிவில் வந்த இறைவனாலேயே ஆட்கொள்ளப்பட்டுத் தற்போதமிழந்து சிவபோத நிலையில் இருந்த மணிவாசகப் பெருந்தகையார் இறைவன் ஆசியுடன் மன்னனாற் போர்ப்படைகளுக்காகக் கொடுக்கப்பட்ட பொருள்களைத் திருப்பணிகளிற் செலவு செய்து மக்களிடையே அன்பு நெறியையும் அறவாழ்க்கையையும் நிலைபெறச் செய்தலே போர்களைத் தடுக்கச் சிறந்த வழி எனக் கருதிச் செய்த செயல் ஆழ்ந்து ஆராய்ந்து பார்ப்பவர்க்குத் தவறான செயலன்று என்பது தெற்றென விளங்கும். இறைவன் திருவிளையாடல்களுக்குக் காரண காரியத் தொடர்பு காண இயலாது. அவை அறிவியல் நூல் முறைகளுக்கு அப்பாற் பட்டவை.

திருச்சதகம் 96-வது பாடலில்

'விச்சதின்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண்ணகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்சகப் பெரும்
புலையனேனையும் கோவில் வாயிலிற்
பிச்சனுக்கினாய் பெரிய அன்பருக்கு உரியனுக்கினாய்.'

என்ற பகுதியிலும் இறைவன் திருவிளையாடலின் தன்மையை அடிகள் இனிது விளக்கியுள்ளார்.

மாணிக்கவாசக சுவாமிகள் அன்பு நெறியில் தலை சிறந்து விளங்கினவர். "இறைவனிடத்து அன்பு செலுத்துவதே நம் கடமை. எவ்வித இடையூறு வரினும் அவன் திருவடியே துணை" என்பதைக் குழைத்த பத்து 7-வது பாடலில் நன்கு விளக்கியுள்ளார்.

"அன்றே யென்ற னுவியு
முடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
வின்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ விதற்கு நாயகமே!"

மாணிக்கவாசக சுவாமிகளின் இறை அன்பு அளவில்லாதது. காதலி காதலனிடம் கொண்ட அன்பையும் விடச் சிறந்தது. உலகில் எல்லா உயிர்களும் இறைவன் முன்னிலையிற் பெண்களே. அவன் ஒருவனே ஏக நாயகன். இதுவே சன்மார்க்க நெறியின் அடிப்படைத் தத்துவம்.

'தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினன்'

(திரு அம்மானை 11)

என்றும்,

'ஊனையும் நின்றுருக்கி என் வினையை ஒட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையு மொத்தினிய
கோனவன்'

என்றும்,

(திரு அம்மானை 14)

'சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன் திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவே னுள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன் கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வே னனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்'

(திரு அம்மானை 17)

என்றும் திரு அம்மானைப் பதிகம் 11, 14, 17வது பாடல்களிற் காதலாகிக் கசிந்துருகிப் பாடியுள்ளார்.

நமது சமையத்தில் சமையாச்சாரியார்களுடைய வரலாறுகளைப் பண்டைக் காலத்திற் போற்றி அமைக்காத காரணத்தால் மாணிக்கவாசக சுவாமிகளின் காலத்தைத் திட்டவட்டமாக அறியக் கூடாதிருப்பது நமது தவக் குறையே. நமது மக்கள் ஆதி காலந்தொட்டுச் சாதக கர்ம நாம கரணங்களை மிக முக்கியமான சடங்குகளாகக் கொண்டு ஒழுகி வந்திருப்பினும் நமது சமையாச்சாரியருள் தனிச் சிறப்புடைய ஒருவருடைய பிறப்பு நன்னாளையே நிச்சயிக்க முடியாமல் இருப்பது பெருவியப்பிற்குரியதே. இவர் எக் காலத்தவராயினும் எல்லாக் காலங்களுக்கும் உரியவர். எல்லாக் காலங்களிலும் இவர் அருளிய தெய்வமறைத் திருவாசகம் எல்லா நாட்டு மக்களுக்கும் உரிய ஒப்புயர்வற்ற அருள் நூல் என்பது மறுக்க முடியாத உண்மை. ஒரு நூலின் பெருமையைக் காலத்தாற் காணலாம் என்று மொழி நூல் வல்லுனர் கூறுவர். உயரிய உண்மைகள் அமைந்த நூல்கள் எனின் காலம் செல்லச் செல்ல அவற்றின் சிறப்பும் பயனும் பெருகும். அந்நூல்களைக் கற்றோர் வண்மையும் வளமும் பெற்று விளங்குவர்.

அந்நூல்களின் பெருமையும் வளர்ந்து கொண்டே வரும். திருக்குறள், திருமுறைகள், திவ்யப்பிரபந்தங்கள் போன்ற அருள் நூல்களும் திருவாசகமும் இவ்வகையைச் சேர்ந்தவை. எக்காலத்துக்கும் பொதுவான சமையக் கருத்துக்கள் நிறைந்து திகழ்கின்ற காரணத்தாலும் எல்லா மக்களும் இறைவனிடம் அன்பைப் பெருக்கி நெஞ்சுருக்கும் முறையிற் பாடல்கள் அமைந்திருக்கும் காரணத்தாலும் திருவாசகம் காலத்தை வென்ற நூல் என்பது தெளிவு.

இத் தெய்வத் தமிழ் மறை நூல் தமிழ் வேதம் மாத்திரமல்ல. அன்பு நெறி காட்டும் தமிழ்ப் பேரிலக்கியம், ஞானக் கருவூலம், சைவ சித்தாந்தக் கருத்துக்கள் முழுதும் அடங்கிய சாத்திர நூல், பத்திச் சுவையைப் பெருக்கும் தோத்திர நூல். இவ்வரிய நூலுக்குப் பழங்காலத்தில் யாரும் உரை எழுதியதாகத் தெரியவில்லை. அண்மையில் சில உரைகள் வெளி வந்துள்ளன. மறைமலையடிகள், மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் முதலியோர் சில பகுதிகளுக்கு உரை எழுதியுள்ளனர். யாழ்ப்பாணம் நவநீத கிருட்டிண பாரதியார், பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் முதலியோரும் உரை எழுதியுள்ளனர். ஆனால் பொதுவாகத் தேவார திரு வாசகங்களுக்கு உரை எழுதுவது எளிதல்ல என்ற எண்ணம் பல பெரியோர்களிடம் இருந்தது.

ஆனால் மாணிக்கவாசகப் பெருமானே தமது சிவபுராணத்தில்

"சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து"

என்று கூறியுள்ளார்.

நம்முடைய சமையத்தின் அடிப்படைத் தத்துவங் களும் உண்மைகளும் மக்களிடையே போதிய அளவு பரவாதிருப்பதற்கு ஒரு காரணம் நமது சமைய நூல்கள் எல்லோருக்கும் விளங்கும்படியான எளிய நடையில் அமைக்கப்படாமையும் நல்ல உரைகள் எழுதப்படா மையுமே என்று தோன்றுகிறது. ஆங்கில மொழியில் சேக்சுப்பியர், மில்டன் முதலிய பெருங் கவிஞர்களின் காவியங்களும் பாடல்களும் உரை நூல்கள் தோன்றிய பின்னரே மிகச் சிறந்து விளங்கினவாகத் தெரிகிறது. எனவே திருவாசகம் போன்ற அருள் நூல்களுக்கு விரிவுரைகள் மிக மிக இன்றியமையாதன என்பதில் ஐயமில்லை.

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் இச் சீரிய முயற்சியிற் பங்கு கொண்டு செந்தமிழ்ப் புலவர்கள் திருவாளர்கள் டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளை அவர்கள், பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்கள், வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள், ஆ. அருளப்பன் அவர்கள், டாக்டர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், ஆகியவர்களைக் கொண்டு திருவாசகத்துக்கு மெய் கண்ட உரை ஆக்கி வெளியிட முன் வந்திருப்பதைச் சமையப் பற்றுள்ள தமிழ்ப் பெருமக்கள் போற்றிப் பாராட்டி நன்றி செலுத்த மிகவும் கடமைப் பட்டுள் ளனர். இவ்வுரை நூலின் சிறப்பியல்புகளைச் சுருக்க மாகக் குறிப்பிட விரும்புகிறேன். இவ்வுரையாசிரியர்கள் சைவ சமைய சாத்திர தோத்திர நூல்களில் மட்டு மன்றிப் பிற தமிழிலக்கியங்களிலும் பிறமொழி இலக்கி யங்களிலும் ஆழ்ந்து அகன்ற நுண்ணறிவு பெற்ற புலவர்கள்; போப்பையருடைய ஆங்கில மொழி பெயர்ப் பையும் விளக்கங்களையும் நன்கு கற்று அறிந்தவர்கள். இப்பேருரையில் ஆங்காங்கே சிவஞான போதம், சிவஞான சித்தியார், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், உண்மை விளக்கம், திருவருட் பயன், சிவஞான பாடியம், உண்மை நெறி விளக்கம் முதலிய

சாத்திர நூல்களினின்றும் ஏராளமான மேற்கோள்கள் காட்டியுள்ளார்கள். ஆங்காங்கே திருக்குறளிலிருந்தும் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் தேவாரங் களிலிருந்தும் ஏனைய திருமுறைகளிலிருந்தும் சிலப் பதிகாரம், சீவகசிந்தாமணி, மணிமேகலை முதலிய காப்பியங்களிலிருந்தும் ஒப்புமைகள் காட்டப் பெற்றி ருக்கின்றன. தணிகைப் புராணம், காஞ்சிப் புராணம், திருவிளையாடற் புராணம் முதலிய தல புராணங்களி லிருந்தும் பல குறிப்புகள் தரப்பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு பகுதியிலும் முதலில் அப்பகுதியின் விளக்கம் நல்ல முறையில் அமைந்திருக்கின்றது.

மணிவாசகப் பெருமான் இறைவனிடம் சிறப்பாக வேண்டுவன அழுதடியடையும் பேற்றினையும் அடியார் நடுவுள் இருக்கும் அருளையுமே. – 'வினையே னழுதாலுன்னைப் பெறலாமே' (திருச்சதகம்.)

''உடையா ளுன்ற னடுவிருக்கு
முடையா ணடுவு ணீயிருத்தி
யடியே னடுவு ளிருவீரு
மிருப்ப தானாலடி யேனுன்
னடியார் நடுவு ளிருக்குமரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென் கருத்து
முடியும் வண்ண முன்னின்றே.

(திருக்கோவில் மூத்ததிருப்பதிகம்)

திருவாசகம் திருக்கோவையாரிலிருந்தே பல பகுதி களுக்கு ஒப்புமை காட்டியிருப்பது தனிச் சிறப்பாகும். 'நாத நாத என்றழுது அரற்றி, பாதம் எய்தினர் பாதம் எய்தவும்' என்ற அடிகளில் திருவாசக உட்கருத்து நன்கு வற்புறுத்தப் பெறுகின்றது.

'வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்ற கருத்தும், 'உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்' என்ற கருத்தும் இவ்விரண்டு அடிகளில்

அமைந்திருத்தலைக் காண்கிறோம். ஒவ்வொரு பகுதிக்கும் பதப்பிரிவு, உரைநயம், பொழிப்புரை, விளக்கவுரை அமைந்துள்ளன. இப்பேருரை திருவாசகத்தின் உட்பொருளை நன்கு உணர்ந்து பலன் பெறப் பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

சிவபுராணப் பகுதியில் மணிவாசகப் பெருமானுக்கு இறைவன் உணர்த்திய திருவைந்தெழுத்தின் உண்மை விளக்கமும் இறைவனுடைய ஐந்தொழில் விளக்கமும் நன்கு அமைந்துள்ளன. இப்பகுதியில் புராண வரலாறுகளில் ஏதும் காணப்படாமை உற்றுணரத் தக்கது. கீர்த்தித் திருவகவலில் முப்பத்து மூன்று முப்பத்து நான்காவது வரிகளில்

"மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்"

என்ற பகுதிக்கு விளக்கமாகக் கொங்கு மண்டல சதகத்தில் உள்ள வரலாறு குறிக்கப்பட்டுள்ளது. மணலால் நிரப்பப்பட்ட கொள்ளுப் பையே இலிங்க வடிவாகி இறைவன் காட்சி தந்து அப்பெருமானே முக்கணீசர் என்ற பெயருடன் திருக்கோவில் கொண்டு அருளிய தலம் அவிநாசிக்கருகே உள்ளது. அத் திருக்கோவில் அண்மையிலுள்ள வாழைத் தோட்டத்து ஐயனார் ஆலயத்துடன் இணைக்கப் பெற்றுள்ளது. கீர்த்தித் திரு அகவல் 71, 72-ம் வரிகளில்

"தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்."

என்ற அடிகளுக்கேற்பத் திருத்தேவூர் தேவபுரீசுரர் திருக்கோவிலுக்குத் தெற்கே தீவு போன்ற இடத்தில் ஒரு சிறு கோவில் உள்ளது. அங்கு சிவபெருமான் வந்து கன்றுக்குப் பால் கொடுத்த சித்திரம் கல்லிற் செதுக்கப் பெற்றிக்கின்றது. இக்கோவில் சிதைவுற்றிருக்கிறது. திருத்தேவூர்க் கோவிலாரும் அரசாங்கமும் மக்களும் இத்திருப்பணியை விரைவில் மேற்

கொண்டு பூர்த்தி செய்ய வேண்டும். 'கோ' என்பதற்குப் 'பசு' என்ற பொருளே இங்கு பொருத்தமாகத் தோன்றுகிறது; அரசன் என்ற பொருள் கொள்ளத்தக்க ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. திருச்சதகம் பத்தாவது பாடலில் வரும் 'புகவே தகேன் உனக்கன்பருள்' என்ற சொற்றொடருக்குப் பணிவுடைய தொண்டரை ஆட்கொண்டு உயர்த்துவதும் செருக்குடைய மற்றவரைத் தாழ்த்துவதும் இறைவனியல்பு என்பது நன்கு விளக்கப் பெற்றுள்ளது. திருச்சதகத்தில் 42வது பாடல் "இருகை யானையை ஒத்திருந்து" என்று தொடங்கும் பாடலுக்கும் பொருத்தமான விளக்கம் கூறப் பெற்றுள்ளது. திருச்சதகம் 90 வது பாடல்:

"யானே பொய்யென் னெஞ்சும்
பொய்யென் னன்பும் பொய்
யானால் வினையே னழுதா
லுன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின்
றெளிவே தித்திக்கும்
மானே யருளா யடியே
னுனைவந் துறுமாறே."

என்பது

உருகி அழுவதற்குத் தடையாய் இருப்பது தீவினை என்பதை 'வினையேன் அழுதாலுன்னைப் பெறலாமே' என்று மணிவாசகர் அழுதற்குரிய வன்மையை இறைவனிடம் வேண்டினார் என்று உரையாசிரியர் நன்கு விளக்கியுள்ளார். இதனாலன்றோ பரஞ்சோதி முனிவரும்,

"எழுதரும் மறைகள் தேறு இறைவனை எல்லிற் கங்குற்
பொழுதறு காலத்தென்றும் பூசனைவிடாது செய்து
தொழுதகை தலைமீ தேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி
அழுதுஅடி யடைந்தஅன்ப னடியவர்க்கடிமை செய்வாம்"

என்று போற்றியுள்ளார்.

''பெருந் துறையிற் சிவபெருமான் அருளுதலும் பெருங்கருணைப் பெற்றி நோக்கிக்
கரைந்து கரைந்திருகண்ணீர் மழை வாரத் துரிய நிலை கடந்து போந்து
திருந்து பெருஞ் சிவபோகக் கொழுந்தேறல் வாய் மடுத்துத் தேக்கிச் செம்மாந்
திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ ரடியிணைகள் போற்றி.''

என்பது சிவஞான முனிவர் புகழ்மாலை.

திருச்சதகம் 48வது பாடலுக்கு மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தினின்றும் ரா. விசுவநாதையரவர்களாற் பதிப்பிக்கப் பெற்றுள்ள சீகாழித் தாண்டவராயர் திருவாசக வியாக்கியானத்தில் 'காணலாம் பரமே' என்பதை வினாவாகக் கொண்டு பார்ப்பு என்பதற்கு விலங்கின் குட்டி எனப் பொருள் கொண்டு திருவிளையாடற் புராணத்தில் வரும் பன்றிக் குட்டிகள் போலப் பரிபாக முடையேனல்லேன் என்று உரை கூறப்பெற்றுள்ளது.

நீத்தல் விண்ணப்பத்தில் மாணிக்கவாசகர் தன்னைக் கடையவன் எனக் கூறிக்கொண்டு முடிவில் இறைவனைக் கடையவனாக வைத்து முடித்திருக்கின்ற சிறப்பினை உரையாசிரியர் நன்கு காட்டியுள்ளார். நீத்தல் விண்ணப்பம் 2-வது பாடலில் உள்ள

'நின் விழுத் தொழும்பின் உள்ளேன்'

என்பதற்கு

'உன் சீரடியார் செய்யும் பணியை உட்கொள்ளேன்'

என்று திருவாசக வியாக்கியானத்தில் சீர்காழித் தாண்டவராயர் உரை கூறியுள்ளார். திரு அம்மானை 20-வது பாட்டில் உள்ள

'சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல் புகழே
பற்றியிப் பாசத்தைப பற்றற நாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய்'

என்ற பகுதிக்கு

'இருள் சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு';

'பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு'

என்ற குறள்களை ஒப்புமை காட்டியிருப்பது அருமையாக உள்ளது. "பல பாடல்களில் திருக்குறட் கருத்துக்களைப் பொதிந்துள்ளார்; தமிழ் மக்களுக்கு மணிவாசகர் அருளிய திருவாசகமும் திருவள்ளுவர் அருளிய திருக்குறளுமே மதியாக அமைந்துள்ளன" என்பர் சான்றோர். திருத்தெள்ளேணம் பதினாறுவது பாடலில் 'புத்தன்' என்ற சொல்லுக்கு, புதுமைக்கும் புதுமையன் என்பதோடு நூல்களானன்றி இயற்கையான புத்தி (அறிவு) உடையவன் என்றும் பொருள் தரப் பெற்றுள்ளது. திருவுந்தியாரில் உள்ள இருபதாவது பாடல் பொதுவாக எல்லாப் பதிப்புகளிலும் உள்ள அறுநூற்று ஐம்பத்தாறு பாடல்களுட் சேராதது. குயிற் பத்து நாலாவது பாட்டில், வான் பழித்து மண் புகுந்து ஊன் பழித்து உள்ளம் புகுந்து என்னுணர்வது ஆய ஒருத்தன்' என்ற பகுதிக்கு நயம்பட உரை கூறப் பட்டுள்ளது. திரு அன்னைப் பத்தில் 7-வது பாடலில் வரும்,

"பள்ளிக்குப் பாயத்தர் அன்னே என்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரி மேல் கொண்டு"

என்ற பகுதிக்கு திருப்பாற் கடலில் பள்ளி கொள்பவரான நரசிம்ம நாராயணனுடைய நரசிம்ம உக்கிரத்தை நிக்கிரகஞ் செய்ததோடல்லாமல் வாமன உக்கிரத்தையும் நிக்கிரகஞ் செய்து சட்டையாகத் தரித்துக் கொண்டு என் போதப்புரவி மேல் எழுந்தருளி யானிருந்தபடி இருப்ப என்னைச் சுத்தாவத்தைப் படுத்தி அடிமை இன்பு செய்த சிவபெருமான் என்று சீர்காழித் தாண்டவராயர் திருவாசக வியாக்கினத்தில் உரை கூறப்பட்டுள்ளது. 'குப்பாயத்தர்' என்பதற்குச் சட்டைநாதர் என்ற

பொருள் பொருத்தமாகவே தோன்றுகிறது. திருத்த சாங்கம் மூன்ருவது பாடலில் 'உத்தரகோச மங்கை' என்ற தலத்தின் பெருமையை உத்தரம்—உரைத்தல், கோசம்—மறைநூல், மங்கை—மங்களேசுவரி அம்மை என்று கொண்டு உமாதேவிக்கு இறைவன் ஆகமநூல் உரைத்தருளிய தலம் என்று விளக்கம் தரப்பட்டுள்ளது. திருப்பள்ளியெழுச்சியில் இரண்டாம் பாடலில் அருணோதயம், புற இருள் நீங்கல், மலர் விரிதல், வண்டுகள் முரலல் இவற்றிற்கு இறைவன் கருணை பொழிதல், அருட்கண் மலருதல், இறைவன் அருள் நோக்கால் அன்பர் அக இருள் நீங்குதல், அடியார்கள் இறைவனை ஏத்துதல் ஆகிய ஒப்புமைகள் நன்கு விளக்கப்பெற்று ஐம்பொறிகளுள்ளும் கண் தூரத்திலுள்ள பொருள்களைப் பார்த்தறியும் ஆற்றலுள்ளது என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது. அடைக்கலப் பத்து இரண்டாவது பாடல் நாள்தோறும் நினைத்தற்குரியது. அது :—

'வெறுப் பனவே செய்யும் என் சிறுமையை நின் பெருமையினுல்
பொறுப்பவனே அராப் பூண்பவனே பொங்கு கங்கை சடைச்
செறுப்பவனே நின் திருவருளால் என் பிறவியை வேர்
அறுப்பவனே யுடையாயடி யேனுன் அடைக்கலமே.'

என்பது.

எட்டாவது பாடலிலுள்ள 'நின் மலரடிக்கே கூவிடுவாய் கும்பிக்கே யிடுவாய் உடையாய் அடியேனுன்னடைக்கலமே' என்ற பகுதி மரணப் படுக்கையிலிருந்த ஒரு கிருத்துவ வழக்கறிஞரை மிகவும் கவர்ந்ததாகத் தஞ்சைக் கந்தசாமிப்பிள்ளை அவர்கள் கூறியுள்ளார். சைவத் திருமுறைகளிலும் வைணவப் பிரபந்தங்களிலும் சமையகுரவர்கள் மக்கள் குறைகளையும் உலகில் மக்களிடையே நிகழும் நிகழ்ச்சிகளையும் தம்மேல் ஏற்று ஏற்றுரையாகத் தமது அருட் பாக்களிற் கூறிக் கொள்வது மரபு. இது மக்கள் உண்மை உணர்ந்து உய்தற் பொருட்டேயன்றி மணிவாசகர் போன்ற செம்புலச் செல்வர்களை மாயை வாதியாது என்ற

உண்மையைத் திருச்சதகம் 57வது பாடல் போன்ற பல பாடல்களில் காண்கிறோம். இதனால் மணிவாசகர் தம் அனுபவத்தையே கூறுவதாகக் கொள்ளுதல் அறிவுடைமையன்று. உரையாசிரியர் இதனை உரிய இடங்களில் நன்கு விளக்கியுள்ளார். 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்ற அருள்வாக்கால் இறைவனை வணங்குவதற்கும் அவன் அருள்வேண்டும் என்ற கருத்தைத் திருஏசறவு 10வது பாடலிலும் காண்கிறோம்.

"நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்
தேன்ஆய் இன்னமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானே வந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்கு அருள் செய்தான்
ஊனாரும் உயிர் வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே!"

அடிகள் வேண்டுவதெல்லாம் இறைவன் குரை கழற்கே கசிந்துருகலே என்பது திருப்புலம்பல் மூன்றாம் பாடலில் நன்கு அமைந்துள்ளது.

"உற்றாரையான் வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத்து அமர்ந்துறையும் கூத்தா உன் குரைகழற்கே
கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே".

இறைவனையே அறியும் அறிவே அறிவின் பயன் என்பதை

"பிறிவறியா அன்பர் நின் அருள் பெய்கழல் தாளிணைக் கீழ்
மறிவறியாச் செல்வம் வந்து பெற்றார் உன்னை வந்திப்பதோர்
நெறியறியேன் நின்னையே அறியேன் நின்னையே அறியும்
அறிவறியேன் உடையாய் அடியேன் உன் அடைக்கலமே",

என்னும் திருப்பாட்டிற் காண்கிறோம்.

இத் திருவாசக உரை நூலில் எல்லாப் பாடல்களுக்குமே தெள்ளிய உரை காணப் பெற்றுள்ளது. ஒரு சில மட்டுமே எடுத்துக் காட்டாக மேலே குறிப்பிட்டுள்ளேன். 'ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்த மாய தேனை' ஒத்த திருவாசகப் பாடல்களுக்கு இத்தகைய விரிவுரை மிக மிக இன்றியமையாதது என்பதில் இக் காலத்தில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. இப் பேருரையை நல்ல முறையில் எழுதியுள்ள ஆசிரியர் குழுவினுக்கும் இவ்வுரை நூலைப் பதிப்பித்து வெளியிடும் பொறுப்பை ஏற்று நன்கு நிறைவேற்றியுள்ள சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தாருக்கும் தமிழ் உலகம் பெரிதும் கடமைப் பட்டுள்ளது.

"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே
வாசக மதற்கு வாச்சியந்
தூசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே"

– சிவப்பிரகாச முனிவர்

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்து
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே."

– இராமலிங்க அடிகள்.

வாழ்க திருவாசகம்! ஓங்குக மணிவாசகர் புகழ்!!

அ. உத்தண்டராமன்,
17—4—67.

# மாணிக்கவாசகர் வரலாறு.

---

## மாணிக்கவாசகர் புராண சாரம்

" திருக்கயிலைத் திருநந்தி தேவர்சிவ னருளாற்
றிருவாத வூராதி சைவகுலந் திகழத்
தெருட்கனியுஞ் சம்புபாதாசிரயர் அன்பார்
சிவஞான வதியம்மை செய்தவச்சே யாகி
அருட்குலவு திருவாத வூர்ரெனு பேர்பூண்
டடல்வழுதி யமைச்சராய்ப் பரிகொளுமா
றளித்த
பொருட்குரியன் சுந்தரே சுரனெனத்தேர்ந் தவன்முன்
போற்றியநு மதிபெற்றுப் பெருந்துறையிற்
புகுந்தே."

" குருமொழிபெற் றறங்கள்புரிந் தரசனிடர் தாக்காக்
குறிநிலைநின் றரன்பரிகள் கொணர் கோலங்
காட்டிப்
பரிநரியா கிடமுனிய நதிபெருகப் பரன் மண்
பரித்தடிபட் டுணர்த்தரசன் வேண்டிடவுந்
துறைபோய்த்
திருவடிபூ சித்திருந்து கழுக்குன்றில் வைத்துச்
சிற்சபையிற் புத்தொழித்து மூகைமொழி
திகழ்த்திப்
பொருவருவா சகங்கோவை வரைவித்துச் சிவனே
பொருளென்று குஞ்சிதத்தாள் புக்கமர்ந்தா
ரன்றே"

(சொக்கலிங்க ஐயர்)

உ
திருச்சிற்றம்பலம்

" ஆரருள் வடிவமாய அன்னையார் திருக்கண் சாத்தச்
சீரருள் அம்பலத்தில் திருநடம் நவிலுவாரே
பேரரு ளொடுகை யேடு பிடித்தெழு திடப்பணித்தார்
நாரரு ளடியாரோடு நமையெழுதவும் பணிப்பார்.

இந்தியம் ஒன்றற் காமண்ணிடந்துபன் னுள்முயன்று
முந்திய பாதங் காணு முகுந்தனே மாற ஐந்து
நந்தியசிரத்தப் பாத நகுகுருந் தடிமேவப்பெற்
றுந்திய இறுமாப்புற்ற ஒருவருக்கன்பு செய்வாம் "

(திருப்பெருந்துறைப் புராணம்)

---

## திருவாதவூரடிகள் வரலாறு.

தமிழகம் பேணி வளர்த்துப் பெருமையுறப் பாராட்டும் சைவசமயகுரவர் நால்வருள் ஒருவர் திருவாதவூரர். இவருக்குச் சிவபெருமான் ஞானகுரவனுக வந்து சிவஞானம் நல்கியபோது இட்ட பெயர் மாணிக்கவாசகன் என்பது. இறைவனுர் இப்பெயர் சூட்டுதற் காரணத்தைத் திருவிளையாடற் புராணம் தெளிவுறக் காட்டும்:—

" பழுதிலாத சொல்மணி யிணைப்பத்தி செய்துஅன்பு
முழுதும் ஆகிய வடத்திஞல் முறைதொடுத்து அலங்கல்
அழுதுசாத்தும் மெய்யன்பருக்கு, அகம்மகிழ்ந்து ஐயர்
வழுவிலாத பேர் மாணிக்கவாசகன் என்ருர் "

(பரஞ்சோதி முனிவர்)

இவர் தண்ணுர் தமிழ் அளிக்குந் தண்பாண்டி நாட்டிலுள்ள திருவாதவூரிற் பிறந்தவர். இவருடைய பெற்ருேர் அமாத்திய அந்தணர் மரபினராகிய சம்புபாதாசிருதரும் சிவஞானவதியம்மையுமாவர். இவருக்குப் பெற்ருேர் சூட்டிய பிள்ளைத் திருபெயர் வாதவூரர் என்பது.

"ஒருநாம மேதுமிலா உத்தமருக் கெண்ணிறந்து
வருநாமம் எடுத்தோத வல்லாரா யெல்லார்க்குங்
கருநாமம் ஒழித்தருளக் கடவார்க்குக் கடவாத
திருநாமந் திருவாத வூரரெனச் செப்பினர்"

அவர் பிள்ளைப் பருவத்திற் செய்யப்பெறும் அன்னம் ஊட்டல், சிகை வைத்தல் முதலியன மறைவழி முடிக்கப் பெற்றுக் கல்வி தொடங்கப் பெற்றார். வாதவூரரும் வயது பதினாறளவில் எண்ணெண் கலைகளுந் தெள்ளிதி னுணர்ந்து சகல கலைஞானங்களிலும் வல்லுநராய் விளங்கினார்.

**வாதவூரர் அமைச்சு**

இவர் கல்வித் திறத்தினை அறிந்த அரிமர்த்தன பாண்டிய மன்னன் இவரைத் தனது அரசு முதலமைச்ச ராக்கித் '**தென்னவன் பிரமராயர்**' என்னும் பட்டமுஞ் சூட்டினான்.

"மறைமுதற் கலைக ளெல்லாம் மாண்புற வினவுந் தோறுங்
குறை தவிர் விடைகொடுக்கக் கொற்றவன் உவகை பூத்து
நிறையெது வினவினலு நிகழ்த்திடு மிவர்க்கின்றுதி
யறைகுதிர் பிரமராயர் என்றமைச் சரைப்பார்த் தோதி".

(திருப்பெருந்துறைப் புராணம்)

(பிரமம்–அறிவிக்கு, ராயர்–அரசர்)

"பழுதற நமக்குக் கண்ணாய்க் கவசமாய்ப் பாதுகாக்கு
முழுதுணர் அமைச்சீர் உங்கள் தமக்கெலா முதன்மையாகச்
செழுமறைப் பிரமராயர் தமைச்செய்தோம் செய்தோம் என்றான்
வழுதியவ் வமைச்ச ரெல்லாம் மகிழ்ந்தனம் மகிழ்ந்தோம் என்றார்"

(திருப்பெருந்துறைப் புராணம்)

அரிமர்த்தனன் செங்கோல் ஆட்சியில் பாண்டி நாடானது இவரது அமைச்சியலால் உட்பகை புறப்பகை யின்றி, உறைகோடாது வானம் முறை பெய்து, உறு பசியும் ஓவாப்பிணியுமின்றி, தள்ளாவிளையும் தக்காரும்

பெற்றுக் கோலுங் குடியுந் தழைத்துச் செழித் தோங்கியது.

அமைச்சுப் பெருஞ்சிறப்பெல்லாம் முற்றப் பெற்ற வாதவூரர் இவ்வுலகபோகமுஞ் சிறப்பும் நிலையற்றன என்பதை உணர்ந்து நிலையான இன்பந்தரும் முத்திப் பேற்றிற்குரிய ஞானநெறியை நாடுவாராயினர்.

''மண் தனில் வாழ்வும் வானத்தரசயன் மாலார் வாழ்வும்
உண்டுபோல் இன்றும் பண்பின''

எனத் தெளிந்தார்.

''ஞானசிரியன் என்றுவரும் நம்முள்ளுறையுஞ் சங்கையெலாம்
ஆனவிருப்பின் வினய்வினய் அறையத்தெளிவ தெப்போது?
மானஅவன்பே ரருட்கிலக்காய் வயக்கியடிக்கீழ்
வைப்பதென்று?
தேனுதரிக்குஞ் சிவானந்தந் திளைத்தின்புறல் என்று''

என நினைப்பார்.
(திருப்பெருந்துறைப் புராணம்)

சிவமாம் இறைவனிடத்தே அகப்பற்றும் அரசாம் இறைவனிடத்தே புறப்பற்றும் உடையராய் அமைச்சு முறையாக நடத்தி வந்தார். அரசன் அரிமருத்தனனும் தண்ணளியுடன் குடிகட்கெல்லாங் குளிர் தூங்க வெண் மதிக்குடை நிழற்றிக் குறை நீக்கி முறை புரிந்து வந்தான்.

அடிகளும் அருளுபதேசமும்

''ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிபு''.

இவ்வாறு அமைச்சியல் ஒழுக்கத்தில் வழுவாது, கோலுக்கும் குடிக்கும் கண்ணும் கவசமுமாய்க் கடனாற்றித் தவறாது முறை புரிந்து வருநாளில், ஒற்றர் சிலர் வந்து அரசவையில் மன்னனை வணங்கி ''வேந்தே! சோழ நாட்டின் கடற்கரையில் நல்ல குதிரைகள்

வந்திறங்கியுள்ளன' எனச் செய்தி தெரிவித்தனர். குதிரைச் சேவகர்களும் வந்து "நமது குதிரைச்சாலையிலுள்ள குதிரைகளிற் பல நோயுற்று மூப்படைந்துள்ளன" என்றனர்.

அரசனும் பிரமராயரைப் பார்த்து "நம்முடைய "வான விமானம்" என்னும் திருவுறை பண்டாரம் புக்கு நாற்பத்தொன்பது கோடி பொன் எடுத்துக் கொண்டு பரிசனங்களுடன் சென்று குதிரை வாங்கி வருக" எனப் பணித்தான். பரி வாங்கப் புறப்படுவாராயினர் பரமசிவனைப் பரிச்சேவகனாக வரச் செய்யும் பண்புமிக்க அமைச்சர்.

ஆலவாய் விட்டகலுமுன் ஆனைமுகனையும் அம்மை அங்கயற்கண்ணியையும் சொக்கலிங்கப் பெருமானையும் வணங்கிச் சென்றார் வாதவூரர்.

அம்மையை அடிபணியும்போது

"என்றூர் வரைமயிலே! ஏழ்பொழில்வாழ் கோகிலமே!
ஒன்றாய வேதாகம வாவி ஓதிமமே!
பொன்றாத எண் எண் கலைபேசும் பூவையே!
மன்றார் கடம்பவன மானே! அடிபோற்றி"

என்று வழுத்தினார்.

(திருவிளையாடற் புராணம்)

ஆலவாய் அப்பனை அடிபணியும்போது

"ஒன்று வேண்டும் இப் பொருளெலாம் உனக்கும் ஐம்பொறியும்
வென்று வேண்டுநின் அன்பர்க்கும் ஆக்குக வெள்ளி
மன்று வேண்டிநின் றாடிய வள்ளல்என் குறையீ
தென்று வேண்டிநின் றேத்துவார்க் கிறைவனின் னருள்போல்.

ஆதி சைவனும் அருச்சகன் ஒருவன் நேர்அணைந்து
பூதி ஈந்தனன் நமக்குஇது போல்இலை நிமித்தம்
ஈதுநன் னெறிக் கேதுவென் றிருகையேற் றணிந்து
வேதநாதனை இறைஞ்சினார் விடைகொடு மீண்டார்"

(திருவிளையாடற் புராணம்)

படைகள் புடைசூழ ஒட்டகங்களின் முதுகிற் பொதிகளை ஏற்றிக் கொண்டு பரிவாரங்களுடன் முத்துச் சிவிகை மேல் ஏறியமர்ந்து மாணிக்கவாசகர் திருநீறு பூசிய திருமேனியராய்ச் சென்ருர். அவர் தோற்றம் பாற்கடலெழுந்த பனிமதி போன்றது. குறிஞ்சி. முல்லை, பாலை, மருத நிலங்களைக் கடந்து நெய்தல் வந்து சேர்ந் தார். இவ்வாறு பலகாவதங்கள் கழியக் கடற்றுறைமுக மாகிய திருப்பெருந்துறையை யடைந்தார். அவ்வெல்லை அடைந்ததும் மாணிக்கவாசகர் நெஞ்சம் நெக்குநெக் குருகினுர். அவர் உள்ளம் உவகை பூத்தது; கண்கள் இன்பமழை பொழிந்தன.

''பொறுக்கலா காத பாரம் பொறுத்தவன் இறக்கியாங்குக்
குறுக்கலா காத வாதை யாவையுங் குலைந்துபோக
வெறுக்கலா காத இன்பம் மேவிய திரண்டு கண்ணும்
மறுக்கலா காத வாரி பொழிந்தன அருவிமான.''

(திருப்பெருந்துறைப் புராணம்)

இஃதே தனது குருநாதன் உறையுந் தலமெனத் துணிந்த வாதவூரர் ஆன்மநாதரையும் யோகாம்பிகை யையும் வழிபட்ட பின் அங்கு ஒரு சோலையில் தொண்டர் கள் சிவாகமம் ஓதும் ஒலி கேட்டனர். ஆண்டுச் சென்று ஒரு காட்சி கண்டனர். கல்லாலின் புடையமர்ந்த குருமூர்த்தம் போன்று குருந்த மர நீழலில் மாணவர் சுற்றியமர்ந்துள்ள குருவடிவினைக் கண்டார். காண்ட லுங் கைகளுந்தாமாகவே தலைமிசையேறின; கண்ணி லானந்த வெள்ளம் மெய்யெலாம் பொழிந்தது; பாசமாம் பற்றறுத்துப்பாரிக்கும் ஆரியனுய், 'மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச் சுடர்' மானுட வடிவங்கொண்டு குரு மூர்த்தமா யெழுந்தருளி யிருக்கக் கண்டார். அப் பெருமானுர் இடது திருக்கையில் சிவஞானபோத மெய்ந் நூல் வைத்திருந்தார். அப்புத்தகத்தின் உண்மைப் பொருள் விளக்கமாக வலது திருக்கை சின்முத்திரை காட்டிக்கொண்டிருந்தது.

"மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த் தாள்நிழல் அடங்கும் உண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய
செம்மலே யலதுளம் சிந்தியா தரோ"

(கச்சியப்ப முனிவர்)

"இத்திருவுருவம் காந்தம் போன்று எனது அன்பற்ற இரும்பு மனத்தை ஈர்த்தது; ஆதலின் இவரே என் குரு மூர்த்தியாவர்" என்று கூறிக்கொண்டு,

"இவ்வண்ணம் எண்ணி மற்றும் எண்ணுவதொன்றில்லை
செவ்வண்ணஇவரே நம்மையாட்கொளல் தேற்றம்தீரா
நவ்வண்ணம் மவ்வண்ணம் போய்நசித்தஎன்ரேடிச் சென்றே
யவ்வண்ணம் மாயினுர்தம் அடிவண்ண மலர்க்கீழ் வீழ்ந்தார்"

(திருப்பெருந்துறைப் புராணம்)

ந-மறைப்பு. ம-மலம்

திருவடியில் விழுந்து கிடந்த அடிகளை ஆட்கொள்ள வேண்டுமென்று அடியார் குழாம் வேண்டித் தொழுதது. குருமூர்த்தி அன்றிரவு ஆட்கொள்வதாக அருள் புரிந்தார். அடியாரெல்லாம் அரமுழக்கஞ் செய்தார்கள். அவ்வாறே குருமூர்த்தி அடிகளுக்கு அத்துவ சோதனை செய்து சுத்திபண்ணித் தமது அருட் கண்ணோக்கால் ஆணவங்கெடுத்து, அடிகள் தலைமேல் தம் கைவைத்து மாயை கன்ம மலங்களைப் போக்கினுர். பின் திருவைந் தெழுத்து உபதேசஞ் செய்து, தாமாகப் பாவனை செய்து, திருவடி சென்னிமிசைச் சூட்டினுர்; தமது திருக் கரத்தாலே திருநீறு சாத்தினுர். அடிகள் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஞானகுரவற்கு நல்கி அவர்தம் திருவடிப் பூசனை புரிந்தார். ஞானகுரவர், விடிந்ததும் சிவாகமங்களின் முடிந்த பொருளாகிய சிவஞான போதத்தை அடிகளுக்கு அறிவுறுத்தி யருள்புரிந்தார். அடிகளும் தாம் குதிரை வாங்கக் கொண்டுவந்த பொன் ஏழெழு கோடியையும் குருவின் திருவடிக் காணிக்கையாக வைத்தார்.

வாதவூரர் குருமூர்த்தியை மனத்திலமைத்து ஞான வாசகங்களாற் பாடித் துதித்தார். இதனை அடிகளே,

''பேசும் பொருளுக்கு இலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை —பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து.,,

(பண்டாய நான்மறை)

எனக் கூறுகிறார். குருநாதர் இம்மணி வார்த்தைகளை யேற்றுக்கொண்டு அவருக்கு மாணிக்கவாசகர் என்ற பெயர் சூட்டினார்.

குருநாதர் மாணிக்கவாசகரை நோக்கி "அரசன் பொருள் முழுதும் திருப்பணிக்கும் அடியார்க்கும் ஆக்கித் திருவுத்தரகோசமங்கை, திருத்தில்லை முதலிய பதிகளிற் சென்றுபாடி, புத்தரை வாதில் வென்று உன் கருமம் முடித்துத் திருவடி சேர்வாயாக" எனச் சொல்லி அடியாருடன் மறைந்தார். வாதவூரரும் ஆசிரியர் பிரிவினை ஆற்றாது வருந்தினார். பல வாசகங்கள் பாடினார். திருப்பெருந்துறையிலேயே நீறணிந்த மேனியராய்க் கோவண உடை உடுத்து அன்புநீர்பொழி கண்களுடன் இறைவனையே பாடி இன்புறுவாராயினர். அமைச்சுக் கோலத்தில் வந்த வாதவூரர் அடியார் கோலத்தில் மாறியதைக் கண்ட படையும் பரிவாரமும் திகைத்தன. இவரைப் பித்தரெனக் கருதினர் படைத் தலைவர்.

## நரி பரியாக்கியதும் குதிரைச் சேவகனாகிய கொள்கையும்

குதிரை வாங்கச் சென்ற மந்திரி வரவில்லையே என வருந்தி அரசன் ஆள் அனுப்பினான். ஏவலாளர் திருப்பெருந்துறை வந்து அமைச்சர் இறைவனடியிற் சிந்தனையமைத்தமையும் அமைச்சுக் கோலம் விட்டு அடியார் கோலம் பூண்டமையுங் கண்டு திரும்பிச் சென்று மன்னர்க்கு அறிவித்தனர். மன்னன் வெகுண்டு

திரும்பி வர ஓலையனுப்பினுன். வாதவூரர் பெருந்துறைப் பெருமானிடஞ் சென்று முறையிட்டனர். பெருமான் விலைமதிக்க முடியாத மாணிக்கம் ஒன்றைக் கையுறை யாக அளித்து இதனை அரசனிடங் கொடுத்து "ஆவணிமூலநாளிற் குதிரை வரும் எனச் சொல்லுக" என்ருர். அமைச்சரும் ஆலவாயடைந்து அவ்வண்ணம் அறிவித்தார். பாண்டியன் ஆவணி மூலத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். ஆவணி மூலநாளும் அணுகியது. குதிரைகள் வருங்குறிப்பொன்றுமில்லை. அமைச்சருளொருவர் அரசரிடஞ் சென்று "முதலமைச்சர் குதிரையைக் கண்டதுமில்லை கொண்டதுமில்லை. குதிரை வாங்கக் கொடுத்த பொன் முழுதையும் அடியார்க்குந் திருக்கோவிற் பணிக்குஞ் செலவு செய்து விட்டார்" என அரசனுக்கு அறிவித்தார். அரசன் மாணிக்கவாசகரைச் சிறையில் வைத்தான்.

குதிரை வாங்கக் கொடுத்த பொருளை வாதவூரர் இறைபணியிற் செலவு செய்யலாமா? அரசன் பொருளை வைத்துக் குதிரை வாங்குவதைவிட அதனைக் கொண்டு சிவபுண்ணியஞ் செய்தலே அரசனுக்கு உய்வளிப்பது எனக் கருதினுர் வாதவூரர். மேலும் ஆலவாயரசுப் பொருள் முழுதும் சுந்தரபாண்டியராய் அரசுபுரிந்த சோமசுந்தரக் கடவுளுடையதே; ஆதலின் அடிகள் மதுரைச் சுந்தரேசரிடம் இப்பொருள் முழுதையும் சிவ பணியிற் செலவு செய்ய உத்தரவளிக்க வேண்டுமென முதலிற் சொக்கலிங்கப் பெருமானிடம் விண்ணப்பித்து, மதுரை விட்டுப் புறப்படுமுன்னேயே அவர் இசைவு பெற்றுக்கொண்டார்.

சிறையில் வைக்கப்பட்ட வாதவூரர் சுந்தரேசரைத் துதித்தார்; பெருந்துறைப் பெருமானை நினைந்து "கடையேனை யாட்கொண்டு கைவிடுதல் அழகோ" என்ருர். பெருமான் நந்திகணங்களை நோக்கி 'நரிகளைப்

பரிகளாக்கி நீவிர் குதிரை வீரராகி வருக' எனப் பணித்துத் தாமும் வீரக்கழலணிந்து, சாய்ந்த கொண்டைத் திருமுடி, வாகுவலயம், கண்டிகை, குண்டலம், திருநீற்றுத் திரிபுண்டரம் முதலியன விளங்கும் குதிரைச் சேவகராக வேத சிவாகமங்களைக் குதிரையாக்கி அதன் மேல் இவர்ந்து வந்தார். இதனை ஒற்றர்கள் கூறக்கேட்ட பாண்டியன் வாதவூரரைச் சிறையினின்று விடுவித்தான்.

குதிரைகள் கடலில் அலைகள் போல வருவதைக் கண்ட பாண்டியன் களிப்புக்கடலில் அழுந்தினான். மன்னன் மகிழும் வண்ணம் குதிரைச் சேவகன் குதிரைகளைப் பல வகையிலும் நடத்திக் காட்டினான். பாண்டியன் பேருவகையுடன் குதிரை வணிகத் தலைவனுக்குப் பட்டாடையைப் பரிசாக அளித்தான். பரிநூல் வல்லார் குதிரைகள் யாவும் நல்ல இலக்கணங்கள் அமைந்துள்ளன என நற்சான்றளித்தனர். குதிரைகளைப் பந்தியிற் சேர்க்குமாறு பணித்தான் பெரு மகிழ்வுற்ற அரிமருத்தனன்.

''வேதவாம் புரவிமேற்கொடுவந்த வித்தகர் அற்றைநாளிரவே
போதவாம் பரியாயினவெலாம் நரியாய்ப் போதர நினைத்தனர்
மன்னோ''

அன்றிரவு நடுயாமத்தே குதிரைகளெல்லாம் நரிகளாகிப் பழைய குதிரைகளையும் கடித்துக் குதிரைப் பந்தியினின்றும் வெளியே ஓடி நகர்முழுதுங் கலங்கும்படி ஊளையிட்டுத் திரிந்து மறைந்து விட்டன. மணிவாசகர் இந்நிகழ்ச்சி நினைந்து திருவாசகத்திற் பின்வருமாறு துதிக்கிறார்:—

''அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டு கொண்டருளிய அழகுறு திருவடி
பாண்டியன் தனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனகம் இசையப் பெறாஅது
ஆண்டான் எங்கோன் அருள்வழி யிருப்ப.''

(கீர்த்தித் திருஅகவல் 35-40)

"மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவகனாகிய கொள்கையும்,,

(கீர்த்தித் திருஅகவல்44-45)

**வையைப் பெருவெள்ளம்.**

பரிகள் நரிகளாய் ஓடின எனக் கேட்ட மன்னன் பெருஞ் சினங்கொண்டான். தண்டலாளரையழைத்து வாதவூரரைக் கடுந்தண்டஞ் செய்ய ஆணையிட்டான். தண்டலாளரும் அவ்வாறு செய்தனர்.

திருவாவூரர் குருந்தடியமர்ந்த குழகரை நினைந்து நெக்குருகினார். வாதவூரர் துயர்களைத் திருவுள்ளங் கொண்டார் பெருந்துறைப் பெருமான்; கங்கையைப் பணித்தார்; வையைத் தடநதி பெருகிட நினைந்தார். உடனே வையை வெள்ளம் பெருகிக் கரைகளையுடைத்து நகர் முழுதும் பெருகியது.

"மகவினையெடுப்பார் மாடமேல்இவர்வார் மற்றிதுஞ்சாயுமே என்பார்
தகவினையமைந்த மன்னன்நீதி தவறினனாலெனப் புகல்வார்
நகவினைநடாத்தும் அமைச்சரையொறுக்க நயந்ததால் விளைந்த தீதென்பார்
பகவினை யொறுக்கும் சொக்கநா யகர்க்கும் பாங்குகொல் இத்திறமென்பார்"

(திருப்பெருந்துறைப் புராணம்)

வெள்ளந் தணியாமை கண்டு வேந்தன் அஞ்சினான். முடிவில் அமைச்சரோடுசாவிச், சிவனடியாராகிய வாதவூரரைத் துன்புறுத்திய தீ வினை விளைவே இஃதெனத் துணிந்தான். உடனே அவரை அழைத்தான், "அடியீர்! நீவிர் சிவனடியார்க்குச் செலவிட்ட பொருள் எனதேயாயின் அச்சிவபுண்ணியத்தின் நற்பயனும் எனக்கே யாகும்; நானே உய்ந்தேன்' என்ற இவ்வுண்மை யுணராது உம்மை யொறுத்தேன். பிழை பொறுத்தருள்க.

இந்நகர் காக்க " என வேண்டினான். திருவாதவூரர் திருவருளை நினைந்தார். வெள்ளப் பெருக்குச் சிறிது சிறிதாகக் குறைந்தது. அரசன் அருகிலிருந்த காவலரை அழைத்து " நீங்கள் முரசறைந்து மக்களைக் கூட்டி அவர்கள் ஒவ்வொருவருக்கும் கரையளந்து கொடுத்து அடைக்கச் சொல்லுங்கள் " எனக் கட்டளையிட்டான். அவர்கள் அவ்வாறே செய்தனர். மதுரை மக்கள் யாவரும் மண் சுமந்து தங்கள் பங்குகளை அடைத்தனர். ஒரு பங்கு மட்டும் அடைபடவில்லை; அது வந்தியின் பங்கு. அவள் பிறை ஆயிரம் தொழுத அம்மை. அம் மூதாட்டி பிட்டு விற்றுண்ணும் பெருமாட்டி. சிவ பெருமானிடத்துச் சிறந்த அன்புடையவள்.

" செவ்விய ளொருத்தி நரைத்த மூதாட்டி திங்களாயிரந் தொழு துள்ளாள்
அவ்வியமின்றிப் பிட்டுவிற்றுண்பாள் அடுசுவைப்பிட்டினை முன்னே
கவ்வியஅன்பிற் கண்ணுதற்கருத்திக் கசிசறப் பின்புவிற்றிடுவாள்"

(திருப்பெருந்துறைப் புராணம்)

வந்தி தன் பங்கு அடைப்பதற்கு ஆளின்றி வருந்தினாள். சோமசுந்தரக் கடவுள் கூலியாளாய் வந்து, அவள் அன்போடு அளித்த பிட்டினைக் கூலியாக் கொண்டு, மண் சுமந்து கரையிற் போட்டார். முழுதும் அடைபடுமுன் அரசன் வந்து பார்த்து வந்தியின் பங்கு அடைக்கப்படாத காரணத்தாற் பெருமானைப் பிரம்பாலடித்தான். எங்கும் நிறைந்த இறைவனாகிய சோமசுந்தரக் கடவுள் மேல் அடித்த அடி அரசன், அரசி, அமைச்சர், மற்றும் மக்கள், தேவர், விலங்கு, புள் எல்லா உயிர்கள் மேலும் பட்டது. சுந்தரரும் மறைந்தார். இந்நிகழ்ச்சியை மணிவாசகர் பின்வருமாறு விளக்கியுள்ளார்:—

" அடியவட்காகப்
பாங்காய் மண்சுமந் தருளியபரிசும் "

(கீர்த்தித் திருவகவல் 46-47)

"மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ"

(திருப்பூவல்லி-16)

"மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்"

(திரு அம்மானை-8)

சிவபெருமான் பொன்மேனி புண்பட்டது கண்ட வாதவூரர் என்பொருட்டு இவ்வடிபட்டீரே என்று கண்ணீர் வடித்துப் புலம்பியழுதார். தொழுகையின ராய்த் துதித்தார்.

"நீறுபடும் பொன்மேனி நின்மலனே! நெடுங்கங்கை
ஆறுபடும் சடைமுடியாய்! அடியவர்கட்கு எளியானே!
மாறுபடும் புரம்எரித்தாய்! மாறுபடும் போது உடலில்
கூறுபடும் சிவஞானக் கொம்பின்உளம் குழையாதோ?

மதுரை மன்னன் உண்மை முற்றுமுணர்ந்து வாதவூர் அடிகளை நோக்கி "நான் திருவடித்தொண்டு செய்ய நீவிர் உலகினை ஆளவேண்டும்" என வேண்டினான். வாதவூரர் தாம் திருப்பெருந்துறை செல்வதே தமக்கு அரசுபுரிவதினும் மேலாகும் என்று தமது விருப்பத்தினைத் தெரிவித்தார். மன்னவனும் அடிகள் விருப்பத்திற்கு இசைந்தான். வாதவூரரும் வழுதியிடம் விடை பெற்று ஆலவாயண்ணலையும் துதித்துக்கொண்டு மதுரையைக் கடந்து சென்றார்.

"தன் தொடக் கறுத்த நாதன் தாள்தொடக் குண்டு போவார்
பின் தொடர்ந் தரசன் செல்லப் பெருந்தவர் நின்மின்நின்மின்
என்றனர் செலவுங் கூப்பி டெல்லைசென் றணியனாகிச்
சென்றடி பணிந்து தென்னன் விடைகொடு திரும்பினானே"

(திருவிளையாடற் புராணம்)

திருவாதவூரர் திருப்பெருந்துறை சென்று ஞான குரவனாக வந்த சிவபெருமானிடத்து அளவிலா அன்புடையவராக "நமச்சிவாய வாஅழ்க" எனத் தொடங்கிச் சிவபுராணம் பாடினார். திருப்பள்ளியெழுச்சி, அற்புதப்பத்து, அதிசயப்பத்து, அருட்பத்து, குழைத்த பத்து, சென்னிப்பத்து, பிரார்த்தனைப்பத்து, உயிருண்ணிப்பத்து, திருவேசறவு, பாண்டித் திருவிருத்தம் முதலிய திருவாசகங்களை அத்திருப்பதியில் திருவாய் மலர்ந்தருளினார். திருச்சதகமும் பாடியருளினார்.

அடிகள் பின் திருஉத்தரகோசமங்கை யடைந்து நீத்தல் விண்ணப்பம் அருளிச் செய்தார். திருவாரூரை யடைந்து திருப்புலம்பல் பாடியருளினார். சீர்காழிப்பதி யடைந்து பிடித்த பத்துப் பாடியருளினார். திருவண்ணாமலையில் திருவெம்பாவையும் திருவம்மானையும் பாடியருளினார்.

திருக்கழுக்குன்றில் இறைவன் தனது குரு வடிவத்தை அடிகளுக்கு காட்டியருளினான். பிறகு அடிகள் திருத்தில்லை சென்றடைந்தார்; தில்லையில் ஊருக்கு வெளியே ஒரு பன்னசாலை யமைத்து அதில் தங்கி யிருந்தார்; செம்பொன்னம்பலத்தையும் திருக்கூத்தப் பெருமானையும் ஆரா அன்புடன் நாடோறும் பணிந்தார். கோவில் மூத்த திருப்பதிகம், கோவிற்றிருப்பதிகம், கீர்த்தித் திருஅகவல், திருஅண்டப்பகுதி, போற்றித் திருஅகவல் முதலிய "ஈறின்றி எழுந்திருவாசகங்கள்" திருவாய் மலர்ந்தருளினார்; பின்பு பெண்கள் பாடிக் கொண்டு சுண்ணமிடித்தாராக அவர்கள் கூற்றாகத் திருப்பொற்சுண்ணம் பாடினார்; அவர் பெண்கள் குழுமி விளையாடும் விளையாடல்கள் கண்டு, திருத்தெள்ளேணம், திருக்கோத்தும்பி, திருத்தோணோக்கம், திருவுந்தியார், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல் என்ற பகுதிகளைப் பாடியருளினார்; சோலைகளிற் குயில், கிளி முதலியன கண்டு குயிற்பத்தும் திருத்தசாங்கமும்

பாடினார். பின் அடிகள் சிவனடியாரல்லாதாரைக் காணுதற்கும் அஞ்சி அச்சப்பதிகம் பாடினார்.

**புத்தர் வாதம்**

அப்போது ஈழநாட்டிற் புத்தசமையம் பரவியிருந்தது. அங்கு ஒரு சிவனடியார் "பொன்னம்பலம்", "திருச்சிற்றம்பலம்" என்று இடைவிடாது சொல்லும் இயல்பினராயிருந்தார். ஒரு பிடகமுனி தில்லை சென்று சைவம் வென்று பௌத்தத்தை நாட்ட வேண்டுமென்று சிதம்பரம் வந்தான். அவனுடன் ஈழமன்னனும் தனது ஊமைப் பெண்ணை உடனழைத்து வந்தான். வாதில் வல்ல புத்தர் பலர் உடன் வந்தனர். தில்லைவாழந்தணர் புத்தரை அங்குத் தங்கலாகாது என்றனர். புத்தமுனி தன் மதத்தைப் பரப்ப வந்திருப்பதாகக் கூறி அவர்களை வாதுக்கழைத்தான். சோழமன்னனும் தில்லைவாழ் அந்தணருங் கவலையுற்றனர். கூத்தப்பெருமான் அவர்கள் கனவிற்றோன்றி "தில்லைவனத்தில் பன்னசாலையில் வாழும் வாதவூரர் வாது செய்து வென்று சைவம் நிலை நாட்டுவார்" என்று கூறியருளினார். அவ்வாறே அந்தணர்கள் அடிகளிடம் தெரிவித்து அழைத்துவர வாது நிகழ்ந்தது. புத்தர்கள் சிவ நிந்தனை செய்தமையால் மாணிக்கவாசகர் ஆணைப்படி அவர்கள் ஊமைகளாயினர்.

ஈழநாட்டரசன் அடிகளை வணங்கி "உமது அருள் வாக்குப் பலித்தது; புத்தர்கள் ஊமையராயினர். எனது மகளின் ஊமைத்தன்மையை நீக்கி எம்மை அடிமை கொள்ள வேண்டுமெனப் பணிந்தான். மாணிக்கவாசகர் ஊமைப் பெண்ணை அருள்நோக்கஞ் செய்து "புத்த முனிவர் கேள்விகளுக்கு விடை பகர்க" என்றார். அப் பெண்மணி ஊமைநீங்கித் தக்கவிடை பகர்ந்தாள். அவற்றைத் திருச்சாழலாகப் பாடியருளினார் மாணிக்க வாசகர். ஈழமன்னன் சைவனாயினான்; 'புத்தர் செய்த பிழை பொறுக்க' என அடிகளை வேண்டினான். அடிகள் அருள்புரியப் புத்தர் யாவரும் ஊமை நீங்கினர்.

ஈழமன்னன் அம்பலத்தாடும் ஐயனைப் பின்வருமாறு துதித்துத் தனக்கு உய்வு வேண்டி நின்றான்:—

"பொழிசுவைக் கனியே! பொங்கு மாரமுதே!
போதஆனந்த மெய்ப் பொருளே!
வழி வழி யடிமை செய்பவர் எய்ப்பில்
வைப்பு மாநிதி யெனும் மலையே!
கழிவனப் புடைய உமையொரு பாகக்
கடவுளே! கடவுளர் ஏறே!
அழிவிலாச் சோதி அம்பலத்தாடும்
ஐயனே உய்யுமா றருளே."

(திருப்பெருந்துறைப் புராணம்)

திருவாதவூரர் தமது பன்னசாலையில் சிவானந்தத்தில் மூழ்கித் திளைத்துத் திருப்படையெழுச்சி, திருப்படையாட்சி, யாத்திரைப்பத்து, அச்சோப்பதிகம் என்பவற்றைத் திருவாய் மலர்ந்தருளினார்.

ஒருநாள் அம்பலத்தாடும் ஐயர், ஏடு எழுத்தாணி கைக்கொண்ட மறையவர் வடிவில் வந்து வாதவூரடிகள் முன்னின்றார். அடிகள் "நீவிர் யார்?" என வினவ "யாம் பாண்டி நாட்டுப் பெருந்துறைவாணர், நீவிர் பல காலங்களிலும் பரமனைப் பாடிய அருட்பாக்களை முறைப்படுத்தி வரைந்து செல்ல வந்தேம்" என்றார்.

"என்றலும் நமச்சிவாய முதலினி தமையக்கூறி
நன்றமை படையெழுச்சி நகுபடையாட்சி யச்சோ
ஒன்றநின் றுலாவுறும்பத் தொத்த யாத்திரைப்பத் தோதிப்
பொன்றலி லெலாமுடித்தார் பூசுரர் பின்னுஞ் சொல்வார்."

"இயம்பிய அனைத்தும் ஐயரேயினி தெழுதிக்கொண்டேன்
நயம்படு கோவை யொன்று நவின்றிடவேண்டுமென்ன
வயம்படு மவரும் உள்ளம் மகிழ்ந்தனர் பாடப்பாடச்
சயம்படு மறையோர் தாமும் வரைந்தனர் சலித்தலின்றி."

"முற்றிய பின்மாணிக்க வாசகர் மொழிந்த வாறே
பற்றிய எழுதி னேன் அம் பலவாணன் கையெழுத்தென்
றெற்றிய தனதுபேரும் உலகறிதர வரைந்து
மற்றிய லேடு காப்புச் செய்து கைக் கொடு மறைந்தார்."

(திருப்பெருந்துறைப் புராணம்)

இவ்வண்ணஞ் செய்தது தம்மை யாட்கொண்ட பொன் வண்ண அம்பலத்தரசே எனத் துணிந்து ஆடினூர், பாடினூர், மயங்கி நின்ருர் மாணிக்கவாசகர்.

மணிவாசகரின் நூற்பெருமையை யாவரும் அறிய வேண்டுமென்ற விருப்புடன் அம்பலவர் பொன்னம்பலத்தின் வாயிற்படியில் தாம் எழுதிய ஏட்டினை வைத்தார். பூசை செய்யும் அந்தணர் மறுநாள் இப்புத்தகங் கண்டார்; வியப்பு மிக்கவராய்த் தில்லைவாழ் அந்தணர்களிடங் தெரிவித்தார். யாவரும் ஆவலுடன் ஓடோடி வந்து பார்த்தனர். அதனையெடுத்துத் தலைமேற் கொண்டனர்.

"திருமுறை யதைய விழ்த்துச்சிறப்புற ஆதியந்தம்
ஒருமுறை நோக்கினூர்கள் உலகெலாம் உய்ய ஆடும்
பெருமுறை யவர் திருக்கையெழுத்தெனல் பிறங்கக் கண்டார்
அருமுறை யனையாருற்ற மகிழ்ச்சியார் அளக்கவல்லார்?"

(திருப்பெருந்துறைப் புராணம்)

ஏடு முடிகின்ற இடத்தில் 'திருவாதவூரர் சொற்படித் திருச்சிற்றம்பலமுடையவர் கையெழுத்து' என்ற கையொப்பங் கண்டனர்; நூலினைப் பொற்சிவிகையிலேற்றினர்; திருவாதவூரர் முன் சென்று வணங்கி, இதன் பொருளை எமக்கு அறிவித்தருளவேண்டும் எனப் பணிந்து வேண்டினர். திருவாதவூரரும் 'பொன்னம்பலத்தின் முன்னின்று பொருள் புகல்கின்றேன்' என்ருர். திருச்சிற்றம்பலஞ் சென்று "இத் திருநடம் புரிவாரே இதில் திகழ் பொருள்" என்னக் காட்டி ஆனந்தக் கூத்தர் அடி புக்கு மறைந்தனர் மாணிக்கவாசகர்.

"ஆடிய பெருமான் வெய்யோன் அலர்கதிர் ஆயிரத்துக்
கூடிய மண்டலம் போற் குறை விலா வகைநிறைந்து
நாடருஞானமன்றுள் நாமுய்ய அயன் மால் முன்பு
தேடருமேனி கொண்டு திருநடஞ்செய்யக் கண்டார்."

(கோயிற் புராணம்)

"கடைஊழி வருந்தனிமை கழிக்கவன்ரே அம்பலத்துள்
உடையார் உன்வாசகத்தில் ஒருபிரதி கருதினதே"

(மனோன்மணீயம் – சுந்தரம்பிள்ளை)

உ

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்ட தேவர் மெல்லடி வாழ்க

சிவஞான முனிவர் திருவடி போற்றி.

# திருவாசகச் செம்பொருள் வளம்.

"வெறியார் பொழில் வாதவூர் வாசகர்மெய் வாசகத்தைக்
குறியேறிய எல்லை யறிந்து கும்பிட்டேன் அல்லேன்
சிறியேன் அறிவுக் கவர்தங் திருப்பாதங் தந்த
நெறியே சிறிதியான் அறிநீர்மை கும்பிட்டேன் அன்பால்.

## நூற்பெயர்:

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் எட்டாந் திருமுறை நூல்களாகிய திருவாசகம், திருக்கோவையார் என்பன சைவசமய குரவர் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசக அடிகளால் அருளிச் செய்யப் பெற்றவை. திருவாசகம் என்னும் நூற்பெயரில் திரு என்பது அடைமொழி; வாசகம் என்பது சொல். 'திரு' என்பதற்குக் 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' எனப் பொருள் காண்பர் பேராசிரியர். ஈண்டுத் திரு 'அருட்டிரு' என்பர் சபாபதி நாவலர். ஆதலின் திருவருள் கண்ணுகை அநுபூதியிற் கண்டாரே ஈண்டுக் கண்டாராவர். அவரே இந் நூலின் சிறப்புத்தன்மை யாகிய இறையன்பு நெறியை உள்ளவாறு கண்டு விரும்பி அந்நெறி நிற்றற்கு நோக்கங் கொள்வர். 'பெரும்பெயர்க் கடவுளிற் கண்டு' என்னும் சிவஞான போதச் சிறப்புப்பாயிரத் தொடரில் காண்டலாவது "திருவருள் கண்ணுகை அநுபூதியிற் கண்டு சிறப்பிலக் கணம் உணர்தல்" எனச் சிவஞானமுனிவர் பெருமான் உரை வகுத்தமை காண்க. வாசகமாவது ஈண்டுச் சொற் களாற் றொடுக்கப்பெற்ற பொருள்சேர் புகழ்மாலை. இப் பொருள்சேர் புகழ்மாலை புரிந்தார் மாட்டே இருள் சேர் இருவினையுஞ் சேராவாம்.

## நூற்சிறப்பு

திருஞானசம்பந்தர் திருமுறை 'தோடு' எனத் தொடங்குகிறது. திருநாவுக்கரசர் திருமுறை 'கூற்று' எனத் தொடங்குகிறது. சுந்தரர் திருமுறை 'பித்தா' எனத் தொடங்குகிறது. "தோடு, கூற்று, பித்தா, மூன்றும் பீடுடைத் தேசிகன் பேரருளாகும். திருவாசகம் இறைவன் திருப்பெயராகிய 'நமச்சிவாய' என்னும் திரு ஐந்தெழுத்தால் தொடங்குகிறது. நாதன் நாமம் ஆகிய 'நமச்சிவாய வாஅழ்க' எனத் தொடங்குவது இந்நூற்கு ஒரு தனிச்சிறப்பாகும். திருஞானசம்பந்தர் திருப்பாசுரத்தில் 'எல்லாம் அரன் நாமமே சூழ்க' என வாழ்த்தினர். திருப்பாசுரத்திற்குப் பொருள் வகுத்த சேக்கிழார் பெருமான்

"எல்லாம் அரன் பெயர்
சூழ்க என்றது தொல்லுயிர் யாவையும்
வாழி அஞ்செழுத்தோதி வளர்கவே"

எனச் சிவபெருமான் திருப்பெயராகிய திருஐந்தெழுத்தின் பெருமை விளக்கினர். நமச்சிவாய என்பதும் பீடுடைப் பெருந்துறைத் தேசிகன் அருளுபதேச மொழியாகும்.

மாணிக்கவாசகர், திருப்பெருந்துறை, திருத்தில்லை திருஉத்தரகோசமங்கை, திருவண்ணுமலை, திருஆரூர் திருத்தோணிபுரம், திருக்கழுக்குன்றம் முதலிய பலதலங் களுக்குஞ் சென்று திருவாசகப் பாமாலை பாடி இறை வனுக்குச் சாத்தினர். அவ்வத்தலங்களில் திருவாசகத் தேன் அமுது செவிமடுத்து இன்புற்றுன் இறைவன் திருவாசகப் பாடலாகிய இன்சுவையமுதினை ஒருசேரச் செவிக்கு விருந்துணவாக்கி அருந்த வேண்டுமென ஆசைப்பட்டான் அம்பலவாணன்; உலகமக்கள் யாவரும் திருவாசகத் தேனுண்ண வேண்டுமெனத் திருவுள்ளங் கொண்டான்.

மாணிக்கவாசகர் திருத்தில்லைப்புறத்தில் ஒரு பன்ன சாலையில் சிவானுபூதிச் செல்வராய்ச் சிவானந்தத்தில் திளைத்து வாழ்ந்து வந்தார். ஒருநாள் அம்பலவாணன் அந்தணர் வடிவில் அவர் முன் தோன்றிப் பல தலங் களிலும் பாடியுள்ள பாடல்களை யெல்லாந் தொகுத்து முறையாகச் சொல்லும்படி வேண்டினன். மணிவாசகரும் அவ்வாறே பாடியருளினர். அந்தணர் அப்பாடல்களை யெல்லாம் கையேடு பிடித்து எழுதி முடித்ததும் "பாவை பாடிய வாயாற் கோவைபாடுக" என வேண்டினர்.

அவ்வாறே மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக் கோவை நானூறும் பாடினர். இக்கோவையையும் ஏட்டில் எழுதித் திருச்சிற்றம்பலமுடையார் என இறுதி யிற் கையெழுத்திட்டு, அந்தணர் உருக்கரந்து பொன் மன்று புகுந்து ஏட்டினைப் படியில் வைத்தான் அம்பலக் கூத்தப்பிரான். அம்பலவாணர் திருவருளால் திருவாசகப் பாடல் புத்தக வடிவம் பெற்றது. இவ்வருள் நிகழ்ச்சியை அருமை பெருமையுறப் பாராட்டுவன பின்வரும் அடிகள்:—

"பெருந்தாக மோடுனது திருவா சகச்சுவைப்
        போரமுதம் நாள்கள் தோறும்
பெரிதுண்டு வந்துமதன் அதிநயச் சுவையினுறு
        பெருநசை தெவிட்டாமையால்
விருந்தாக முழுதுமொரு முறையினுண் டின்புற
        விழைந்துநட ராச வள்ளல்
வேதியனு நின்திருமுன் நின்றுபணி மொழிகூறி
        வேண்டநீ முன்ப நாளில்
தருந்தூய வாசகங் கோவைமுழு தெழுதிமேற்
        றன்திருப் பெயரு நாட்டிச்
சபைவைத் துணர்த்தின்நின் சீரளக்குநர் யாவர்".

## 1. சிவபுராணம்

திருவாசக அருள் நூலின் சிறப்பினை ஒரு சிறிது பார்த்தோம். இந்நூல் ஐம்பத்தொரு பகுதிகளாக அமைந்தது; பல்வகைப் பாக்களால் அருளிச் செய்யப் பெற்றது. முதற்பகுதியாகிய சிவபுராணம் நூல் நுதலிய பரம்பொருளாகிய சிவபெருமானுடைய முதலீறில்லாத இயற்கையான குணங்களாகிய உயிர்க்குயிராய் நின்று அறிவுறுத்தல்; உயிர்க்குப் பக்குவம் வந்தபோது குருவாய் வந்து மெய்யறி வுறுத்தல்; உயிர்கள் வினைப்பயன் நுகர்ந்து மயக்க மும் அறியாமையும் நீங்கும் பொருட்டுப் பலவகைப் பிறவியெடுத்தல்; இறைவன் ஐந்தொழில் புரிதல்; உயிர் களைப் பிறவியறுத்தற் பொருட்டு இறைவன் வலிய இழுத்து ஆட்கொள்ளுதல் முதலியனவற்றை விளக்க மாகக் கூறும். 'ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள் வாழ்க' என வருதலின் சைவாகமப் பொருளே இந் நூலிலும் விளக்கமுறும் என்பதாம்.

சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லு தலைப் பாடற் பயனடைய விரும்புவோர் கைக்கொள்ள வேண்டுமென இப்பகுதி கூறும். அருள் நூல்களின் நுண் பொருள் முற்றிலும் நம்மறிவினால் ஆய்ந்துணர முடியாதாயினும் சொற்பொருளும் பருப்பொருளுந் தெரிய முயல வேண்டியது இன்றியமையாததாகும். பாட்டின் பொருளை ஆய்ந்து தெரிதலின் நோக்கம் இறை யன்பில் அழுந்துதற்கே எனக் கொள்ள வேண்டும். இது பற்றியே அப்பர்பெருமானும்

''சொற்பாவும் பொருள்தெரிந்து தூய்மை நோக்கித்
தூங்காதார் மனத்திருளை வாங்கா தானை'

என எதிர்மறையால் வலியுறுத்து அருளிச் செய்தார். பொருள் தெரிந்து ஆன்றவிந்தடங்குங் கொள்கை யராதலே நூல்கற்றலின் பயனுகும்.

சிவ புராணம் உரைக்கும்போது அடிகளாரின் சித்த நிலையைத் தெளிவாகக் காட்டுவன பின்வரும் அடிகள்:-

"சிவன் அவன்என் சிந்தையுள் நின்றஅதனால்
அவனருளாலே அவன் தாள் வணங்கிச்
சிந்தைமகிழச் சிவ புராணந் தன்னை
முந்தை வினைமுழுதுமோய உரைப்பனியான்"

சிவன் அடிகளார் சிந்தையுள் நிலைபெற்று நிற்கிறான். அவன் அடிகளார்க்கு அருள் வழங்குகிறான். அவனருளாலே அடிகள் அவன்தாள் வணங்குகிறார். சிந்தை மகிழ்கிறார். இந்நிலையில் முந்தைவினை முழுவதும் ஓய மணிவாசகர் சிவபுராணம் உரைக்கின்றார்.

## 2. கீர்த்தித் திருவகவல்

இறைவனுடைய புகழைக் கூறும் அகவற்பா கீர்த்தித் திருவகவல். இது நூற்று நாற்பத்தாறு அடிகள் கொண்ட நிலைமண்டில ஆசிரியப்பாவால் அமைந்தது. இறைவன் உயிர்களின் அறியாமை யிருளை அகற்றுகிறான்; அறியாமையை அகற்ற ஆகம நூல் அருளிச்செய்கிறான். இது இறைவனது முதன்மையான புகழாகும். 'துன்னிய கல்வி தோற்றியும்', 'என்னுடை இருளை ஏறத்துறந்தும்' 'சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்' இவ்வடிகள் இறைவன் உயிர்களின் அறிவு விளக்கத்திற்கு நூல்கள் அருளிச் செய்து மெய்க்கீர்த்தி பெறுதல் கூறும்.

சிவபெருமான் பலப்பல வேடமெடுத்து, அடியார்களின் குறை நீக்கி அவர்கள் வேண்டியன அருள் புரிந்த புகழ் பல அடிகளிற் கூறப்பெறுகிறது. அடியார் பொருட்டு வேடன், வலைஞன், குதிரைச் சேவகன் முதலிய வேடங் களெடுத்து அருள் புரிந்த கருணைத்திறங் கூறப் பெறு கிறது. திருஉத்தரகோசமங்கையில் ஞானத் திருவுருவும், திருப்பூவணத்திற் சித்தர் வடிவும் எடுத்து அருள் புரிந்தமை விளக்கப் பெறுகிறது.

திருவாஞ்சியத்தில் மருவார்குழலியொடு மகிழ்ந்து போகியாயிருந்து உயிர்க்குப் போகமளிக்கிறான். கொள்ளும்பையில் ஓர் அன்பர் வழிபாட்டிற்கு எழுந் தருளுகிறான் இறைவன். இவ்வாறு மாறுபட்ட பல வேடங்கள் எடுப்பதெல்லாம் உயிர்களுக்கு அருள்புரிதற் பொருட்டேயாம். இறைவன் வடிவம் உயிர்களுக்காக அருளால் எடுக்கப்பெறுவதாகும்.

''உருவருள் குணங்களோடும் உணர்வருள் உருவில் தோன்றும்
கருமமும் அருள் அரன்தன் கரசரணாதி சாங்கந்
தரும் அருள் உபாங்க மெல்லாந் தானருள் தனக் கொன்றின்றி
அருளுரு உயிருக் கென்றே ஆக்கினன் அசிந்தனன்றே.''

(சிவஞானசித்தியார்)

''ஒன்றும் பலவு மாய வேடத் தொருவர் கழல் சேர்வார்
நன்று நினைந்து நாடற்குரியார் கூடித்திரண்டெங்கும்
தென்றி யிருளில் திகைத்த கரிதண் சாரல் நெறியோடிக்
கன்றும் பிடியும் அடிவாரஞ்சேர் கயிலைமலையாரே.''

(திருஞானசம்பந்தர் தேவாரம்–
முதல் திருமுறை)

சிவபெருமான் அருளரசராக இருந்து மணிவாசகரை ஆண்ட பரிசு 'எந்தமை ஆண்ட பரிசது பகரின்' எனத் தொடங்கிச் சில அடிகளிற் பேசப்பெறுகிறது. அருளாட்சி புரியுங்கால் ஞானஅரசு கொண்ட அங்கங்கள் பத்தும் விரித்தோதப் பெறுகின்றன. அருள் வேந்தர்க்கு நாடு–பாண்டிநாடு; ஊர்–உத்தரகோசமங்கை, பெயர்–தேவதேவன், கொடி–நீற்றுக்கொடி, ஆறு–பேரானந்த ஆறு, பறை–நாதப்பறை, படை–சூலப்படை, மாலை–கழுநீர்மாலை, ஊர்தி–இன்ப ஊர்தி, மலை–அருள்மலை. பெருந்துறைப் பெருமான் அடிகளாரைத் ''தென் தில்லை மன்றில் வருக' எனப் பணித்து அருள் புரிந்ததும், அடியவர் பெற்ற சுத்தாத்துவித சித்தாந்த முத்தி நிலையை மணிவாசகப் பெருந்தகை பின்வரும் ஓரடியில் வைத்து அருளுபதேசஞ் செய்கிறார் :—

'ஒன்ற ஒன்ற உடன் கலந்தருளியும்'

## 3. திரு அண்டப் பகுதி

இப்பகுதி 'அண்டப் பகுதி' எனத் தொடங்குதலின் முதற்குறிப்பாற் பெயர் பெற்றது; நூற்றெண்பத் திரண்டு அடிகள் கொண்ட இணைக்குறள் ஆசிரியப் பாவான் அமைந்தது. அடிகளின் உள்ளத்தரும்பிய உணர்ச்சி பொங்கி,மலர்ந்த மலர் மொழிகளாற்றெடுக்கப் பெற்றது; ஓசை நயமும் பொருட் பொலிவும் நிரம்பியது; கவித்திறங்கனிந்தது. பின்வரும் அடிகள் இவ்வுண்மை புலப்படுப்பன :—

'நீற்றேன் காண்க நினைதொறு நினைதொறு
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்'

'சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க'

'சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்.'

இறைவன் நேரியனும் பரியனுமாய் நிற்குநிலை

இப்பகுதியில், ஞானாசிரியன் தோன்றிய வுடன் உயிரறிவில் திருவடி ஞானம் தோன்றும்; இவ் வண்டங்களை யெல்லாம் தன்னுள்ளடக்கி, அவைக ளெல்லாம் வீட்டினுள் நுழைகின்ற நுண்ணிய வெயிலின் அணுக்கதிர்கள் போன்று மிகச் சிறியன வாய்த் தோன்றும்படி இறைவன் பேருருவினனாய்த் தோன்றுவான்; அவ்வளவு பெரிய வடிவினனாய்த் தோன் றினும், அவன் எல்லாப் பொருள்களிடத்தும் மிக நுண்ணியனாய் உண்ணின்று, சுழல் காற்றுச் சுழல் விப்பது போல் எல்லாப் பொருள்களையும் தத்தம் செயல் களிற் சுழலச் செய்கின்ற மிகச் சிறிய வடிவினனாயும் நிற்பான். இத்தன்மை மாணவனுக்கு விளங்கும்படி, இறைவனது தூலசூக்கும நிலையினை வியப்புற அடிகள் விளக்குகிறார். இவ்வாறு இறைவனைப் பருமையான

வனும் நுண்மையானவனுமாய்க் காணுகின்ற காட்சியைச் சிவஞானசித்தியார் பின்வருமாறு தெளிவாக விளக்கும்:—

'சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்றுமாபோல்
ஆரியனும் ஆசான்வந் தருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்
தூரியனும் சிவன்தோன்றும் தானும் தோன்றும்
தொல்லுகம் எல்லாந்தன் னுள்ளே தோன்றும்
நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை யெல்லாமுன் நிகழ்ந்து தோன்றும்.'

"அணுஓர் அண்டமாம்படி நேரியன் ஆகலான் உயிர்க்குயிராதலும், அண்டம் ஓர் அணுவாம்படி பரியனும் ஆகலான் எங்கும் நிற்றலும் பெறப்படும் என்பார் 'நேரியனுய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும் நின்றநிலை' யென்றார்."

(சிவஞானசுவாமிகள் உரை)

*சிவனே முத்தொழிற் கிழவோன்*

படைப்புக் கடவுளாகிய அயனைப் படைப்பவனும், காத்தற் கடவுளாகிய அரியைக் காப்பவனும், அழித்தற் கடவுளாகிய உருத்திரனை அழிப்பவனும் சிவபெருமானே. அவனே முத்தொழிற்கும், வீடு பேற்றிற்கும் முதல்வனும் கிழவோனுமாவான் எனக் கூறிச் சிவபரத்துவம் நிலை நாட்டுகிறார் அடிகளார்.

*அருள் வெள்ளத்தால் அன்புப் பயிர்*

சிவானந்தத்தைக் கடலாகவும், ஞானாசிரியனை மேகமாகவும், திருப்பெருந்துறையை மலையாகவும், ஞான வொளியினை ஐம்புல அரவினை அச்சுறுத்தும் மின்னலாகவும், பெருங்கருணையைப் பேரிடியாகவும், புறச் சமயங்களைப் பேய்த்தேராகவும், சிவனருளைத் தெண்ணீர்ப் பெருக்காருகவும், இருவினைகளை வெள்ளம் வேரோடு தள்ளும் ஆற்றங்கரை மரங்களாகவும்,

பேரணை கட்டி, அருள் நீர் கால் யாத்து, அருச்சனை வயலிற் பாய்ச்சி, அன்புப்பயிர் விளைக்கும் தொண்டர்களை உழவர்களாகவும் அடிகளார் முற்றுருவகஞ் செய்துள்ள உருவக அணி இப்பகுதியை அழகுறச் செய்யும் அணியாகும்.

**அம்மையப்பர் அடிகளுக்கு அங்கை நெல்லிக்கனியாதல்:-**

அயன் முதலாகத் தேடினர் யாவர்க்கும் ஒளித்த சிவம், மரகதக் குவியலாகிய அம்மையுடன் கூடிய மாமணிப் பிறக்கமாகிய அப்பனுகத் தனக்கு அங்கை நெல்லிக் கனியாயினன் என மகிழ்ந்து கூறி, அவ்வளப் பொணு மகிழ்ச்சி அறைதற்கரிதென அடிகள் கூறும் அடிகள் படிப்போரை மேல் நிலைக்கு எடுத்துச் செல்லல் படித்துணரற்பாலது.

'மரகதக் குவாஅல், மாமணிப் பிறக்கம்
மின் ஒளி கொண்ட பொன் ஒளிதிகழ
... ... ... ... ...
... ... ... ... ...
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி'.

**அடிகள் அருளின்பம் ஆரத்துய்த்தல் :-**

மணிவாசகர் தமக்கு இறைவன் அருளின்பம் அருத்திய விதத்தைச் "சொல்லுவதறியேன்" "தான் எனைச் செய்தது தெரியேன்" எனத் தொடங்கி 'அமுதம் மயிர்க்கால் தோறுந் தேக்கிடச் செய்தனன்" 'எனது ஊனுடல் வயலில் வரப்பமைத்து இன்தேன் பாய்ச்சினன்,' 'என்னில் வான்தேன் கலக்க அருளொடு பரா அமுதாக்கினன்' என்றெல்லாம் தம் அமுதமொழியாற்

'பாய்பரியோன் தந்த பரமானந்தப் பயனைத்
தூய திருவாய் மலராற் சொற்செய்து'

நாமெல்லாம் வாயூறித் தித்திக்கச் செய்கிறுர்.

சொல்லுவ தறியேன் வாழி என்ற சொற்றொடர் பின்வரும் சேக்கிழார் பெருமான் திருத்தொண்டர் புராணச் செய்யுளை நினைப்பூட்டும் :—

'சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லவந் தருளியென்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லையில் இன்பவெள்ளம் எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்துளாடும் சேவடி போற்றி.'

## 4. போற்றித் திருவகவல்

இவ்வகவல் இருநூற்றிருபத்தைந்து அடிகள் கொண்ட நிலை மண்டில ஆசிரியப்பாவால் அமைந்தது. இவ்விருநூற்றிருபத்தைந்து அடிகளில் வணக்கப் பொருள் தரும் 'போற்றி' யென்ற சொல் நூற்றறுபது இடங்களிற் பயின்று வருதலின் இது போற்றித் திருவகவல் எனப் பெயர் பெற்றது. இவ்வுடம்பு 'அருந் துயர்க் குரம்பை;' இவ்வாழ்க்கை 'அல்லல் மிக்க வாழ்க்கை'; வாழ்க்கையின் அல்லல் கருவுற்ற நாள் முதலாகவே தொடங்கும். மானுடப் பிறவிப் பயனாகிய அரனடி அன்பிற்குத் தடையாவன செல்வச் செருக்கு, கழிநல்குரவு முதலிய பல துயரங்கள்; மெய்யுணர்வு பெறுதற்குத் தடையாவன புறச் சமயங் களின் பொய்யுரைகள்; இவைகளினின்று பிழைப்பது இறைவன் திருவருளின் துணைகொண்டே இயலும் என்ற இவ்வுண்மைகளை இனிது எடுத்துரைப்பது இப்பகுதி.

இப்பகுதியில், சிவபெருமான் தமக்குக் 'குருபரனாகி யருளிய பெருமையை'க் கூறி; அடியார் அன்போடு கும்பிட இறைவன் அவர்களைத் தாயேயாய் வளர்ப்பான்

என அழகாக விளக்கும் இடம் உள்ளம் உருக்குவதாகும்:—

"அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி நாதஎன் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்ப
கரமலர் மொட்டித்து இருதயம் மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி"

'கரமலர் மொட்டித்து இருதயம் மலர' என்ற முரண் தொடையமைந்த அடி அன்போடு கூடிய வணக்கத்தைச் சுருங்கிய சொற்களால் அழகுற வரைந்ததாகும். 'தாயேயாகி வளர்த்தனை போற்றி' என்பது முதல் இறைவனைப் போற்றி செய்யத் தொடங்கி, அவனுடைய அருட்குணங்களையும், அவன் பல திருப்பதிகளிலும் கோவில் கொண்டு எழுந்தருளியிருப்பதையும் தனித் தனியே வாழ்த்திச் செல்கிறார் அடிகள்.

திருஞான சம்பந்தர் ஞானப்பாலுண்ட போதே சிவன் கழல் சிரமேற் கொண்ட உணர்ச்சி பெற்றாராதலின் திருநனிபள்ளிக்குத் தகப்பனார் தோளின் மேல் எடுத்துச் செல்லும் போதே தாம் தகப்பனார் தோள் மேலிருந்து செல்கின்றோம் என்ற உணர்ச்சி யின்றிச் சிவன் தாளின் கீழிருந்து செல்கிற உணர்ச்சி யோடு இருந்தாரெனச் சேக்கிழார் திருவாய் மலர்கிறார்:

"தாதவிழ் செந்தாமரையின் அக இதழ்போற் சீறடிகள்
தரையின் மீது
போதுவதும் பிறரொருவர் பொறுப்பதுவும் பொறா அன்பு
புரிந்த சிந்தை
மாதவஞ் செய் தாதையார் வந்தெடுத்துத் தோளின் மேல்
வைத்துக் கொள்ள
நாதர்கழல் தம்முடிமேற் கொண்ட கருத்துடன்
போந்தார் ஞானம் உண்டார்"

(திருத்தொண்டர் புராணம்—
திருஞானசம்பந்தர்)

திருநாவுக்கரசர் திருச்சத்தி முற்றத்தில்

"கோவாய் முடுகி" என்றெடுத்துக்" கூற்றம் வந்து குமைப்பதன் முன் பூவாரடிகள் என்தலை மேற் பொறித்து வைப்பாய்" எனத் திருச்சத்தி முற்றத்துச் சிவக்கொழுந்தை வேண்டினார். இறைவன் 'திருநல்லூருக்கு வா' என்று அவர்க்கு அருள் செய்தான். திருநல்லூரில் வாக்கின் வேந்தர் வணங்கி மகிழ்ந்தெழும் பொழுதில்

"உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம், என்றவர்தஞ்
சென்னிமிசைப் பாதமலர் சூட்டினான் சிவபெருமான்."

நம்பி ஆரூரர் திருவதிகைப் புறத்தேயுள்ள சித்தவட மடத்தில், வீரட்டானத்திறை தாள்புரிவுடைய மனத்தினராய்ப் பள்ளியமர்ந்தருளினார்; அங்கு அதிகை வீரட்டநாதரும் முதுமறையவராய்ப் பள்ளி கொண்டு தம் பதும மலர்த்தாளைப் பன்முறை ஆரூரர் திருமுடி மேல் வைத்தார்.

மாணிக்கவாசகருக்குப் பெருந்துறைப் பெருமான் ஞானாசிரியனாகத் திருவடிகள் சென்னிமிசைச் சூட்டியதை அடிகளே இப்பகுதியில்

"என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி"

என வாழ்த்தி வணங்குகிறார்.

தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவன் என நமக்கு அறிவுறுத்துகிறார் அடிகள்; அடிகளார் பணிவான அவையடக்கத்துடன் இறைவனை வேண்டுவார் போன்று

"பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்த சொன்மாலை கொண்டருள் போற்றி"

எனப் போற்றுகிறார்.

குழைத்த சொன்மாலையிற் குழைவுநயங் காண்க.

## 5. திருச்சதகம்

இது நூறு செய்யுட்களால் அந்தாதித் தொடையில் அமைந்தது. சதம் என்ற வடசொற்கு நூறு என்பது பொருள். சதகம் என்ற தலைப்புப் பெற்றிருப்பினும் இப்பகுதியின் உட் பிரிவுகளை நோக்கின் இது அறுசீர் விருத்தம், எழுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், கட்டளைக் கலித்துறை, கலி விருத்தம், கலி நிலைத்துறை முதலிய யாப்பு வகையால் யாக்கப் பெற்று, மெய்யுணர்த்தல், அறிவுறுத்தல், சுட்டறுத்தல், ஆன்மசுத்தி, கைம்மாறு கொடுத்தல், அநுபோகசுத்தி, காருணியத்திரங்கல், ஆனந்தத்தழுந்தல், ஆனந்த பரவசம், ஆனந்தாதீதம் என்ற பொருட் பாகுபாடுகள் பத்து உடையதாய் அமைந்த பதிற்றுப்பத்தந்தாதி யாகும். மெய்யுணர்தலில் தத்துவ ரூபமும், அறிவுறுத் தலில் தத்துவ தரிசனமும், சுட்டறுத்தலில் தத்துவ சுத்தி யும் நுட்பமாகவும் குறிப்பாகவும் ஆங்காங்கே காணப் பெறும். ஆன்மசுத்தியில் ஆன்மரூப, தரிசன, சுத்திகள் அமையும். காருணியத்திரங்கலில் சிவரூபமாகிய அருள் வடிவத்திற்குப் போற்றி, போற்றி என வணக்கஞ் செயப் பெறுகிறது. புவனம் நீர், தீ, காலொடு வான மாஞய் எனச் சிவதரிசனமும் அதில் அடங்கும். ஆனந்தத் தழுந்தலில் 'புணர்ப்ப தொக்க எந்தையென்னை ஆண்டு பூண நோக்கிஞய்' என்ற சிவயோகம் குறிப் பாகக் காட்டப் பெறுகிறது. 'புணர்ப்பதாக அங்கணுள புங்கமான போகமே, என்று உயர்ந்த பேரின்பமாகிய சிவபோகம் குறிக்கப் பெறுகிறது. ஆனந்த பரவசமும், ஆனந்தத் தழுந்தலும் சிவபோகம் முதிர்ந்து அதில் உயிர் முழுகித் திளைத்தலை விளக்குவன. இவ்வாறு தசகாரிய விளக்கத்தைத் திருச்சதகத்திற் காண்க.

அடிகள் திருப்பெருந்துறைப் பெம்மானை நோக்கி உன்னுடன் கலந்த அடியார் இந்நிலைகளெல்லாம் பெற்ருர்களே, என்னை உன்னுடன் கூடாது இங்கிருக்கச் செய்து விட்டனையே, என்னை மாயை வந்து

தாக்குமே என்றெல்லாம் இரங்கிக் கூறுகிறார். என் உள்ளத்தில் ஞான நிலையும் ஊன நிலையும் மாறி மாறித் தோன்றுகின்றனவே, 'தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந் தொடராதே' யிருந்தேனே; பொய்யனாகிய யான் எப்பொழுது உன்னை **அழுது பெறப் போகிறேன்** என்றெல்லாஞ் சிவபோக தாகத்தால் தவிக்கிறார் அடிகள்.

இப்பகுதி பத்திப் பனுவலாக இருப்பினும் இலக்கியச் சுவை நிரம்பி இணையற்ற அணிகளால் அணிபெறச் செய்யப் பெற்றுள்ளது. ஒன்றிரண்டு எடுத்துக் காட்டுகள் இவ்வுண்மை புலப்படுத்தச் சாலும்.

அடிகள் பெருந்துறைப் பெம்மானுடன் நேரிற் பேசிப் பின்வருமாறு வழக்காடுகிறார். 'உன் அடியார் பேரா உலகம் புக்கார், யான் புறமே போந்தேன்; காரணம் என் தகுதியின்மையே யாகும்; ஆயினும் உன் திருவடியன்புக்கு மயங்கி அழுகிறேன். எது போல என்றால்

" ஊராமிலைக்கக் குருட்டா மிலைத்தாங்கு "

என்கிறார்.

ஊரிலுள்ள பசுக்களை ஆயர் புல் மேய்ப்பதற்கு ஊருக்கு வெளியே புல் நிறைந்த காட்டிற்குப் பகலெல்லாம் பத்திச் செல்கின்றனர், மாலையில் ஊருக்குத் திரும்பக் கொண்டு வருகின்றனர். அவைகள் தங்கள் கன்று களைப் பகலெல்லாம் பிரிந்து மாலையில் பார்த்ததும் தேட்டக் குறிப்போடு கனைக்கின்றன. அப்பசுக்களில் ஒன்று குருட்டுப்பசு. அது தன் கன்றினைப் பாராதிருந் தும் ஏனைய பசுக்கள் கனைத்தலைக் கேட்டுத் தானும் கனைக்கிறது. அது போலத் திருவடி ஞானம் பெற்ற அடியார் சிவபெருமானைப் பதிஞானத்தாற் கண்டு மகிழ்கின்றனர். ஞானக்கண் பெறாத யானும் அவர் களுடன் சேர்ந்து திருவடியன்பு பெற மயங்கி யழுகிறேனென்பதை ஏற்றதோருவமையால் இனிது விளக்குகிறார்.

தாய் தன் செல்வக் குழந்தைக்குப் பொற் கிண்ணத்தில் பாலூற்றிக் குடிக்கக் கொடுக்கிருள்; குழந்தை பாலைக் குடிக்கிறது; குடித்த பிறகு கிண்ணத்தின் பெருமதிப்பினை யெண்ணிப் பாராது எறிந்து விடுகிறது.

அடிகளுக்குப் பெருந்துறைப் பெருமான் குருவாக வந்து தனது பொன் திருவாய்மலரிலிருந்து ஞானப் பாலைச் செவியுணவாக ஊற்றினுன். அடிகள் ஞானம் பெற்ருர்; ஆனுல் ஆசான் மூர்த்தியுடன் சென்றடைய வில்லை, ஞானுசிரியனின் பொன்னுர் திருவடிப் பேற்றின் பெருமை யுணராததினுல்.

இதனை 'வந்து எனைப் பணிகொண்டபின், மழக்கை யிலங்கு பொற்கிண்ணமென்றலால், அரியையென் றுனைக் கருதுகின்றிலேன்' என நயம்படக் கூறுஞ் சொற்கள் சிந்திக்கச் சிந்திக்கச் சிறந்து செந்தேன் பொழிவன.

சிறந்ததோர் உருவக அணி செப்புவாம். உயிர் தன் தோன்ருத் துணையாகிய இறைவனை யுணராது தனியாகக் கிடந்து தவிக்கிறது. எங்கிருந்து தவிக்கிறது? ஒரு கடலிற் கிடந்து, பிறவிப் பெருங் கடலிற் கிடந்து. அமைதியான கடலல்ல, அலைமோதுங் கடல், புயலாற் புலம்பிக் கலங்குங் கடல். பெரிய சுரு மீன்கள் அங்குக் கிடந்தாரை வாயிற் பற்றுங் கடல். இவ்வாறு புணையின்றிப் பதறுமுயிர் எப்படிப் பிழைக்கலாம் என எண்ணுகிறது. 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும், நற்றுணையாவது நமச்சிவாயவே' என்ற திருவைந் தெழுத்து சிந்தையிற் தோன்றுகிறது. 'மாப்பிணை தழுவிய மாதொர் பாகத்தன் பூப்பிணை திருந்தடி' மனத்திற் பொருந்துகிறது. திருவைந்தெழுத்தைப் புணையாகப் பிடித்துக்கொண்டு பிறவிப் பெருங்கடலை உயிர் நீந்துகிறது. நீந்தும்போது

துன்ப அலையிலிருந்தும், கொவ்வைச் செவ்வாய்ப் பெண்களாகிய புயலிலிருந்தும், காமவான் சுறு மீன் வாயிலிருந்தும் தப்பி, முடிவில் முத்திப் பெருந்துறைக் கரையேறுகிறது.

'தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றென் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே'

## 6. நீத்தல் விண்ணப்பம்

குருமூர்த்தியுடன் செல்லாமைக்கு இரங்கி உயிர் விடாது வாழ்கின்றமைக்கு மனம் பதைபதைத்தலை நூறு பாக்களால் திருச்சதகம் பாடியருளிய அடிகள் ஆசான் மூர்த்தி தம்மை நீத்துச் சென்றது நியாயமாகுமா? தம்மிடத்து எத்துணைக் குற்றமிருப்பினும் கோதாட்டிக் குற்றங்களைந்து கூட்டிச் செல்ல வேண்டாவா? எக்காரணம் பற்றியும் தன்னை நீத்தலாகாதே என்று உத்தரகோச மங்கைக்கு அரசரிடம் அடிகள் ஐம்பது பாக்களால் விண்ணப்பித்துக் கொள்கிறார். நீத்தல்–விடுதல். நீத்தல் விண்ணப்பம்–கைவிடக்கூடாதென மன்றுடி வேண்டிக் கொள்ளுதல். இப்பகுதி ஐம்பது கட்டளைக் கலித்துறையால் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது. கீழானவன் எனப் பொருள்பட்டுத் தம்மைக் குறிக்கும் கடையவனேனை எனத் தொடங்கி, அந்தம் ஆதி, ஈறே முதல், பேரொடுக்கக் கடவுளாகிய சிவபெருமானே முதற் கடவுள் எனப் பொருள்படுகின்ற கடையவனே என்ற சொற்கொண்டு இவ்வந்தாதி மண்டலித்து முடிகின்ற நயங்காண்க. இவ்வாறு முடிவது மாணிக்கவாசகர் சிவமாந் தன்மைப் பெருவாழ்வு பெற்றமையைக் குறிப்பானுணர்த்தும்.

இதில் முதல் இருபது செய்யுட்களிலும் நாற்பத் தெட்டாவது செய்யுளிலும் உத்தரகோசமங்கை குறிப்பிடப் பெறுகிறது.

ஞானசிரியன் தம்மைக் கைவிட்டமையின் சத்தாகிய சிவத்தோடுங் கூடுமாறின்றி, அசத்தாகிய பாசத்தோடு சேரின் இறைவனடி சேர்தற்கு அது இழுக்காகுமாதலின் அதனோடுஞ் சேராது, 'இருதலைக் கொள்ளியின் உள் எறும்பு ஒத்து'த் தானிருப்பதாகக் கூறும் நயம் காண்க. ஞானசிரியனது பிரிவாற்றாமையைப் 'பெரு நீரறச் சிறு மீன் துவண்டாங்கு' தாம் வெருவுவதாகக் கூறுகிறார் அடிகளார்.

கங்கையையும் பிறைமதியையும் சிவபெருமான் தலையிலணிந்திருப்பது கங்கை யாற்றில் தோணி செல்வது போற் காட்சியளிப்பதாக அடிகள் அருளிச் செய்துள்ளார் :—

> "வெண்மணிப் பணிலம்
> கொழித்துமங் தாரமங் தாகினி நுந்தும் பந்தப் பெருமை
> தழிச் சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே"

## 7. திரு எம்பாவை

இஃது, மார்கழித் திங்களிற் கன்னிப் பெண்கள் வைகறைத் துயிலெழுந்து, தங்கள் தோழியரையுந் துயிலெழுப்பிக் கொண்டு நீராடச் செல்கின்ற பழைய முறையில் வைத்துப் பாடப் பெற்றுள்ளது. முதல் எட்டுப் பாடல்களில் பெண்கள் ஒருவரையொருவர் துயிலெழுப்புகின்றனர். பெண்கள் தங்கள் இறையன்புப் பக்குவ முறைக்கேற்பப் பரம் பொருளின் அருட்குணங் களையும் ஆட்கொள்ளுந் திறனையும் உள்ளம் உருக, வாயாரச், செவிக்கின்பமாய்த் தித்திக்கப்பாடித் துயிலெழுப்பும் பண்பு பாராட்டத்தக்கது. கோழியுங் குருகுஞ் சிலம்பின, இன்னியங்கள் இயம்பின, சங்குகள் முழங்கின எனப் பொழுது புலர்ந்தமை புலப்படுத்தப்

பெறுகிறது. மேலும், "நாங்கள் விண்ணுக்கொரு மருந்தைப் பாடினோம், வேதவிழுப் பொருளைப் பாடினோம், சிவபெருமான் கோலத்தையும் அவன் நம்மை ஆட்கொள்ளும் சீலத்தையும் உளங் கசிந்துருகப்பாடி வருகின்றோமே, உனக்குக் கேட்கவில்லையா?" என்று மனங் குழைந்து கூறித் துயிலெழுப்பு முறை யாவரையும் இறையன்பில் ஈடுபடுத்தும். கன்னிப் பெண்களின் வேண்டுகோள் சிவனடியாரையே தம் கணவராகப் பெற வேண்டும், அவர்க்குப் பணிபுரியும் பேறு பெற்றால் ஒரு குறையுமில்லை என ஒரு பாடலிற் சொல்லிய தோடமையாது, மற்றொரு பாடலிலும் அப்பேற்றின் அருமை பெருமை எதிர்மறை முகத்தால் 'நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க, உனக்கல்லாது எப்பணியுஞ் செய்யற்க' எனவும், இப்பேறு பெற்றார்க்குக் கோள் களால் வருங் கேடில்லையெனவும் வலியுறுத்துவார் 'எங்கெழிலென் ஞாயிறு எமக்கு' எனவும் அடிகள் கூறு கிறார். திருக்குளத்தை அம்மையப்பராகவே கண்டு அருள் நீரில் பாய்ந்து பாய்ந்து நீராடித் திளைக்கின்றார்கள் கன்னிப்பெண்கள். அருட்பித்துப் பிடித்த ஒரு கன்னிப் பெண் ஓயாமல் எம்பெருமான் எம்பெருமான் என்றே புலம்பிக் கொண்டிருப்பதும், இடையறாப் பேரன்பு மழை பொழிவதும் கவியோவியமாகத் தீட்டப் பெற்றுள்ளன. ஈற்றுச் செய்யுளில், சிவபெருமான் தமது அருள்தாளிணை கொண்டே ஐந்தொழிலும் நடத்துவன் என்பதனால் அவனொருவனே முழுமுதற் கடவுளாகக் கருதி வழிபடுதற்குரியவன் என்ற சிவபரத்துவம் நிலைநாட்டப் பெறுகிறது.

## 8. திருஅம்மானை

பெண்கள் அம்மானையாடும் போது பாடும் பாடல் களில் வைத்து, உயிர்களின் கருமேனி கழிக்க வந்த இறைவனின் அருளுருவத் திருமேனி விளக்கப் பெறுகிறது. சிவபெருமான் 'தோட்கொண்ட நீற்றன்',

'மாதியலும் பாதியன்', 'கண்டங்கரியான்', 'செம் மேனியான்' 'வெண்ணீற்றன்' எனக் கூறப் பெறு கிறன். அப்பெருமான், "அறைகூவி வீடருளுவான், உள்ளக் கல்லைப் பிசைந்து கனியாக்குவான், உயிர் களைக் கருணை வெள்ளத்தழுத்தி அந்தமிலா ஆனந்தம் தந்தருளுவான் என அவன் ஆட்கொள்ளும் அருந்திறன் கூறப்பெறுகிறது. 'தண்ணார் தமிழ் அளிக்குந் தண்பாண்டி நாட்டான்' இப்பிறவி ஆட்கொண்டான், இனிப் பிறவாமே காத்தான், நாம் மேலை வீடெய்த ஆட்கொண்டான் எனச் சிவ பெருமான் அடிகளை ஆட்கொண்ட பெருமையும், தமிழினைப் பேணும் பாண்டி நாட்டுத் தகைமையும் பாராட்டப் பெறுகின்றன.

அம்மை 'கிளிவந்த மென்மொழியாள்' என எழில் வந்த இன் தமிழாலியம்பப் பெறுகிறள். "தேனையும் பாலையும் கன்னலையும் ஒத்து இனிய கோன்" இவ்வடி சிவபோக இன்பத்தேனை நாவில் தடவி உள்ளமும் உயிரும் இனிக்கச் செய்கிறது. தப்பாமே தாளடைந் தார் நெஞ்சுருக்குந் தன்மையினலும், பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த பான்மையாலும் பெருந் துறையான் பெருமை பெரிது பாராட்டப் பெறுகிறது.

ஐயாறனைப் பாடும்போது அடைகின்ற உள்ளக் கிளர்ச்சியை

"கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை எங்குஞ் செறிந்தானை அன்பர்க்கு
மெய்யானை அல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானய்."

என்ற பாடல் இணையற்ற சுவையுடன் எடுத்துக் காட்டுகின்றது.

ஆண்டவன் அடியார்க் கெளியனும் தன்மையை இரக்கத்தோடு எடுத்துக்காட்டுவன அடிகளின் பின் வரும் அடிகள் :—

" பெண் சுமந்த பாகத்தன் ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ...
மண் சுமந்து கூலிகொண்டு அக்கோவான் மொத்துண்டு
புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்."

ஞானகுரவன் உள்ளொளி திகழச் செய்யும் முறையினை விளக்கும் அடிகள் :

" எளிவந்து இருந்து இரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்து என் உள்ளத்தினுள்ளே ஒளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்கா ணம்மானாய் "

## 9. திருப்பொற் சுண்ணம்

சிவபெருமானுக்குத் திருமுழுக்காட்ட நறுமணப் பொடி இடிக்கும் பெண்கள் தாங்கள் பொற்சுண்ணம் இடிக்கும்போது இறைவனைப் புகழ்ந்து பாடிக்கொண்டே தொண்டு புரிவார்கள். அப்பொழுது பாடும் பாடல்களாக அமைந்துள்ளது இப்பகுதி. சுண்ணமிடிக்கும் இடத்தைத் தூய்மை செய்தல், அணி செய்தல், உரல் உலக்கைகளைப் பொன் வடம், பட்டு முதலியவற்றால் அழகுபடுத்து முறை முதலியன கூறப் பெறுகின்றன. பணிப் பெண் களுக்குத் திருப்பணியிலுள்ள ஆரவாரமும், ஊக்கமும், ஏனையோர்க்குத் திருத்தொண்டில் இடங் கொடாது முந்துறுதலும், ஏற்றமுள்ள எழுச்சி மொழிகளமைந்த பரபரப்போசையுடைய பாடல்களால் உள்ளவாறு உணர்த்தப் பெறுகின்றன. திருத்தொண்டிற் பேரார்வ மூட்டும் அடிகளிற் சில பின்வருவன:—

" வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறநிலாமே
குனிமின் தொழுமின் எங்கோன் எங்கூத்தன்
தேவியுந் தானும்வந் தெம்மையாளச்
செம்பொன் செய்சுண்ணம் இடித்துநாமே."

"சூடகம் தோள்வளை ஆர்ப்ப ஆர்ப்பத்
தொண்டர் குழாமெழுந் தார்ப்ப ஆர்ப்ப
நாடவர் நந்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப
நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப"

பாடல்களின் பெருமிதமும் இறையுணர்வூட்டும் எழிலும் பின்வரும் அடிகளைப் பாடிக் காண்க:-

"சித்தம் சிவனொடும் ஆடஆட
செங்கயற்கண் பனியாடஆட
பித்தெம் பிரானொடும் ஆடஆட
பிறவி பிறரோடும் ஆடஆட
அத்தன் கருணையொடு ஆடஆட"

இவ்வடிகள் படிப்போருள்ளத்தை உலகினை விட்டுப் பரமனடிக்கு உயர்த்து எடுத்துச் செல்கின்றன, மின் தூக்கி போன்று. இறைவன் திருவடிக்குச் சித்தத்தை உயர்த்துக்கொண்டு போய் அதிற் பதியவைத்துப் பேரின்ப அமுதூட்டுவன பின்வருவன:-

"ஞானக் கரும்பினை தெளியைப் பாகை
நாடற்கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயி னானைச்
சித்தம் புகுந்து தித்திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டு கொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்தி"

இக்காலத்தும், சைவ மக்கள் உடல் நீத்தவுடன், அவர்கள் உயிர்களை இறைவனடிக்கு எடுத்துச் செல்லும் இப்பாடல்கள் ஓதிப் பொற்சுண்ணமிடிக்கும் வழக்கம் தமிழுலகில் நின்று நிலவுகிறது.

## 10. திருக்கோத்தும்பி

அரசவண்டினை நோக்கி 'நீ சுற்றிச் சுற்றி வந்து பூவிலுள்ள தினையளவு தேனுண்டு களியாது, திருக் கூத்துத் தேன் பொழிகின்ற அம்பலவாணனை அணைந்து, நினைக்கக் காணப் பேச எச்செயலாற்றினும் தருகின்ற

நிலையான பேரின்பத்தேனைப் பருகுவாயாக என' உயிரை நோக்கி அறிவுறுத்துதல் போன்று அரச வண்டினை நோக்கி அடிகள் அறிவுறுத்துகின்றார். ஆன்றமைந்த ஞானாசிரியராகப் பெருந்துறைப் பெருமானார் வந்து தம்மிடத்தில் அன்பின்மை கண்டும் ஆட்கொண்ட பெருங் கருணையை அடிகள் பாராட்டுகிறார். தமது உள்ளக் கலக்கத்தை ஒழித்து, பிறப்பு இறப்பு மயக்கம் அறுத்து, கன்னெஞ்சுருக்கிக் கருணையால் ஆண்டு தமது பிழை பொறுத்த பெருமையனாகிய சிவபெருமானிடமே சென்று அரசவண்டினைக் குளிர்ந்தூதச் சொல்கிறார் அடிகள். அடிகள் தாழ்வெனும் தன்மை தலைப்பட்டவராய்த் தன்னை இறைவன் ஆண்டுகொண்டது நாய் சிவிகை ஏற்றுவித்ததும், நாயின் மேல் தவிசிட்டதும் போன்றது எனப் பணி மொழியாற் பகர்கிறார். தன்னுடைய பணிகளை இறைவன் அலட்சியஞ் செய்யாது ஏற்றுக் கொள்கிறான் என்பதைச் 'சீயேது மில்லாது என்செய் பணிகள் கொண்டருளும்' என அடிகள் இறையருளை ஏற்றமுறப் பேசுகிறார். இறைவனுடைய தொன்மைக் கோலமாகிய அம்மையப்பர் திருக்கோலம் நன்கு விளக்கப் பெறுகிறது இப்பகுதியில்.

## 11. திருத்தெள்ளேணம்

மகளிர் ஏணப் பறை கொட்டியும் கைகொட்டியும் விளையாடுகின்ற கும்மி விளையாட்டின் வைத்துச் சிறந்த சாத்திரக் கருத்துக்கள் ஈண்டு விளக்கப் பெறுகின்றன. பெருந்துறையாசிரியர் தனது பிறவியை வேரோடு அறுத்தாரென்றும், அதன் பின், தான் சிவனார் திருவுருவன்றி வேறு எத்தோற்றமுங் கண்டதில்லை யென்றும், சிவபரஞ்சோதி தனக்கு ஒரு புதிய ஞானச் செஞ்சுடர் நல்கியதென்றும், சிவபெருமான் கடைக்கண் பார்வையால் தன் பிறவிக்கரு வெந்து விழுந்தது என்றும் அடிகள் கூறுகிறார். சிவபெருமான் ஆளுந்திறனைப் பேசினால் தமது உள்ளத்தில் ஓர் ஒளியாடுமென்றும்

கண்களில் நீர்த்திரையாடும் என்றும்; சிவபெருமான் திருவடி சிரமேற் கொண்டால் சிவமாந் தன்மை பெறலாம் என்றும்; சிந்தையில் மறவாது அமைத்தாற் பிறப்பிறப்பு ஒழியும் என்றும் கூறும் மணிவாசகனார் மணி மொழிகள் ஞான குரவன் நவிலும் நல்லுபதேச மாகும்.

## 12. திருச்சாழல்.

விஞவுரையாக அமைந்துள்ள இப்பகுதி " சிவ பெருமான் செயல்களெல்லாம் உயிர்களின் பொருட்டுச் செய்யப் பெறும் அருள்புரி தொழில்களே " என விளக்கும். பௌத்த அரசன் மகள் ஊமையாயிருந்தாள். மாணிக்கவாசகர் அவளைப் பேசவைத்தார். உலகப் பேச்சல்ல; சைவ உண்மைகளைப் பேச வைத்தார். அப்பெண் பேச்சற்றிருந்து சிறந்த சைவ உண்மை களைச் சிந்தித்துச் சிந்தித்துத் தெளிந்த ஞானப் பெண். சிவபெருமான் திருநீறணியக் காரணம் எலும்பணியக் காரணம், பெண்ணை விரும்பி மணந்து கொள்ளக் காரணம், காளை ஊர்ந்து வரக் காரணம் இவைகளை விஞ விடையிற் காட்டிச் சைவ உண்மையை நிலை நாட்டுவது இப்பகுதி. அரனார் ஆலநீழலமர்ந்து தவமுனிவர்க்கு ஞானநெறி ஒன்றனையே உரையாது அறமுதல் நான்கினையும் அருளியது தவமுனிவர்க்கு உலகியலறிவும் வேண்டும் என்ற குறிப்பையுணர்த்து வதாகும்; இஃது எவ்வளவு சிறந்த உண்மை!

ஆலாலமுண்டது, புலியைக் கொன்று தோலை யுடுத்தது முதலியன சிவபெருமான் தன் பெருமையை யுணர்த்தச் செய்த செயல்களல்ல; உயிர்கள் மேல் வைத்த கருணைச் செயல்கள்.

ஆலின் கீழ் அறமுரைத்ததோடமையாது திரிபுரமும் எரித்தது, அறநெறி கேட்ட மாத்திரையில் உயிர்களுக்கு

மலம் நீங்காது சிவபெருமான் உயிர்களுடனிருந்து மும்மலம் அறுக்க வேண்டும் என்ற உண்மையைப் புலப்படுத்தும்.

## 13. திருப்பூவல்லி

பெண்கள் இறைவன் திருவடியிற் சூட்டுதற்குக் கொடிப் பூக் கொய்யும்போது, இறைவன் திருவடியைத் தம் சென்னிமிசைச் சூடுதலின் பயன் பாடி, அம்பலவன் சீர்பாடிப் பணி தொடங்குதல் இணையற்ற சிறப்பினைத் தருவதாகும். தில்லையம்பலவனை வணங்காத எத்தேவரும் அழிவுறுவர் என அடிகள் காட்டுகிறார். உடலுறுப்புகளெல்லாம் இறைவனை வணங்குதற்காகவே: சிவபெருமான் தன் திருவடிகளை நமது சிந்தையில் வைப்பதெல்லாம் நம் உள்ளங் குழைவித்து உள்ளொளி பெருக்கவே; பெருந்துறைப் பேராசிரியன் திருவடி சிரமேல் வைத்தது பேராசைக்கிடமான இவ்வுடற்பற்று ஒழியவே என அடிகள் அறிவுறுத்துகிறார். தில்லைநாதன் திருச்சிலம்பொலிக்கே நம் சிந்தையுஞ் செவியுஞ் செல்ல வேண்டும். இத்தகைய ஞானநெறி நுட்பங்களையெல்லாம் இப்பகுதி விளக்குவதாகும்.

## 14. திருவுந்தியார்

பெண் குழந்தைகள் உந்தி பறத்தல் என்ற விளையாட்டு விளையாடும்போது பாடுகின்ற இப்பாடல் ஞான வெற்றி முழக்கத்தோடு தொடங்குகிறது. போர்ப் படைகளாகிய வில்லும் அம்பும் எடுத்து ஓரம்பு எய்ததுமே முப்புரங்களும் வெந்து விழுந்தன என மூன்று தாழிசைகளில் அடிகள் வீரத்தோடு பகர்கிறார். தக்கன் வேள்வி தகர்த்தமை விரிவாக விளக்கப் பெறுகிறது. இப்பகுதியிலுள்ள 19 தாழிசைகளில் 17 தாழிசைகள் வீரச்சுவை ததும்ப முப்புரமெரித்தலையும் தக்கன் வேள்வி தகர்த்தலையுஞ் சாற்றும்.

உமையம்மையைப் பகைத்த தக்கனைப் பார்த்தலும் பாவம் என ஒரு தாழிசையில் அடிகள் வற்புறுத்துரைக்கின்றார். பரமசிவனைப் பாலகனார்க்குப் பாற்கடலீந்த வள்ளல் என்றும், குமரப் பெருமான் தாதையென்றும் ஒரு தாழிசையில் வைத்து மொழிந்து அவரது பரங் கருணைப் பெருமையைப் பாராட்டுகிறார் அடிகள். உபமன்னிய முனிவருக்குப் பாற்கடலீந்த சிவபெருமான் கார்த்திகைப் பெண்களும் உமையம்மையும் பாலூட்டிய குமரனுக்குத் தாதை. இத் தாழிசை கற்போருள்ளத்தில் வீரச்சுவையை மாற்றி அமுதூட்டி வேகந் தணிக்கிறது.

## 15. திருத்தோணோக்கம்

மகளிர் தோள் வீசி ஆடும் விளையாட்டில் வைத்து உலக வாசனையை நீக்கிச் சித்தத்தைச் சிவன்பாலே வைக்க முயல்வார்க்கு இறைவன் துணைபுரிதலை விளக்குவது இப்பகுதி. அன்புடன் செய்யும் பூசை நெறிமுறைப் பூசையாகும் என்பதைக் கண்ணப்பர் வரலாறு கூறி வலியுறுத்துகிறது ஒரு பாடல். அத்தன் அன்பர் சித்தத்தைச் சிவமாக்கி அவர் செய்தன தவமாக்குவானென ஒரு செய்யுள் கூறுகிறது.

சிவபெருமானொருவனே பிறப்பு இறப்பு இல்லாதவன் என்ற உண்மையை

> "எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
> மண்மிசை மால் பலர் மாண்டனர்."

என்ற அடிகள் எடுத்துக்காட்டும்.

சிவபெருமான் மக்களின் உள்ளம் புகுந்து உள்ளொளி பெருக்கியதும் அவர்கள் கரையற்ற காமக் கடலைக் கடப்பர். பிறகு பொறிபுலன்களாகிய பறவைகளுக்கு அவர்கள் அறிவில் உணவின்மையின் அவை பறந்து ஓடி விடும். இஃது சிவபெருமான் உயிர்களை ஆட்கொள்கின்ற மாண்புமிக்க முறையாகும்.

## 16. திருப்பொன்னூசல்

மணிவாசக அடிகளார் திருத்தில்லையில் வாழும் நாளில் மகளிர் அன்னவடிவான ஊஞ்சல்களில் அணி மயில் போல் இருந்து ஆடுவதைக் காண்கிறார். அவர் களைத் திருஉத்தரகோசமங்கைப் பெருமான் புகழ்பாடி ஊஞ்சலாட அறிவுறுத்துகிறார் அடிகளார். அமைதியாக இருந்து ஊஞ்சலாடுவது போன்று இறைவன் திருவடியில் இனிதமர்ந்து நீங்காதே தூங்கு நினைவின ராய்ச் சிவபோகத் தழுந்துதற் கேதுவான திருவடிப் புகழ்மாலை மொழிந்து உயிரானது திருவடி ஊஞ்சலில் வைத்துத் தாலாட்டப் பெறுகிறது. 'காழியரனடி மாவசியே' எனச் சிவபெருமான் திருவடியே இருப்பிட மாகக் கூறினார் சீகாழிப் பிள்ளையார். 'நாள் மலர்த்தாள் நாயடியேற்கு ஊராகத் தந்தருளும்' என்கிறார் வாதவூ ரடிகளார். பல நூறுகோடி தேவர் காத்து நிற்பச் சிவபெருமான் தமக்குத் திருநீறு சாத்தித் திருவருள் பாலித்தான் என அடிகள்சிவபெருமானைப் பாராட்டுகிறார். அருளன்னையுந் தானுமாய் அடியார் உளமன்னி ஞான அமுதூட்டி யருள்புரிந்து பிறப்பறுப்பான் என்று இறைவன் புகழினை இன்புற இயம்பி ஊஞ்சலாடுவோம் என்கிறார் அடிகள். 'என்னப்பன், என்னையும் ஆட்கொண்டது இறைவன் கருணைக்குப் பேரெழிலாகும்' என இறையருளை வாயாரப் பாடுகிறார் வாதவூரர்.

## 17. அன்னைப்பத்து

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்கின்ற அகத் துறையிலமைந்தது இப்பகுதி. இறைவன் திருமேனிப் பொலிவும், உள்ளுவார் உள்ளுறைந்து நெஞ்சுருக்கிக் கண்ணீர் மல்கச் செய்யும் திறனும் பேதைப் பருவப் பெண்ணின் எளிய இனிய சொற்களில் வைத்துக் காட் டப் பெறுகின்றன. தலைவியின் கள்ளமற்ற உள்ளம் தோழியாற் செவிலித்தாய்க்குச் சிறந்த முறையில் தெளிவாகக் காட்டப் பெறுகிறது. 'நாயகர் உள்நின்று

உருக்குவர், 'உருக்கி உலப்பிலா ஆனந்தக் கண்ணீர் தருவர்', 'நாயகனுர் வேடங்கண்டு, கண்டு என்னுள்ளம் வாடும்,' 'அவர் போதலும் என்னுள்ளம் நையும் இது என்னே'?, 'நாயகர் தலையிற் சூடிய பூவும் மத்தம்; அது என்னை ஆக்கியதும் உன்மத்தம்'. இவ்வாறு சொல் நயமும் ஓசை நயமும் பொருந்திய மொழிகளா லமைந்தது அன்னைப்பத்து.

## 18. குயிற்பத்து

'தலைவி குயிலினை அழைத்துத் தன் தலைவன் புகழினையெடுத்துரைத்து அவனை வரக் கூவுவாயாக' எனக் கேட்பதாக அமைந்துளது இப்பத்து. தலைவி குயிலினை அழைக்கும் இனிமை செவிக்கினிமையும் சிந்தைக்கினிமையும் தருவது காண்க. "தேன் பழச் சோலை பயிலுஞ்சிறுகுயிலே"!, "சுந்தரத் தின்பக் குயிலே!" "வா இங்கே நீ குயிற் பிள்ளாய்." குயிலினை அழைக்கும் இவ்விளிகள் உளங் குளிர்விப்பன எனபதைச் சொல்லிச் சொல்லி உணர்ச்சியாற் பருகிப் பார்க்க. உயிரை நாயகி யாக வைத்தார் மணிவாசகர் என்பதை 'உன் துணைத் தோழியுமாவன்' என்ற தொடர் அறிவுறுத்தும். இறை வனைத் தலைவனுக வைத்து அவன் புகழை வாயாரப் பாடி நலம் பாராட்டுதல் தலைவி தலைவனை இயற்படமொழியுந் துறையாகும். தலைவன் புகழ் மொழிகளுட் சில பின் வருவன :-

"சீருடைச் செங்கமலத்தில் திகழுருவாகிய செல்வன்"

"ஆருடை யம்பொனின் மேனியமுது"

"பொன்னை யழித்தநன்மேனிப் புகழிற்றிகழும் அழகன்"

"கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய்"

திருவெம்பாவையில் இவ்வடிகள் போன்ற பல அடிகள் உயிர்க்கு இறைவனிடத்துக் காதலைத் தூண்டுவன ஆதலின் "பாவை பாடிய வாயாற் கோவை பாடு" என அம்பலவன் மணிவாசகரைப் பணித்தான்.

தலைவி குயிலைக் கூப்பிடுகிறாள்; நான் சொல்லுகிற இதனைக் கேள் என்கிறாள். பிறகு 'பெருந்துறைப் பெம்மான் தன்னை அவனுக்குச் சொந்தமென்று உறவு கூறி ஆட்கொண்டான்' எனத் தன்னை ஆட்படுத்திய சிறப்பினை எடுத்தோதுகிறாள்.

''கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயிலே! யிதுகேணீ
அந்தணனாகிவந் திங்கே யழகிய சேவடி காட்டி
'எந்தமராம் இவன்' என்றிங் கென்னையும் ஆட்கொண்டருளும்
செந்தழல்போல் திருமேனித் தேவர்பிரான் வரக் கூவாய்'.

## 19. திருத்தசாங்கம்

சிவபெருமானின் அருளரசாட்சிக்குரிய நாடு, படை, ஊர்தி, கொடி முதலிய பத்து உறுப்புக்கள் இன்ன இன்ன என்று தலைவி கிள்ளையை வினவக் கிளி பதிலுரைப்பதாகப் பத்து வெண்பாக்களில் இப்பகுதி அமைந்துள்ளது. கிளியை அழைக்கின்ற முறை முந்தின பத்தில் குயிலை அழைத்தது போன்று, 'ஏரார் இளங்கிளியே'!, 'இன்சொல் மரகதமே!' 'செய்ய வாய்ப்பைஞ் சிறகிற் செல்வீ!'' கோற்றேன் மொழிக்கிள்ளாய்!' 'சோலைப் பசுங் கிளியே!' என மிக இனிய மொழிகளிற் படிப்போர்க்கு உள்ளின்பம் அளிப்பதாகும்.

## 20. திருப்பள்ளி யெழுச்சி

அடியார்களுக்கு அருள் வழங்கச் சிவபெருமானைத் துயிலுணர்த்தி விண்ணப்பஞ் செய்துகொள்வதாக இப்பகுதி அமைந்துளது. விடியற் பொழுதில் உலகிற் கதிரவன் ஒளியும் சிவபெருமான் திருமுகத்தில் அருளொளியும் அழகாக ஒப்புமைப்படுத்தப் பெறுகின்றன. அடியார் பழங்குடில் தோறும் எழுந்தருளிய பரனாகவும், அருளன்னையுடன் வானின்றிழிந்து வையகம் புகுந்து அடியார்களை ஆட்கொள்பவனாகவும் சிவபெருமான் போற்றப் பெறுகிறான்.

## 21. கோவில் மூத்த திருப்பதிகம்

இது சிதம்பரத்தைப் பற்றிய திருப்பதிகங்கள் இரண்டினுள் முன்னேயது. இதில் அடிகளார் திருவுள்ளக் கருத்து, அடியார் நடுவுள் தாம் இருக்க வேண்டும் என்பதே என்று கூறி, அதனைச் சிவபெருமானே முடித்து வைக்க வேண்டும் என்று அப்பெருமானை வேண்டுகிருர். அடிகளுக்கு இவ்விருப்பம் இருப்பது முறையே என்பதற்குச் சிவம் சத்தியின் நடுவேயிருப்பதையும் சத்தி சிவன் நடுவேயிருப்பதையும் இருவரும் சேர்ந்து தம் உள்ளத்தின் நடுவேயிருப்பதையும் சான்று காட்டுகிருர். தாம் இறைவனைக் கெஞ்சிக் கேட்கலாமே யன்றி இறைவனருள் புரியாவிடின் தம்மால் ஒன்றுஞ் செய்ய இயலாது என்பார்

"அருள் தந்திருக்க இரங்குங் கொல்லோ என்று
அழுமதுவே யன்றி மற்றென் செய்கேன் பொன்னம்பலத்தரசே."

என்று முறையிடுகிருர்.

தம்மிடத்து இறைவன் பாலின் நெய்போல் மறைந்து நிற்பதாகவும் ஏனையடியாரிடத்துத் தயிரின் நெய்போல் விளங்கித் தோன்றுவதாகவும் அடிகள் கூறுகிருர்.

## 22. கோவில் திருப்பதிகம்

திருத்தில்லை அம்பலவன் அருளை நினைந்து நினைந்து அடிகளார் அன்பினுல் இன்பம் ஆர்ந்த திறனைக் கூறுவது இப்பகுதி. அடிகள் தாம் அனுபவித்துக் கொண்டே தாம்கண்ட அனுபவ இன்பத்தைச் சொற்செய்து காட்டுகிருர். உயிரின் அறிவு புலன்வழிச் செல்லுதல் தடுக்கப்பெற்றவிடத்து இறையின்பம் உளதாகும். அவ் விடத்துச் சிவனருளாரமுதம் சிந்தையில் இடையருது ஊறும்; உள்ளொளி பெருகி அகவிருள் அகலும்; இறைவன் உள்ளெழு பரஞ்சோதியாய் உள்ளத்தில் திகழ்வான். இறைவனை உள்ளவாறு காண விழைகிருர்

அடிகளார். ஞானத்தின் இலக்கணத்தை ஞானப் பாலமுதுண்ட திருஞானசம்பந்தர் 'ஞானம் ஈசன்பால் அன்பே என்ருர் ஞானமுண்டார்' என்று திருத்தொண்டர் புராணம் விளக்குதல் போல், சிவபோக இன்பத்தைச் சிவானுபவத்தில் திளேத்த அடிகள் 'ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை யன்பே' என அருளுகிருர். அன்பினுல் உயிரும் உடலும் ஆனந்த மாய்க் கசிந்துருகுவதற்கு இறைவனருள் வேண்டப் பெறும்.

"உன்திரு வடிக்கீழ் உறுதியாம் அன்பும்
உன் திருவருளினுற் கிடைப்பதாம்."
(சிவஞான முனிவர்)

உலகச் சுடர்களாகிய ஞாயிறு, மதி, தீ முதலியன நிலேயற்ற பொய்ச் சுடர்கள்; இறைவன் மெய்ச் சுடர். அவை பொய்ம்மையையும் ஆணவ இருளேயும் நீக்கும்; சிவபெருமான் உயிர்களின் அறியாமையாகிய அணேயை உடைத்துத் தள்ளிச் சிந்தையில் அருள் வெள்ளமாய் வேகத்தோடு பாய்வான். சிவபெருமாளுகிய செம்பொருட் சோதி நம்மை ஆனந்தமயமாக்கும். இவ்வுண்மைகள் ஈண்டு விளக்கம் பெறுகின்றன. சிவபெருமான் அடிகளே விட்டுப் போகிருன். அடிகள் 'நீ எங்கே போகிருய்?' என்று அவனேப் பிடித்து நிறுத்தி 'நான் உய்வதற்கு ஒருவகையுஞ் சொல்லாது போகிருயே? நீ இங்கே வந்து உன் திருவடிகளேக் கொடுத்து விட்டுப் போ' என இறைவனேப் பிடித்துக்கொண்டு திருவடி ஞானங் கேட்கிருர். உடனே அருள் வள்ள லாகிய சிவபெருமான் அடிகளார் சிந்தையே கோவிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கிருன். அடிகளார் சிவ பெருமானுக்கு நன்றி கூறும் முறை நகைச்சுவை கலந்த நயமுற்று விளங்குவதாகும். 'நின்னே எனக்குத் தந்தாய்; அதற்குப் பதிலாக என்னே ஆளாகக் கொண்டாய். நான் உன்னேப் பெற்றதனுல் அளவற்ற ஆனந்தம் பெற்றேன். நீ என்னேக் கொண்டதனுல் யாது பெற்ருய்? ஒன்றும் பெறவில்லே. ஆதலின் இந்த வியாபாரத்தில்

நானே சமர்த்தன். உனக்கு என்னல் பதிலுதவி யொன்றும் புரிய இயலாதவனுயிருக்கிறேன்' என்று கூறுகிருர்.

## 23. செத்திலாப்பத்து

அடிகளார், "இறைவனைப் பிரிந்து சாவாது உயிர் தாங்கியிருக்கின்றேனே!" என்று கவலையுறுகின்ருர், கருத்தழிகின்ருர், செய்வகை தெரியாது திகைக்கின்ருர்; இறைவன் தமக்கு ஞானகுரவனுய் வந்து நல்லுரை நவின்றருளியதை, 'யாரும் நின் மலரடி காணு மன்ன; என்னை ஓர் வார்த்தையுட் படுத்துப் பற்றிஞய்' என நினைந்து நன்றி மறவாது பாராட்டுகின்ருர்; தாம் இறைவனை நினைந்து நெஞ்சம் உருகாமைக்குப் பெரிதும் நோகின்ருர். தம் சிந்தை வயிரம் பொருந்திய பராய் மரத்து முண்டுக் கட்டையென்றும், தம் கண் மரத்தின் கணு என்றும், செவி இரும்பினும் வலிது என்றும் கூறுகிருர். அழுது அழுது திருவாசக அலங்கல் சாத்திய அன்பர். தம்மை உலகியலில் ஆட்டிவைக்குந் தேவர்கள் வழி நில்லாது அருள் வழி நின்று சிவபெருமானையே கண்டு கொண்டிருக்க விரும்புகிருர் அடிகளார்; தாம் தாழ்வெனும் தன்மையில் தலைசிறந்து விளங்குவாராய் 'நமச்சிவாய என்று உன்னடி பேணுப் பேயனுகிலும் பெருநெறி காட்டாய்' என்று இறைவனை இரங்கிக் கேட்கிருர்.

'திருமாலும் ஓலமிட்டு அலறும் அச்செந்தாமரை மலரடிக்கே என்னை வந்திடப் பணியாய்' எனப் பெருந்துறைப் பெருமானிடம் அடிகள் விண்ணப்பித்துக் கொள்கிருர்.

## 24. அடைக்கலப்பத்து

அடிகள் இப்பதிகத்தில் தம் செயலாலாவ தொன்றுமில்லையென இறைவனிடங் கூறித், தம்மைச் சிவபெருமானிடத்தில் அடைக்கலமாக ஒப்புவித்து, முதல்

எட்டுப் பாடல்களில் தாம் மகளிர் மயக்கத்தினின்று நீங்குவதற்கு இறைவன் துணையை நாடுகிறார்; பாச நீக்கத்திற்கு இறைவன் துணையை வேண்டிய அடிகள் ஒன்பதாவது பாடலில் இறைவனை யடையும் நெறி யறி யவும், பத்தாவது பாடலில் இறையருளாரமுது அருந்த வும் இறைவன் துணையை வேண்டுகிறார்.

'இடர்க்கடல் வாய்ச் சுழிசென்று, மாதர்த்திரை பொரக் காமச் சுறவெறிய அழிகின்றனன்' என்றும், 'வன் மத்திட உடைந்து, தாழியைப்பாவு தயிர்போல் தளர்ந்தேன்' என்றும், 'பாவிடையாடு குழல் போற் கரந்து பரந்தது உள்ளம்' என்றும் மக்கள் மாயை மயக்கிற் பட்டுழலும் அல்லலைத் தம்மேல் ஏற்றி ஏற்றுரையாக அடிகள் கூறுகிறார். அருளார் அமுதினைச் சுவைத்து மென்று பருகத் தெரியாது விழுங்கினமை யின் விக்கினது; 'தேனன்ன தண்ணீர் பருகத் தந்து உய்யக்கொள்ள வேண்டும்' எனக் கெஞ்சிக் கேட்கிறார் அடிகளார்.

## 25. ஆசைப்பத்து

இப்பதிகத்தில் இறைவன் திருவருளைப் பெற, அவனைக் காண, அவனைப் பரவியேத்த, அவன் அருள் நினைந்து உருக அடிகளுக்கு இருந்த ஆசையானது கடல்போல் அடிகளின் உள்ளத்தினின்றும் பொங்கி எழுந்து பாடல் முத்தங்கொளித்துப் படிப்போர் கன் மனப் பாறையையும் மோதிக் கரைக்கிறது.

"முத்தா! உன்தன் முகஒளி நோக்கி
முறுவல் நகை காண ஆசைப்பட்டேன்"
"பவளத்திருவாயால்
அஞ்சேல் என்ன ஆசைப் பட்டேன்."

இம்மணி மொழிகள் கற்போர் கேட்போர் உள்ளங் குழைத்துப் பத்தி உணர்ச்சியைப் பெருக்கி நிறைக் கின்றன.

மனம், மொழி, மெய் மூன்றினுலும் முற்றிலும் இறையன்பில் ஈடுபடுதலைத் தெரித்துணர்த்துவது பின்வருஞ் செய்யுள்:—

"கையாற் றொழுதுன் கழற்சே வடிகள்
கழுமத் தழுவிக் கொண்
டெய்யா தென்தன் தலைமேல் வைத்தெம்
பெருமான் பெருமானென்
றையா என்தன் வாயால் அரற்றி
அழல்சேர் மெழுகொப்ப
ஐயாற் றரசே! ஆசைப்பட்டேன்
கண்டாய் அம்மானே"

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்ருர்க் குடம்பும் மிகை."

ஆதலின் அடிகள் தாம் உடம்போடு பற்றற்ற நிலையி லிருந்ததைப் "புளியம்பழம் ஒத்து இருந்தேன்" என உரைத்தருளுகிருர்.

இறைவன் தம்மை அழைத்தருளத் தாம் விரும்பு வதை,

"இங்கேவா என்று அங்கே கூவும்
அருளைப் பெறுவான் ஆசைப்பட்டேன்."

என்று அடிகள் அழகுற வேண்டினுல், குழல்மொழி பாகன் கூவியழையா திருப்பானு?

## 26. அதிசயப்பத்து

மனத்திற் சேமித்து வைத்துப் பேணத்தக்க பொருள் சிவம். அப்பொருளை மனத்தமைத்து வெளியே போய்விடாதபடி திருவைந்தெழுத்துச் சொல்லிப் போற்றிப் பாதுகாக்க வேண்டும்.

'வைத்த பொருள் நமக்காமென் றெண்ணி மனத்தடைத்துச்
சித்தம் ஒருக்கிச் சிவாய நம என்றிருக்கினல்லால்'

"அத்தன் அருள் பெறல் அரிது. ஆயினும் இறைவனுக்கு ஆளாக வேண்டும் என்ற எண்ணமிருப்பின் அவன் பாதிமாதொடுங் கூடிய அருட்சத்தியிற் பிரியாத அண்ணலாதலின் ஆட்கொள்வான். சிவபெருமான் அடியார்க் கெளியனுதலின் தாம் செய்யவேண்டிய பணிகள் செய்யாதிருந்தும் தம்மை யாட்கொண்டது ஒரு பெருவியப்பாகும்" என இப்பதிகத்திற் கூறி இறைவன் கருணைப் பெருக்கினை வியக்கிருர்.

திருவாசகச் சிறந்த பதிப்பொன்றினில், திருவாசக அமைப்பும் அழகும் என்ற பகுதியிற் பின்வருமாறு காணப் பெறுகிறது :—

'தன்னொடு நிலாவகை,' 'நுண்ணிய நொடியன,' 'நுகம் இன்றி விளாக்கைத்து,' 'சோதி ஆக்கி' என்ற தொடர்களிலுள்ள தத்துவக் கருத்துக்கள் யாவும் விளங்க வேண்டுமாலுல், ஓர் உமாபதி சிவமோ, ஒரு தாயுமானச் செல்வமோ, அல்லது ஒரு சிவஞான முனிவரோ வேண்டும்.'

உமாபதிசிவம் ஒள்ளொளி மலர்த்தாள் உள்ளம் நிறுவி, சிவஞான முனிவரின் திருவடிகள் சென்னி மேற்கொண்டு அடியேனுக்கு அவர்களது தியானமரு உணர்வு தந்த ஞானப் பிச்சையான தத்துவப் பொருளை இயன்ற அளவு உரையில் விளக்கியுள்ளேன்.

## 27. புணர்ச்சிப்பத்து

இப்பதிகத்தில் உயிர் இறைவனோடு 'புடைபட்டிருத்தல்', 'ஆண்டு கொண்ட ஆரமுதைப் பூண்டு கிடத்தல்', 'புல்லிப் புணர்தல்', 'அணைதல்,' 'புக்கு நிற்றல்' ஆகிய சொற்றொடர்கள் சுத்தாத்துவிதத்

தொடர்பினை விளக்குகின்றன. இறைவனைக் குறிக்குஞ் சொற்றொடர்கள் அருளின்பத்தாழ்ந்து பழுத்த உள்ளத் தெழுந்து வருவன:– 'நெல்லிக்கனியைத் தேனைப்பாலை நிறையின் னமுதை யமுதின் சுவையை.''

## 28. வாழாப்பத்து

'இறைவன் அருள் புரிந்திலனேல் இனி வாழ்வதில்லை' என்ற உறுதிப்பாட்டுடன் எழுந்தது இப்பதிகம். ஒவ்வொரு பாடலிலும் 'மற்றுப் பற்றெனக் கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன்' எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது திருமுறையில் அருளிச் செய்தபடி 'பற்றுநான் மற்றிலேன்' என்ற சொற்றொடர் வருகிறது. ஒரு பாடலில் ஐம்புலனும் சிந்தையும் அண்ணலார் அடியிணைக்கே வைத்து வாழவேண்டுமென வலியுறுத்து கிறார் அடிகளார்.

'எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து'

இறைவனை நாயகனுக்கொண்ட உயிர் நாயகி ஊடுவதும் உவப்பதும் இறைவனுடனேயே எனக் கூறுகிறார். அடிகள் இறைவனை அம்மையப்பராக வைத்து அழைக் கின்ற பான்மை பத்தி ஊட்டுவதாகும்:—

'பண்ணினேர் மொழியாள் பங்க', 'பஞ்சின் மெல்லடி யாள் பங்க', 'பந்தணை விரலாள் பங்க', 'பழுதில்தொல் புகழாள் பங்க.'

## 29. அருட்பத்து

இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலிலும் அடிகள் இறைவனை அன்பார அழைத்தால் அவன் என்னெனக் கேட்டுத் தமக்கு அஞ்சலென்றருள்புரிய வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறார். ஒரு பாடலில் உள்ளத்தின் அன்பு ஊற்றெடுத்துப் பொங்கி அமுதமணி மொழியாக

அடுத்தடுத்து விழுகிறது: "துப்பனே! (செம்பவளத் திருமேனியனே) தூயாய்! தூய வெண்ணீற் றொளியால் வயிரத் தொப்பனே! ஆரமுதே!! அப்பனே!!!" என.

ஒன்பது பாடல்களிலும் "அதெந்துவே யென் றருளாயே" என விண்ணப்பித்து ஈற்றுச் செய்யுளில் தமக்கு முத்தி நெறி விருப்பம் மிகவே "நான் பிறவிக் கடலுள் நின்று அழைக்கிறேன்; நீ எவ்வாறு அருள வேண்டுமென்றால் 'பொருந்தவா, கயிலை புகுநெறி யிது காண், போதராய்' எனத் தம்மை அழைக்கக் கேட்டுக் கொள்கிறார்.

## 30. திருக்கழுக்குன்றப் பதிகம்

அடிகளார் திருப்பெருந்துறையிற் காட்சி கொடுத்து அருளுரை அறிவுறுத்தி மறைந்த குருமூர்த்தியை மீட்டும் அடியார்களுடன் காணப் பெருவிருப்புறுகிறார். ஞானாசிரியன் தன் திருவடிகளைச் சிந்தையில் வைத் தற்குத் தம் நெஞ்சம் ஏற்றதுதானோ எனக் கலங்குகிறார். அடியார் வேண்டிற்றருளும் பெருந்துறைப் பெருமான் அடிகளார்க்குத் திருக்கழுக்குன்றில் குருமூர்த்தமாகக் காட்சியளிக்கிறான். அப்போது அடிகளார் தமக்கு இரு வினை யொப்பு நிலைத்தலைமையின் சிவபெருமான் குரு தரிசனஞ் செய்வித்தான் எனப் பாடுகிறார்.

> "இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன் தன் சத்திதோயக்
> குருவருள் பெற்று"
>
> (சிவஞான சித்தியார்)

இருவினை யொப்பு வந்தபின் இன்ப துன்பம் விருப்பு வெறுப்பு இவைகள் நிகழ்தலின்மையின், மேல் வினையேறாது. விதைக்கு நெல்லைக் காயப்போட்டால் பின் முளைக்கும். அதுபோல் விருப்பு வெறுப்பு இருந்தால் மேல் வினையேறும், இல்லையேல் வினைப்பயனாகிய இன்ப துன்பம் நுகரப்பெற்று உடலூழாய்க் கழியும்.

'உணக்கிலாத தோர் வித்து மேல் விளை
யாமல் என் வினையொத்தபின்'

என இந்நிலையினை அடிகள் விளக்குகிறார்.

அன்போடு நாடோறும் அரனைப் போற்றுதலி னுலும், பிறவிக் கடலிலிருந்து கரையேறப் பெருந்துறைப் பெருமானின் திருவடித் தோணி பிடித்துத் தள்ளுதலி னுலும் திருக்கழுக்குன்றில் குருமூர்த்தியின் காட்சி கிடைக்கப் பெற்றதாக அடிகள் கூறுகிறார்.

## 31. கண்டபத்து

கழுக்குன்றிற் குருமூர்த்தியின் கோலங் கண்டு குளிர்ந்த அடிகள் தில்லையில் திருக்கூத்துக் கோலங் கண்டு ஆனந்தத்தில் அழுந்தினராதலின் " தித்திக்குஞ் சிவபதத்தை, அருத்தியினுல் நாயடியேன் அணிகொள் தில்லை கண்டேனே" என்கிருர், 'அந்தமில்லா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே' என்கிருர். பாச நீக்கமும் சிவப்பேறும் பெற்றமையை எடுத்துக் காட்டு வாராய்,

" பிறப்பறுத்த இணையிலியை; பசுபாசமறுத்தானைக் கண்டேனே " யென்றும், " யான் எனதென் றுரைமாய்த் துக் கோதில் அமுதானுனை " என்றும் அருளுகிருர்.

திருநடனத் திருக்கோலம், காண்பவர் உள்ளத்தைக் கவர்ந்து, சித்தத்தைத் திருவடியில் இருத்தும் என்பார் "சித்தமெனுங் திண்கயிற்ருற் றிருப்பாதங் கட்டுவித்த, வித்தகனுர் விளையாடல்" என அருளுகிருர்.

## 32. பிரார்த்தனைப்பத்து

இப்பதிகம் அந்தாதித் தொடையிலமைந்துள்ளது. இவ்வேண்டுகோட் பதிகம் மனப்பாடஞ் செய்யும் பான்மைத்தாதலின் இணையற்ற இரக்கத்தோடு நெஞ்சம் நைந்து கெஞ்சிக்கெஞ்சி வேண்டுகோள் விடுக்கப்பெறுகிறது: " புலர்ந்துபோன காலங்கள்

புகுந்து நின்றது இடர்; உடையானே! உலவா இன்பச் சுடர் காண்பான் அலந்துபோனேன், அடியேற்கு அருள் செய்யாய்."

அடிகள் பெருந்துறைப் பெருமானை எவ்வாறு அழைக்கிறார்! என்ன கேட்கிறார்? :

"அருமாமணிமுத்தே! தூண்டா விளக்கின் சுடரே! வேண்டாம் வேண்டாம் ஒன்றும் வேண்டாம். மிக்க அன்பு மேவுதல் ஒன்றே எனக்கு வேண்டும்."

இறையின்பத்திற்கும் உலக இன்பத்திற்கும் வேறுபாடு காட்டுவாராய் இறையின்பமானது,

"பேரா இன்பமாகடல், ஒழியா இன்பமாகடல், பிரிவில்லா இன்பமாகடல், மறவா இன்பமாகடல், நினையா இன்பமாகடல், அளவிலா இன்பமாகடல், மாளா இன்பமா கடல்" எனப் பேரின்பப் பெருமையை நெஞ்சார வாயாரப் பேசுகிறார் அடிகளார். துன்ப நீக்கம் வேண்டுவார் 'சுடரார் அருளால் இருள் நீக்கச் சோதீ இனித்தான் துணியாயே' என்கிறார். இன்பம் நீங்காமை வேண்டுவார் "பேரானந்தம் பேராமை வைக்கவேண்டும் பெருமானே" என்கிறார்.

'பெற்ற சிற்றின்பமே பேரின்பமாம் அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயையென் றுந்தீபற'

(திருவுந்தியார்)

சிற்றின்பத்தில் மாயை; பேரின்பத்தில் அருள். இவ்வுண்மையை விளக்குவார்.

"ஊடி ஊடி உடையாயொடு
கலந்து உள்ளுருகிப் பெருகி நெக்கு
ஆடி ஆடி ஆனந்தம்
அதுவே ஆகஅருள் கலந்தே"

எனக்காட்டி இப்பதிகத்தை முடிக்கிறார்.

## 33. குழைத்தபத்து

உயிரின் தற்போத முனைப்பினைக் குழைவித்து உயிரின் உடைமைகளையெல்லாம் இறைவன் ஏன்று கொள்ளுதல் இப்பதிகத்தில் விளங்கும். இஃது இறைவன் குருமூர்த்தியாய் வந்து ஆட்கொள்ளும்போதே நிகழ்வது.

"அன்றே என்தன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ?"

உயிர்க்கு இந்த அடிமை உணர்ச்சி வந்ததும், ஆண்டவன் யாது செய்யினும் செய்க; ஆண்டவன் செயலுக்கு உட்பட்டே அடிமை நடக்கவேண்டும்; உயிரின் செயல் யாவும் இறைவன் செயலே; தான் ஒன்றும் வேண்டாது இறைவன் எதனை அருள்புரி கின்றானோ அதனையே ஏற்றுக் கொள்ள வேண்டும். இறைவன் தன்னை யாது செய்வான் என்ற எண்ணங் கூட எழலாகாது, அவ்வாறு எண்ணுதலும் உண்மை அடிமையின் இலக்கணமாகாது என்பார்,

"அடிமை சால அழகுடைத்தே."

எனப் பிற குறிப்பால் விளக்குகிறார்.

'என்னை உன் வசமே ஒப்புவித்து விட்டேன். நான் ஒன்றையும் ஆராய்வதற்கு எனக்கு உரிமையில்லை. நீ யாது செயினும் ஏற்றதே' என்ற இப் பணிமொழி களால் தம்மை முழுதும் இறைவனிடம் ஒப்புவித்து விட்ட அடிமைத் தன்மையை நன்கு விளக்குகிறார். இப் பதிகம் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளது.

## 34. உயிருண்ணிப் பத்து.

பசுபோதக் கவளத்தை இறையருளாகிய யானை விழுங்கியதும் உளதாகும் நிலையினைக் கூறுவது இப் பகுதி, உயிர் தனக்குக் கிடைத்த பெருமைகளெல்லாம்

இறைவனால் வந்தவை எனக் கருதுதல், தன் பெருமைக்கெல்லாம் இறையருளே காரணம் எனக்கருதி அடங்கியிருத்தல், இவைகளை விளக்குதல் இப்பதிகக் கருத்தாகும். தாம் தாழ்ந்தவராக இருந்தும் இறைவன் எல்லா வளங்களுந் தமக்கு அருளினான்; இறைவன் தம் மனத்தகத்தான் கண்ணினுள்ளான், தமது வாக்கினுள்ளான் எனச் சிந்தை காட்சி உரையெல்லாம் சிவன்பால் அடக்குகிறார் அடிகள். திருப்பெருந்துறை இறைவன் திருவடி தலைமேற் சூடும் பேறு கிட்டியபின் புகழ், செல்வம் முதலியன வேண்டியதில்லை; "நானும் திருவடியை விட்டு வெளிச்செல்லேன், திருவடியையும் என்னை விட்டு வெளிச் செல்ல விடமாட்டேன்" என்று அடிகள் சிவபெருமான் திருவடிக்கீழ் அடங்கி நிலைத்து நிற்கும் நிலையைக் குறிக்கொண்டு காக்கிறார்.

"பற்றற்றவர்களே! ஓடி வாருங்கள்; பதி, பசு, பாசமாகிய முப்பொருள் இலக்கணங்களை உணர்ந்து, உணர்ந்ததன் பயனைச் சிவன் கழல் சிந்தை வைத்த மெய்யடியாருடன் கூடுங்கள்; ஓடி வந்து சிவனடியாரோடு சேராது போனால் அடியாரல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்திப் பற்றற்ற நிலையைக் கலைத்து விடுவர், நீங்கள் கெட்டுப் போவீர்கள்" என்று அடிகள் அறிவுரை வலியுறுத்துக் கூறுவது மக்கள் உய்ய வேண்டுமென்ற அடிகளின் பெருவிருப்பத்தைக் காட்டும். அடிகள் பேரின்பந் துய்க்கிறார், இன்பத்தேனை அள்ளி அள்ளிப் பருகுகிறார். 'இறைவனைக் கொம்புத் தேன் என்னலாமா? பாற் கடலமுது என்னலாமா? இறைவன் கொடுக்கும் இன்பச் சுவையை என் என்பது?' என்று பேரானந்தத்தை இனிமையாகச் சுவைத்து மக்களுக்கு நாவூறச் செய்கிறார்.

"மாலைத் தோன்றும் வளர்மதியை மறைக்காட் டுறையும் மணாளனை
ஆலைக்கரும்பின் இன்சாற்றை அண்ணா மலையெம் மண்ணலைச்
சோலைத்துருத்தி நகர்மேய சுடரிற் றிகழுந் துளக்கிலியை
மேலை வானோர் பெருமானை விருப்பால் விழுங்கி
யிட்டேனே"

என்பது நாவரசர் கண்ட பேரின்பச்சுவை.

## 35. அச்சப்பத்து

அடிகள் இப்பதிகத்தில் அஞ்சவேண்டிய பொருள் கள் 'பாம்பு, பொய்யர் போலியுரை, அவா, வேற்படை, பெண்களின் கடைக்கண் பார்வை, அவர்களின் இன் சொல், வஞ்சகச் செயல்; பிணி, பிறப்பிறப்புத் துன்பம், தீ, பெரும்பழி, மதயானை, இடி, அம்பு ஆகிய இவைகள் எனக் கூறிப் பின் இவைகளுக்கு அஞ்சவேண்டாம். இவைகளினும் கேடு விளைக்கின்ற சிவனன்பரல்லாதாரை யும், சிவவேடத்தை யிகழ்வாரையும், சிவபெருமானைப் பொது நீக்கி அவன் ஒருவனே முழுமுதற் கடவுள் எனக்கொள்ளாதாரையும் அஞ்சவேண்டுமெனக் கூறு கிறார்.

## 36. திருப்பாண்டிப் பதிகம்

அடிகளார் சிந்தையிற் சிவபெருமானுர் திரு உருவே குடிகொள்ளுமாம். பெருமானுர் பாண்டியற்கு ஆரமுது; அடிகளுக்காக வந்த குதிரைச் சேவகனுர். இதனை 'ஒருவரையன்றி உரு அறியாதென் உள்ளமதே' என அடிகள் எதிர்மறையில் வைத்து வலியுறுத்துகிறார். குதிரைமேல் வந்த கோலம் பிறவி வராதபடி தடுத்துத் திரும்பி ஓடச் செய்யும். 'மறுபிறப்பு ஓட மறித்திடுமே.' உலக இன்பம் தண்ணீர் வெள்ளப் பெருக்குப் போன்று நிலையற்றது; ஆதலின் அதிற்கிடந்து அழுந்தலாகாது; இறைவன் திருவடிகளையே பற்றிப் பிடித்துக் கொண்டு பேரின்ப வெள்ளத்தில் திளைக்க வேண்டும். இவ் வுண்மைகளை அடிகளார் அறிவுறுத்துகிறார். "பாண்டிப் பிரான் அடியார்க்கு அருள்நிதிக் குவியலும் பேரின்பச் செல்வமும் அள்ளி அள்ளி வழங்குகிறான்; பெற்றுக் கொள்வதற்கு முந்துங்கள்" என்று அழைக்கிறார், அடிகளார்.

## 37. பிடித்தபத்து.

நான் உய்யும் பொருட்டு, சிவபெருமானே! உன்னை இறுகப் பிடித்துக் கொண்டேன்; உன்னால் எனக்கு அருள் புரியாது ஓடிவிட முடியாது; எங்கே போவாய் பார்ப்போம் என்பதுவே பதிகமுழுதுமுள்ள பாடல்களை இணைத்துச் செல்லும் பொற்சரடு. இப்பொற் சரட்டினில்,"என்பொருட்டு உனைச் சிக்கெனப்பிடித்தேன், இடைவிடாது பிடித்தேன், இம்மையே பிடித்தேன், இருளிடத்துப் பிடித்தேன், எய்ப்பிடத்துப் பிடித்தேன். முடிவு காலத்துப் பிடித்தேன்" எனப் படிப்படியாக ஒளி மிக்கு வீசும் கற்கள் பதிக்கப் பெற்றிருக்கின்ற நயம் காண்க. "தாய் குழந்தை விழித்து அழும்வரை காத்திராது காலமறிந்து பாலூட்டுவாள். அதுபோன்று சிவபெருமான் உயிரின் பக்குவத்தை எதிர் நோக்கியே யிருந்து உயிர் கேட்பதன் முன்னமேயே சிவானந்தத் தேன் பொழிவான்" என இறைவனின் தாயன்பை எடுத்துக் காட்டுகிறார் எம் அடிகளார்.

## 38. திரு ஏசறவு

இப்பதிகத்தில் அடிகள் தமது தகுதியின்மை யையும் இறைவன் தம்மை யாண்டுகொண்ட பெருங் கருணைத் திறனையும் வியந்து அத்தகைய பெருங் கருணையாளனைப் பிரிந்ததற்கு வருத்தமும், மீளவும் சேரவேண்டுமே யென்ற பெருந்தாகமும் காரணமாக வாட்டமும் ஆர்வமுங் கலந்த உணர்ச்சியிற் பாடிய பாடல்கள் அமைந்துள்ளன. நரிகளை நீ பரிகளாக்கினது போன்று கன்மனமுள்ள என்னை இழுத்து இழுத்துக் கரும்பு போன்ற நீ, கருப்பஞ்சாறு போன்ற பேரின்பம் கொடுத்தனை என அடிகள் கூறுகிறார். ஆதரவு அற்ற தமக்குப் பேராதரவாக இறைவன் பாதமலர் காட்டிய கருணைப் பண்பினைப் பெரிதும் அடிகள் பாராட்டிப் பேசுகிறார். தமக்கு இறைவன் அருளாதர வளித்தது நாய்க்குப் பொன்னாசனம் அளித்தது போன்றது

என்றெல்லாம் இறைவன் செய்த நன்றியைப் பாராட்டி, இறுதிச் செய்யுளில் திருஐந்தெழுத்து ஓதப் பெற்றது மிகுந்த தவத்தால் தமக்குக் கிடைத்தது என்றும், சிவபெருமான் தித்திக்குந் தேனும் அமுதமு மாய்த் தமது உள்ளம் புகுந்து அருள் புரிந்தான் என்றுங் கூறிச் 'சிவாய நம' என்று ஓதப்பெறுதல் தவப் பயன் என முடிக்கிறார்.

## 39. திருப்புலம்பல்

மணிவாசகனார் தமக்குத் திருவாரூர்ப் பெருமான் அன்றி வேறு உறுதுணையாவார் ஒருவருமிலர், ஆதலின் அவர் பூங்கழலே தாம் புகழ்வதாகக் கூறி ஈற்றுச் செய்யுளில் தாம் உற்றாரை வேண்டுவதில்லை, ஊரும் பேரும் வேண்டுவதில்லை, சிவபெருமான் திருவடி யன்பு ஒன்றினையே வேண்டுவதாகக் கூறுகிறார். கற்பனவும் இனி அமையும் என்ற அருள்வாக்கு, கல்வி யாவர்க்கும் வேண்டுவது, அதன் நோக்கம், சொற்பாவும் உண்மைப் பொருள் தெரிந்து அவ்வுண்மைப் பொருளில் தூங்குவதேயாகும். அங்கிலை எய்தியதும் அதனைக் கடைப்பிடித்துக் கொண்டு கற்பனவும் இனிப் போது மென்ற மன அமைதி வேண்டப் பெறுவதாகும் என அருள்கிறார்.

சிவன் கழல் கண்டு உளங்கசிந்து எப்பொழுதும் உருகிநிற்ற லொன்றினையே விரும்பியவராய்க் 'கற்றா வின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே' என்று இடையறாது சொல்லிச் சொல்லிச் சிவானந்த விளைவி லேயே திளைத்து அடிகள் நிற்கிறார்.

## 40. குலாப்பத்து

மணிவாசகப் பெருமான், தாம் தில்லை நாயகன் திருவருளாற் பெற்ற பாச நீக்கப் பேறுகளை இப் பதிகத்தில் வகைப்படுத்தி விளக்குகிறார். ஐயம் ஏற்கத்

திருவோடும் அற்ற மறைக்கக் கோவணமும் போதும் வேறு ஒன்றும் வேண்டுவதில்லை யெனுங் கருத்தமைந்த முற்றத்துறந்த முனிவராய் விளங்கினுர் அடிகளார். நாவுக்கரசர் 'கந்தை மிகையாங் கருத்தும்' என்ருர். 'ஓடும் கவந்தியுமே உறவு', 'தேடும் பொருள் சிவன் கழலே' என்ற எல்லையற்ற பற்றரவு பெற்ருர் எமது மணி அடிகளார்.

**'இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்ப முறுத லிலன்'**

என்பது வள்ளுவர் வாய்மொழி.

இவ்விருவினையொப்பு நிலையை அடிகள் பெற்றமையைத் 'துவந்துவங்கள் தூய்மை செய்து' என்ற சொற்றொடரில் அமைத்துக் காட்டியுள்ளார்.

மக்கள் பலருடைய வாழ்க்கை பழமரக்கிளையில் அரும்பு முகிழ்ப்பது போலத் தோன்றிப் பின் மலர்ந்து, காய்த்து வாழ்க்கைப் பயனென்றும் பெருது வீணுகப் பழுத்து முதிர்ந்து முடிவுறுகிறது. இவ்வாறன்றித் தில்லைநாயகன் திருவருளால் வாதவூர் முனிவர் வாழ்க்கை சிவனடி சேர்தற்குச் செய்ய வேண்டிய சாதனங்களில் ஈடுபட்டதென இனிது எடுத்துக் காட்டப் பெறுகிறது.

'சிவபெருமான் திருவடி வன்மைமிக்க அரக்கன் தோளை அடர்த்து நெரித்து அவன் செருக்கடக்கியது; மணிவாசகர் தலைமேல் மாண்புற வீற்றிருந்து அவருடைய பசுபாசம் அறுத்தது' இதனை அழகுற வரைந்துள்ளார் அடிகளார். காட்டில் நடந்த சிவனடி தம் தலைமேல் நாட்டப் பெற்றமையால் ஐம்புலனரட்டை அடக்கும் வன்மையைத் தாம் பெற்றதாகக் கூறி மக்களுக்கு ஐம்புலனடக்கும் முறை வகுத்துக் காட்டப் பெறுகிறது.

'தமக்குச் சிவபெருமானின் திருவடிக்கமலங் கிடைத்தது, பாழ்நிலம் உழுது பயன்பெருது கிடந்த உழவனுக்குப் பொற்கிழியீடு கிடைத்தது போலாகும் எனப் பணிவுடன் அடிகள் சிவன்தாளிணை வாழ்த்து முறை தாழ்வெனுந் தன்மையோடு சைவமாஞ் சமையஞ் சாரு முறை இஃது என எடுத்துக் காட்டுவதாகும்.

## 41. அற்புதப்பத்து

'இப்பதிகத்தில் அடிகள், தாம் திருவருட்பேற்றிற்குத் தகுதியற்றவராயிருந்தும் பெருந்துறைப் பெருமான் தம்மை அருள் புரிந்து ஆட்கொண்டது கருதமுடியாத தொரு பெருவியப்பாகும்' எனப் பாடுகிருர்.மேல் அதிசயப் பத்தில் இறைவன் அருள் புரிந்ததை எண்ணி வியக்கிருர். ஈண்டு அற்புதம் அறியேனே எனத் திருவுாய் மலர்கிருர். அதிசயம் காணக் கூடியது; கண்டு வியக்கத் தக்கது. கண்டு பேச ஒண்ணுத வியப்புச் செயல் அற்புதம் ஆகும். இறைவன் எவ்வாறு பொய்யெலாம் விடும்படி தமக்குத் திருவருள் புரிந்தான்! தமது உண்மை இயல் பினை எவ்வாறு ஞானவெளியிற் காட்டினுன்! என்ற இவைகள் விளக்க முடியாத வியப்பளிப்பன என விளக்கு கிருர். 'தமக்கு அருளார் அமுதினை அடித்து அடித்து நாவில் தீட்டி இனிமையூட்டினுர் பெருமானுர்' என்பது கடவுட் பற்றில்லாதார்க்கும் பற்று ஊட்டுவதாகும். சிற்றின்பத்திலே திளைக்கும் உயிரையும் இறைவன் திருவடி காட்டித் தலைதடுமாருது ஆட்கொள்ளும் பெருமை பெரிது பாராட்டப் பெறுகிறது. இறைவன் தன் திருவடிகளைக் காட்டி உயிர்களின் தீவினையை வீட்டுந் திறமும், வீடு தந்தருளுந் திறமும், உயிர்களின் உளம் புகுந்து ஆட்கொள்ளுந் திறமும் எத்துணையருளின என்று வியக்கப் பெறுகின்றன. பெண்பித்துப் பிடித் தோரையும், முக்குணங்களும் மாயை வடிவமும் இல்லாத சிவபெருமான் அருட்குணக் கடலாகிய அம்மையோடு எழுந்தருளி ஆண்டருள்புரிவான்என்று கூறி ஆண்டான்.

அருள் மாண்பு வியக்கப் பெறுகிறது. வேத சாத்திர மிறுதி நாதமுடிவான ஓசையாகிய விந்து ஞானத்தாலும் உணர முடியாத இறைவன் உயிர்க்கு மெய்யுணர் வளித்து, அதனை ஞான ஒளிமயமாக்கிப் பேரருளால் ஆசை யறுத்து அடியார்க் கடிமையாக்குவான்; இது அற்புதம் அற்புதம் என அடிகளார் கூறுகிறார்.

## 42. சென்னிப்பத்து.

இறைவன் திருவடிகள் தம் தலைமேல் மிளிர்கின் றமையும் அவைகளின் கீழ் அடங்கியதனால் தம் தலை ஒளி பெற்றுத் திகழ்கின்றமையும் அடிகள் கூறுகிறார் இப்பதிகத்தில்.

இப்பதிகத்திற் சிவபெருமானைக் குறிக்கின்ற அடிகள் உள்ளங் குளிர்விப்பன; நாவில் அமுதூறத் தித்திப்பன:

"யாவராயினும் அன்பரன்றி யறியொணு மலர்ச் சோதியான்."

"அழகன் இன்னமுதாய ஆனந்த வெள்ளத்தான்"

"மட்டுவார் குழல் மங்கையோர் பாகம் வைத்த அழகன்."

மலர்ச் சேவடி சென்னி மன்னிப் பொலிவு பெற்ற ஒரு பெண்மணி தன் தோழியரை யழைத்துத் தான் தன் நாயகனாகிய சிவபெருமானின் மலர்த்தாளிணை சூடிப் பொலிவுறுதலை பார்க்கப்பெருமையோடு அழைக்கிறாள் பின்வருமாறு:—

"நங்கைமீர்! எனை நோக்குமின்! நங்கள்
நாதன், நம் பணி கொண்டவன்,
தெங்கு சோலைகள் சூழ் பெருந்துறை
மேய சேவகன், நாயகன்,
மங்கை மார்கையில் வளையுங் கொண்டு, எம்
உயிருங் கொண்டு, எம் பணி கொள்வான்
பொங்கு மாமலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி மன்னிப் பொலியுமே."

தாளுகத் தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன்; அவன் யாண்டும் சத்தியினிடமாகவே தோன்றுவான் அன்றித் தாளுக வேறு தோன்ருளுகலான் என்பன பெற்றும்.

நிலம், நீர், தீ, வளி, வெளியாகிய ஐம்பெரும் பூதங்களிலும் கலந்து நிற்றலான் "அவற்றின் நிறங் களாகிய பொன்மை, வெண்மை, செம்மை, கறுமை, புகைமை என்னும் ஐந்து நிறங்களும் உடையவனே!" எனவும் பொருள் கூறலாம்.

விண்ணோர் தம்முள் எவர் பெரியரெனச் செருக் குற்று அமர்புரிந்தனர். இப்போராட்டத்திற்கிரங்கி அம்மை இச் செருவினை ஒழிக்கும்படி இறைவனை வேண்டி ஞள். சிவபெருமான் இயக்க வடிவெடுத்து வந்து தேவர்கள் முன் ஒரு துரும்பை நட்டு "எவன் இத்துரும் பைத் துணிக்கவல்லானே அவனே பெரியன்" என்று கூறி நின்ருன். தேவர்கள் யாவரும் அவரவர் படைகள் கொண்டு அத் துரும்பைத் துணிக்க முயன்றும் துணிக்க முடியாது தவித்து "நீவிர் யாவர்" என்று இறைவனைக் கேட்டு நின்றனர். இறைவன் மறைந்தான், அம்மை அவர்களுக்குக் காட்சி யளித்து இயக்க வடிவாக வந்த வன் சிவனென்று கூறிச் சிவனுடைய ஆற்றலையும் முதன்மையையும் அறிவுறுத்திஞள்; சிவனை ஏத்தவும் பணித்தருளிஞள். விண்ணோர்கள் செருக்கொழிந்து தன்னை ஏத்தும் வரை இறைவன் மறைந்து நின்ருன். இதன் விரிவைக் காஞ்சிப்புராணம் அமரீசப்படலத்திற் காண்க. ஏத்த—காரியப் பொருட்டாய் வந்த வினை யெச்சம். உயிர்களுக்கு இருவினை காரணமாக மாயை யால் யாக்கப்பட்ட உடம்பு இறைவனுற் கொடுக்கப்படு கிறது. உயிர்கள் பிறந்து வினைப்பயனுகிய இன்பத் துன்பங்களை உலகில் துய்த்துப் பின் இறக்கின்றன.

"இருவினை இன்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து
வருவது போவதாகும்."

(சிவஞானசித்தியார் சூ. 2-2)

## 46. திருப்படையெழுச்சி

நிலஉலகப் படைக்கும் வீட்டுலகப் படைக்கும் போர். வீட்டுவீரர் ஞானவாளேந்திப் போர் புரிகின்றனர். உலக வீரர் மாயை வாள் ஏந்தி நிற்கின்றனர். ஞான வீரர்க்குத் திருநீற்றுக்கவசம்; தொண்டர், அன்பர், யோகியர் எல்லோரும் அணி வகுத்துப் பிறவித் துயர்ப் படையுடன் போர் புரிகின்றனர். ஞானவீரர் நாதப்பறை முழக்குகின்றனர்.

## 47. திருவெண்பா

'இம்மையிற் சிவனடி சேர்ந்த சீவன்முத்தர் இயல் பினைக் கூறுவது இப்பகுதி. சிந்திப்பவர்க்குச் தேனினிமையும் ஞானச் சுடரொளியுந் தருகின்ற சிவ பெருமானைச் சிந்தனை செய்யாதிருந்தோமே! நாம் செய்த பிழை ஒன்றும் இல்லையே. சிவபெருமான் பிறவிப் பிணிக்கு மருந்தாவான்; எனது அகக்கண்ணைத் தனது அருட்கண்ணால் நோக்குவான். எம்பெருமான் யாவர்க்கும் மேலானவன், அடியேன் யாவரினுங் கடையேன். அவ்வாறிருந்தும் எவரும் பெருத தோரின்பம் அளித்தான். அந்தக் கோவுக்கு யான் செய்யும் கைம்மாறொன்றறியேன்' என்றெல்லாங் கூறி அடிகள் சிவன் தாளின் அருள் திறத்தைச் செவ்விதாக எடுத்துக் காட்டுகிருர். என்னுடைய நெஞ்சினை இறைவாழ் பதியாகத் தக்கவாறு நான் பாதுகாத்துப் பேணலின் என் சிந்தையே உவந்து வாழும் இடமாக் கொண்டான் பெருந்துறைப் பெருமான்; சிவபெருமான் மருந்துருவாய் வந்து பேரின்பந்தருவான், ஏன் பேரின்பமொன்று மட்டுமா எல்லாந் தருவான் என்று அடிகள் போற்றுகிருர்.

## 48. பண்டாய நான்மறை

பண்டாய நான்மறையென்று தொடங்கும் இப்பகுதி பெருந்துறைப் பெருமானை வாழ்த்துதலாற் பெறும் பயன் களைக் கூறுவதாகும். பெருந்துறைநாதனை வாழ்த்துதல் பிறவியை வேரொடு களையும்; மருள் நீக்கும்; பெருந் துறையை வாழ்த்துவாரே வாழ்ந்தாராவர்; அவரே வினை கெடப் பெறுவர்; பெருந்துறைப் பெருமானும் உத்தர கோசமங்கைக்கரசுமே கண்டு வழிபடற்குரியவர்; வாயாரப் புகழ்தற்கும் உரியர். பெருந்துறை மாதேவன் மாசற்ற மணியாவான். அவனை மணிமொழிகளாற் பாடி அவன் திருவடிகளை உள்ளத்திற் பதியவைத்துப் பிறவாமைப் பேறு தாம் பெற்றதாக அடிகள் ஈண்டுக் கூறுகிறார்.

## 49. திருப்படையாட்சி

இப்பகுதியில் அடிகள் தம்மை ஞானப் போர்ப்படைத் தலைவராக வைத்துக் கொள்கிறார். உலக மயக்கப் பகை தமக்குத் தோற்றோடிப் போகப் பெருந்துறை ஈசன் தமக்கு முன் எழுந்தருளிக் காட்சியளித்தலின் வெற்றி முழக்கோடு ஞானநன்னெறிக் கொள்கைகள் தாமாக வந்து தம்மைத் தலைப்படுவனவாக அருளுகிறார்.

## 50. ஆனந்த மாலை

உலகப் போராட்டத்தை வென்று வெற்றிமாலை புனைந்த அடிகளார் இதுவரை உலகியலில் ஈடுபட்டு அவலக்கடலில் விழுந்தமைக்குப் பெரிது இரங்கித் தாம்

இறைவனைச் சேரப் பெருவிருப்ப முறுகிறார். தமது ஆண்டானுலொன்றுங் குறைவில்லை; தாம் பிற்பட்டமை தம் குற்றமே என்கிறார். இறைவனே தம்மை அஞ்சே லென்று அருள்புரிய வேண்டுமென அடிகள் விண்ணப்பஞ் செய்கிறார்.

## 51. அச்சோப்பதிகம்

மணிவாசகரைச் சிவமாக்கி ஆட்கொண்டார் சிவ பெருமானார். மாணிக்கவாசகரின் சிவபோகப் பெரு விருப்பம் நிறைவுற்றது. சிவபெருமானார் தம்மை ஆட்கொள்ளுமுன் பாசத்தோடு கூடியிருந்த தம் தன்மையை அடிகள் நோக்குகிறார்; பாசமெனுந் தாழுருவித் தமக்கு உய்யுநெறி காட்டிய ஒப்பற்ற அருளைப் போற்றுகிறார், வியந்து பாராட்டிப் பேசுகிறார்; வேறு யாவர்க்கு இப்பேறு கிடைக்குமெனப் பெருமகிழ்ச்சியும் வியப்பும் அடைகிறார். முந்தின மாலையில் 'அஞ்சே லென்பார் ஆரிருக்கிறார்' எனத் திகைத்தவர் இப் பதிகத்தில் 'அஞ்சேலென் றருளியவாறு ஆர்பெறுவார்' என்கிறார்.

அடிகளைச் சிவமாக்கி ஆட்கொண்ட
தில்லைச் சிற்றம்பலவன் திருத்தாள் போற்றி.

மாசில்மணியின் மணி வார்த்தை வாசகமாமழை பொழிந்த
மாணிக்கவாசகர் மலரடி போற்றி.

திருச்சிற்றம்பலம்.

தமிழ் வித்துவான்
**வே. மாணிக்கவாசகம் பிள்ளை.**

# திருவாசகம்

## பதிப்புரை

அருட் கடலாகிய பொன்னம்பலப் பெருமான் திருவருளால் திருவாசக மெய்கண்ட உரை இரண்டு பகுதிகளாக அச்சாகி நிறைவு பெற்றது. இதற்கு முன்னுரை வழங்கியருளிய சைவத் திருவாளர். அ. உத்தண்டராம பிள்ளை எம். ஏ., ஐ. ஏ. எசு. அவர்களுக்குச் சங்கத்தின் நன்றி பெரிதும் உரியது. இவ்வுரை யாக்கத்திற் பங்கு கொண்ட ஆசிரியர் பலரும், சிறப்பாகப் பொறுப்பேற்றுத் திருத்தங்கள் செய்து உடனிருந்து பணியாற்றும் தமிழ்ப்பெரும்புலவர் வே. மாணிக்க வாசகம் பிள்ளை யவர்களும் நீடூழி வாழி வாழி என வாழ்த்துகின்றோம். இந்நூலினைச் செம்மையாக அச்சிட்டுதவிய நெல்லைக் கூட்டுறவு அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

திருநெல்வேலி
14—6—1967

( தொழிற் கழகத்தார் ஆணைப்படி )
இ. மு. சுப்பிரமணிய பிள்ளை
அமைச்சர்.

# பொருள் அடக்கம்.

மூன்றும் பகுதி

# பாட்டு முதற்குறிப்பகராதி.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருவாசகம்.

## கடவுள் வாழ்த்து.

திருச்சிற்றம்பலம்

நிறைவெண் கொடிமாடம் நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே.

(திருஞானசம்பந்தர்)

நமச்சி வாயவே ஞானமும் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

(திருநாவுக்கரசர்)

உய்த்தாடித் திரியாதே உள்ளமே
ஒழிகண்டாய் ஊன்கண் ஓட்டம்
எத்தாலும் குறைவில்லை என்பர்காண்
நெஞ்சமே நம்மை நாளும்
பைத்தாடும் அரவினன் படர்சடையன்
பரஞ்சோதி பாவம் தீர்க்கும்
பித்தாடி புலியூர்ச் சிற்றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே.

(சுந்தரர்)

வருவாசகத்தினின் முற்றுணர்ந்தோனை வண்தில்லை
மன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார்தரு திருக்கோவை கண்டேயும் மற்றப்
பொருளைத்
தெருளாத உள்ளத்தவர் கவிபாடிச் சிரிப்பிப்பரே.

(நம்பியாண்டார்நம்பிகள்)

திருச்சிற்றம்பலம்.

ஆரருள் வடிவமாய அன்னையார் திருக்கண் சாத்தச்
சீரருள் அம்பலத்தே திருநடம் நவிலுவாரே
பேரரு ளொடுகையேடு பிடித்தெழு திடப்பணித்தார்
நாரருள் அடியாரோடு நமைஎழுதவும் பணிப்பார்.

(திருப்பெருந்துறைப் புராணம்)

நிறைந்த திருவருள் வடிவமாய் விளங்குகின்ற சிவகாமியம்மையார் தமது திருக்கண்ணால் நோக்கிக் கொண்டேயிருக்கச் சிறப்பாகிய வீடுபேற்றை யருளுகின்ற மெய்ஞ்ஞானமேயான மன்றில் திருநடனம் பயிலுகின்ற அம்பலவாணரையே பெருங் கருணையோடு கையில் ஏடு பிடித்து எழுதும்படி பணித்த மாணிக்க வாசகர் நம்மை அன்பும் அருளும் நிறைந்த அடியார் கூட்டத்தில் எழுதவும் ஆணை தருவார்.

# திருவாசகம்

## க. சிவபுராணம்.

சிவபுராணம் — ***சிவபெருமானது ஆதியும் அந்தமுமில்லாப் பழமை முறை.***

தோற்றுவாய்

முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய சிவபெருமானுக்கு இயற்கையாய், என்றும் ஓர் இயல்பினவாய், அமைந்துள்ள அருட் குணங்களையும் அவர் உயிர்களை உய்விக்கும் பழமையான முறைகளையும் சிவபுராணம் எடுத்துரைக்கும். சிவபெருமான் திருப்பெருந்துறையில் குருந்தமர நீழலில் குருவடிவங்கொண்டு எழுந்தருளியிருந்துகொண்டு மாணிக்கவாசகருக்குச் சிவஞானபோதத்தை உணர்த்தியருளினர். பின்னர், "தில்லையில் முத்தி பொருந்துவை" எனத் திருவாய் மலர்ந்து அவருடைய நெற்றியில் திருநீறு சாத்திக் கண்ணருள் புரிந்து திருவுருக் கரந்தார்.

மாணிக்கவாசகர் "அளிவளர் குருந்தநீழல் அரன் அருளுரை அறிவுறுத்தப் பெற்றேன், அவன் அருளுருக் கண்டு கண்டு களிக்கும் பேறிழந்தேனே" என்று அலறினர். 'பாடுவார்க் கிரங்குவான் பரமன்' என்ற கருத்து அவர் உள்ளத்துத் தோன்றிற்று. உடனே நான்மறை மொழியாம் நமச்சிவாயச்சொல் மறவா மனத்தராகிய மாணிக்கவாசகர் "நமச்சிவாய வாஅழ்க" என்றெடுத்து நாதன் தாளை வாழ்த்தி ஞானவாசகம் புகன்றருளினர்.

"காத லாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே."

என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கு. "நமச்சிவாய" என்பது நாதன்நாமமாதலின் மணிவாசகனார் "நமச்சிவாய வாழ்க" எனத் திருவாய் மலர்ந்து, நாதன் திருவடிகளை வழுத்துகிறார்.

"தேசுறுமா ணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்திற்
பேசுதிருச் சிவபுராணத் தகவற் பெருமைசொலில்
ஈசர்தமக் கியல்பான திருநாம முதல்எவையும்
ஆசறவே வாழ்கஎன வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம்."

(திருவாசக உண்மை

(சிவபுராணத்து அகவற் பெருமை - கலிவெண்பாவா ஞகிய சிவபுராணத்திலும் ஏனைய மூன்று அகவல்களிலும் உள்ள பெருமை என்று பொருள் கொள்க.) சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில் முதன்மையன. ஆதலின் அவனது முறை ஆதியில்லாப் பழமை முறை. ஏனை அயன், மால் முதலியோர் புண்ணியஞ்செய்து ஐந்தொழில் அதிகாரம் இடையிற்பெற்றவர்கள். இதனை விளக்குவது சிவ பெருமானது இயற்கையான பழமை முறை கூறும் சிவபுராணம்.

"அளிப்பளிப் பாதிநிலை பெரிதெனவி ழைந்துதவம்
ஆற்றயன்மு குந்தன் முதலோர்
அருளினால் அந்தந்த நாட்புதிது புதிதாய்
அடுத்தசீர் அவர்கள் ஈற்றில்
விளிப்புறுதல் போலாது அநாதிமுறை யாம்பழமை
மேன்மை இயல்பாக என்றும்
விரிதிறனு ணர்த்தியருள் சிவபுராணம்."

(மாணிக்கவாசகர் பிள்ளைத் தமிழ்)

உ

# திருவாசகம்

## சிவபுராணம்

( கலிவெண்பா )

[இதுவே திருவாசகத்துக்குக் கடவுள் வாழ்த்து; இதுவே பாயிரம்; இதுவே திருவாசகத்தின் பயன்; இதுவே ஓதுவாருக்குப் பேரின்பப் பெருவாழ்வு அருள்வது ]

*திருச்சிற்றம்பலம்*

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க

வேகங் கெடுத்தாண்ட வேந்தன்அடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க

ஈசன்அடி போற்றி எந்தை அடிபோற்றி
தேசன்அடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி

ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
'ஐயா' எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை யகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய

விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே யுள்ளானே

அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணா ரமுதே உடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று

போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே

அல்லற் பிறவி அறுப்பானே "ஓ" என்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.



## வாழ்த்துரை.

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப் பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழியாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
ஏகனநேக னிறைவனடி வாழ்க

***பதப்பிரிவு :***

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க.
ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க.

***பொழிப்புரை :***

*(நாதன் நாமமாகிய) 'நமச்சிவாய' என்னும் திருஐந் தெழுத்து வாழ்வதாக. (நாத தத்துவத்தையும் கடந்து விளங்கும்) தலைவனாகிய சிவபெருமானுடைய திருவடிகள் வாழ்வனவாக. கண்ணிமைக்கும் நேரங்கூட எனது உள்ளத்தின் நீங்காது நிற்கும் பெருமானுடைய திருவடிகள் வாழ்வனவாக. திருப்பெருந்துறையில் அடியேனை ஆண்டுகொண்ட குருமணியினுடைய திருவடிகள் வாழ்வனவாக. வீடு பேற்றுச் சிறப்பு நூற் பொருளாக நிலை பெற்று அந்நூல் உணரும் அறிஞர்க்கு இனிக்கும் அமுதனுடைய திருவடிகள் வாழ்வனவாக. தான் ஒருவனாகவேயிருந்தும் தனது சத்தியால் பலபல வடிவங் கொண்டு உள்குவார் உள்ளத்தே எழுந்தருளியும் எங்கணும் தங்கியிருந்தும் திருவருள் புரிபவனுடைய திருவடிகள் வாழ்வனவாக.*

**விளக்கம் :**

*குருமணி மொழிந்த சிவஞானபோதப் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து கடந்த நிலையில்*

நிற்கின்ற அடிகள், நூற் பொருள் முழுதையும் தன்னகத்தே அடக்கிக் கொண்டிருக்கிற திருவைந்தெழுத்தைத் தலைப்பில் வைத்துத் தமது நூலைத் தொடங்குகிறார்.

**“ அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்**
**அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும் — அஞ்செழுத்தே**
**ஆனந்தத் தாண்டவமும் யாவைக்கும் அப்பாலாம்**
**மோனந்த மாமுத்தி யும்.”**

(உண்மை விளக்கம்-45)

அடிகள், அருளாசிரியர் வாக்காற்பெற்ற மெய்ஞ்ஞானத்தின் திரண்ட பொருள் திருவைந்தெழுத்தே என்பதையும், அதனை ஓதப் பெறுதலே சிறந்த தவப்பேறு என்பதையும் பின்வரும் திருப்பாடலில் அருளுகிறார்.

**“நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்**
**தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்**
**தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்**
**ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே.”**

(திருவாசகம்–553)

முத்தித் திருஐந்தெழுத்தின் பொருள்பற்றியே பேரைந்தெழுத்தாகிய ‘நமசிவாய’ என்பதற்குப் பொருள் கொள்ளவேண்டும். அவ்வாறன்றி, ‘சிவாய – சிவனுக்கு, நம - வணக்கம்’ என்று பொருள் கொள்வது பொருந்தாது. திருஐந்தெழுத்து ஓரெழுத்தொருமொழி ஐந்து சேர்ந்த ஒரு தொடர்மொழி; ஐந்தெழுத்தும் ஐந்து பொருள்களைக் குறிக்கும். சி - சிவம், வ - அருள், ய - உயிர், ந - மறைப்பாற்றல், ம - மலம். ‘நமசிவாய’ என்ற அஞ்செழுத்து “நகரமகரங்களாகிய பாசத்தைவிட்டு வகரமாகிய அருளால் சிகரமாகிய சிவத்தை, யகரமாகிய உயிர் சேர்வதாக” எனப் பொருள்படும்.

**“சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்**
**அவனெழுத் தஞ்சின் அடைவாம்.”**

(உண்மை விளக்கம்–42)

திருஐந்தெழுத்தில் அமைந்த ஐந்தெழுத்துக்களும் ஐந்து பதங்கள் என்ற உண்மை நாவுக்கரசர் பெருமானாலும், சுந்தரமூர்த்தி நாயனாராலும் அருளிச் செய்யப்பெற்ற தேவாரத் திருமுறைகளில் விளங்கக் காணலாம்.

**"பதத்தெழு மந்திரம் அஞ்செழுத் தோதிப் பரிவினொடும்
இதத்தெழு மாணிதன் இன்னுயிருண்ண வெகுண்டடர்த்த
கதத்தெழு காலனைக் கண்குருதிப் புனலாறொழுக
உதைத்தெழு சேவடியான் கடவூருறை உத்தமனே."**

(திருநாவுக்கரசர்)

**"அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி
முந்தியெழும் பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திருவாரூர் புக்கு
எந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே."**

(சுந்தரமூர்த்திகள்)

மாணிக்கவாசகர் ஞானாசிரியனைத் தேடி அலைந்தார்; அருளாசிரியன் உருவங்கண்டார்; முத்திக்கு நேர் நெறியாகிய "நமசிவாய" என்னும் திருஐந்தெழுத்து இவரை நாடி அடைந்தது.

**"வீடினார் உலகினில் விழுமிய தொண்டர்கள்
கூடினார் அந்நெறி கூடச் சென்றலும்
ஓடினேன் ஓடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினேன் நாடிற்று நமச்சி வாயவே"**

(திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்
நான்காந்திருமுறை-பதிகம் 11–7.)

"திருஐந்தெழுத்து உலகில் நின்று நிலவுக" என வாழ்த்திய அடிகள் அவ்வைந்தெழுத்தும் பிறத்தற்குக் காரணமாகிய ஒலி வடிவான நாத தத்துவத்தை இயக்குகின்ற நாதப் பறையினனாகிய நாதனது திருவருள் வாழ்க என வாழ்த்தினார். ஐந்தொழில் நடாத்த ஆடும் அம்பலவாணன் தன் வலக்கையில் ஏந்திய உடுக்கினை

ஒலிப்பித்து முப்பத்தாறு தத்துவங்களின் முதல் தத்துவமாகிய நாதத்தினைத் தோற்றுவிப்பான்.

**" தோற்றம் துடியதனில் "**

(உண்மை விளக்கம்-36)

**" நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும் "**

(*திருவாசகம்: கீர்த்தித்திருஅகவல் - 108*)

**" நாதப்பறையினர் அன்னே என்னும் "**

(*திருவாசகம: அன்னைப்பத்து-1*)

நாத தத்துவத்தின் முடிவில் தத்துவங் கடந்தவனாகிய சிவபெருமான் வீற்றிருக்கிறான்.

**" நாதமுடிவிலே நஞ்சுண்ட கண்டனே.**

(*திருமந்திரம்*)

மாணிக்கவாசகர் தமது சிந்தையைச் சிவனுக்கே என ஆக்கினார். திருப்பெருந்துறையுறை சிவனும் அவரது சிந்தையினைக் கோவிலாக் கொண்டான். ஆதலின் இறைவன் கண்ணிமைப்பொழுது கூட மணிவாசகர் நெஞ்சின் நீங்காது விளங்கினான்.

கண்ணிமை இயல்பாக ஒரு தடவை பொருந்துதற்கு எடுக்கும் மிகச்சிறிய கால அளவே இமைப்பொழுதாகும்; இஃது ஒரு மாத்திரை யென்ற கால அளவையைக் குறிக்கும். கைந்நொடியும் கண்ணிமையும் ஒரே கால அளவையைக் குறிப்பன. நொடி - சுடக்கு.

**" கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை**
**நுண்ணிதி னுணர்ந்தோர் கண்டவாறே "**

(*தொல்காபபியம்: எழுத்ததிகாரம 7*)

**"இயல்பெழுமாந்தர் இமை நொடி மாத்திரை."**

(நன்னூல் 100)

இமையும் நொடியும் இயல்பாக எழுதல் வேண்டும்.

நெஞ்சம் இறைவற்கு இடமாயிற்று ஆண்டே அன்பும் உருக்கமும் நிகழ்தலின்,

**" நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்
நினையா தொருபோதும் இருந்தறியேன் "**

(திருநாவுக்கரசர் தேவாரம்: நான்காந் திருமுறை 1-2)

'நாதன்தாள் வாழ்க' என அண்டத்தமைந்த நாத தத்துவ நாதனை வழுத்திய அடிகள் பிண்டமாகிய உடம்பின்கண் இருக்கும் முப்பத்தாறு தத்துவ வடிவான இதயத் தாமரை மலரிலுள்ள நாத தத்துவத்தின் மேலிருக்கும் நாதனை வாழ்த்துகிறார். உடலகத் தலர்ந்த இதய கமலத்தியல்பு சிவஞானபோதத்திற் பின்வருமாறு விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது :-

உள்ளத்தாமரை உந்தியிலிருந்து தோன்றுகிறது; நிலமுதல் இருபத்துநான்கு ஆன்ம தத்துவமும் எண் விரல் அளவாயுள்ள நாள வடிவம்; வித்தியா தத்துவம் ஏழும் சுத்தவித்தையும் எட்டு இதழ் வடிவம்; ஈசுர தத்துவமும் சதாசிவ தத்துவமும் கேசர வடிவம்; விந்து தத்துவம் பொகுட்டு வடிவம்; நாதம் அப்பொகுட்டில் காணப்படும் அரிசி வடிவம்; சிவனது சத்தி இம்மலர் மேல் நிலைபெறுகிறது.

**" மண்முதல் நாளம் மலர் வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும் — நண்ணிற்
கலையுருவாம் நாதமாம் சத்தியதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்."**

இதனைத் திருக்குறளாசிரியர், நாயனார்

**" மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார் "** எனக் கூறினார்.

இமைப்பொழுதும் நெஞ்சின் நீங்காது நின்ற இறைவனே மாணிக்கவாசகருக்குக் குருவாய்த் திருப்பெருந்துறையில் எழுந்தருளிவந்து அருள்நெறி உணர்த்தினான். ஆதலின் அவ்விறைவனையே மாணிக்கவாசகர் "கோகழி

ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க" என வாழ்த்துகிறுர். முதல்வனே குருவாய் வருவான் என்பது சிவஞானபோத மெய்யுரை.

''இனி, இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது'' (சிவஞான போதம் 8-ம் சூ.)
''அவன் அந்நியமின்றிச் சைதன்ய சொரூபியாய் நிற்றலான்'' ( ,, ) (ஏது)

"தத்துவ ஞானத்தின் அவாவுதலையுடைய உயிர்கட்கு இதுகாறுந் தமக்கு முதலாய் உண்ணின்று உணர்த்திவந்த பரம்பொருளே அப்பருவமறிந்து குருமூர்த்தமாய் எழுந்தருளிவந்து அதனை அறிவுறுக்கும்" (சிவஞானபோதச் சிற்றுரை)

'' அகத்துறு நோய்க்கு(உ)ள் ளினரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பாரோ தான்.'' (திருவருட்பயன்)
(அருளுருநிலை 2 (92)

கோ-தலைமையான, கழி-துறை-பிறவிக்கடலிலிருந்து உயிர்கள் கரையேறுகின்ற பெருந்துறை. கோகழி யென்பது திருப்பெருந்துறை. மணிவாசகப் பெருந்தகையார்க்குக் குருமணி எழுந்தருளிய இடம் அஃதே. அது திருப்பெருந்துறை; துறைசை, பெருந்தை எனவும் மருவி வழங்கப்பெறும். துறைசை என்ற பெயர் திருவாவடுதுறைக்கும் மருவி வழங்கப் பெறுதலின் கோகழி என்பது திருவாவடுதுறையைக் குறிக்கும் என்று மயங்குவர் சிலர். கோ-பசு, கழி-நீக்கம்; கோகழி-பசுத்துவம் கழிகின்ற இடம். திரு ஆ-அடு-துறை எனப் பிரித்து அப்பொருள் கொள்வது, மாணிக்கவாசகருக்குக் குரு மூர்த்தி எழுந்தருளிய இடம் திருவாவடுதுறை யன்மையின் பொருந்தாது.

செம்மேனி யெம்மானுகிய மாணிக்கவண்ணன் 'குருமணி' என அழைக்கப் பெறுகிறுன்.

"சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" (சிவஞான சித்தியார், சூ 2. அதி-8-15). மாணிக்கவாசகருக்கு உபதேசிக்கப் பெற்றது சித்தாந்த முதனூலாகிய சிவஞான போதம். சிவஞான போதப் பொருளாகிய சித்தாந்தம் சிவாகமமாதலின் "ஆகமமாகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க" என அடிகள் அருளுகிறார்.

அண்ணித்தல் — இனித்தல்.

**"திருப்புத்தூரரைச் சிந்தை செயச்செயக்**
**கருப்புச்சாற்றிலும் அண்ணிக்குங் காண்மினே."**

(ஐந்தாந்திருமுறை, பதிகம் 61-5)

**"அறிஞர்க்கினிக்கும் அமுதன்."**

(காஞ்சிப்புராணம், அமரீசப்படலம் 15)

இவ்வாறு சொல்லுலகமாகிய எழுத்து, சொல், மந்திரங்கள், நூல்கள் இவைகளில் தங்கியிருக்கும் இறைவன் பொருளுலகாகிய புவனங்களில், தத்துவங்களில், கலைகளில் எவ்வாறு தங்கியிருக்கிறான் எனின் எங்கணும் இறுப்பவன் (தங்குபவன்) இறைவன் என்க.

ஓரிடத்திருப்பவன் மற்றோரிடத்து இருத்தல் எவ்வாறு இயலும்? கங்கைக் கரையில் நின்றான் காவிரிக் கரையிலும் நிற்றல் யாங்ஙனம்? இவ்வினாவிற்குத் தக்க விடை பகர்வது சைவநூல். இறைவன் அருளையே குணமாகவுடையவன். இறை-சிவன், அருள்-சத்தி. சத்தியும் சிவமும் சூடும் தீயும் போலக் குணகுணியாம். சிவமின்றிச் சத்தியில்லை, சத்தியின்றிச் சிவமில்லை.

**'அருளது சத்தியாகும் அரன்தனக்கு அருளையின்றித்**
**தெருள் சிவமில்லை, அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை."**

(சிவஞானசித்தியார், சூத்திரம் 5 அதி 2,)

சூரியன் ஒளி எங்கும் பரவியிருத்தல்போல் இறைவன் அருள் எங்கும் நிறைந்திருக்கின்றது.

"கடவுள் ஒருவர், அவர் எங்கும் நிறைந்திருக்கிறார்" என்ற உண்மையை நிலைநாட்டுவது அம்மையப்பர் திருவுருவம்.

**"எங்குமுளன் என்றளவை ஒன்றன்று; இரண்டென்னில்**
**எங்கு முளனன்று; எவற்றெவனும் — அங்கண்**
**அவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீசன்**
**அவையுடைமை ஆளாநாம் அங்கு."**

(சிவஞானபோதம், சூ-2, அதி 4)

"இறைவன் எங்குமுளனாயிருத்தலின் அவன் ஒரு பொருளாயிருப்பான். அவன் ஓரிடத்திருப்பானே யன்றி யாங்கணும் நிறைந்து நிற்க மாட்டான். இருவேறு பொருள்களாயிருப்பான் எனின் தன்னிடத்திலேயே வேற்றுமையுடையவன் பிறபொருள்களில் வேற்றுமை யின்றிக் கலந்து நிற்க முடியாது. "இறைவன் எங்கும் நிறைந்தவனல்லன் எனக் கூறின் உலகத்துப் பொருள் களெல்லாம் எழுத்துக்களுக்கெல்லாம் அகரம் போல அவனையின்றி அமையா" என்ற உண்மை சிதைந்து அவனது இறைமைக் குணமும் இன்றாகும். ஆதலின் இறைவன் ஞாயிறும் ஒளியும் போல ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்ப் பொருளொன்றே குண குணியாய் இருதன்மைப்பட்டுச் சத்தியும் சிவமுமாய் இயைந்து நிற்கும். ஆதலின் கடவுள் ஒருவர் என்கிறோம். இவ்வுண்மையைக் குமரகுருபர அடிகள்

சிதம்பரச் செய்யுட் கோவை பின்வருமாறு கூறுகின்றது :—

“ அருவருக்கும் உலகவாழ் வடங்க நீத்தோர்க்
கானந்தப் பெருவாழ்வாம் ஆடல்காட்ட
மருஅருக்கன் மதிவளிவான் இயமானன் தீநீர்
மண்ணெணும் எண்வகை யுறுப்பின் வடிவுகொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன்றால் அவ்
வுருவையிஃ தொருத்தன் என்கோ ஒருத்திஎன்கோ
இருவருக்கு மூரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொலில தெனின்யான் மற்றென் சொல்கேனே.”

இவ்வாறு உலகப்பொருள்களிற் கலந்திருப்பவன் உயிர்களிடத்தும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் உயிரறிவும் கண்ணொளியும்போற் கலந்து நின்று அறிவை விளக்கி உலகப் பொருள்களிலும் பிரியாது சென்று உயிரின் பொருட்டுக் காட்டுதல் மாத்திரமே யன்றித் தானும் போகப் பொருள்களைக் காண்கின்றான். இவ்வாறு வேற்றுமையின்றி உயிர்களுடன் எக்காலத் துங் கலந்திருப்பினும் உயிர் வேறு, கடவுள் வேறு; உயிர் என்றும் மீளா அடிமை; இறைவன் என்றும் உயிருக்கு ஆண்டவன்; உலகப் பொருள்கள் யாவும் அவனுடைமைப் பொருள்கள்

“ பாய ஆருயிர் முழுவதும் பசுபதி அடிமை
ஆய எவ்வகைப் பொருள்களும் அவனுடைப்
பொருள்கள் ”

(தணிகைப் புராணம்)

இறைவன் உயிர்களின் பொருட்டுப் பலபல வேடங் களெடுக்கிறான். ஒருவனே நாடக அரங்கில் பல வேடங் கட்டுவதுபோல் இறைவனும் அவனது அருளால் பல அருள் வடிவங்கள் எடுக்கிறான். இறைவன் எடுக்கும் வடிவங்களெல்லாம் அருள் வடிவங்கள்; மாயை வடிவன்று. அவன் யாது செய்யினும் அச்செயலெல்லாம் உயிரின்பொருட்டே, தன்பொருட்டன்று.

திருவாசகத்தில் "ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க" என்ற இவ்வோரடி தன்னகத்தே அடக்கிக் கொண்டிருக்கும் நுண் பொருள்களைப் பின்வரும் அருட் பாடல்களிற் காண்க!

"ஒருவனே இராவணுதிபாவக முற்முற் போலத்
தருவன் இவ்வுருவமெல்லாந் தன்மையுந்திரியாளுகும்;
வரும் வடிவெல்லாஞ்சத்தி; சத்திதான் மரமுங்காழ்ப்பும்
இருமையும் போல மன்னிச் சிவத்திேேடியைந்துநிற்கும்."

(சிவஞானசித்தியார் சூ. 1. அதி. 3–67)

"நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ணலாலே
காயமோ மாயையன்று காண்பது சத்திதன்ஞல்."

(சிவஞான சித்தியார் சூ. 1. அதி. 1–41)

"உருவருள் குணங்களோடும் உணர்வருள் உருவிற்ருேன்றும்
கருமமும் அருள்அரன்தன் கரசரணுதி சாங்கம்
தருமருள் உபாங்க மெல்லாந் தானருள்தனக் கொன்றின்றி
அருளுரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்தனன்றே."

(சிவஞானசித்தியார் சூ. 1. அதி. 2–67)

"ஏகனு மாகி அநேகனு மானவன்
நாதனுமாளுனென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற

(திருவுந்தியார் 5)

"ஒன்றும் பலவுமாய வேடத் தொருவர் கழல் சேர்வார்
நன்று நினைந்து நாடற்குரியார் கூடித் திரண்டெங்கும்
தென்றியிருளில் திகைத்தகரி தண்சாரல் நெறியோடிக்
கன்றும் பிடியும் அடிவாரஞ்சேர் கயிலை மலையாரே."

(முதற்றிருமுறை—பதிகம் 68–5)

## வாழ்த்துரையின் வெற்றி

6 "வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
10 சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க"

*பதப்பிரிவு :*

"வேகம் கெடுத்து ஆண்ட வேந்தன் அடி வெல்க
பிறப்பு அறுக்கும் பிஞ்ஞகன் தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க
கரம் குவிவார் உள் மகிழும் கோன் கழல்கள் வெல்க
சிரம் குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க"

*பொழிப்புரை :*

*வெய்ய வினைப் பகையைப் பையத் தொலைத்து என்னை ஆட்கொண்ட மன்னவனுடைய திருவடிகள் வெற்றி பெறுக; பிறவியாகிய மரத்தை (ஞானவாள் கொண்டு வினையாகிய வேரோடு) வெட்டவல்ல தலைக் கோலப் பெருமானுடைய சிலம்புகளைச் செறிய அணிந்த திருவடிகள் வெற்றி பெறுக. புறச்சமையத்தாருக்கு எட்டாத் தொலைவிலுள்ள சிவபெருமானுடைய அழகிய திருச்சிலம்புகள் அணிந்த திருவடிகள் வெற்றியுடன்*

விளங்குக. கைகூப்பி வணங்கும் அன்பர் மனத்திலே எழுந்தருளி மகிழ்ந்திருக்கும் அருளரசின் சிலம்பணிந்த திருவடிகள் வெற்றி பெறுக. இறைவன் தாளில் தலை தாழ்த்து வணங்குபவர்களை மென்மேலும் உயரச்செய்கின்ற சிறப்பு வாய்ந்த பொருள்சேர் புகழோன் சிலம்பணி திருவடிகள் வெற்றி பெறுக.

**விளக்கம் :**

வேகம் : (ஈண்டு) வெய்ய வினைப்பகை; மனவோட்டம் என்றும் பொருள் கூறலாம்.

ஞானவேந்தனாகிய சிவபெருமான் ஆசிரியனாக வந்து உயிர்களுக்கு அருளுகின்ற இச்செயல் வெற்றி பெறுக.

பிஞ்ஞகம் — தலைக்கோலம், தலையணி. பெய்கழல்கள் — வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. புறத்தார்க்குச் சேயோனெனவே அகத்தார்க்கு அண்மையன் என்பது பெற்றும்.

"புறச் சமையத்தவர்க்கு இருளாய்"

(சிவப்பிரகாசம்)

"நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்."

(திருவருட்பயன்)

இறைவன் தன்னைக் கைகூப்பி வணங்கும் சீரடியார் சிந்தனையுள் நின்று மகிழ்வுற்றுத் திகழ்வான். இறைவன் அன்பர் மனத்தில் மகிழ்ந்திருத்தலைக் கீழே காண்க:

"ஏதும் ஒன்றும் அறிவிலராயினும்
ஓதி அஞ்செழுத்தும் உணவார்கட்குப்
பேதமின்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தானும் மகிழ்வர் மாற்பேறரே."

(அப்பர்–திருமுறை-5)

கரங்குவிதல் — கைகூப்பி உள்ளத்தில் வைத்து வணங்குதல்.

"கைகாள் கூப்பித் தொழீர் கடிமாமலர் தூவிநின்று."

(திருநாவுக்கரசர்–திருஅங்கமாலே)

கைகுவித்து வணங்குவாரது உள்ளத்தில் இறைவன் மகிழ்ந்துறைவான், வணங்குவாரையும் மகிழ்விப்பான். தலேயில் கைகளைக் குவித்து வைத்துத் தாழ்ந்து வணங்குவாரை மேலும் மேலும் உயரச்செய்வான் இறைவன், சிரங்குவிவார் ஓங்கு விக்குஞ் சீரோனுதலின். இது தலேயால் வணங்குதல்.

"கைகளும் தலேமீதேறக் கண்ணில் ஆனந்த வெள்ளம்
மெய்யெலாம் பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி."

(திருத்தொண்டர் புராணம்)

"தலேயால் தாழுங் தவத்தோர்க் கென்றும்
தொலேயாச் செல்வச் சோற்றுத் துறையே."

(சுந்தரர்–திருச்சோற்றுததுறை)

**தலேயால் வணங்குவார் ஓங்குவித்தல் :**

"வாளினுன் வேலினுன் மால்வரை எடுத்ததிண்
தோளினுன் நெடுமுடி தொலேயவே ஊன்றிய
தாளினுன் கானப்பேர் தலேயினுல் வணங்குவார்
நாளுநா ளுயர்வதோர் நன்மையைப் பெறுவரே."

(சம்பந்தர்-திருக்கானப்பேர்)

## போற்றி போற்றி

“ஈசனடி போற்றி யெந்தையடி போற்றி
தேசனடி போற்றி சிவன் சேவடி போற்றி
நேயத்தே நின்ற நிமலனடி போற்றி
மாயப்பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி

சீரார் பெருந்துறை நந்தேவனடி போற்றி

யாராத வின்ப மருளுமலை போற்றி.”

*பதப் பிரிவு :*

“ஈசன் அடி போற்றி எந்தை அடி போற்றி
தேசன் அடி போற்றி சிவன் சேவடி போற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி
மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி போற்றி
சீர் ஆர் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி ”

*பொழிப்புரை :*

எப்பொருளையும் ஆள்பவனும் எல்லா உயிர்களுக்குந் தலைவனுமாகிய சிவபெருமான் திருவடிகட்குப் புகழ்தலோடு கூடிய வணக்கம். எம்முடைய உயிர்த் தந்தையாகிய சிவபெருமான் திருவடிகட்கு வணக்கம். பேரறிவொளி வடிவினனாகிய பெருமானுடைய திருவடிகளுக்கு வணக்கம். சிவபெருமானுடைய செம்மையான திருவடிகளுக்கு வணக்கம். தன்னோடு நல்ல நட்புரிமை பாராட்டுகின்ற அன்பர்தம் அன்பினில் நிலைபெற்று விளங்கித் தோன்றுகின்ற இயல்பாகவே மாசற்ற தூயோனாகிய சிவபெருமானுடைய திருவடிகளுக்கு வணக்கம். மயக்கம் செய்கின்ற மாயையால் ஆகும் பிறப்பினை அறுத்து ஒழிக்கின்ற ஞான அரசனுடைய

திருவடிகளுக்கு வணக்கம். சிறப்புப் பொருந்திய திருப்பெருந்துறையில் எழுந்தருளி நம்மை அடிமை கொண்ட நம் குலதெய்வமாகிய ஆன்மநாதர் திருவடிகளுக்கு வணக்கம். நுகர்ந்து தெவிட்டாத பேரின்ப வெள்ளத்தை அருள்புரிகின்ற இன்ப மலையாக விளங்கு பவனே வணக்கம்.

**விளக்கம் :**

சிவனுடைய ஒளி களிம்பணுகாத பேரொளி,

" களிம்பறுத்தான் எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத்தான் அருட்கண் விழிப்பித்துக்
களிம்பணுகாத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே." (திருமந்திரம்)

எந்தை—என் தந்தை என்பதன் மரூஉ. மாயையாவது நிலையில்லாததை நிலையுள்ளது எனவும், தூய்மையின் மையைத் தூய்மை எனவும், துன்பத்தை இன்பமெனவும் மாறுக உணரச் செய்வது.

சிவபெருமான் தன்னை வாழ்த்துவார் உள்ளத்தே அறிவொளிப் பிழம்பாய் விளங்குவான் :

" வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியை "
(திருமந்திரம் - கடவுள் வாழ்த்து-39.)

நேயத்தே நிற்றல்—அன்பர்களை என்றும் எடுத்துச் சுமத்தல்-

" கிடைக்கத்தகுமோ நற்கேண்மையர்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானையின்று," (திருவருட்பயன்—65)

இன்பமருள் மலையிலிருந்து பேரின்ப வெள்ளம் விழுந்துகொண்டே இருக்கிறது; பேரின்பம் அருளி லிருந்து இடைவிடாது மேலும் மேலும் சுரந்துகொண்டே

யிருத்தலினாலும் உயிர்களுக்கு அவ்வின்பம் என்றும் தெவிட்டா இயல்பிற்றாகலானும் ஆரா இன்பம் ஆனது.

"பேரா ஒழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா இன்பமாகடலே."
(திருவாசகம்-பிரார்த்தனைப்பத்து-6)

பேரின்பம் துய்த்து நிரம்பாமையைப் பின்வருவது விளக்கும்.

"போகம் பின்னும் புதிதாய் மணந்தாழ் புரிகுழலாள்
அல்குல்போல வளர்கின்றதே" (திருக்கோவையார்-9)

இன்பருள் பெருமானை மலையாக உருவகஞ் செய்து அவ்வருளிலிருந்து சுரக்கும் இன்பத்தை வெள்ளமாக உருவகஞ் செய்யாமையின் ஏகதேச உருவகம்.

## மொழிபொருள்

"சிவனவனென் சிந்தையுணின்ற வதனா
லவனருளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்"

**பதப் பிரிவு :**

"சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன் அருளாலே அவன் தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் யான்"

**பொழிப்புரை :**

சிவபெருமான் என் உள்ளக்கோவிலில் நிலையாக எழுந்தருளியிருந்ததனால் அவன் திருவருளின் துணையால் அவன் திருவடிகளைத் தொழுது உள்ளத்தில் உவகை பொங்கும்படி உயிர்களுக்குச் சிவபெருமான் கைக்கொண்ட பழமையான அருள்புரி முறைமையினை முற்பிறவியில் ஈட்டிய பழவினை முற்றிலும் அழிந்து ஒழிந்து போகும்படி நான் சொல்லுவேன்.

**விளக்கம் :**

சிவபெருமான் மாணிக்கவாசகர் சிந்தையில் நிலைத்திருந்த அத்தன்மையால் அடிகளார் கருத்துஞ்சொல்லும் சிவனுணர்த்திய உண்மைகளே. திருஞானசம்பந்தர் வாக்கு சிவபெருமானுடைய வாக்கே யாதலின் சம்பந்தரே தமது தேவாரத்தில் "எனது உரை தனது உரையாக" எனத் திருவாய் மலர்ந்துள்ளார். அவ்வருட்பாடலே போல் திருவாசகம் அடிகளார் உளத்தமர்ந்த சிவபெருமான் திருவருள் நோக்கால் அவனருள் தோய்ந்து எழுந்ததே யாகும். திருஞானசம்பந்தர் ஒவ்வொரு பதிகத் திருக்கடைக்காப்புச் செய்யுளிலும் பதிகப்பலன் கூறுகிறார். மாணிக்கவாசகரும் முந்தைவினை முழுதும் ஓய்ந்து வினையின் நீங்கி விளங்கிய அறிவினின்று மொழிகின்றாராதலின் அடிகளார் வாக்கும் சிவவாக்கே யாகும். "மாணிக்கவாசகர் அறிவாற் சிவமேயாவர்" என்பது ஆன்றோர் வாக்கு. மணிவாசகரும் சிவபுராண முடிவில் "பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார் சிவ புரத்தினுள்ளார் சிவனடிக் கீழ்ச் செல்வர்" எனப் பலன் கூறுகிறார். நூல் முழுதும் சிவனருளிப்பாட்டு முறைமையே யாதலின் இப்பயன் நூல் முழுதிற்கும் ஆகும். நுண்ணிதின் ஆயின் இச் சிவபுராணம் திருவாசகத்திற்குப் பாயிரமாதலைக் காணலாம். சிவ பெருமான் திருவடி வணக்கமும் அவனருளாலேதான் அமையும்; அவன் அருளானன்றிக் கைகூடாது.

"உன்திருவடிக் கீழ் உறுதியாம் அன்பும்
உன்திரு வருளினாற் கிடைப்ப
தன்றி நூல்பலவும் ஆய்ந்ததால் உரைசெய்
அளப்பருந் திறமையால் மதியால்
மன்றவே கிடைப்பதன்று; மற்றதனை
மாதவஞ்செய் திலாக் கயமை
துன்றிய புலையோர் யாங்ஙனம் பெறுவார்?
சோதியே! கருணைவா ரிதியே!"

(சிவதத்துவ விவேகம்)

முந்தைவினை ஞானுசிரியன் அருட்பார்வையால் நீங்கும். கண்ணுதலான் தன் கருணைக் கண் காட்ட முந்தைவினை முழுதும் ஓய்ந்து நின்றூர் அடிகளார்.

'மோய உரைப்பன் யான்'

எனவும் பிரிக்கலாம். மோய்தல் — வற்றிப்போதல்.

" மடங்க என் வல்வினைக் காட்டை மன்னருள்தீக்
கொளுவும் விடங்க "

(நீத்தல் விண்ணப்பம்-19)

சிவபுராணம் — சிவனுடைய ஆதியில்லாத பழமை முறை. முந்தை — முன், "வந்தடி பொருந்தி முந்தை நிற்பின்" (புறநானூறு-10)

ஓய — காரணப் பொருட்டாய் வந்த வினையெச்சம்.

முதல்வனூர் அருள் நோக்கால் வினை நீங்கும். காளத்தி நாதனூர் முன்பு கண்ணப்பர் நின்றூர்; முதல்வனூர் அருள் நோக்கால் கண்ணப்பர் அடைந்த நிலையைச் சேக்கிழார் விளக்குகிறூர் :

" முன்பு திருக்காளத்தி முதல்வனூர் அருள் நோக்கால்
இன்புறு வேதகத்து இரும்பு பொன்னுனூற்போல் யாக்கைத்
தன்பரிசும் வினையிரண்டும் சாரும் மல மூன்றும் அற
அன்பு பிழம்பாய்த் திரிவார் அவர்கருத்தின் அளவினரோ? "

(திருத்தொண்டர் புராணம், கண்ணப்ப நாயனூர்-154)

சிவன் அவன் — அவன் பகுதிப் பொருள் விகுதி.

எழில்—அழகும் உயர்ச்சியுமாம். இறைவன் திருவடி அழகோடு எழுச்சியும் அமைந்தது.

" கணக்கு வழக்கைக் கடந்த அடி "

(திருவடித் திருத்தாண்டகம்-4)

திருவடியழகு

" அரும்பித்த செஞ்ஞாயிறு எய்க்கும் அடி
அழகெழுதலாகா அருட்சேவடி "

(திருவடித் திருத்தாண்டகம்-4)

## சிவன் அருட்காட்சி

"கண்ணுதலான் றன்கருணைக்கண்காட்ட
வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி"

*பதப் பிரிவு :*

கண் நுதலான் தன் கருணைக் கண் காட்ட வந்து
எய்தி
எண்ணுதற்கு எட்டா எழில் ஆர் கழல் இறைஞ்சி

***பொழிப்புரை:***

*நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் தனது அருட்கண்ணை விழிப்பித்து அடியேனுக்கு அருள் நோக்கம் புரிய, அவர் திருமுன் நான் வந்தடைந்து கருதரிய உயர்ச்சிமிக்க திருச்சிலம்பணிந்த திருவடிகளை வணங்கி.*

## அடிகளின் தாழ்வெனுந்தன்மை.

23 "விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்
விளங்கொளியாய்
எண்ணிறந்தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
25 பொல்லா வினையேன் புகழுமாறொன்றறியேன்

*பதப்பிரிவு :*

விண் நிறைந்து மண் நிறைந்து மிக்காய் விளங்கு
ஒளியாய்
எண் இறந்து எல்லை இலாதானே நின் பெரும் சீர்
பொல்லா வினையேன் புகழும் ஆறு ஒன்று
அறியேன்"

***பொழிப்புரை :***

*வானுலகிலும் நிரம்பி, நில உலகிலும் நிரம்பி, எங்கும் நிறைந்து அவற்றினும் ஏழண்டத்தினும்*

அப்பாலாய் மேம்பட்டுத் தோன்றுகின்றவனே ! சுடர் வடிவினனே ! கருதி உணரப்படும் அளவைக் கடந்து ஓர் வரம்பில்லாதவனே ! உன்னுடைய பொருள்சேர் பெரும் புகழை மிகக் கொடிய தீவினையினனாகிய நான் ஏத்தி வணங்கும் வகை யாதும் தெரிந்திலேன்.

**விளக்கம் :**

'அலகில் சோதியன்' பெருமான்.

(திருத்தொண்டர் புராணம்)

## பலவகைப் பிறப்புக்கள்

**புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்**
**பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிப்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து**
**ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்**
**பெருமான் !**

பதப் பிரிவு :

**புல் ஆகிப் பூடு ஆய்ப் புழு ஆய் மரம் ஆகிப்**
**பல் விருகம் ஆகிப் பறவை ஆய்ப் பாம்பு ஆகிக்**
**கல் ஆய் மனிதர் ஆய்ப் பேய் ஆய்க் கணங்கள் ஆய்**
**வல் அசுரர் ஆகி முனிவர் ஆய்த் தேவர் ஆய்ச்**
**செல்லாநின்ற இத்தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்,**
**எம்பெருமான் !**

**கொண்டு கூட்டு :**

எம்பெருமானே ! இத் தாவரம் கல்லாய் புல்லாகிப் பூடாய் மரமாகி சங்கமத்துள் புழுவாய்ப் பாம்பாகிப் பறவையாய்ப் பல்விருகமாகி மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்அசுரராகி முனிவராய்த் தேவராய்ச் செல்லாநின்ற எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்.

**பொழிப்புரை :**

எங்கள் சிவபெருமானே! இந்த நிலையியற் பொருள்களில் கல்லாகியும் புல்லாகியும் பூண்டாகியும் மரமாகியும்; இயங்கியற் பொருள்களில் புழுவாகியும் பாம்பாகியும் பறவையாகியும் பலவகை விலங்குகளாகியும் மக்களாகியும் பேயாகியும் பூதக் கூட்டங்களாகியும் வலிய அசுரராகியும் தவத்தினர் ஆகியும் வானவராகியும் போக்கு வரவு புரிகின்ற எல்லாவகைப் பிறப்புக்களும் பிறந்து உழன்று எய்த்துப் போனேன்.

**விளக்கம் :**

செய்யுளாகலின் தாவர சங்கமப் பொருள்களை முறை பிறழ வைத்தார். மாயையிலிருந்து அணுக்கள் தோன்றுகின்றன. புல், பூண்டு, மரம் ஆகியவை ஊறு ஒன்றினை அறியும் ஓரறிவுயிர்கள்; புழுக்கள் ஊறும் சுவையும் அறியும் ஈரறிவுயிர்கள்; பறவை, பாம்பு, மிருகம் முதலியன ஊறு, சுவை, ஒளி, ஓசை, நாற்றம் இவைகளையறியும் ஐயறிவுயிர்கள். மனிதர், பேய், பூதக் கூட்டங்கள், அசுரர், சுரர் ஆகியோர் ஆறறிவுயிர்கள். பேய்கள் நுண்ணுடலோடு உலவுகின்ற உயிர்கள். அவைகள் கண்டார்க்கு அச்சந்தருவன.

கணம் — ஓரினக்கூட்டம்.

"கணங்களாய் வரினும் தமியராய் வரினும்
அடியவர் தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியும் குலச்சிறை குலாவுங் கோபுரஞ்
சூழ்மணிக் கோவில்
மணங்கமழ் கொன்றை வாளராமதியம் வன்னிவண் கூவிளமாலை
அணங்கு வீற்றிருந்த சடைமுடி அண்ணல் ஆலவாயாவதும்
இதுவே,"

(திருஞானசம்பந்தர்-திருவாலவாய்)

## சிவனது முறைமை

32 மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்து ளோங்காரமாய் நின்ற
மெய்யா ! விமலா ! விடைப்பாகா ! வேதங்கள்
ஐயா ! வென வோங்கி யாழ்ந்தகன்ற
நுண்ணியனே ;

*பதப்பிரிவு :*

மெய்யே உன் பொன் அடிகள் கண்டு இன்று வீடு
உற்றேன்
உய்ய என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா ! விமலா ! விடைப்பாகா ! வேதங்கள்
ஐயா ! என ஓங்கி ஆழ்ந்து அகன்ற
நுண்ணியனே !

**பொழிப்புரை :**

*உண்மையாகவே உன்னுடைய அழகிய திருவடிகளை உள்ளுணர்ச்சியோடு பார்த்து (அருளாசிரியனாக எழுந்தருளிய இந்நாளிலேயே மாயமெலாம் நீங்கி மலரடிக் கீழ் இருக்கின்ற) சீவன் முத்திநிலை யடைந்தேன். நான் கடைத்தேறும் வண்ணம் என்னுடைய மனத்தில் ஓம் என்ற பிரணவ வடிவமாகி நிலைபெற்ற உண்மைப் பொருளே ! மாசற்ற பொருளே ! காளையேறிச் செலுத்துபவனே ! மறை நூல்கள் 'ஐயனே' என்று அழைக்கவும் மேல் உயர்ந்தும் கீழ் ஆழ்ந்தும் எங்கும் பரந்தும் மிக நுணுகியவனே !*

**விளக்கம் :**

*அடிகள் எழிலார் கழலிறைஞ்சினார்கள். பொன் போன்ற திருவடிக்காட்சி அவர்களுக்குச் சீவன் முத்திப் பேற்றை அளித்தது. உடம்பு நீங்கிய பிறகு அடையும் முத்தி நிலையை அஃது உள்ளபோதே பெற்று இறை திருவடியில் உயிர் அறிவு தூங்கப் பெற்று இன்பம் உளத்தில் ஒடுங்க நிற்பது சீவன்முத்தி நிலை. தாம்*

பரமுத்தி நிலையைக் காயமிருக்கும் போதே அடையப் பெற்றமையின் "மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்" என்று உறுதியாக மொழிந் தார்கள் அடிகள்.

"தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தவாறே
சிவம் பிரகாசிக்கும் இங்கே சீவன் முத்தனுகும்."

"திருஞானம் இவையெல்லாங் கடந்த சிவஞானம்
ஆதலாற் சீவன் முத்தர் சிவமேகண்டிருப்பர்."

என்ற சிவஞான சித்தியார் அருள் வாக்கின்படி மாணிக்கவாசகர் சிவமே கண்டு நின்ருர், "பேசிற்ருன் சிவபெருமான் என்றென்றே பேசிப் பேசி" என்ற அவர் திருவாக்கின்படி அவர் மாசற்ற மணிவார்த்தைகளே பேசினுர்.

"பேசும் பொருளுக்கு இலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின்மணியின் மணிவார்த்தை — பேசிப்
பெருந்துறையே என்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தின் அடி என்மனத்தே வைத்து."

(திருவாசகம்-பண்டாயநான்மறை-7)

இங்ஙனம் மாசற்ற அருளொளி கலந்த மணி வார்த்தைகள் கேட்ட குருந்தின் நீழற் குரவனுர் வாத ஆூரர்க்கு **மாணிக்கவாசகர்** என்ற ஞான நாமம் நவிற்றி னுர்.

ஓங்காரம், — அகரம், — உகரம், — மகரம் மூன்றுஞ் சேர்த்து உச்சரிக்கும்போது உளதாம் ஓம் என்னும் ஒலி. இவ்வொலியிலிருந்தே உயிர்க்குச் சொற்பொருளறிவு பிறக்கிறது.

"அகாரம் உகாரம் அகங்காரம் புத்தி
மகாரம் மனம் சித்தம் விந்துப் — பகாதிவற்றை
நாதம் உளவடிவா நாடிற் பிரணவமாம்
போதம் கடற்றிரையே போன்று."

(சிவஞானபோதம்–சூ. 4 அதி. 1)

" அவ்வுடன் உவ்வும் மவ்வும் மனம்புத்தி அகங்காரங்கள்
செவ்விய விந்து நாதம் சித்தமோடு உள்ளமாகும்
ஒவ்வெனும் எழுத்தாம் ஐந்தும் உணர்வுதித் தொடுங்குமாறும்
பவ்வமும் திரையும்போலும் பார்க்கிலிப் பண்பும் தோன்றும் ".

(சிவஞானசித்தியார்-சூ-4. அதி-1-3]

அகரம், உகரம், மகர ஒற்று, நாதம், விந்து இவைகள் சேர்ந்தது பிரணவம். இவ்வெழுத்தொலிகளே உட்கருவிகளாகிய மனம், புத்தி, சித்தங்களை உலகப் பொருள்களிற் செலுத்துகின்றன. ஓங்கார உச்சரிப்பால் இவைகள் அடங்க நமது அறிவு உட்பொருளாகிய இறைவனிடத்து ஈடுபடுகிறது. அப்போது இறைவன் ஓங்காரத்துட் பொருளாய் விளங்கித் தோன்றுகின்றான். இதனை விளக்கவே சிவனுடைய உருவத்திருமேனிகளைச் சுற்றி ஓங்கார வடிவான பிரபை வைக்கப்படுகிறது.

" ஓங்காரமே நற்றிருவாசி உற்றதனின்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் — ஆங்காரம்
அற்றாறிவர்அணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின். "

(உண்மை விளக்கம்-35)

ஓங்கார ஒலி எல்லா எழுத்தொலிகட்கும் முதலாகிய அகர ஒலியைத் தன்னகத்துக் கொண்டது. ஓங்கார ஒலி அகத்தும் புறத்தும் ஒலிக்கும் இயற்கை ஒலி. இவ்வொலி ஏனைய ஓசையெல்லாம் அற்ற இடத்துக் கேட்கப் படுவது.

" ஓசையெலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்
ஓசை வழியேசென் றெத்தொடுங்கின் — ஓசையினின்
அந்தத்தானத்தான் அரிவையுடன் அம்பலத்தே
வந்தொத்தான் அத்தான் மகிழ்ந்து ".

(திருக்களிற்றுப்படியார்-33)

நாம் இருசெவிகளையும் கைகளாற் பொத்திக் கொண்டால் கேட்கப்படுகின்ற இவ்வோங்கார ஒலியினைக் காதுகளைப் பொத்தாமலே எப்போதும் உள்ளே ஒலித்துக் கொண்டிருக்கக் காண்பர் யோகிகள்.

அகர ஒலி ஏனைய ஒலிகட்கெல்லாம் முன் ஒலித்து ஏனைய எழுத்தொலிகளைப் படைத்தல் புரிவது; உகர ஒலி அதன்பின் தோன்றி நீள ஒலிப்பதாகலின் காத்தல் தொழில் புரிவது; மகர ஒற்றின் ஒலி இதழ் இயைதலால் உண்டாவதாய் எல்லா ஒலிகளையும் அடக்கி அழித்தல் தொழில் புரிவது. இம்மூவெழுத்தொலிகளையும் அவை களின் தொழில்களையும் தன்னகத்தே அடக்கி நிற்றலின் ஓங்காரம் முதன்மையுடைத்து. இவ்வொலிகளும் மந்திரங்களும் சுத்தமாயையில் தோன்றியன. ஆதலின் இறைவனுக்கு வடிவாக அமைகின்றன. சிவன் மந்திர மூர்த்தியாக விளங்குகின்றான். விநாயகர் ஓங்கார வடிவுடன் யானைமுகக் கடவுளாக விளங்குகிறார்.

"சுத்தமாம் விந்துத் தன்னில் தோன்றியஆதலானும்
சத்திதான் பிரேரித் துப்பின் தான்அதிட் டித்துக் கொண்டே
அத்தினல் புத்தி முத்தி அளித்தலால் அரனுக் கென்றே
வைத்தவா மந்தி ரங்கள் வடிவென மறைகளெல்லாம்."

(சிவஞான சித்தியார்: சூ. 1-58)

சுந்தரமூர்த்தி நாயனாரைக் கயிலைக்கு அழைத்துச் செல்வதற்கு யானை அனுப்பப் பெற்றதற்குக் காரணம் அஃது ஓங்கார வடிவமைந்த ஊர்தியாகலான் என்பது ஓர்ந்து உணரற்பாற்று. இறைவனை ஓங்காரத் துட்பொருளாய்க் காணுமாறு பெருந்தகைப் பெம்மானால் மாணிக்கவாசகப் பெருந்தகையாருக்கு அருளிச் செய்யப்பெற்றது என்பதனையும், இஃது பாச நீக்கத்திற்கும் சிவப்பேற்றிற்கும் சிறந்த சாதனம் என்பதனையும்

"தையலார் மையலிலே தாழ்ந்து விழக்கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே."

(திருவாசகம்: அச்சோப்பதிகம்-(7)

என்று திருவாசக மணிமொழியிற் காணலாம்.

—3.

இத்தகைய பெருமை வாய்ந்த ஓங்கார ஒலியில் நிலைபெற்று நின்று உயிர்களின் அறிவினில் என்றும் ஓரியல்பினனாய்ப் போக்கு வரவின்றி நிற்கின்ற உண்மைப் பொருள் மெய்ப்பொருள் எனப்பெறும். உயிர் களைப் போல் ஒருகால் சத்தாதலும் ஒருகால் அசத்தா தலும் பெற்றுச் சதசத்தாய் நில்லாது என்றும் சத்தே யாம் ஓர் பெற்றியனாய் விளங்குபவன் மெய்யன்.

இறைவன் வாலறிவனாதலின் விமலன். இறைவன் அறவடிவான ஏறுஊர்பவன். ஏறு—காளை.

வேதங்களான் இறைவனை யறியொண்ணாமை பின்வரும் பாடலாற் காண்க.

> ''மறையினால் அயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றுங்
> குறைவிலா அளவினாலும் கூறொணாதாகி நின்ற
> இறைவனார் கமலபாதம்.''

(சிவஞானசித்தியார்: பாயிரம்-4)

ஐயா என — ஐயா எனவும் உம்மை தொக்கது. அழைக்க என்பது சொல்லெச்சம்.

**36 வெய்யாய் தணியா யியமான னாம்விமலா**
**பொய்யா யின வெல்லாம் போயகல வந்தருளி**
**மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே !**
**எஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே !**
**அஞ்ஞானந் தன்னை யகல்விக்கு நல்லறிவே !**

பதப்பிரிவு :

**வெய்யாய் ! தணியாய் ! இயமானன் ஆம் விமலா !**
**பொய் ஆயின எல்லாம் போய் அகல வந்து அருளி !**
**மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச் சுடரே !**
**எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே !**
**அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே !**

**பொழிப்புரை :**

வெம்மையான பொருள்களில் வெப்பமாய் விளங்குபவனே! குளிர்ந்த பொருள்களில் குளிர்ச்சியாய் விளங்குபவனே! உயிர்க்கு உயிராகி விளங்குபவனே! இப்பொருள்களோடும் உயிர்களோடும் விரவியிருந்தும் அவைகளுக்குள்ள மாசு இல்லாதவனே! நிலையில்லாதன ஆகியவை யாவும் என்னை விட்டு அப்பாலே போய் நீங்கும்படி (அருட்குரவனாக) எழுந்தருளி வந்து அருள் புரிந்து மெய்யுணர்த்தி, உண்மை அறிவுருவாகி மிக்கு விளங்குகின்ற உண்மை ஒளியே! (நின் துணையும் கருவிகளின் காட்டும் இன்றி) எவ்வகையான அறிவும் விளங்காத எனக்குப் (பேரறிவின் பயனாகிய) பேரின்பத்தைக் கொடுக்கின்ற பெருமானே! (உயிரின்) அறியாமையையும் திரிபுணர்வையும் நீங்கச் செய்கின்ற நல்ல அறிவு வடிவினனே!

**விளக்கம் :**

இறைவன் ஐம்பூதங்களிலும் அவையவைகளின் குணம் தொழில்களை அமைத்து விளங்குகிறான். தீயிடை வெம்மை வைத்து அதனில் வெய்யோனாய் விளங்குகிறான். நீரிடைத் தண்மை வைத்து அதனில் தண்ணியனாய் விளங்குகிறான். தண்மை—குளிர்ச்சி. நிலத்திடைத் திண்மை வைத்து அதில் திண்மையனாய் விளங்குகிறான். காற்றில் அசைவுக்குணம் அமைத்து எங்கும் பரந்து நின்று விளங்குகிறான். விசும்பில் வெளியாந் தன்மை வைத்து வெட்ட வெளியனாய்த் திளைக்கிறான். இவ்வாறு ஐம்பூதங்களோடும் பூத காரியமான உலகத்து அறிவில் பொருள்களோடும் கலந்திருந்தாலும் அவைகள் இறைவனாகா. இறைவனும் அவைகளின் வேறாய பேரறிவுப் பொருளாய் விளங்குகின்றான். வெய்யாய் தணியாய் இரண்டுங் கூறினார் ஏனையவற்றை உபலக்கணத்தாற் பெற வைத்தார். இது பற்றி இவர் போற்றித் திருவகவலில் பின் வருமாறு கூறுகின்றமை காண்க:-

"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய், போற்றி!
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய், போற்றி!
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய், போற்றி!
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய், போற்றி!
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய், போற்றி!

(போற்றித் திருஅகவல்: *137–141*)

இயமானன்–உயிர்; மேல் உயிரில் பொருள்களோடு இறைவன் விரவி நிற்றல் கூறிப் பின் உயிரோடு ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்றல் கூறுகிறார். 'இறைவன் இவ்வாறு வேறன்றி உயிரோடு இரண்டறக் கலந்து நிற்பினும் இறைவன் வேறுபொருள், உயிர் வேறு பொருள். இவ்வுண்மையை விளக்கவே "விமலா!" என்று இறைவனை விளித்தார். இறைவன் ஒருவனே இயல்பாக மலங்களின் நீங்கியவன்; உயிர் பாசத்தோடு உள்ளதாகலின் பசு எனப்படும்.

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்
ஒன்றென்றநீ பாசத்தோ டுளேகாண்."

(சிவஞானபோதம்–சூ. 2. அதி. 1)

"உலகெலா மாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித்தானே
நிலவுசீர் அமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும்."

(சிவஞான சித்தி–சூ. 2)

நிலையில்லாதனவாய் அழிந்து அழிந்து தோன்றும் தன்மையவாகிய உலகப் பொருள்கள் பொய்ப் பொருள்கள். இவற்றாற் பெறப்படும் இன்பமும் நிலைபேறில்லாத பொய்யின்பம்; மயக்க இன்பமாகும்.

"பொய்ம்மாயப் பெருங்கடல்"

(ஆறுந் திருமுறை–திருத்தாண்டகம்–2)

"பொய்யிருள் கடிந்த மெய்ச் சுடர்"

(திருவாசகம்: கோயிற்றிருப்பதிகம்–3)

இப்பொய்யின்பங்களும், பொய்யான கொள்கைகளும் என்னுள்ளத்தில் மெய்ப்பொருளாகிய இறைவன் விளங்குதற்கும், நிலைபெற்ற பேரின்பம் பெறுதற்குரிய மெய்ம்முயற்சியில் ஈடுபடுதற்கும் தடையாதலின், அவைகளெல்லாம் நீங்குதற்கு இறைவன் திருவருள் துணைபுரிந்தது. இறைவன் குருந்தின் நீழலில் குருவடிவில் எழுந்தருளி உண்மை உரைத்தான் என்பார் "பொய்யாயின எல்லாம் போயகல வந்தருளி" என்றார்.

இறைவன் அன்பர் உள்ளத்தில் உண்மை ஞான ஒளியாகி விளங்குகின்றான். இவ்வொளி நந்தா ஒளி; மேலும் மேலும் வளர்ந்து கொண்டிருக்கிற ஒளி, இவ்வொளியின் மெய்த்தன்மை பொய் கடிதற்கும், சுடரொளித் தன்மை இருள் கடிதற்கும் ஏதுவாகும் என்பார் "பொய்யிருள் கடிந்த மெய்ச் சுடரே" என்றார். அக்கருத்தினையே அமைத்து ஈண்டும் "பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே" என்றார்.

இறைவனைச் சிந்திக்கும் முறை இஃது என்பதும், அஃதே பொய்யிருள் கடிதற்குச் சிறந்த உண்மைச் சாதனமாம் என்பதும் திருத்தொண்டர் புராணம் விளக்குகிறது :—

> "தம்மையே சிந்தியா எனும் தன்மைதான்
> மெய்ம்மையாகி விளங்கொளித்தாமென
> இம்மையே நினைவார்தம் இருவினைப்
> பொய்ம்மை வல்லிருள் போக்குவர் என்றதாம்"

(பெரியபுராணம் 830. திருப்பாசுரக்கருத்து)

எவ்வகையான அறிவும் இறைவனின் துணையின்றி உயிர்க்கு நிகழாது. பாசஞானமாகிய கருவி ஞானமும் கருவி கரணங்களின் வாயிலான் அன்றி நிகழாது. இறைவனை உணர்தற்கு ஏதுவாகிய பதிஞானமும் இறைவன் திருவருளாலன்றி விளங்காது.

புலமைச் செருக்காலும், ஆட்சிச் செருக்காலும் உண்மை ஞானம் விளங்குவதன்று; 'நானே கடவுள்' என்ற பொய்யுணர்வே புலப்படும். இறைவன் ஒருவனே இயற்கை உணர்வினன். உயிர் எத்தகைய ஞானத்தினையும் தனது ஆற்றலாற் பெறுவதன்று; கடவுள் காட்டவே காணும் தன்மைத்து. அவன் இன்பங் கொடுக்கவே உயிர் அதனைப் பெறும். அவன் இன்பம் ஊட்டவே உயிர் அதனை நுகரும்.

"பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்கு
அறிவென்ற பேர்நன் றற."

(திருவருட்பயன்-15)

இத்தகைய புல்லறிவுடைய உயிர்களின் மீதும் பெருங்கருணை காட்டித் தனது பேரின்பத்தை இறைவன் கொடுக்கிறான். அவன் இன்ப வடிவினனாக இருத்தலின் தான் இன்பம் நுகர்வானலன். குழந்தைக்குச் சோறு ஊட்டுந் தாய் "ஆ என்று வாயைத் திறந்து கொள்" என்று சொல்வதோடு நில்லாது தானும் வாயைத் திறந்து காட்டுவது போல உயிர்கள் இன்பந்துய்த்தற்குச் செய்ய வேண்டுஞ் செயல்களையும் தான் செய்து காட்டுகிறான்.

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்"

(சிவஞானபோதம்-சூ.11)

இறைவனுக்கு ஒன்றினும் அழுந்தி அறிதல் இன்மையின், உயிருடன் சென்று தானும் கண்டாலும் ஒன்றினையும் நுகரான். புராணங்கள் விளக்குங் கருத்துக்கள் இக்கண் கொண்டு காணத்தக்கன.

இவ்வுண்மையை

"இன்பதனை எய்துவார்க்கீயும் அவர்க்குருவம்
இன்பகனம் ஆதலினால் இல்." என்ற

திருவருட்பயன் (73) இனிது விளக்கும்.

அஞ்ஞானம் என்பது ஞானத்தின் இன்மையன்று; திரிபுணர்பே அது.

"நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை."

(திருவள்ளுவர் திருக்குறள்-331)

"இப்புல்லறிவாண்மை அஞ்ஞானமாகும். அஞ்ஞானம் என்றது ஞானம் இன்மை யென்னும் பொருட்டன்று திரிபாகிய ஞானம் என்னும் பொருட்டேயாம்."

(சிவஞான பாடியம்)

அஞ்ஞானம் என்பது பிறழ உணரும் உணர்வைத் தந்து உள்ளபடி உணர்தலை மறைக்கின்ற அறியாமைப் பொருளாகிய ஆணவம். இவ்வறியாமையை இறைவன் தனது மெய்யொளியால் நீக்குகிறான்; தனது ஒளியால் இவ்விருளை அகற்றி அதனை விலகச் செய்கிறான். இவ்விருள் என்றும் உள்ள பொருளாதலின் அழிதல் இல்லை; இறையருள் பெற்ற உயிரை மறைக்காது தனது வலிமடங்கி அகன்று செல்கிறது. ஆதலின் 'அகல்விக்கும்' என்றார்.

அகற்றும் என்னாது அகல்விக்கும் என்றமையின், வண்ணான் உவர், சாணி முதலிய பொருள்களைக் கொண்டு துணியின் அழுக்கு நீக்குவது போல, இறைவன் உயிர்க்கு அழுக்கு நிறைந்த புலால் உடம்பைக் கொடுத்து உலகப் பொருள்களின் அழுக்குத் தன்மை, அற்பத்தன்மைகளை உணரச்செய்து மலம் விலகும்படி செய்கின்றான் என்று கொள்க.

"எழுமுடல் கரணமாதி இவை மலம், மலம் மலத்தாற்
கழுவுவன் என்று சொன்ன காரணம் என்னை யென்னிற்
செழுநவை அறுவை சாணி உவர் செறிவித் தழுக்கை
முழுவதுங் கழிப்பன் மாயை கொடுமலம் ஒழிப்பன் முன்னோன்,"

(சிவஞான சித்தியார்-சூ. 2—52)

இறைவன் அறிவு நல்லறிவு என்றார், தனக்கு ஒரு காட்டு வேண்டாது தானே விளங்குவதோடு உயிர்களின் அறியாமை நோய்க்கு மருந்தாதலின். "பிறவிப் பிணிக்கு மருந்தாதலின் நற்றாள்" என்ற பரிமேலழகர் கருத்துக் காண்க.

ஆக்கமளவிறுதி யில்லா யனைத்துலகு
மாக்குவாய் காப்பா யழிப்பா யருடருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்த பால் கன்னலொடு நெய் கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமான்

*பதப்பிரிவு :*

ஆக்கம் அளவு இறுதி இல்லாய் அனைத்து உலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனே
கறந்த பால் கன்னலொடு நெய் கலந்தால் போலச்
சிறந்து அடியார் சிந்தனையுள் தேன் ஊறி நின்று
பிறந்த பிறப்பு அறுக்கும் எங்கள் பெருமான்

*பொழிப்புரை :*

தோற்றமும், ஒரு கால எல்லையளவு நிற்றலும், பின் முடிவும் இல்லாத முதல்வனே! எல்லா உலகங்களையும் படைப்பவனே, காப்பவனே! ஒடுக்குபவனே! மறைப்பவனே! அருள் புரிபவனே! என்னுடைய உலகப் பற்றினைக் களைபவனே! உன்னுடைய கசிந்த தொண்டினில் என்னை உள்ளாக்குவாயாக. பூவின் மணம்போல என்னுள்ளத்து நுண்ணியனாய்க் கலந்திருப்பவனே! சொல்லும் எண்ணமும் கடந்து

அப்பால் நின்ற மறையோனே! அன்பின் முதிர்ச்சியால் முறையாகச் சுரந்து கறந்த பசுவின் பால், சர்க்கரை இவைகளுடன் நெய்யும் சேர்த்தாற் போல, அன்பினுல் மேம்பட்ட தொண்டர்களின் மனத்தில் இன்பத் தேனைச் சுரந்து பெருகி நிலைபெற்றுத் தங்கி அவர்கள் எடுத்த பிறவியை ஒழிக்கின்ற எங்கள் தலைவனே!

**விளக்கம் :**

படைப்பாதித் தொழில்களிற் பட்டுழலும் உயிர்களால் உலகங்களைப் படைக்க முடியாது. அவைகளும் தம் கால எல்லையில் ஒடுங்கிவிடுமாதலின் அவைகளை மீட்டுந் தோற்றுவித்தற்குப் பிறப்பு இறப்பு இல்லாத இறைவன் வேண்டப்படுவான். எவற்றிற்குப் பிறப்புண்டோ அவைகளெல்லாம் உயிர்கள். பிறப்புண்டேல் இறப்புண்டு. அயன், அரி முதலியோரும் ஒடுங்கித் தோன்றுவர். ஆதலின் அவர்களும் உயிர்களே. ஒருகாலத்தும் ஒடுங்காத பிறப்பில்பெருமானுக விளங்குபவன் சிவபெருமான் ஒருவனே. அவனே எல்லா உயிர்களையும் உலகங்களையும் தோற்றுவிப்பான், ஒடுக்குவான். அவன் ஒருவனே ஆக்கம், அளவு, இறுதி யில்லான். காத்தல் — அழிக்குங்காறும் நிலை நிறுத்தல். அயன் படைத்தலும், மால் காத்தலும், சிவன் ஏவல் வழி நின்று தங்களுக்குக் கீழ்ப்பட்ட தத்துவங்களையும், புவனங்களையுமே. அனைத்துலகும் சுதந்தரமாக ஆக்கிக் காத்து அழிப்பவன் சிவன் ஒருவனே. அனைத்துலகும்— இருநூற்றிருபத்து நான்கு புவனங்களையும்; திருமாலுக்குப் பத்துப் பிறவியும், நான்முகனுக்குத் திருமால் உந்திக் கமலத்தில் தோற்றமும் கூறப்படுதலின் அவர்கள் ஆக்கம், அளவு, இறுதியுள்ள உயிர்களே. அவர்கள் படைத்தல் காத்தற்றொழில்களுக்கு உரிமை யுடையோரல்லர். அவர்கள் செய்த புண்ணியப் பயனுகச் சிவன் அவர்களுக்கு இத்தொழில்களைக் கொடுத்திருக்கின்ருன்.

"விரைக் கமலத்தோன் மாலும் ஏவலான் மேவினோர்கள்
புரைத்ததிகார சத்தி புண்ணியம் நண்ணலாலே"

(சிவஞான சித்தியார்-சூ. 1. 34)

ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள் தருவாய் என நான்கு தொழில்கள் கூறவே மறைத்தலாகிய தொழிலும் சேர்த்துக்கொள்ளப்படும். இது இனம் கொளல். மறைத்தலாவது உயிர்க்கு அறிவித்தவாறே அறியும் செவ்வி வரும்வரை சிவன் தனது நல்லறிவை மறைத்து உயிரினை உலகபோகத் தழுத்துதலாகும். அழித்தல் உலகப் பொருள்களையும் உலகங்களையும் காரிய உரு வடிவத்தை அழித்து அருவடிவோடும், உயிர்களைப் பரு உடம்பை அழித்து நுண்ணுடம் போடும் மாயையில் ஒடுக்கி இறைவன் தன் அடிக்கீழ் மாயையை அடங்கச் செய்தலாகும். மீளத் தோற்று விக்குங்கால் ஒடுக்கிய முறையே தோற்றுவிப்பான் ஒடுக்க நிலையினும் இறைவன் நுண்ணிய ஐந்தொழில் செய்து உயிர்களை இளைப்பாற்றி மீட்டும் உடம்பெடுத்து வினைப்பயன்களாகிய இன்பத் துன்பங்களை நுகர்தற் குரிய நிலைக்குக் கொண்டு வருவான். முத்தியிலும் இறைவன் தனது அருளால் பேரின்ப விளக்கஞ் செய்து கொண்டே இருப்பான். ஆதலின் எவ்வுயிர்க்கும் இறை யடியை அகன்று நிற்பது யாண்டும் இல்லை.

ஆதலான் நாம்

"அரனடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே"

(சிவஞான சித்தியார்-சூ. 4. செய்யுள் 7]

அருளல் மட்டுமன்றி ஐந்தொழில்களும் அருட் செயல்களே.

"அழிப்பு இளைப்பாற்றல் ஆக்கம் அவ்வவர்கன்ம மெல்லாம்
கழித்திடல், நுகரச் செய்தல், காப்பது, கன்ம ஒப்பில்
தெழித்திடல் மலங்களெல்லாம் மறைப்பு அருட்செய்தி தானும்
பழிப் பொழிபந்தம் வீடு பார்த்திடின் அருளே எல்லாம்."

(சிவஞான சித்தியார்-சூ. 1-37)

" ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட்டாக
இயம்புவர்கள் அணுக்களிடர்க் கடல் நின்றும் எடுத்தே
ஊற்றமிக அருள்புரிதல் ஏதுவாக உரைசெய்வர்
ஒடுக்கம் இளைப்பொழித்தல் மற்றைத்
தோற்றம் மலபாகம் வரக்காத்தல் போகந்
துய்ப்பித்தல் திரோதாயி நிறுத்தலாகும்
போற்றலரும் அருள் அருளேயன்றி மற்றுப்
புகன்றவையும் அருள்ஒழியப் புகலொணுதே."

(*சிவப்பிரகாசம் 18*)

*தொழும்பு, தொண்டு, அடிமை ஒரு பொருட்கிளவி. " யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கென ஒன்றின்றி நிற்கும் அஃதுஅதற்கு அடிமையாம்"*

(*சிவஞான* **போதச்** *சிற்றுரை*)

*உயிரின் கசிந்த தொண்டும், இறைவனின் கலப்பும் சிவோகம் பாவனைக்கு இன்றியமையாதன. ஆதலின் தொழும்பினை விளக்கிய அடிகள் அதனையடுத்து இறைவன் கலப்பினைக் கூறுவாராய் "நாற்றத்தின் நேரியாய்" எனக் கூறுகிருர்.*

" கசிந்த தொண்டினெடும் உளத்தவன்தான் நின்ற கலப்பாலே
சோகமெனப்பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி "

(*சிவஞான சித்தியார் சூ.* **9-7.**)

*நாற்றம் — பூவின் நாற்றம் எனத் தகுதியாற் பெறப்பட்டது. நேரியன் — நுண்ணியன்; நேரியன் × பரியன். நேரியனாய் நிற்கும் நிலையின் தோற்றம் கேட்டலறிவால் நிகழ்வது.*

" சூரிய காந்தக் கல்லினிடத்தே செய்ய சுடர் தோன்றியிடச்
சோதி தோன்றுமாபோல்
ஆரியனும் ஆசான்வந்து அருளால் தோன்ற
அடிஞானம் ஆன்மாவில் தோன்றும், தோன்றத்
தூரியனும் சிவன்தோன்றும் தானுந்தோன்றும்
தொல்லுலகமெல்லாம் தன்னுள்ளே தோன்றும்
நேரியனாய்ப் பரியனுமாய் உயிர்க்குயிராய் எங்கும்
நின்றநிலை எல்லாமுன் நிகழ்ந்து தோன்றும்."

(**சிவஞான சித்தியார் சூ. 8-28**)

இத்தோற்றம் ஞானவேள்வியிற் கேட்டலால் நிகழும் பட்டறிவு, நணியனும் தோற்றம் தெளிதலின் பட்டறிவு.

''ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து''

(திருக்குறள் -*353*)

சிவபெருமான் வாக்கு மனாதீதகோசரம் என்பது சிவஞானபோதம்; பாசஞான பசு ஞானங்களால் அறியப்படாதவன்; சிவஞானத்தாலன்றித் தெரியொண்ணா மறைபொருள்.

அடியார் சிந்திக்கச் சிந்திக்கச் சிவன் அடியார் உள்ளத்தில் விளங்கித் தோன்றுவான்; கடையக் கடையப் பாலில் வெண்ணெய் தோன்றுவது போலத் தோன்றுவான்.

**நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்களேத்த**
**மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன்**
**றன்னை**
**மறைந்திட மூடிய மாய விருளை**
**அறம் பாவமென்னு மருங்கயிற்றாற் கட்டிப்**
**புறந்தோல் போர்த் தெங்கும் புழுவழுக்குமூடி**
**மலஞ்சோரு மொன்பது வாயிற்குடிலை**
**மலங்கப்புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய**
**விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்**
**கலந்த வன்பாகிக் கசிந்துள்ளுருகும்**
**நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி**
**நிலந்தன் மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி**
**நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்**
**தாயிற் சிறந்த தயாவான தத்துவனே**

**பதப்பிரிவு :**

நிறங்கள் ஓர்ஐந்து உடையாய்; விண்ணோர்கள்
ஏத்த
மறைந்து இருந்தாய், எம்பெருமான் !
வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறம் தோல் போர்த்து எங்கும் புழு அழுக்கு மூடி
மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை
மலங்கப் புலன் ஐந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால், விமலா ! உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி,
நிலம் தன்மேல் வந்தருளி நீள் கழல்கள் காட்டி
நாயின் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே !

**பொழிப்புரை :**

*ஒப்பற்ற ஐந்து நிறங்களையுடையவனே! தேவர்கள் தம்முள்ளச் செருக்கு நீங்க நின்னை வழுத்த நீ அவர் களுக்குப் புலப்படாமல் ஒளித்திருந்தாய். எம்பெருமானே! கொடுமையான மூலவினையுடையேன் யான். என் அறிவினை ஒரு சிறிதும் விளங்காமல் முழுதும் மறையும் படி மூடி மயக்கஞ் செய்கின்றது ஆணவ இருள். அதனை நல்வினை, தீவினை என்னும் அவிழ்க்கமுடியாதபடி மேலும் மேலும் சுற்றிக்கொள்கின்ற நீக்குதற்கு அருமையான கயிறுகளாற் கட்டுகிறாய். வெளியே தோலைப் போர்வை யாகப் போர்த்து எல்லா உறுப்புகளிலும் நிறைந்துள்ள புழுக்களையும் அழுக்கினையும் மூடிப் பலவகை அழுக்குப் பொருள்கள் வடியும் ஒன்பது ஓட்டைகளைக் கொண்ட குடிசையாகிய உடம்பைச் சிற்றறிவுடைய எனக்குக் கொடுத்துள்ளாய். நான் கலங்கும்படி ஐம்பொறிகளை வாயிலாகவுடைய ஐம்புலன்களும் என்னுடனேயே*

இருந்து எனக்குத் தீமை புரிகின்றன. ஆதலின் உனது ஞான நன்னெறி விருப்பத்திற்கு மாறுபட்டுப்புன்னெறிச் செல்லும் மனத்தினால், இயல்பாகவே மாசற்றவனே! உனக்கு உனது கருணையோடு விரவிய மெய்யன்புடைய வனாகி அகங்குழைந்து உள்ளம் உருகும் நன்மை பெற்றிலேன். இந்த நன்மை சிறிதும் இல்லாத சிறியேனாகிய எனக்கு நலம் அளித்து அருள்புரிந்து இப்பூவுலகில் அருளாசிரியனாகக் குருவடிவில் வந்து அருள் புரிந்து உனது பொருள் பரந்த திருவடிகளைக் காட்டினாய். நாயினும் மிக இழிவாகப் பயனற்றுச் செயலற்றுப் பாழாய்க்கிடந்த அடியேனுக்குத் தாயினும் மேலான அன்பு வடிவாகிய உண்மைப் பொருளே!

**விளக்கம்:**

இறைவன் சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை என்னும் ஐந்து சிவ தத்துவங்களினும் ஐந்து சத்திகளின் வடிவங்களைத் தன்வடிவாகக் கொண்டு ஐந் தொழில்களை நேரே செய்கிறான். ஞான சத்தியாய் நிற்பது சிவம். கிரியா சத்தியாய் நிற்பது சத்தி. ஞானமும் கிரியையும் சமமாய் நிற்பது சதாசிவம். கிரியை மிகுந்து ஞானங் குறைந்து நிற்பது ஈசுரம். ஞானம் மிகுந்து கிரியை குறைந்து நிற்பது சுத்தவித்தை. இவ்வைவகைச் சத்திகளோடு கூடும் சிவபெருமானும் ஐந்து நிறங்க ளாக விளங்குகிறான்.

''பொன்மை நீலாதி வன்னம் பொருந்திடப் பளிங்கவற்றின்
தன்மையாய் நிற்குமாபோல் சத்திதன் பேதமெல்லாம்
நின்மலன் தானாய்த் தோன்றி நிலைமையொன்றாயே நிற்பன்
முன்னருட் சத்தி தன்பால் முகிழ்க்குந்தான் முளையானன்றே.

(சிவஞான சித்தியார் சூ. 1-68)

பொன்மை நீலாதிகளைத் தன்னிறமே பற்றத் தானும் அத்தன்மைகளனைத்துமாய்த் தோன்றி வேற்றுமையின்றி நிற்கும் படிகம்போல, முதல்வனுந் தனது சத்தியிற் காணப்படும் அப்பேதமெல்லாந்

தானுகத் தோன்றி வேற்றுமையின்றியே நிற்பன்; அவன் யாண்டும் சத்தியினிடமாகவே தோன்றுவான் அன்றித் தானுக வேறு தோன்ருனுகலான் என்பன பெற்ரும்.

நிலம், நீர், தீ, வளி, வெளியாகிய ஐம்பெரும் பூதங்களிலும் கலந்து நிற்றலான் "அவற்றின் நிறங் களாகிய பொன்மை, வெண்மை, செம்மை, கறுமை, புகைமை என்னும் ஐந்து நிறங்களும் உடையவனே!" எனவும் பொருள் கூறலாம்.

விண்ணேர் தம்முள் எவர் பெரியரெனச் செருக் குற்று அமர்புரிந்தனர். இப்போராட்டத்திற்கிரங்கி அம்மை இச்செருவினை ஒழிக்கும்படி இறைவனை வேண்டி ஞள். சிவபெருமான் இயக்க வடிவெடுத்து வந்து தேவர்கள் முன் ஒரு துரும்பை நட்டு "எவன் இத்துரும் பைத் துணிக்கவல்லானே அவனே பெரியன்" என்று கூறி நின்ருன். தேவர்கள் யாவரும் அவரவர் படைகள் கொண்டு அத் துரும்பைத் துணிக்க முயன்றும் துணிக்க முடியாது தவித்து "நீவிர் யாவர்" என்று இறைவனைக் கேட்டு நின்றனர். இறைவன் மறைந்தான். அம்மை அவர்களுக்குக் காட்சி யளித்து இயக்க வடிவாக வந்த வன் சிவனென்று கூறிச் சிவனுடைய ஆற்றலையும் முதன்மையையும் அறிவுறுத்திஞள்; சிவனை ஏத்தவும் பணித்தருளிஞள். விண்ணேர்கள் செருக்கொழிந்து தன்னை ஏத்தும் வரை இறைவன் மறைந்து நின்ருன். இதன் விரிவைக் காஞ்சிப்புராணம் அமரீசப்படலத்திற் காண்க. ஏத்த—காரியப் பொருட்டாய் வந்த வினை யெச்சம். உயிர்களுக்கு இருவினை காரணமாக மாயை யால் யாக்கப்பட்ட உடம்பு இறைவனுற் கொடுக்கப்படு கிறது. உயிர்கள் பிறந்து வினைப்பயனுகிய இன்பத் துன்பங்களை உலகில் துய்த்துப் பின் இறக்கின்றன.

"இருவினை இன்பத்துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து
வருவது போவதாகும்."

(சிவஞானசித்தியார் சூ. 2–2)

"துரும்பொன்று தன்னில் வலிமுற் றிழந்த சுரர்அச்சம் எய்தி வியவா
இரும்பண்பு கூர எவன்நீ இயம்புகெனலும் இயக்க வடிவாய்
வரும்பாண் டரங்கன் உருவங்கரப்ப மறுகித் திகைக்கும் அவர்முன்
கரும்பொன்று தோளி மலையான் மடந்தை எதிர்காட்சி
தந்தருளினுள்."

"எவன்வாணி கேள்வன் முதலோர் பதங்கள் நிலைபேறு செய்யும்
இறைவன்,
எவன் எப்பொருட்கும் ஆதாரமாகி எவருந்தொழப்படுபவன்
எவன் முற்றும் ஆக்கி நிலைசெய்து போக்கி அறிஞர்க்கினிக்கும்
அமுதன்
அவன் என்று காண்மின் இமையீர்! இயக்க வடிவாகி
வந்த அழகன்."

(*காஞ்சிப் புராணம், அமரீசப் படலம், 13, 15*)

இருளாகிய ஆணவ மலத்திற்கு இருவகை ஆற்றல்கள் உள. மறைப்பாற்றலால் உயிரின் அறிவை முற்றிலும் மறைக்கும்; கீழ்நோக்கிச் செலுத்தும் ஆற்றலால் மாறுபட மயக்கும்.

நல்வினை தீவினையாகிய அறம் பாவம் என்று பின் வருதலின் வல்வினை யென்றது மூலவினையை; மூலவினை யொன்று உண்டு.

"இருவினைப் பாச மும்மலக்கல் லார்த்தலின்"

(*திருத்தொண்டர் புராணம், திருநாவுக்கரசர்–412*)

என்று இருவினையினின்று மும்மலத்துள் ஒன்றாகிய கன்மத்தை வேறு பிரித்தோதினர் திருத்தொண்டர் புராண ஆசிரியர் சேக்கிழார் பெருந்தகை. "வினையே செய்வது" என்னுஞ் சூத்திரத்துள், "வனைந்தான் என்புழிச் செய்தற்கு வனைதல் செய்யப்படு பொருள் நீர்மைத்தாய்த் தொழின் முதனிலையாம்" எனக் கொண்டார் தொல்காப்பியனாரும் என்க.

(*சிவஞானபாடியம்*)

வினையேன் தன்னை மறைந்திட மூடிய இருளை மாய எனக் கூட்டி இருளானது நீங்கும்படி அறம்பாவம் என்னும் இருவினைக்கேற்ப யாக்கப்பட்ட எற்பு நரம்புடம்பால் கட்டி வினைப்பயன்களைக் கொடுத்துச் சிறிது சிறிதாக நிலையாமை உணர்த்தி இறைவன் இருளை நீக்குகிருன் எனவும் பொருள் கொள்ளலாம்.

"எல்லாமாய்த் தத்துவங்கள் இயைந்ததென் அணுவுக்கென்னில்
தொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் துடைத்தற்கும் பின்
நில்லாமை முற்றுவித்து நீக்கவும் கூடிநின்ற
பொல்லாத ஆணவத்தைப் போக்கவும் புகுந்ததன்றே."

(சிவஞானசித்தியார் சூ.2-79)

அசுத்த மாயாவுடலாதலின் "புழு அழுக்கு மூடி மலஞ்சோரும் ஒன்பது வாயிற்குடில்" என்ருர். இவ்வுடலைக் குடிலாக உருவகஞ் செய்தலை தேவாரத்திலும் காணலாம்:—

"கால் கொடுத்திருகை யேற்றிக் கழிநிரைத் திறைச்சிமேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத்தா அமைத்தங் கேழு சாலேகம் பண்ணி
மால் கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனுரே."

(நாலாந்திருமுறை 33-வது பதிகம் 4)

புலனைந்தும் மலங்க வஞ்சனை புரிதலை அடிகள்,

"மாறிநின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின்
வழியடைத்து"

(திருவாசகம்-கோயிற்றிருப் பதிகம்)

எனக் கூறுமிடத்தும் காண்க.

மனமானது வஞ்சனைப் புலன்களோடு கூடி உயிரின் கசிந்த தொண்டைத் தடுக்குமாதலின் நாயனுரும்,

"சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு" என்ருர்.

(திருக்குறள்-422)

புலன் செய்யும் வஞ்சனையை அஞ்சிக்காக்க வேண்டு மென்பதைத் தேவாரம்,

" புள்ளுவர் ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்து நின்று
துள்ளுவர் சூறைகொள்வர் தூநெறிவிளைய வொட்டார்
முள்ளுடையவர்கள் தம்மை முக்கணன் பாத நீழல்
உள்ளிடை மறைந்து நின்றங் குணர்விலல் எய்யலாமே "

(திருமுறை-4 பதிகம் 77-5)

" கூட்டமாய் ஐவர் வந்து கொடுந்தொழிற் குணத்தராகி
ஆட்டுவார்க் காற்றகில்லேன் "

(திருமுறை 4 பதிகம் 67-4)

" அஞ்சினால் இயற்றப்பட்ட ஆக்கைபெற் றதனுள் வாழும்
அஞ்சினால் அடர்க்கப்பட்டிங்குழி தரும் ஆதனேனை
அஞ்சினால் உய்க்கும் வண்ணங் காட்டினாய்க் கச்சந்தீர்ந்தேன்
அஞ்சினாற் பொலிந்த சென்னி அதிகைவீ ரட்டனீரே! "

(நான்காம் திருமுறை-பதிகம் 26-5)

ஒன்பது வாயில் — செவி இரண்டு, கண்ணிரண்டு. மூக்கின் புழை இரண்டு, வாய் ஒன்று, கருவாய் ஒன்று எருவாய் ஒன்று.

விலங்கும் — எதிர்நின்று தடுக்கும்.

இருளை மாய எனக் கூட்டினால் ஐகாரஞ்சாரியை.

" பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்கும் அன்பின்
வெற்றடியேனை,"

என்ற திருவாசக நீத்தல் விண்ணப்பம் 127-ம் செய்யுள் அடிகளோடு பொருந்த ஈண்டும் அழுக்குடம்பாகிய கருவியைக் கொண்டு உள்ளுருகிக் கண்ணீர் பெருகி மெய்சிலிர்த்துக் கைகுவித்து வணங்கி நன்மை யடையாது பொறிபுலன் கரணங்கள் என்னை இழுத்துச் செல்ல அவற்றின் வழிச்சென்று மயங்குவேனுக்கு மயக்கந் தீர்க்கும்படி குருவடிவங்கொண்டு எழுந்தருளி வந்து பிறவி வெப்பத்திற்கு நீழலாகிய திருவடிகளைக் காட்டித் தாயிற் சிறந்த அன்பு அருளி ஆண்டு

கொண்டான்" என்று பெருந்துறைப் பெம்மான் அருளினை நினைந்து நினைந்து கருணைப் பெருக்கில் அழுந்துகிறார் ஆளுடைய அடிகள்.

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேசவருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
யாரா வமுதே யளவிலாப் பெம்மானே
யோராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
யன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
யாதியனே யந்த நடுவாகி யல்லானே
யீர்த்தென்னை யாட்கொண்ட வெந்தை பெருமானே
கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெம் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தா மிக்காய் நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவே யென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே

*பதப்பிரிவு :*

மாசு அற்ற சோதி மலர்ந்த மலர்ச் சுடரே!
தேசனே! தேன்ஆர் அமுதே! சிவபுரனே!
பாசம் ஆம் பற்று அறுத்துப் பாரிக்கும் ஆரியனே!

நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேர் ஆறே!
ஆரா அமுதே! அளவு இலாப் பெம்மானே!
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே!
நீராய் உருக்கி என் ஆர் உயிராய் நின்றானே!
இன்பமும் துன்பமும் இல்லானே! உள்ளானே!
அன்பருக்கு அன்பனே! யாவையும் ஆய்
அல்லையும் ஆம்
சோதியனே! துன் இருளே! தோன்றாப்
பெருமையனே!
ஆதியனே! அந்தம் நடு ஆகி அல்லானே!
ஈர்த்து என்னை ஆட்கொண்ட எந்தை
பெருமானே!
கூர்த்த மெய்ஞ்ஞானத்தால் கொண்டு
உணர்வார்தம் கருத்தின்
நோக்கு அரிய நோக்கே! நுணுக்கு அரிய
நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே!!
காக்கும் எம் காவலனே! காண்பு அரிய பேர்
ஒளியே
ஆற்று இன்ப வெள்ளமே! அத்தா! மிக்கு ஆய்
நின்ற
தோற்றச் சுடர் ஒளியாய்ச் சொல்லாத நுண்
உணர்வாய்
மாற்றம் ஆம் வையகத்தின் வெவ்வேறே வந்து
அறிவு ஆம்
தேற்றனே! தேற்றத் தெளிவே! என்
சிந்தனையுள்
83 ஊற்று ஆன உண் ஆர் அமுதே! உடையானே.!

**பொழிப்புரை :**

*இயல்பாகவே களங்கமில்லாத ஒளி விரிந்த செந்தாமரைப்பூப் போன்ற செங்கிறத் தீவண்ணனே! ஞான ஒளி வடிவினனே! இனிமை நிறைந்த அமுதமே!*

கைலைப்பதியாகிய சிவபுரத்தில் வாழ்பவனே! எனது மலங்களாகிய பிணிப்பை நீக்கி மெய்யுணர்வை வளர்க்கும் மேலோனே! இச்சாசத்தியால் உயிர்க்குத் திருவருள் பாலித்து மனத்திலுள்ள பொய்ம்மை ஒழியும்படி மெய்யொளியுடன் நீங்காது நிலைத்து நின்ற பேரருள் வெள்ளம் நிறைந்த பெரிய ஆறே! தெவிட்டாத அமுதமே! எல்லையில்லாத பெருமானே! அருளான் ஆய்ந்து உணராதவர் மனத்தில் விளங்காது மறையும் அறிவொளி வடிவினனே! நெஞ்சம் நெக்குக் கரைந்து தண்ணீராய் உருகும்படி செய்து என்னுடைய அருமையான உயிர்க்குயிராய் நின்றவனே! இன்பமும் துன்பமுமாகிய இரண்டும் இல்லாதவனே! உயிர்கள் இன்பத் துன்பங்களை நுகரும்போதும் அவ்வுயிர்களுக் குள்ளிருந்து பயனை ஏன்று கொள்பவனே! அன்பினால் வழிபடுகின்றவர்களிடத்தில் தானும் அண்மி அன்பு பாராட்டுபவனே! கலப்பினால் எல்லாப் பொருள்களு மாய்ப் பொருண்மையால் அவையல்லாதவனுமாகி வேறானவனுமாகிய பேரொளிப் பிழம்பினனே! உயிர் களைச் செறிந்து பொருந்துகின்ற அறியாமையாகிய இருளானது ஒரு சிறிதும் தன்னிடத்துத் தோன்றாத பேரறிவொளிப் பொருளே! எல்லாப் பொருள்களுக்கும் முன்னையதான முதற்பழம் பொருளாயுள்ளவனே! முடிவும் இடையுமாகி வேறு ஒடுங்கும் இடமாயுமிருப்பவனே! தனக்கு முதலும் நடுவும் முடிவும் இன்றி நிற்பவனே! வலிய இழுத்து என்னை அடிமை கொண்ட எம் தந்தை யாகிய தலைவனே! நுட்பமாகிய மெய்யுணர்வினால் காண்பானுங் காட்டுவதும் காண்பதுவுமாகப் பிரித்துக் கொண்டு அறிகின்றவர்கள் தங்களுடைய அறிவினாற் காண முடியாத முத்திக் குறிக்கோளே! எத்தகைய நுட்பமான அறிவினாலும் அறியமுடியாத மிக நுண்ணறிவுப் பொருளே! இறத்தலும் பிறத்தலும் வினையோடு பொருந்துதலும் இல்லாத புண்ணியப் பொருளே! எக்காலத்தும் எவ்விடத்தும் எம்மைக் காப்பாற்றுகின்ற பேரரசே! அருள்ஞானக் கண்ணு

லன்றி ஊனக் கண்ணுற் காணமுடியாத பேரருள் ஒளி வடிவினனே! பிறவித் துன்ப வெப்பந் தணிக்கும் பேரின்பப் பெருக்கே! என் அப்பா! உலகொளிப் பொருள் கள் யாவற்றினும் மேலாய் நிலைபெற்று நின்ற பொலி வினையும் கதிர் வீசுகின்ற ஒளியையும் உடையவனே! நூல்களான் வரையறுத்துரைக்க முடியாத மிக நுண் ணறிவுப் பொருளாகவிருந்தும் வேறுபடுகின்ற அசத்துத் தன்மை வாய்ந்ததாகிய இவ்வுலகில் வேறு வேறு தன்மைகளில் எழுந்தருளி வந்து மெய்ஞ்ஞான மாகிய (சுத்தான்ம சைதன்னியத்தில்) தூய உயிர் அறிவு ஆதாரத்திலும் வந்து தெளிவுணர்ச்சி யருளு பவனே! தெளிந்த அறிவினுள் விளங்கும் தெளி பொருளே! அடியேன் அறிவில் ஊற்றூகி ஊறுகின்ற தாகிய உண்ணுதற்கு மிக அருமையான சுவை அமுதமே! எல்லாப் பொருள்களையும் உடைமையாக வும் எல்லா உயிர்களையும் அடிமையாகவும் உடைய வனே!

**விளக்கம் :**

இறைவன் இயல்பாகவே மாசற்றவன். இயல் பாகவே கட்டற்றவன். உயிர்கள் இயல்பாகக் கட்டுற்றவை.

"பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி"

(பதினோராந் திருமுறை -
பொன்வண்ணத் தந்தாதி)

"சோதியே சுடரே சூழொளி விளக்கே"

(திருவாசகம் : அருட்பத்து 1)

"பூவெனப் படுவது பொறிவாழ் பூவே"

ஈண்டு மலர் செந்தாமரையைக் குறிக்கும். சிவனைத் 'தீவண்ணன்' என்றும் 'பொன்னார் மேனியன்' என்றும் திருமுறைகள் கூறும்.

"இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே" இறைவன் இன்ப வடிவினன்; ஆதலின் இன்பத்

துன்பத்தை அனுபவித்தல் இலன். தன்னை அடைந்த வர்களுக்கு இன்பத்தைக் கொடுப்பான்.

உயிர்கள் இன்பத் துன்பங்களை நுகரும் பொழுது அவைகளை உயிர்க்குயிராயிருந்து நுகரச் செய்வான், ஆதலின் "உள்ளான்" என்றார். மேலும் அடியார்க்கு வரும் இன்பத் துன்ப நுகர்ச்சிகளை அவர்களுக்கு விருப்பு வெறுப்பினால் மேல் வருவினை ஏறாதபடி தான் ஏன்று கொள்வான். அவ்வின்பத்துன்பங்களை உடலூழாய் ஒழியச் செய்வான்.

"ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினான் — ஏகமாய்
உள்ளத்தின் கண்ணான் உள்குவார் உள்சிற்றை
உள்ளத்தாற் காணானே உற்று."

(சிவஞானபோதம்-சூ. 11. அதி. 1)

உயிர்களைத் துன்னிப் பொருந்துகின்ற மலம் இறைவன் மிக நுண்ணிய அறிவுடைப் பொருளாதலின் அவனைப் பொருந்ாது. இறைவன் துன்னிருளே தோன்றாப் பெருமையன். உப்பானது கடல் ஆகாயத்தைப் பொருந்தாது கடல் நீரைப் பற்றுதல் போல இறைவனை இருள் மறைக்க முடியாது அற்ப அறிவுடைய உயிரையே மறைக்கும்.

"மெய்ஞ்ஞானந்தன்னில் விளையாத சத்தாதல்
அஞ்ஞானம் உள்ளம் அணைதல் காண் — மெய்ஞ்ஞானம்
தானே யுளவன்றே தண்கடனீர் உப்புப்போல்
தானேய் உளம்உளவாய்த் தான்"

(சிவஞானபோதம்-சூ 7. அதி. 3)

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுர்வே; அறிபவன், அறிவு, அறியப்படுபொருள் எனப் பிரித்து நோக்குவார்க்குக் காண முடியாதவன். இறைவனிடத்து இப்பிரிப்பின்றி ஒன்றியிருந்து உணர்வார்க்கு விளங்கு பவன்.

" காண்பானுங் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணுர்கள் — காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர் "

(விஞவெண்பா 11)

இறைவன் அறஆழி அந்தணன், புண்ணியன்.

" புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே "

(ஆருந் திருமுறைப் பதிகம்-99-1)

" புண்ணியனைப் பூசித்த புண்ணியத் திஞலே "

(சிவஞானசித்தியார் சூ. 8-31)

மாறுபட்ட வையகத்தில் இறைவனும் பலபல வேறு பட்ட வடிவங்கள் எடுப்பான். பல பல வேடங்கொண்டு பல பல முறையில் உயிர்களை ஆட்கொள்வான்.

" பலபல வேடமாகும் பரநாரிபாகன் "

(தேவாரம். 2-ம் திருமுறை. கோளறு பதிகம் 9)

" ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை கிளக்கவேண்டா
கோட்பாலனவும் வினையுங் குறுகாமை எந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்க தக்கார். "

(தேவாரம்-திருஞானசம்பந்தர்
திருமுறை, திருப்பாசுரம்-4)

" பந்தமும் வீடுமாய பதபதார்த்தங்கள் அல்லான்
அந்தமும் ஆதியில்லான் அளப்பிலன் ஆதலானே
எந்தைதான் இன்னன் என்றும் இன்னதாம் இன்னதாகி
வந்திடான் என்றுஞ் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே "

(சிவஞான சித்தியார் சூ. 1. அதி. 2-44)

ஆற்றின்ப வெள்ளம் என்பதற்கு ஆற்றொழுக்குப் போன்று இடையருத பேரின்ப ஒழுக்கு எனவும் நல்லாற்றின் நல்லநெறியி னெய்தப்படும் இன்பப் பெருக்கு எனவும் பொருள் கொள்ளலாம்.

## சிவபுராணப் பாட்டின் பயன்

வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
வாற்றே னெம்மையா வரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்துசொல்லுவார்
செல்வர் சிவபுரத்தினுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

*பதப்பிரிவு :*

வேற்று விகார விடக்கு உடம்பின் உள் கிடப்ப
ஆற்றேன் எம் ஐயா! அரனே ஓ என்று என்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய் கெட்டு மெய் ஆனார்
மீட்டு இங்கு வந்து வினைப் பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டு அழிக்க வல்லானே!
நள் இருளில் நட்டம் பயின்று ஆடும் நாதனே!
தில்லையுள் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!
அல்லல் பிறவி அறுப்பானே! ஓ என்று
சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவன் அடிக் கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

**கொண்டு கூட்டு :**

சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லு வார் பல்லோரும் பணிந்து ஏத்த சிவபுரத்திற் செல்வர் சிவனடிக் கீழ் உள்ளார்.

**பொழிப்புரை :**

வேறு வேறு மாறுபாடுகள் அடைகின்ற தசையா லான உடம்பினுள்ளே அடைபட்டுக் கிடப்பதற்கு நான் தாங்கேன். எமது தலைவனே! அழித்தற் கடவுளே! ஓ என்று பன்முறை இரங்கி ஓலமிட்டு வணங்கித் துதித்துக் கொண்டிருந்து நிலையில்லாத உலகப் பற்று ஒழிந்து என்றும் ஓர் பெற்றித்தாய உண்மைப் பொரு ளாகிய சிவமாம் தன்மைப் பெருவாழ்வு பெற்றவர்கள் திரும்பவும் இவ்வுலகில் தோன்றி இருவினைக் கேற்ற பிறப்பில் பொருந்தாதபடி வஞ்சம் பொருந்திய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றங்களை அறிகின்ற ஐம்பொறி களின் குடிலாகிய உடலிற் கட்டுண்டு கிடத்தலை நீக்க வல்லவனே! உயிர்களின் மறைப்பு நிலையிலும் சூக்கும ஐந்தொழிலாகிய திருக்கூத்தைப் பன்முறை ஆடுகின்ற தலைவனே! திருச்சிதம்பரப் பொன்னம்பலத்தில் திருநடம் புரிபவனே! அழகிய பாண்டி நாட்டைப் பழம்பதியாக உடையவனே! துன்பம் மிக்க பிறப்பினை வேரோடு களைபவனே! ஓம் என்று ஓங்காரத்தை ஓதி, ஏத்துதற்கு அருமையானவனை இயன்ற மட்டும் புகழ்ந்து ஓங்காரத்துட் பொருளாகிய சிவபெருமா னுடைய திருவடிகளைச் சிரமேற்கொண்டு அவற்றின் கீழ் அடங்கி நின்று பாடிய இச்சிவபுராணக் கலிவெண்பாப் பாடலின் கருத்தினைத் தெளிய அறிந்து பாடுகிறவர்கள், பலரும் தாழ்ந்து புகழ்ந்து வணங்கும்படி சிவபுரமாகிய திருக்கயிலையிற் போய்ச் சேர்வார்கள்; ஆண்டுச் சிவபெருமான் திருவடிக்கீழ் (பேரின்பம் நுகர்ந்துகொண்டு) என்றும் இருப்பார்கள்.

**விளக்கம் :**

விடக்கு உடம்பினுட் கிடப்ப ஆற்ருமையை அருணந்தி சிவம் உடம்பினை ஒரு சிறையாகவைத்து "காராகிருகக் கலியாழ் வேனே" என்கிருர். (இருபா இருபஃது). ஓம் என்ற பிரணவம் வெளிப்படக் கூறலாகாமையின் ஓ எனக் கடைக்குறையாகக் கூறப் பட்டது. "ஒவ்வெனும் எழுத்தாமைந்தும் உணர்வுதித் தொடுங்குமாறும்" என்ற (சிவஞானசித்தியார் சூத்திரம்-4) மூன்ருவது செய்யுளின் அடிக்குச் சிவஞான முனிவர் உரை வகுத்தருளும்போது "பிரணவமாகலின் உள்ளவாறே வெளிப்படக் கூருது கடைக்குறைத்துக் குறுக்கல் விகாரமாக்கிக் கூறினுர்" என்று எழுதி யருளினமை காண்க.

'ஓ என்று' என்பதற்கு ஓ என்று ஓலமிட்டு எனவும் பொருள்கொள்ளலாம். சிவபுரம் என்பது பரமுத்தியைக் குறிக்கும் என்பதைக் காட்டுதற்கு 'மீட்டு இங்கு வந்து வினைப் பிறவி சாராமே' என்றும், 'சிவனடிக் கீழ் உள்ளார்' என்றும் கூறினுர்.

செய்ய மேனி வெளிய பொடிப் பூசுவர் சேரும் அடியார் மேல்
பைய நின்ற வினைபாற்றுவர் போற்றிசைத் தென்றும் பணிவாரை
மெய்ய நின்ற பெருமான் உறையும் இடம் என்பர் அருள் பேணிப்
பொய்யிலாத மனத்தார் பிரியாது பொருந்தும் புகலூரே.

(திருஞானசம்பந்தர் தேவாரம்
முதல்திருமுறை. பதிகம் 2-5)

உடம்பு புலன்களின் வெளிக்குறிப்பே.

நள்ளிருள் — சகல கேவலம்.

"கேவலமும் — மருட்கேவலம், சகல கேவலம், பிரளய கேவலம், விஞ்ஞான கேவலம், அருட் கேவலம் என ஐவகைப்படும். மருட்கேவலமாவது அநாதி கேவலம். சகல கேவலமாவது சங்கரித்த பின்னர்ப் புனருற்பவத்திற்கு ஏதுவாய்ப்படுங் கேவலம். ஆண்டுச் சூக்கும ஐந்தொழில் உண்டு என்று மிருகேந்திரத்துட் கூறுதலின் அநாதி கேவலத்தோடு இதனிடை வேற்றுமையாமாறு கண்டு கொள்க."

(சிவஞானபோதச் சிற்றுரை, சிவஞான முனிவர்)

"சூக்கும ஐந்தொழிலாவன—ஒடுங்கிய காலத்தினும் அறிவித்தற்குரியாரை அறிவித்தும், மறைத்தற் குரியாரை மறைத்தும், உயிர்களின் வினையைப் பக்குவப்படுத்தியும், மாயாசத்திகளை வெளிப்படுத்தற் குரிய எல்லாப் பொருள்களையும் நோக்கி நிற்பன் முதல்வன் என்பதாம்."

(சிவஞானபாடியம் சூத்திரம்-2)

ஐந்தொழில் புரிதலே திருநடனம்.

"தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப் பதத்தே நாடு."



# 2. கீர்த்தித் திருவகவல்

திருச்சிற்றம்பலம்.

தில்லை மூதா ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகுந்
துன்னிய கல்வி தோற்றியு மழித்தும்

என்னுடை யிருளை யேறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமந் தோற்றுவித் தருளியும்

கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டும் மின்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்

விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்
துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்

நந்தம் பாடியின் நான்மறை யோனாய்
அந்தமில் ஆரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்

கூறுடை மங்கையுந் தானும்வந் தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்

தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்

நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்
றீண்டு கனகம் இசையப் பெறாஅ
தாண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்

தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்
அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்

ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்

தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்

பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனிற்

குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய வதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும்

தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரின்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து

படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்

சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்

துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பய மதனில் அறம்பல அருளியும்

குற்று லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்

தானே யாகிய தயாபர னெம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுட்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன்

அந்தமில் பெருமை யருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குட னறுக்கும்

ஆனந் தம்மே யாறு அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்

மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன்

பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்

ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்

அப்பரி சதனால் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்

ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியுங்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி

நாத நாத என்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்
எழில்பெறு மிமயத் தியல்புடை யம்பொற்

பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

திருச்சிற்றம்பலம்

---

# கீர்த்தித் திருவகவல்

*தில்லையில் அருளியது*

கீர்த்தித் திரு அகவல் — சிவபெருமானுடைய திரு அருட் செயல்களின் புகழ்ச்சி முறைமையை அகவற் பாவினாற் கூறுவது. சிவபெருமான் பலபல அருட்டிரு மேனியெடுத்துப் பலபல இடங்களில் பலபல காலங் களில் உயிர்களின் பொருட்டுச் செய்த இச்செயல்கள் அவனுக்குப் பொருள்சேர் புகழ்தருவன. புகழ்தருகின்ற இவ்வருட் செயல்களைக் கூறும் பகுதி கீர்த்தித் திருவகவல் ஆயிற்று. கீர்த்தி, சீர்த்தி, புகழ் இவை ஒரு பொருட் சொற்கள்.

''புகழ் பெருகுஞ் செய்கையெல்லாம் புகல் அகவல் ஒன்று''
(திருவாசகச் சிறப்பு)

கீர்த்தித் திருஅகவல், திரு அண்டப்பகுதி, போற்றித் திருஅகவல் ஆகிய மூன்று அகவல்களும் திருத்தமாகிய தில்லைவாழ் அந்தணர் வாழ்கின்ற கனகசபையைச் சூழ்ந்த திருவீதியில் மாணிக்கவாசக அடிகளார் வலமாக வரும்போது பாடப் பெற்றன. ஆதலின் இன்றும் விழாக் காலங்களில் சிவபெருமான் திருவீதி வலம் வரும்போது இவ்வகவல்கள் ஓதப் பெறுகின்றன.

''ஆடுமிக் குலாநற் றில்லை யாண்டவன் தனைக்கொண் டென்றும்
பாடலைப் புகன்று கோவில் இருவகைப் பதிகங்கூறி
நாடுமச் சிவபுராணம் ஒழிந்தநல் அகவன் மூன்றும்
நீடுமெய்த் தமிழும் அன்பால் ஓதினர் நீதி மிக்கார்.''
(கடவுள் மாமுனிவர், திருவாதவூரடிகள் புராணம்-திருஅம்பலச் சருக்கம்-62)

சிவபுராணம் சிவபெருமானுடைய அருவமும் உருவமுமில்லாத சிறப்பியல்பினைக் கூறுவது. கீர்த்தித் திருவகவல் அவன் உயிர்களின் பொருட்டு அருட்

செயல்கள் புரிவதற்கு எடுத்த அருள் உருவங்களாகிய பொது இயல்பினைக் கூறுவது. இறைவன் அருளுருக் கொண்டு பல செயல்கள் புரியானாயின் உயிர்கள் ஈடேறுதல் இயலாது.

> "படைப்பாதித் தொழிலும் பத்தர்க்கருளும் பாவனையும் நூலும்
> இடப்பாக மாதராளோடு இயைந்து உயிர்க்கு இன்பம் என்றும்
> அடைப்பானும் அதுவும் முத்தி அளித்திடும்யோகும் பாசந்
> துடைப்பானுந் தொழிலும் மேனி தொடக்கானேற்
> சொல்லொணுதே."
>
> (*சிவஞான சித்தியார்*-**54**)

உருவம் முழுதும் அருளாதலின் உயிர்கள் எடுக்கும் மாயா உருவங்களின் குற்றங்கள் இறைவன் உருவினுக்கு இல்லை.

> "உருவருள் குணங்களோடும் உணர்வருள் உருவில் தோன்றுங்
> கருமமும் அருள் அரன் தன் கரசரணுதி சாங்கந்
> தரும்அருள் உபாங்கமெல்லாந் தானருள் தனக்கொன்றின்றி
> அருளுரு உயிருக்கென்றே ஆக்கினன் அசிந்தனன்றே."
>
> (*சிவஞானசித்தியார்*-47)

இங்ஙனுவித உருவங்களெடுத்து இறைவன் மக்களுக்கு இடர் நீக்கி இன்பம் அளிக்கின்றான்; உருவங்கள் எடுத்து உயிர்களை ஆட்கொள்கின்றான்! பலப்பல இடங்களிலும் பலப்பல வேடங்கள் கொண்டு உயிர்களுக்கு அருள்புரிந்து உயிர்களைப் பெருமான் அடிமையாக் கொண்டமையை விளக்குவது கீர்த்தித் திருவகவல். உயிர்களுக்கு அருள் புரிதொழிலே இறைவனுக்குப் புகழாகும். அப்புகழ்ச் செயல் உயிர்களுக்கு நிலைபெற்ற பயனளித்தலின் அப்புகழ் ஏனைய மக்கள் புகழ் போலன்றிப் பொருள்சேர் புகழாகும். இறைவன் பொருள்சேர் புகழினை விரும்பிக் கூறுதலே, அறியாமையாகிய இருளும் பிறவிக் கேதுவாகிய இருவினையும் சாராமைப் பேற்றிற்குச் சாதனமாகும்.

> "இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு."
>
> (*திருக்குறள்–கடவுள் வாழ்த்து*–5)

உருவத் திருமேனியின் சிறப்பினைப் பாராட்டிப் பேசும் தேவாரத் திருப்பாடல்களிற் சில பின்வருவன :—

"மருந்து வேண்டில் இவை, மந்திரங்கள் இவை,
புரிந்து கேட்கப் படும் புண்ணியங்கள் இவை;
திருந்து தேவன்குடித் தேவர் தேவெய்திய
அருந்தவத்தோர் தொழும் அடிகள் வேடங்களே."
*(சம்பந்தர்–திருமுறை-3)*

"ஒன்றும் பலவுமாய வேடத் தொருவர் கழல்சேர்வார்
நன்று நினைந்து நாடற்குரியார்."
*(சம்பந்தர்–திருமுறை 1)*

"நானாவித உருவால் நம்மை ஆள்வான்"
*(சம்பந்தர்–திருமுறை 1)*

"பலப்பல வேடமாகும் பரன் நாரிபாகன்
பசு ஏறும் எங்கள் பரமன்."
*(சம்பந்தர்–திருமுறை 2)*

## கீர்த்தித் திருவகவல்

சிவபெருமானது திருவருட் புகழ்ச்சி முறைமை.

*(நிலைமண்டில ஆசிரியப்பா)*

**தில்லை மூதா ராடிய திருவடி**
**பல்லுயி ரெல்லாம் பயின்றன ளாகி**
**எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி**
**மண்ணும் விண்ணும் வானோ ருலகுந்**
**துன்னிய கல்வி தோற்றியு மழித்து**
**மென்னுடை யிருளை யேறத் துறந்து**
**மடியா ருள்ளத் தன்புமீ தூரக்**
**குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்.**

*பதப்பிரிவு :*

தில்லை மூதூர் ஆடிய திருஅடி
பல் உயிர் எல்லாம் பயின்றனள் ஆகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோர் உலகும்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை இருளை ஏறத் துறந்தும்
அடியார் உள்ளத்து அன்பு மீதூரக்
குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்.

**பொழிப்புரை**

சிதம்பரம் என்னும் பழமையான பதியில் ஐந்தொழிற் றிருநடம் புரிந்த திருப்பாதங்களால் பலவகைப்பட்ட உயிர்கள் யாவற்றுள்ளும் இடைவிடாது நடம்புரி பவனாகி அவைகளை இயக்கியும்; அளவில்லாத பலவகைப் பட்ட அருளியல்புகளும் தன்மாட்டு உயர்வு அடையும்படி தோன்றச் செய்தும்; பூமியும் ஆகாயமும் விண்ணோர் உலகமும் ஆகிய பொருள் உலகினையும், சுத்தமாயையில் ஒலிவடிவாய் நுணுக்கமாய்ப் பொருந்தியடங்கியுள்ள எழுத்து, சொல், மறைமொழியாகிய கலைஞானச் சொல்லுலகையும், துடியின் நாதத்தை எழுப்பித் தோன்றச் செய்தும், இறைவன் தன்னுடைய குணமாகிய சத்தியை விளங்கச்செய்து உலகினைப் படைத்தது போலச் சத்தியைத் தன்மாட்டு ஒடுங்கச்செய்து காரிய உலகம் முழுதினையும் அழியச் செய்தும்; என்னுடைய ஆணவ மறைப்பு நீங்குதற்குத் தகுதியாகும்படி கூட்டு வித்த இந்தத் தத்துவங்களைக் களைந்தும் இவ்வாறு என்னுடைய ஆணவ மறைப்பினை முற்றிலும் நீக்கியும், தொண்டர்களுடைய மனத்தில் மெய்யன்பு பொங்கி யெழுதலால் அவர்களுடைய சிந்தையே கோவிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் இடமெனக் கொண்ட உறுதிப்பாடும் முதன்மைப்பாடும்.

**விளக்கம் :**

சிவபெருமான் படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல் அருளலாகிய ஐந்தொழில் புரிதலே திரு நடனமாகும். இவ்வுலகிற்கு இதயத் தானமாகிய தில்லையம் பதியில் இறைவன் இத்திருநடம் புரிகிறான்; மக்கள் இதயத்தில் உயிர்க்கு உயிராய்ப் பொருந்தித் திருநடம் புரிந்து அவர்கள் அறிவை விளக்கி வினைப் பயன்களை நுகர்விக்கிறான். உலகினைத் தோற்று விக்குங்கால் கலை, தத்துவம், புவனமாகிய பொருளுலகினை யும், மந்திரம், பதம், வன்னமாகிய சொல்லுலகினையும் தோற்றுவிக்கிறான்; இறைவன் தன்கையிலுள்ள

துடியை ஒலித்து நாத தத்துவத்தை எழுப்பி ஏனைய தத்துவங்களைத் தோன்றச் செய்கிறான். உலகினைத் தோற்றுவித்தல் உயிர்க்கு மலபாகம் வர என்று மெய்கண்ட நூல் கூறும் :—

'' உயிரவை ஒடுங்கிப்பின்னும் உதிப்பதென் அரன்பால் என்னில்
செயிருறு மலத்தினுகும் ''

(சிவஞானசித்தியார் — சூ. 1-31.)

'' ஈருகியோனுல் ஈறெய்திய உலகம் ஈறெய்திய வாறே ஒழியாது மீளவும் அவன்பானின்று தோன்றுதல் எற்றுக்கெனின், மலபரிபாகம் வரும்பொருட்டுத் தோன்றும்.''

''உயிரவை — உயிரோடுங் கூடிய உலகம் என்ற வாறு''

[சிவஞான முனிவர் உரை]

மூதூர் — முதுமை + ஊர். பண்புத் தொகை; துன்னிய—இறந்தகாலப் பெயரெச்சம்; இருள்—ஆணவ மலம்; ஏறத்துறந்தும்—முற்றும் ஒழித்தும்; மீதூர— பெருக; மீதூர்—பகுதி.

உள்ளன்பு பொங்கி எழும் அடியார் உள்ளமே இறைவனுக்குக் கோவில். ஆண்டு உறைதலையே கோட்பாடாகவும் தலைமையாகவும் கொண்டுள்ளான் இறைவன். ஈசனுக்கு ஏனை இடங்களினும் சிறந்த உறைவிடம் அன்பர் உள்ளமே என்பார் ''குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்'' என்றார்.

9-10 **மன்னு மாமலை மகேந்திர மதனிற்**
**சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்**

**பதப்பிரிவு :**

**மன்னும் மாமலை மகேந்திரம் அதனில்**
**சொன்ன ஆகமம் தோற்றுவித்து அருளியும்**

**பொழிப்புரை :**

நிலைபெற்ற பெரிய மலையாகிய மகேந்திர மலையில் சிவபெருமான் சதாசிவ மூர்த்தியாக இருந்து அம்மைக்குச் சொன்ன ஆகமங்களை மீளவும் ஒலி வடிவிலிருந்து எழுத்துக்களாகவும், சொற்களாகவும், மறை மொழிகளாவும், வசனங்களாகவும் காரியமாக வெளிப்பட விளங்கச் செய்தருளியும்.

**விளக்கம் :**

மன்னுதல் — நிலைபெறுதல், மகேந்திரம்: பொதிகைக்குத் தெற்கேயுள்ளது எனச் சிவதருமோத்திரம் கூறுகிறது. ஆகமம் – சிவாகமங்கள் 28. காமிகம், சுவாயம்புவம், இரௌரவம், மகுடம், சுப்பிரபேதம் வாதுளம் முதலியன.

> "ஆரணம் ஆக மங்கள் அருளினுல் உருவுகொண்டு
> காரணன் அருளாகுகில் கதிப்பவர் இல்லையாகும்
> நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க்கெல்லாம்
> சீரணி குருசந் தானச் செய்தியுஞ் சென்றிடாவே."
>
> (சிவஞானசித்தியார்-46)

சொல்லுலகம் ஒடுங்கும்போது நாதத்துவத்தில் ஒடுங்குமாகலின் அவைகளை மீட்டும் ஆகமநூலாக இறைவன் காரியப்படுத்துகின்ருன் என்பதாம்.

**11–12 கல்லா டத்துக் கலந்தினி தருளி**
**நல்லாளோடு நயப்புற வெய்தியும்**

**பதப்பிரிவு :**

> **கல்லாடத்துக் கலந்து இனிது அருளி**
> **நல்லா ளோடு நயப்புஉற எய்தியும்.**

**பொழிப்புரை :**

திருக்கல்லாடம் என்னும் பதியில் அம்மை வழிபட்ட திருஉருவில் கலப்பினுல் அதுவே தாளுய்ப் பொருந்தி வழிபாட்டை ஏற்று இனிமையாக அருள்புரிந்து

பெண்ணினல்லாளாகிய அம்மையோடு மக்களுக்கு விருப்பம் பொருந்தச் சேர்ந்தும்.

**விளக்கம் :**

இறைவன் சிவலிங்கவடிவிலும் அடியார் வடிவிலும் பொருந்தியிருந்து அவ்விருவடிவங்களுமே தானாகக் கலந்து தோன்றி அருள்புரிவான். அவ்வடிவங்களைச் சிவமாகவே கண்டு வழிபடவேண்டும்.

"தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்
நீபரன் தன்னை நெஞ்சில் நினைவையேல் நிறைந்த பூசை
ஆய்பரம் பொருளை நாளும் அர்ச்சிநீ அன்பு செய்தே"

(சிவஞானசித்தியார்-சூ. 21 அதி. 2
செய்யுள் 28)

"கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தில் அங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமால் — கண்டவுருத்
தான்துவா யன்றுனன் றானது வாய்த் தோன்றுமே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு".

(சிவஞானபோதம் சூ. 12 அதி. 4)

"அதுவே தானாய்க் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு எப்போதும் அப்படியே விளங்கித் தோன்றுவான்,"

(சிவஞான மாபாடியம்)

13–14 பஞ்சப்பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
மெஞ்சா தீண்டு மின்னருள் விளைத்தும்

**பதப்பிரிவு :**

பஞ்சப்பள்ளியில் பால்மொழி தன்னொடும்
எஞ்சாது ஈண்டும் இன் அருள் விளைத்தும்

**பொழிப்புரை :**

பஞ்சப்பள்ளி என்னுந் திருஊரில் பால் போன்ற இன்சொற்கள் சொல்லுகின்ற உமையம்மையுடன் கூடி

யிருந்து குறைவின்றி நிறையும் இனிய பெருங் கருணையைத் தோன்றச் செய்தும்.

**விளக்கம் :**

சிவபெருமான் எப்போதும் மேலும் மேலும் பெருகுகின்ற அருள்வடிவான அம்மையோடு கூடி இன்னருள் புரிந்துகொண்டேயிருக்கின்றான். இறைவன் கருணைப் பெருக்கை அளவிட்டு எவரும் அறிய முடியா தென்பார் "எஞ்சாது ஈண்டும் இன்னருள் விளைத்தும்" என்றார். அம்மை திருவருள் என்றும் முழு நிறைவு பெற்றது என்பதாம். அருள் விளைத்தல் – சத்திசங்கற்பித்தல். இறைவன் தனது ஆற்றலாகிய சத்தியை எப்போதும் தொழிற்படுத்திக் கொண்டே யிருப்பான் என்பதாம். சத்தி சங்கற்பமாவது சத்தி அவ்வக் காரியங்களில் உன்முகமாதல். சிவசத்தி உன்முகமாதலில் உயிர் தொழிற்படும்.

(சிவஞானபோத வெண்பா: 'மன்னுசிவன் சந்நிதியில்')

**15 கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்**
**16 விராவு கொங்கை நற்றடம் படிந்தும்**

*பதப்பிரிவு :*

**கிராத வேடமொடு கிஞ்சுகம் வாயவள்**
**விராவு கொங்கை நல்தடம் படிந்தும்.**

**பொழிப்புரை :**

வேடன் வடிவத்தோடு முருக்க மலர் போன்ற சிவந்த வாயினையுடைய அம்மையோடு கூடி அவளுடைய பிளவு அகலாத, பெருத்த தனங்களாகிய நல்ல குளத்தில் தோய்ந்து உயிர்களுக்குப் போக நுகர்ச்சி நிகழச் செய்தும்.

**விளக்கம்**

விராவு கொங்கை 'கொள் ஏர் பிளவு அகலாத் தடங் கொங்கை' (திருவாசகம்-நீத்தல் விண்ணப்பம் 2)

"தரைமுத லுலகினில் உயிர் புணர் தகைமிக
விரைமலி குழலுமையொடு விரவது செய்து
நரைதிரை கெடுதகை யதுஅரு ளினன் எழில்
வரை திகழ் மதில்வலி வலமுறை இறையே"

(சம்பந்தர்-திருமுறை-2.)

கண்ணுதல் யோகிருப்பக் காமன்நின்றிட வேட்கைக்கு
விண்ணுறு தேவராதி மெலிந்தமை ஓரார் மால்தான்
எண்ணிவேள் மதனை ஏவ எரிவிழித்து இமவான் பெற்ற
பெண்ணிணைப் புணர்ந்துயிர்க்குப் பேரின்பம் அளித்தது ஓரார்.

'பலவேறு வகைப்பட்ட அருள்புரி தொழிலும் அவ்வேடத்தை இன்றியமையாது' (சிவஞான முனிவர் உரை) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலன்களையும் நூல்கள் வேடராக உருவகஞ் செய்தலின் ஈண்டு 'பொறி வாயில் ஐந்து' அவித்த இறைவனும் உயிர்களின் பொருட்டு வேடன் வடிவங் கொண்டு இறைவியொடு கூடி உயிர்களுக்குப் போக விருப்பமுளதாகச் செய்தான்.

இறைவன் அம்மையொடு சேர்தல் உயிர்கள் போக நுகரற் பொருட்டே.

17-20 கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய வாகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்திரத் திருந்
துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்

**பதப்பிரிவு :**

கேவேடர் ஆகிக் கெளிறுஅது படுத்து
மாவேட்டு ஆகிய ஆகமம் வாங்கியும்
மற்று அவை தம்மை மகேந்திரத்து இருந்து
உற்ற ஐம் முகங்களால் பணித்து அருளியும்

**பொழிப்புரை :**

வலைஞர் வடிவம் பூண்டு உயிர்களின் பாசமாகிய கெளிற்று மீனை வலைவீசிப் பிடித்து வீழ்த்தியும் பெரிய

ஏடுகளில் அமைந்ததாகிய ஆகம நூல்களை விந்துவி னின்று மீட்டும் வசனங்களாகக் காரியப்படுத்தி அவற்றை மகேந்திர மலையில் எழுந்தருளியிருந்து, ஐந்து மந்திரங்களாலும் பொருந்தியுள்ள ஐந்து திருமுகங் களையுடைய சதாசிவ மூர்த்தியாக இருந்து அவ்வைந்து முகங்களாலும் மாணுக்கருக்குக் கற்பித்து ஆகம நூல் வழி நிற்கக் கட்டளையிட்டருளியும்.

**விளக்கம் :**

சிவபெருமான் தன்னுடைய ஐந்து திருமுகங்க ளாலும் இருபத்தெட்டு ஆகமங்களையும் பக்குவம் வந்த மக்களுக்கு உரைத்தருளினுர். இறைவனுக்கு ஐந்து திருமுகங்களும் ஐந்து மந்திரங்கள்.

**'' மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவமாகத்**
**தந்திரம் சொன்னவாறு இங்கென்னெனிற் சாற்றக் கேள்நீ**
**முந்திய தோற்றத்தாலும் மந்திர மூலத்தாலும்**
**அந்தமில் சத்தி ஆதிக் கிசைத்தலும் ஆகும் அன்றே ''**

**(சிவஞான சித்தியார் – சூ. 1. 59.)**

சிவபெருமான் மந்திர வடிவினன். ''மந்திர வடி வுள்ளும் பஞ்சப் பிரம வடிவைச் சிறந்தெடுத்தோதியது ஏனைய மந்திரங்களுக்கெல்லாம் முற்படத்தோன்றி முற் படக்கொண்ட வடிவாதல்பற்றி.''

(சிவஞான முனிவர் உரை)

ஐந்து முகங்கள் — ஈசானமுகம், தத்புருடமுகம், அகோரமுகம், வாமதேவமுகம், சத்தியோசாதமுகம். மாவேட்டு—மிகுந்த விருப்பம் எனவும் பொருள் கொள்வர். கெளிறது—அது பகுதிப் பொருள் விகுதி. மா ஏடு—உரிச் சொற்ருெடர்; பெரிய ஏடு.

மணிவாசக அடிகள் காமத்தினைப் பெரிய மீனுக மற்ருேரிடத்தும் உருவகஞ் செய்துள்ளார்:

"தனியனேன் பெரும் பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன்றின்றிக்
கனியை நேர் துவர் வாயார் என்னுங்காலாற் கலக்குண்டு
காமவான் சுறவின் வாய்ப்பட்டு
இனியென்னே உய்யுமா றென்றென்றெண்ணி
அஞ்செழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே நீ முதலந்தமில்லா மல்லற் கரைகாட்டி
யாட்கொண்டாய் மூர்க்கனேற்கே."

உலகப் பற்றுமிகுதியுடையார்க்கு நூலில் அறிவு செல்லாதாதலின் முதலில் பாசமாகிய மீனைப்பிடித்து வீழ்த்தி ஆகமம் அறிவுறுத்தார்.

நந்தியெம்பெருமான் கெளிற்று மீன் வடிவங் கொண்டு ஆகமங்களை விழுங்கிவைத்துக்கொண்டு கடலிற் கிடந்தார். சிவபெருமான் வலைஞனாக வந்து வலை வீசிக் கெளிற்றினைப் பிடித்து ஆகமங்களை எடுத்து அம்மைக்கு உபதேசித்தார். இவ்வரலாற்றினையும் இவ்வடிகள் குறிக்கும்.

கேவேடர் — மீன் வேட்டையாடும் வலைஞர். கெளிறு — ஒளி வீசுகின்ற பெரியதோர் மீன்.

(இது திருவிளையாடற் புராண வரலாறு)

**21 நந்தம் பாடியி னான்மறை யோனா**
**22 யந்தமி லாரிய னாயமர்ந் தருளியும்**

**பதப்பிரிவு :**

**நந்தம்பாடியில் நான்மறையோன் ஆய்**
**அந்தம் இல் ஆரியன் ஆய் அமர்ந்து**
**அருளியும்.**

**பொழிப்புரை :**

நந்தம்பாடி என்னும் திருப்பதியில் நான்கு வேதங் களையும் உணர்த்துபவனாகி முடிவில்லாது தொன்று தொட்டு வருகின்ற முதற்குரவனாய் வீற்றிருந்து திருவருள் பாலித்தும்.

**விளக்கம் :**

"அநாதி முத்த சித்துருவாகிய முதல்வன், பிரளயா கலர் சகலர் என்னும் பசுவர்க்கம் இரண்டும் முறையே முன்னிலையினும் படர்க்கையினும் நின்று உணர்த்தினு லன்றி உணரமாட்டாமையின், உயிர்வர்க்கங்கள் பொருளியல் புணர்ந்து வீடுபெறுமாறு வேதாகமங்களைக் கோவைப்படச் செய்தற் பொருட்டும் அதனைக் குருபரம் பரையின் கண் வைத்தற் பொருட்டும்" அருளுருவங் கொள்கின்முன்.

(சிவஞான முனிவர்)

"நமது குருமூர்த்தி எழுந்தருளிய ஊராகிய திருப் பெருந்துறையில் நான்கு வேதங்களை உணர்ந்தவனும் ஈறில்லாத மேலோனுகியும் விளங்குகின்ற சிவபெருமான் குருந்த மரத்தடியில் அமர்ந்து நமக்குத் தமிழ் ஆகமமாகிய சிவஞான போதத்தை உணர்த்தியருள் புரிந்தும்" எனவும் பொருள் கொள்ளலாம்.

23–26 வேறுவே றுருவும் வேறுவேறியற்கையு
நூறுநூ றுயிர மியல்பினதாகி
யேறுடை யீசனிப் புவனியை யுய்யக்
கூறுடை மங்கையுந் தானும் வந் தருளி

**பதப்பிரிவு :**

வேறு வேறு உருவும் வேறு வேறு இயற்கையும்
நூறு நூறு ஆயிரம் இயல்பினது ஆகி
ஏறு உடை ஈசன் இப்புவனியை உய்யக்
கூறு உடை மங்கையும் தானும் வந்து அருளி

**உரைநடை :**

இப்புவனியை உய்ய ஏறு உடை ஈசன் கூறு உடை மங்கையும் தானும் வந்து அருளி வேறு வேறு உருவும் வேறு வேறு இயற்கையும் நூறு நூறு ஆயிரம் இயல் பினது ஆகி.

**பொழிப்புரை :**

இந்த உலகத்திலுள்ள உயிர்கள் பிழைக்கும்படி, திருமாலாகிய காளையை ஊர்தியாக உடைய சிவபெருமான் தன்னுடைய ஒரு பாகத்தைத் தனக்கு உரிமையாக் கொண்ட தனது சிற்சத்தியாகிய உமையம்மையும் தானுமாக உருவத்திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து வெவ்வேறு வடிவங்களும் வெவ்வேறு குணங்களுமாக உரு, குணம் ஆகிய ஒவ்வொன்றும் கோடிக்கணக்கான தன்மைகளையுடையதாகி.

**விளக்கம் :**

சிவபெருமான் உயிர்களின் போக யோகங்களுக்காக மாறுபட்ட பலப்பல வடிவங்கள் கொள்வான் என்பதாம்.

"போகியாய் இருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியாய் யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகியா னுற்போற் செய்த வினையினை வீட்டல் ஓரார்
ஊகியா மூடர் எல்லாம் உம்பரின் ஒருவன் என்பர்"

(சிவஞான சித்தியார் சூ. 1.)

"முதல்வன் கொண்ட திருமேனிகளிற் சிலதிருமேனி போகவடிவமும், சிலதிருமேனி கோர வடிவமும், சில திருமேனி யோக வடிவுமாகக் கொண்டது, முறையே உயிர்கட்குப் போகம் புரிதற் பொருட்டும், வினையினை வீட்டுதற் பொருட்டும், யோக முத்தி உதவுதற் பொருட்டுமாம்." (சிவஞானசித்தியார் — சூ. 1, அதி. 2-50 சிவஞான முனிவர் உரை.)

உருவும் வெவ்வேறு இயல்பினது. இயற்கையும் வெவ்வேறு இயல்பினது, என ஒருமை வினைமுற்றை ஒவ்வொன்றோடுங் கூட்டுக.

புவனம் இடவாகு பெயராய் உலகிலுள்ள உயிர்களுக்காயது. இறைவன் இறைவியுடனன்றித் தானே தனியாக வரினும் அவன் எடுக்கிற வடிவம் சத்தியாலாதலின் எல்லா வடிவங்களும் சத்தியோடு கூடிய வடிவங்களாகக் கருதப்பெறுகின்றன.

" மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவம் ஆகும்
ஆய ஆணவம் அகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும்
நாயகன் எல்லாஞானத் தொழின்முதல் நண்ணலாலே
காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால் "
(சிவஞான சித்தியார் 1. அதி. 2-41)

அறவடிவான காளை மீது எழுந்தருளி வருபவன் என்பார் "ஏறுடை யீசன்" என்றார். "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதிமாண்பும் கேட்பான்புகில் அளவில்லை" ஆதலின் பலபல வேடம், நூறு நூறுயிரம் இயல்பினது எனமொழிந்தார்.

27 குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
28 சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்

**பதப்பிரிவு :**

குதிரையைக் கொண்டு குடநாடு அதன் மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தான் எழுந்தருளியும்

**பொழிப்புரை :**

திருப்பெருந்துறையிலிருந்து மேற்கு நாடாகிய மதுரைக்குக் குதிரைக் கூட்டங்களைத் திறமை பொருந்தச் செலுத்திக்கொண்டு வணிகக் குழுவினனாக எழுந்தருளி வந்தும்.

**விளக்கம் :**

மதுரை திருப்பெருந்துறையிலிருந்து மேற்கே இருக்கிறது. சதுர்பட — திறமை பொருந்த. குதிரையைச் செலுத்தும் திறனும் விற்குந் திறனும் நன்கு அறிந்தவன் என்பார் 'சதுர்படச் சாத்தாய் என்றார்.'

29 வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்

**பதப்பிரிவு :**

வேலம்புத்தூர் விட்டேறு அருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்

**பொழிப்புரை :**

வேலம்புத்தூர் என்னும் பதியில் உக்கிரகுமார பாண்டியனுக்கு வேற்படை கொடுத்து அருள்புரிந்து தன்னுடைய அழகு பொருந்திய திருமேனி விளக்கத்தைக் காண்பித்த தன்மையும்.

**விளக்கம் :**

உக்கிரகுமாரபாண்டியனுக்கு வேலும் வளையும் செண்டுங் கொடுத்தார் சோமசுந்தரக் கடவுள். அவர் உக்கிரகுமாரபாண்டியனை நோக்கி "மேருமலையும், இந்திரனும், கடலும் உனக்குப் பெரும் பகைவர். மேருமலை மிகவும் செருக்குக் கொள்ளும்; அம்மேரு மலையை இந்தச் செண்டால் அடிப்பாயாக. இந்த வளையைக்கொண்டு இந்திரன் முடிசிதறும்படி எறிவாயாக; கடலில் இந்த வேலை விடுவாயாக; செண்டு, வளை, வேல் இந்த மூன்று பொருள்களையும் வைத்துக் கொண்டு பகையை வென்று அரசாள்வாய்" எனக் கூறி வாழ்த்தியருளினர்.

"மைந்த கேட்டி இந்திரனுங் கடலுமுனக்குவான் பகையாம்
சந்த மேருத் தருக்கடையுஞ் சதவேள்விக்கோன் முடி சிதற
இந்த வளைகொண்டுஎறி, கடலில் இவ்வேல்விடுதி. யிச்செண்டால்
அந்தமேரு தனைப்புடையென் றெடுத்துக்கொடுத்தான் அவை மூன்றும்."

(திருவிளையாடற்புராணம் உக்கிரகுமாரபாண்டியனுக்கு வேல், வளை, செண்டு கொடுத்த படலம்)

விட்டேறு — வேற்படை, சதவேள்விக்கோன் — நூறு அசுவமேதம் செய்த இந்திரன்.

31 தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
32 விற்பொரு வேடற் கீந்த விளைவும்

**பதப்பிரிவு :**

தர்ப்பணம் அதனில் சாந்தம் புத்தூர்
வில்பொரு வேடற்கு ஈந்த விளைவும்

**உரை நடை :**

சாந்தம் புத்தூர் வில்பொரு வேடற்கு
தர்ப்பணம் அதனில் ஈந்த விளைவும்

**பொழிப்புரை :**

சாந்தம்புத்தூர் என்னும் திருப்பதியில் வில்லினால் போர்புரியும் வேடன் ஒருவனுக்கு அவன் வழிபட்ட படிக இலிங்கத்திலிருந்து அருள்புரிந்து அவன் வேண்டிய வாட்படையை அளித்த பயனும்.

**விளக்கம் :**

தர்ப்பணம்–கண்ணாடி; வேண்டுவார் வேண்டுவதே ஈவான் இறைவனாதலின் வேடனுக்கு அவன் தனக்கு வேண்டிய படையைக் கொடுத்தான்.

அதனில் -- அது பகுதிப் பொருள் விகுதி. இல் ஏழனுருபு.

**33 மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி**
**34 சொக்க தாகக் காட்டிய தொன்மையும்.**

**பதப்பிரிவு :**

**மொக்கணி அருளிய முழுத்தழல் மேனி**
**சொக்கது ஆகக் காட்டிய தொன்மையும்**

**பொழிப்புரை :**

கொள்ளுப்பையிலிருந்து அருள்புரியும் பொருட்டு, முற்றிலும் தீவண்ணனாகிய சிவபெருமான் தன்னுடைய நெருப்புருவினை மாற்றி அழகிய வடிவமெடுத்துக் காட்சி கொடுத்த பழமையும்.

**விளக்கம் :**

ஒரு குதிரை வணிகன் நாடோறும் சிவவழிபாடு செய்து அதன் பின்பே உணவருந்தும் கொள்கையனா யிருந்தான். ஒருநாள் அவன் மைத்துனன் ஒரு கொள்ளுப்பையை எடுத்து அதனை மணலினால் நிறைவித்து அதனையே சிவலிங்கமாக வைத்துப் பூசை

செய்யச் சொன்னுன். வணிகன் அதனையே சிவலிங்கமாக வைத்து வழிபட்டான். சிவபெருமான் அதில் அழகிய வடிவத்துடன் தோன்றி அவ்வணிகனுக்குக் காட்சி கொடுத்தார்; அழலுரு, மக்கள் அண்ணுதற்கு முடியாததாதலின் அவ்வுருவினைக் கரந்து அழகிய கோலத்துடன் தோன்றினுர். வணிகனது மைத்துனன் கொள்ளுப்பையை அசைத்து எடுத்தான்; எடுக்க முடியவில்லை. அந்தப் பையானது பாதாளம் வரை ஊடுருவிச் சென்று சிவலிங்கமாகவே ஆகிவிட்டது. அந்தக் கொள்ளுப்பையில் தோன்றிய சிவபெருமான் மொக்கணீசர் எனப் பெயர் பெற்ருன்.

"ஏத்து சிவபத்தி யாளெரு செட்டிமுன் ஈசுரனைத்
தோய்த்து முழுகித் தொழஎழ ஆங்கொரு சூழ்ச்சிகற்ருேன்
பூத்த வணக்குடக் கோட்டூரில் மொக்கணியைப் புதைக்க
வாய்த்த சிவலிங்கம் ஆனதுவுங் கொங்குமண்டலமே"

(கொங்குமண்டல சதகம் 24)

சொக்கது — குறிப்புவினையாலணையும் பெயர். தீவண்ணம் இறைவனுடைய தொன்மைக் கோலமாகும். பேரொளியுடைமையும் மாசினைச் சுட்டு ஒழிக்கும் தன்மையும் பற்றி இறைவனுக்குத் தீவண்ணம் இயல்பாயிற்று.

"மொக்கணியாகிய வெந்த கொள்ளடங்கிய பையுடன் குதிரைச் சேவகனுக வந்து, முற்றிலும் தீவண்ணனுகிச் சிவபெருமான் கொள்ளுப் பையினைக் குதிரைக்கு மாட்டி அழகான திருமேனியனுகப் பாண்டியனுக்குக் காட்சி கொடுத்த பழமையும்" எனவும் பொருள் கொள்ளலாம்.

**35 அரியொடு பிரமற் களவறி யொண்ணுன்**
**36 நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்**

**பதப்பிரிவு :**

**அரியொடு பிரமற்கு அளவு அறி ஒண்ணுன்**
**நரியைக் குதிரை ஆக்கிய நன்மையும்.**

**பொழிப்புரை :**

திருமாலாலும் நான்முகனாலும் அடிமுடி எல்லை காண முடியாதபடி உயர்ந்த அழலுருவாய் நின்ற சிவபெருமான் மாணிக்கவாசகருக்காக நரிகளைக் குதிரைகளாக மாற்றிய நற்செயலும்.

**விளக்கம் :**

அறி — முதனிலைத் தொழிற்பெயர்.
ஒண்ணான் – எதிர்மறை வினையாலணையும் பெயர்.

> " இந்த வாமொலி கேட்டிரு கண்தழல்
> சிந்த ஆகஞ் சிறுவெயர்ப் பெய்திட
> வந்த மாறன் வெகுட்சிகண் டண்ணலார்
> வந்த மாய நரிப்படை மாற்றினர்."

–திருவாதவூரடிகள் புராணம்.
(குதிரையிட்ட சருக்கம் 56)

அரியும் பிரமனும் அறிய ஒண்ணமை — திருமால் பன்றி வடிவெடுத்து நிலத்தைக் கீண்டு சென்றும் திருவடியைக் காண முடியாதவனானான்; "பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்," நான்முகன் அன்னமாய் விண்ணிற் பறந்தும் திருமுடியைக் காணாதவனானான்.

> " அலரவனும் மாலவனும் அறியாமே அழலுருவாய்
> நிலமுதற்கீழ் அண்டமுற நின்றதுதான் "

(திருவாசகம்–திருச்சாழல்)

> " மாலறியா நான்முகனுங் காணா மலை."

(திருவாசகம் - திருவெம்பாவை]

ஆக்கிய — பிறவினைப் பெயரெச்சம்.

**37 ஆண்டுகொண் டருள வழகுறுதிருவடி**
**பாண்டி யன்தனக் குப்பரி மாவிற்**
**றீண்டு கனக மிசையப் பெறாஅ**
**தாண்டா னெங்கோ னருள்வழி யிருப்பத்**
**41 தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்**

**பதப்பிரிவு :**

ஆண்டு கொண்டு அருள அழகு உறு திருவடி
பாண்டியன் தனக்குப் பரிமா விற்று
ஈண்டு கனகம் இசையப் பெறுஅது
ஆண்டான் எம்கோன் அருள் வழி இருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்.

**உரைநடை :**

அழகுஉறு திருவடி ஆண்டு கொண்டு அருள பாண்டியன் தனக்குப் பரிமா விற்று ஈண்டு கனகம் இசையப் பெறுஅது ஆண்டான் எம்கோன் அருள்வழி இருப்பத் தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்.

**பொழிப்புரை :**

(சிவபெருமான்) அருளாகிய அழகு மிகுந்த தனது திருவடிகளைக் காட்டிப் பாண்டியனை அடிமையாக ஆட்கொண்டருளும் பொருட்டு அந்தப் பாண்டியனுக்குக் குதிரைகளை விலைக்குக் கொடுத்தான். குதிரைகளை விற்றுத் திரண்ட பொன்னையும் பொருளையும் விலையாகக் கொள்ள உடன்பட்டுப் பெற்றுக் கொள்ளாமல் என்னை அடிமை கொண்டான். எம் தலைவனாகிய சிவபெருமான் என்னை ஆட்கொண்டு, நான் திருவருள் நெறியில் அடங்கியிருப்பதற்கு என் உள்ளத்தே தூண்டப் பெற்ற ஞானச்சுடர் தோன்றும்படி செய்த பழமையும்.

**விளக்கம் :**

ஈண்டுதல் — திரளுதல். "ஈண்டிய மழையென" — "திரண்ட முகிலெனக் கருதி". (புறநானூறு: 17) பெறுஅது — செய்யுளிசை அளபெடை.

"உடம்பெனும் மனையகத்து உள்ளமே தகழியாக
மடம்படும் உணர் நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர்காளை தாதை கழலடி காணலாமே"

(திருநாவுக்கரசர் தேவாரம் - நான்காந் திருமுறை)

42 அந்தணனாகி யாண்டுகொண் டருளி
யிந்திர ஞாலங் காட்டிய வியல்பும்

**பதப்பிரிவு :**

அந்தணன் ஆகி ஆண்டு கொண்டு அருளி
இந்திர ஞாலம் காட்டிய இயல்பும்.

**பொழிப்புரை :**

அழகிய தண்ணளியுடைய ஆசிரியனாகி அடியேனை அடிமையாக ஏற்றுக்கொண்டு அருள் புரிந்து உடனே உருக்கரந்து மறைந்ததாகிய இந்திர சால வித்தையைக் காட்டிய தன்மையும்

**விளக்கம் :**

திருப்பெருந்துறையில் சிவபெருமான் அடிகளுக்கு ஆசானாக எழுந்தருளி வந்து சிவஞான போதம் உபதேசித்து உடனே மறைந்தமை இந்திரச் சூழ்ச்சியாக இருந்தது என்பதாம். சாலம்– ஞாலம், வலை. இந்திரனுடைய சூழ்ச்சியாகிய திடீர்த் தோற்றமும் மறைவுமாகும்.

44 மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்.

**பதப்பிரிவு :**

மதுரைப் பெருநன் மாநகர் இருந்து
குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும்.

**பொழிப்புரை :**

மதுரையாகிய பெரிய நல்ல சிறந்த திரு ஊரின்கண் எழுந்தருளியிருந்து சவுந்திர சாமந்தன் என்ற சேனைத் தலைவன் பொருட்டாகக் குதிரை வீரனாக வந்த கோட்பாடும்.

**விளக்கம் :**

அனந்த குணச் செழியன் என்ற பாண்டியன் அரசாண்டிருந்தபோது சவுந்தரசாமந்தன் என்பவன் தானைத் தலைவனாக இருந்தான். அரசன் பொன்னறை

திறந்து பொருள் எடுத்துக் கொடுத்துச் சாமந்தனைச் சேனையைப் பெருக்கிக்கொள்ளச் சொன்னான். சாமந்தன் சிவனடியாரைச் சிவனெனவே வழிபடுஞ் சீலமுடையவனாதலின் அரசனுடைய பொருளையெல்லாம் சிவபெருமானுக்கும் அவனடியார்க்குமாகச் செலவிட்டான். அரசன் இதனைத் தெரிந்தான்; சேனைத் தலைவனை அழைத்துச் சேனையைக் கொண்டுவரும்படி கட்டளையிட்டான். சாமந்தன் வெள்ளி மன்றவன் அடிக்கீழ் வீழ்ந்து "வள்ளலே! அரசன் ஈந்த, குன்றுறழ் நிதியமெல்லாங் கொண்டெனைப் பணிகொண்டாயே, வன்றிறற் சேனையீட்டும் வண்ணம்யாது" என்று நின்றான். வெள்ளியம்பலவன் விண்ணிடைத் தோன்றி "நாளைச் சேனையோடு வருவேன்" என்று தெய்வ வாக்கு மொழிந்தான். மறுநாள்,

> "வார்கெழு கழற்கா னந்தி மாகாளன் பிருங்கி வென்றித்
> தார்கெழு நிகும்பன் கும்போ தரன்முதற் றலைவர்யாரும்
> போர்கெழு கவசந் தொட்டுப் புண்டாநுதலிற் றீட்டிக்
> கூர்கெழு வடிவா ளேந்திக் குதிரைச் சேவகராய்ச்சூழ"

(திருவிளையாடற் புராணம்: மெய்க்காட்டிட்ட படலம்-25)

> "கொற்றப்போர் விடையைத் தானே குரங்குளைப் பரியா
> மேற்கொண்
> டொற்றைச் சேவகராய் மாறியாடிய ஒருவர் வந்தார்"

(மெய்க்காட்டிட்ட படலம்-26.)

சேவகன் — வீரன்.

46 **ஆங்கது தன்னில் அடியவட் காகப்**
**பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்.**

**பதப்பிரிவு :**

**ஆங்கு அது தன்னில் அடியவட்கு ஆகப்**
**பாங்குஆய் மண் சுமந்து அருளிய பரிசும்.**

**பொழிப்புரை :**

குதிரைச் சேவகனாக வந்தது போலவே அந்த மதுரை மாநகரத்தில் மாதவ நரைமுதாட்டியாகிய வந்தி

என்னும் பிட்டு விற்றுண் கிழவிக்காக வைகைக் கரையை அடைக்க, 'அடியார்க்கெளியன்' என்ற முறையில் கூலியாளாய் மண் சுமந்து அருள் புரிந்த பண்பும்.

**விளக்கம்**

ஆங்கு - வினையுவமை, பாங்கு – உரிமை, முறை; குதிரை வராததினால் மாணிக்கவாசகரைச் சிறையிலடைத்தான் பாண்டியன். இறைவன் வைகையை வெள்ளப் பெருக்கெடுக்கச் செய்தான். கரைகள் உடைபட்டன. மதுரை மக்கள் உடைப்படைப்பதற்குக் கரையினைப் பங்கு வைத்துக் கொடுத்தான் பாண்டியன். வந்தி என்னும் சிவனடியாள் பங்கு, ஆளின்மையால் அடைபடாதிருந்தது. வந்தி வருந்தினாள். சிவபெருமான் வந்தியின் இடர் தீர்க்கும் பொருட்டுக் கூலியாளாய் வந்து வந்தியின் பாகத்தை மண் சுமந்து கொட்டித் திருவிளையாடல் புரிந்து அடைத்தான்.

**48 உத்தர கோச மங்கையு ளிருந்து**
**வித்தக வேடங் காட்டிய வியல்பும்.**

**பதப்பிரிவு :**

**உத்தர கோச மங்கையுள் இருந்து**
**வித்தக வேடம் காட்டிய இயல்பும்.**

**பொழிப்புரை:**

திருஉத்தரகோச மங்கை என்னும் பதியில் எழுந்தருளியிருந்து மெய்யுணர்வு உணர்த்தும் ஞானாசிரியக் கோலத்தைக் காட்டியருளிய தன்மையும்.

**விளக்கம் :**

திருஉத்தரகோசமங்கையில் சிவபெருமான் ஞானாசிரியனாக எழுந்தருளி அங்குத் தவம் புரிந்த முனிவர்களுக்கு ஞான நூலாகிய ஆகமத்தை உபதேசித்தருளினான். அந்த ஞானகுரவ வடிவத்தை மணிவாசகருக்குக் காட்டினான் சிவபெருமான்.

50 பூவண மதனிற் பொலிந்திருந்தருளித்
51 தூவண மேனி காட்டிய தொன்மையும்.

**பதப்பிரிவு :**

**பூவணம் அதனில் பொலிந்து இருந்து அருளித்**
**தூவண மேனி காட்டிய தொன்மையும்.**

**பொழிப்புரை :**

திருப்பூவணம் என்னும் பதியில் அழகு விளங்கும்படி எழுந்தருளியிருந்து அருள்புரிந்து தூய்மையான பொன்வண்ண வடிவத்தைக் காட்டிய பழமையும்.

**விளக்கம் :**

திருப்பூவணத்தில் பொன்னனையாள் என்ற சிவ வேடத்தரசி ஒரு பெண்மணி இருந்தாள். அவள் இறைவனுடைய திருவுருவத்தைப் பொன்ஞல் அமைத்து வழிபட வேண்டும் என்ற விருப்பங் கொண்டாள். இறைவன் சித்த வடிவங்கொண்டு அவள் வீட்டுக்குச் சென்று அவளிடமிருந்த இரும்புத் துண்டுகளை வாங்கி அவைகளை மருந்து பூசித் தங்கமாக்கிக் கொடுத்தான். அவள் தன் விருப்பப்படி பொன்னுருவம் அமைத்து அதில் சிவபெருமானை அன்பிஞல் விளங்கச் செய்து வழிபாடாற்றிஞள்.

சிவபெருமான் திருவுருவம் பொன்ஞலாக்கப்படின் அழகு ஒழுகுமாதலின் பொலிந்திருந்தருளியென்ருர். நாம் பூசை செய்கின்ற திருவுருவத்தில் எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவனை விளக்கத்தோடு எழுந்தருளியிருக்க வேண்டிக்கொண்டு பூசையைத் தொடங்குதல் விதியாதலின் பொலிந்து இருந்து அருளி என்ருர்.

"பூவணமன்ன பொன்னே"

(திருக்கோவையார் 305)

"பொன்மாப் புரிசைப் பொழில்
திருப்பூவணம் அன்ன பொன்னே"

(திருக்கோவையார் 308)

இறைவன் மணிவாசகருக்கும் பொன்னூர் மேனியனாய்ப் பொலிந்த காட்சியருளினான். அத்திருமேனி அருள் பூத்து விளங்கலின் தூவண்ணத்ததாய்ப் பொலிவுற்றது.

52 **வாத வூரினில் வந்தினி தருளிப்**
**பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்.**

**பதப்பிரிவு :**

**வாத ஊரினில் வந்து இனிது அருளிப்**
**பாதச் சிலம்பு ஒலி காட்டிய பண்பும்.**

**பொழிப்புரை :**

திருவாதவூரின்கண் எழுந்தருளி வந்து இனிமை யாக அருள் புரிந்து திருவடியில் அணிந்துள்ள திருச் சிலம்பின் ஓசையை நலம்பெறச் செவியிற் புலப்படுத்திய தன்மையும்.

**விளக்கம் :**

திருச்சிலம்பின் ஒலியானது ஏனைய ஓசையெல்லாம் அற்ற இடத்தே நுணுக்கமாகக் கேட்கப்படுவதாகும். அந்த நாதத்தின் வழியாகத் தில்லையம்பலவன் உயிரின் அறிவினில் விளங்குவான். சிலம்பொலி அம்பலவன் ஒளிக் காட்சிக்கு ஏதுவாகும்.

'' ஓசையெலாம் அற்றால் ஒலிக்குந் திருச்சிலம்பின்
ஓசை வழியே சென்றொத் தொடுங்கில் – ஓசையினில்
அந்தத் தானத்தான் அரிவையுடன் அம்பலத்தே
வந்தொத்தான் அத்தான் மகிழ்ந்து ''

(திருக்களிற்றுப் படியார்–33)

'' திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற. ''

(திருவுந்தியார்–17.)

மாணிக்கவாசக அடிகள் இத் திருச்சிலம்பொலி கேட்க ஆராத ஆசைப்படுகிறார்:—

"சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந்தம் பாடிப் பூவல்லி கொய்யாமோ"

(திருவாசகம் - திருப்பூவல்லி-18.)

சேரமான் பெருமாள் நாயனாருக்கு அம்பலவர் நாடோறும் பூசை முடிவிற் சிலம்பொலி கேட்பித்தார்.

"வாசத் திருமஞ் சனம்பள்ளித் தாமஞ் சாந்தம் மணித்தூபம்
தேசிற் பெருகுஞ் செழுந்தீபம் முதலாயினவுந் திருவமுதும்
ஈசற் கேற்ற பரிசினால் அருச்சித் தருள எந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலி
அளித்தார்.'

(திருத்தொண்டர் புராணம் -
கழறிற்றறிவார் புராணம்-24.)

54 திருவார் பெருந்துறைச் செல்வனாகிக்
55 கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்

**பதப்பிரிவு:**

திரு ஆர் பெருந்துறைச் செல்வன் ஆகிக்
கரு ஆர் சோதியில் கரந்த கள்ளமும்

**பொழிப்புரை:**

மெய்ம்மையைக் கண்டாரால் விரும்பப்படும் தன்மையாகிய திருவருள் நோக்கம் நிறைந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்ற பேரின்பச் செல்வம் வழங்கும் அருட்செல்வன் ஞானகுரவனாக எழுந்தருளித் தோன்றிப் பின் உலகிற்கு மேலான முதற்காரணமாகிய விந்து ஒளியில் மறைந்த மாயச்செயலும்.

**விளக்கம்:**

திரு—கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம். (திருக்கோவையார் முதற்செய்யுள் உரை) கரு—தனக்கோர் காரணமின்றித் தானே காரியப்பொருள் யாவைக்குந் தோற்றிடமாகிய சுத்தமாயை. இறைவன் மாணிக்க

வாசகருக்குக் குருவாய் எழுந்தருளி உபதேசித்துப் பின் ஒளியில் ஒளித்தான். ஆதலின் 'சோதியிற் கரந்த கள்ளமும்' என்றார். ஆர்தல் — பொருந்துதல். "செல்வன் கழலேத்துஞ் செல்வம் செல்வமே" என்பது தேவாரத்திற் கூறப் பெறுகிறது. பழைய தமிழ் நூலாகிய புறநானூறும் "முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே" எனக் கூறுகின்றது.

இருளிற் கரந்து செல்வான் உலகிற்கள்ளன்-உள்ளங் கவர் கள்வனாகிய இறைவன் ஒளியில் ஒளிப்பான். கருஆர்சோதி—பிறவிக்கருவையருந்துஞ் சோதி எனவும் பொருள் கூறலாம். ஆர்தல்—உண்ணுதல்.

**56 பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்**
**பாவ நாச மாக்கிய பரிசும்**

**பதப்பிரிவு :**

**பூவலம் அதனில் பொலிந்து இனிது அருளிப்**
**பாவ நாசம் ஆக்கிய பரிசும்.**

**பொழிப்புரை :**

திருப்பூவலம் என்னும் திருப்பதியில் விளங்கித் தோன்றி இனிதாக அருள் புரிந்து தன்னை வழிபடும் அடியார்களுடைய தீவினையை ஒழித்து நன்மையை உளதாகச் செய்த தன்மையும்.

**விளக்கம் :**

பூவலம் என்னும் பெயரால் இப்பூமியிலுள்ள பதிகளையெல்லாம் வலம் வந்த பயனைத் தர வல்லது அப்பதி என்பது பெற்றும். அடியார் பாவங்களை அழித்தற்குக் கோரவடிவங் கொள்ளாது எவரும் அஞ்சாது வழிபடும் இனிய திருமேனி கொண்டு நன்னெறியருளிப் பாவந்தீர்ப்பான் இறைவன் என்பதாம்.

**58 தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து**
**நன்னீர்ச் சேவகனாகிய நன்மையும்**

*பதப்பிரிவு :*

**தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து**
**நன்னீர்ச் சேவகன் ஆகிய நன்மையும்.**

*பொழிப்புரை :*

தண்ணீர்ப் பந்தல் ஒன்றைத் தன்னுடைய அன்பனாகிய பாண்டியனுடைய வீரர்கள் வெற்றி யடையும்படி அமைத்து நல்ல தண்ணீர் கொடுத்துத் தாகந்தணிக்கும் பணியாளன் ஆகிய பண்பும்.

**விளக்கம் :**

பந்தர் — ஈற்றுப்போலி. நன்னீர்ச் சேவகன் — நல்ல நீர்மையுடைய பணியாளன். சிவபெருமானிடத்துப் பேரன்பு பூண்ட பாண்டியன் ஒருவன் தன் தம்பியுடன் போர் புரிந்தான். தம்பி சோழன் மகளை மணந்து கொண்டு சோழனைத் துணையாகக் கொண்டு அண்ண னுடன் போர் புரிந்தான். அப்பொழுது அருங் கோடையாக இருந்தது.

> "மாநிலங் காவல் பூண்ட மன்னவர் இருவர் தங்கள்
> தானையும் உடைந்து தண்ணீர் நசை சுடச்சார் பிற்றன்றே"

(திருவிளையாடற் புராணம் –
**தண்ணீர்ப் பந்தர்வைத்த படலம்-27)**

அண்ணனாகிய இராசேந்திர பாண்டியன் சிவபெரு மானுடைய துணையை நாடச் சிவபெருமான் தண்ணீர்ப் பந்தல் அமைத்துத் தாகத்தினால் நாவரண்ட போர் வீரருக்குப் பணியாளாக இருந்து தண்ணீர் கொடுத்தான், சிவபெருமான் நான்குவேதங்களையும் கால்களாக நாட்டித் தண்ணீர்ப் பந்தல் அமைத்தான்; அந்த மறைப்பந்த லுக்குள் இருந்துகொண்டு தன்னுடைய சடையிலுள்ள கங்கை நீரை ஒரு புழையும் ஓரிலக்கம் புழையும் முடைய கமண்டலத்திற் பெய்து தண்ணளி பொருந்திய முகத்தோடு வீரர் யாவர்க்கும் தண்ணீர் கொடுத்துத் தாகந்தணித்தான்.

"ஆரானை
மூண்டு பொருந் தென்னன் முனைப்போர்க்குத் தண்ணீர்தந்
தாண்ட கருணை அறம் போற்றி"
(திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா-40)

"அருமறை யகத்துள் நின்றுங்கருந்தவ ராகி வேணிப்
பொரு புனல் பூரித் தாங்கோர் புண்ணியச் சிரகந்தாங்கி
ஒருவருக் கொன்றே யாகி இலக்கருக் கிலக்க மாகித்
தருகுறும் புழையால் வாக்கித் தணித்தனர் தண்ணீர்த்தாகம்."
(திருவிளையாடற் புராணம்-தண்ணீர்ப் பந்தல்
வைத்த படலம் 32

60 விருந்தினனாகி வெண்கா டதனிற்
61 குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்

**பதப்பிரிவு :**

**விருந்தினன் ஆகி வெண்காடு அதனில்**
**குருந்தின் கீழ் அன்று இருந்த கொள்கையும்**

**உரை நடை :**

அன்று வெண்காடு அதனில் விருந்தினன் ஆகிக் குருந்தின் கீழ் இருந்த கொள்கையும்

**பொழிப்புரை :**

அன்றைக்குத் திருவெண்காடு என்னுந் திருஊரில் குருந்த மரத்தடியில் புதியவனாக வீற்றிருந்த முறையும்.

**விளக்கம் :**

விருந்தினன் — புதுமைப் பண்பினன், இறைவன் யாவர்க்குந் தொன்மையனாக இருந்தாலும் புதியவன் போலத் திருவெண்காட்டில் குருந்த மரத்தடியில் எழுந்தருளியிருந்தான்.

திருவெண்காட்டில் குருந்தின் கீழ் ஆசானாக எழுந்தருளி மாணவர்க்கு மெய்யறிவு அறிவுறுத்துங்கால்

புதியவனாகத் தோன்றினான். அவன் முன்பு திருப்பெருந் துறையில் குருந்த மரத்தடியிலிருந்து மாணிக்கவாசக ருக்கு உபதேசித்தவனாகவே இருந்தாலும் திருவெண் காட்டில் புதியவன் போலவே தோன்றினான். 'யாண்டும் தம் முதல்தானே குருவுமாய் எழுந்தருளும்' என்பதாம்.

**62 பட்டமங்கையிற் பாங்கா யிருந்தங்**
**63 கட்டமா சித்தி யருளிய வதுவும்**

*பதப்பிரிவு:*

**பட்டமங்கையில் பாங்காய் இருந்து அங்கு**
**அட்டமாசித்தி அருளிய அதுவும்.**

*பொழிப்புரை :*

பட்டமங்கை என்னும் திருஊரில் உரிமையுடன் எழுந்தருளியிருந்து அவ்விடத்தே எண் பெருஞ்சித்தி களையும் இயக்கிமார் அறுவருக்கு உணர்த்தியருளிய அத்தன்மையும்.

**விளக்கம் :**

எண் பெருஞ்சித்திகள்

1. அணிமா — நுண்ணிய அணுவாதல்,
2. மகிமா — பெரிதாதல்
3. இலகிமா—நிறையிற் கனமின்றி இலகுவாதல்,
4. கரிமா — பெரியமலை போல வலிதாதல்,
5. பிராத்தி — எல்லா இடங்களுக்கும் நினைத்த வாறே சென்று வருதல்,
6. பிராகாமியம் — வேண்டிய உருவெடுத்தலும், வேண்டிய உடலுட்புகுதலும், எல்லாவற்றையும் ஒருங்கு காண்டலும் ஆகும்,
7. ஈசத்துவம் — நாள் கோள் முதலியவற்றை ஈசன் போல ஏவுதல்,
8. வசித்துவம்—யாவற்றையும் தன்வயப்படுத்தல்.

பட்டமங்கை — பாண்டி நாட்டிலுள்ள ஒரு சிவத் தலம். சரவணத்தில் ஆறுருவாய்த் தோன்றிய முருக னுக்குப் பால் கொடுத்த கார்த்திகைப் பெண்கள் அறுவரும் சிவபெருமானிடத்தில் எண் சித்திகளையும் கேட்டுப் பின் மனத்தில் அமைக்காது மறந்தனர். ஆதலின் அவர்கள் பட்டமங்கையில் ஓர் ஆலமரத்தின் கீழ் அஞ்ஞானப் பாறையாக ஆயிரம் ஆண்டுகள் தவம் கிடந்தனர். பின் சோமசுந்தரக் கடவுள் இவர்கள் மேல் அருள் கூர்ந்து அருட்குரவனாக அங்கு எழுந்தருளினார். மாதர்கள் பாறையுரு நீங்கிப் பெண்ணுருப் பெற்றனர். அவர்கள் தலையினை அங்கையால் தொட்டு அவர்களைப் பக்குவப்படுத்தி அவர்களுக்கு எண் சித்திகளையும் அறிவுறுத்தினான் பெருமான்.

(திருவிளையாடற் புராணம்: அட்டமாசித்தி
உபதேசித்த படலம்)

"மைதீரப்
பட்டமங்கைப் பாறை உரு நீத்தாறு பைங்தொடியார்க்கு
அட்டமாசித்தி ஈந்த அருள் போற்றி."

(திருவிளையாடற் புராணம்: போற்றிக்
கலிவெண்பா-38.)

64 வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
65 காடது தன்னில் கரந்த கள்ளமும்

**பதப்பிரிவு :**

**வேடுவன் ஆகி வேண்டுஉருக் கொண்டு**

**காடுஅது தன்னில் கரந்த கள்ளமும்.**

**உரைநடை :**

வேண்டு உருக்கொண்டு வேடுவன் ஆகிக் காடுஅது தன்னில் கரந்த கள்ளமும்

**பொழிப்புரை :**

சிவபெருமான் தான் விரும்பிய வடிவம் எடுத்துக்

கொள்வானுதலின் வேடன் ஆகிக் காட்டில் மறைந்து கொண்ட வஞ்சமும்.

**விளக்கம் :**

சோழன் பாண்டியனோடு போருக்கு வந்தான். பாண்டியன் சோமசுந்தரக் கடவுளிடத்தில் இதனை முறையிட்டான். சோமசுந்தரக்கடவுள் போரில் வந்து துணை புரிவதாக அருளினான். போர் நடக்கும்போது சோமசுந்தரக் கடவுள் ஒரு வேடன் உருவந்தாங்கிக் குதிரையூர்ந்து வந்து சோழன் ஊர்ந்து வருங் குதிரையின் முகத்தில் ஒரு வேற்படை விடுத்தான். ''உன்னைப் பிடிப்பேன்'' என்று வேடனைப் பின் தொடர்ந்தான் சோழன். இறைவனும் அவனுக்குத் தோற்று ஓடுவான் போல அஞ்சி ஓடும் உரு ஒன்றெடுத்துப் பரியினைச் செலுத்தி மதுரை நோக்கிச் சென்றான். இறைவன் மதுரைக்கு மேற்றிசையிலுள்ள ஒரு குளத்திற் குதித்து மறைந்தான். சோழனும் குதிரையோடு குளத்தில் விழுந்து மாண்டான்.

உரு—அச்சம்; "உரு உட்காகும்"

(தொல்—சொல் : உரி 4)

**66 மெய்க் காட்டிட்டு வேண்டுருக் கொண்டு**
**67 தக்கா னொருவ னாகிய தன்மையும்,**

**பதப்பிரிவு :**

**மெய்க் காட்டிட்டு வேண்டு உருக் கொண்டு**
**தக்கான் ஒருவன் ஆகிய தன்மையும்.**

**பொழிப்புரை :**

வெவ்வேறு நாட்டுச் சேனுவீரரையும் அவரவர் உருவத்திற் காட்டித் தானும் சேனைத் தலைவனாதற்கு வேண்டிய வடிவினை எடுத்துக்கொண்டு தகுந்த குதிரை வீரரில் ஒருவனாகத் தோன்றிய இயல்பும்.

**விளக்கம் :**

சேதிராயன் என்னும் வேடர் தலைவன் பாண்டியன் மேல் படையெடுத்து வந்தான். பாண்டியன் தன்

சேனைத் தலைவனாகிய சுந்தர சாமந்தனை அழைத்து 'நீ பண்டாரத்தைத் திறந்து வேண்டிய பணம் எடுத்துக் கொண்டு போய்ச் சேனைவீரரைப் பெருக்குக' என்றான். சாமந்தன் வேண்டிய பொருள்களை யெல்லாம் எடுத்து வந்தவன் சோமசுந்தரக் கடவுளை வணங்கி அந்தப் பணம் முழுதுஞ் சிவனடியார்க்கு அமுதருத்துவதிற் செலவழித்தான். அரசன் இதனை யறிந்து சாமந்தனை அழைத்துச் சேனையை மறுநாட் காலை கொண்டு வரும்படி கூறினான். சாமந்தன் யாது செய்வதெனத் திகைத்துச் சோமசுந்தரக் கடவுளை அடைந்து தன் குறையை எடுத்துரைத்தான். வான அருளொலி ஒன்று அடியவர் குறைவு தீர்த்து ஆண்டருள்வதே விரதமாய்ப் பூண்ட ஆலவாயப்பன் அருளால் 'சூழ்ந்தெழு சேனையோடுந் தோற்றுதும் நாளை, நீயும் அரசவை எய்துவாய்' என முழங்கிற்று. சாமந்தன் உவகை கொண்டான். மறுநாள் மறைகள் தேருச் சிவபரஞ் சுடர்ப் பெருமான் அன்பன் பொருட்டு ஒரு வடிவங் கொண்டு பல நாட்டுச் சேனைகள் சூழக் குதிரைச் சேவகனாய் வந்தான். மாறியாடிய ஒருவர் ஒற்றைச் சேவகனாய்ப் பரிமேற்கொண்டு வந்து, கையிற் பொற் பிரம்பு கொண்டு சேனைவீரரை அணி அணியாக நிறுவி, இவரிவர் இவ்விந்நாட்டவர் என அவரவர் உருக்காட்டி அறிவித்தான்.

"கேகயர்க ளாலிவர்கள் கேழ்கிளர் மணிப்பூண்
மாதர்க ளாலிவர் மராடரிவர் காஞ்சி
நாகரிக ராலிவர்கள் நம்முடைய நாட்டோர்
ஆகுமிவர் தாமென மெய்க்காட்டி அறிவித்தான்"

(திருவிளையாடற் புராணம் –
மெய்க்காட்டிட்ட படலம்-33)

"முரசதிர் அனிகம் நோக்கி முகமலர்ந் துவகைபூத்த
அரசனும் அனிக வேந்தற் களவில்சீர்த் தலைமையோடும்
வரிசைகள் மிதப்ப நல்கி வந்துமெய்க் காட்டுத்தந்து
பரசிய பதாதி தத்தம் பதிபுகச் செலுத்து கென்றான்"

(திருவிளையாடற் புராணம் –
மெய்க்காட்டிட்ட படலம்–38)

"அறைந்தவார் கழற்காற்சேனை காவலன் அனிகந் தத்தஞ்
சிறந்த சேணாட்டிற் செல்லச் செலுத்துவான் போன்றுநிற்ப
நிறைந்தநான் மாடக்கூடல் நிருத்தன் அந்நிலை நின்றாங்கே
மறைந்தனன் மனித்தவேடங் காட்டிய மறவரோடும்"

(திருவிளையாடற் புராணம்-
மெய்க்காட்டிட்ட படலம்–39)

68 ஓரி யூரி னுகந்தினி தருளிப்
69 பாரிரும் பாலக னாகிய பரிசும்

**பதப்பிரிவு :**

ஓரி ஊரின் உகந்து இனிது அருளிப்
பார் இரும் பாலகன் ஆகிய பரிசும்

**பொழிப்புரை :**

ஓரி என்னும் திருப்பதியில் (கௌரி யென்னும் சைவப் பெண்மணியை ஆட்கொள்வதற்கு) விரும்பி இனிமையாக அருள்புரிந்து இவ்வுலகத்திற் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமான் சிறிய பசுங் குழவியாகி வந்த அருட் பண்பும்.

**விளக்கம் :**

மதுரையில் சைவமறையவன் ஒருவனிருந்தான். அவனுக்குக் கௌரி என்றொரு பெண்மகளிருந்தாள். அவளுக்கு மணப் பருவம் வந்ததும், அவன் அவளை ஒரு வைணவப் பிச்சைக்காரனுக்கு மணஞ்செய்து கொடுத்தான். கௌரி சிவவேடத்தில் விருப்பமிக்கவள்; சிவனடியாரைக் கண்டு அவர்களைச் சிவனென வழிபடுஞ் சீலமுடையவள்; சிவனடியாரைக் காணாது தவித்துக் கொண்டு கணவன் வீட்டில் வாழ்ந்தாள்.

"உள்மாசு கழுவுவதும் நீறென்றே உபநிடதம் உரைப்பக் கேட்டும்
மண்மாசு படப்பூசும் வடிவுடையார் அகன்றதற்பின் மனையில் வைகும்
பெண்மாசு கழியஒரு சிவனடியார் தமைக்காணப் பெறுமல் இன்று என்
கண்மாசு படுவதெனக் கனிந்தொழுகு தலையன்பாற் கவலை கூர்வாள்"

ஒருநாள் அவளுடைய வீட்டார் அயலூர் சென்றிருந்தனர். அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் அவள் கவலையை நீக்கி அருள் புரிதற்பொருட்டுச் சிவவேடந் தாங்கிய விருத்த வேதியராக அவள் வீட்டுக்கு வந்தார் கௌரி அவரை அடிபணிந்து அமுது செய்ய வேண்டினள். அவர் இசையவே அம்மை அமுது ஆக்கித் திருவடிப் பூசனை புரிந்து அமுது செய்வித்தாள். உடனே வேதியர் காளைப் பருவத்தினராய்க் குமாரன் வேடத்திற் காட்சி கொடுத்தார். கௌரியாகிய கற்பு மலர்க் கொம்பரன்னள் கண்டு நடுங்கிக் கைநெரித்துத் திகைத்து வேர்த்துக் கூசி ஒரு புறத்தொதுங்கி நின்றாள். அப்பொழுது அவளுடைய வீட்டார் திரும்பினர். உடனே பதினாறு வயதுக் காளைப் பருவத்தினர் பசுங் குழவியானார்.

ஓரி வள்ளலின் பெயரால் அழைக்கப்பட்ட ஊர் ஓரியூர்.

உகந்து — விருப்பம் மிகுந்து, உகத்தல்—உயர்தல் 'உகப்பே உயர்தல்' (தொல்காப்பியம் – உரியியல்–8.)

பார் — உலகம், இருமை — பெருமை. பெருமை பொருந்திய சிவபெருமான் எடுத்த குழந்தை வடிவமாதலின் இரும்பாலகன் என்றார். கிழவனாகவும், குமாரனாகவும் பெரிய வடிவங்கள் எடுத்ததுடன் பாலனாகவும் வடிவெடுத்தான் எனவும் பொருள் கூறலாம். பாலகனும் ஆகிய பரிசும் — உம்மை தொக்கது.

70 பாண்டூர் தன்னி லீண்ட விருந்துந்
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்

**பதப்பிரிவு :**

பாண்டூர் தன்னில் ஈண்ட இருந்தும்
தேவூர்த் தென்பால் திகழ்தரு தீவில்
கோஆர் கோலம் கொண்ட கொள்கையும்

**பொழிப்புரை :**

பாண்டூர் என்னும் திருப்பதியில் அடியார்களுடன் நெருங்கியிருந்தும், திருத்தேவூருக்குத் தெற்குப் பகுதியில் விளங்குகின்ற நாற்புறமும் நீர் சூழ்ந்த தீவில் அரசுத்தன்மை நிறைந்த திருவடிவினை எடுத்துக் கொண்ட செயலும்.

**விளக்கம் :**

தேவூர், திருவாரூர், இடைமருது என்று சோழ நாட்டு மருதநிலங்களையே கூறி வருதலின், தீவு ஈண்டு நான்கு பக்கமும் நீர் சூழ்ந்த செழிப்பான இடம். தேவூர் ஆண்ட அரசன் மறைந்தனனாக, அவனே இவன் என எண்ணுமாறு இறைவன் அவ்வரசன் உருவமெடுத்தான். மறைந்த அரசன் சிறந்த செங்கோல் மன்னனாக விளங்கினமையின் அவன் மறைந்ததும் குடிகள் வருந்தினர். கடவுளன்பு மிக்க குடிகளின் பொருட்டுச் சிவபெருமானே அவ்வரசு வேடத்திலிருந்து செங்கோல் செலுத்தினான்.

73 தேனமர் சோலைத் திருவா ரூரில்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்

**பதப்பிரிவு :**

தேன் அமர் சோலைத் திருஆரூரில்
ஞானம் தன்னை நல்கிய நன்மையும்

**பொழிப்புரை :**

தேன் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவாரூரின் கண் பக்குவப்பட்ட உயிர்களுக்கு மெய்யுணர்வினை அளித்தருளிய நலமும்

**விளக்கம் :**

திருப்பெருந்துறையில் சிவபெருமான் மணிவாசகருக்குக் குருவடிவில் எழுந்தருளி உபதேசித்த பின் மறைந்தருளினுர். மாணிக்கவாசக அடிகள் திருவாரூர் சென்று முறையிட்டனர். அங்கே ஆரூரன் பெருந்துறைப் பெருமானுகவே காட்சி கொடுத்தான்; அடிகள் ஆற்ருமையை ஆற்றுவித்தான்;

'' அச்சத்தாலே ஆழ்ந்திடுகின்றேன் ஆரூரெம் பிச்சைத்தேவா ''
(திருச்சதகம்-81)

'' அருவாய் உருவமு மாயபிரான் அவன்மருவும்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ ''
(திருத்தெள்ளேணம்-2)

'' ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமந் தேர்ந்துரையாய் — ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று ''
(திருத்தசாங்கம்-1)

75 இடைமரு ததனி லீண்ட விருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்

**பதப்பிரிவு :**

இடைமருது அதனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்த அப் பரிசும்

**பொழிப்புரை :**

திருவிடைமருதூரில் அடியார்களுடன் செறிந்து விளங்க எழுந்தருளியிருந்து தூய திருவடிகளைத்

தலைமேற் சூட்டியதோடு உள்ளத்திலும் பதிய வைத்த அருட் பெருமையும்

**விளக்கம் :**

பரிசு — பெருமை. படிமம் — தெய்வ வடிவம், தூய்மை.

"தேவதேவன் மெய்ச் சேவகன் தென்பெருந்துறை நாயகன்
மூவராலும் அறியொணுமுதலாய ஆனந்த மூர்த்தியான்
யாவராயினும் அன்பரன்றி அறியொணு மலர்ச் சோதியான்
தூயமா மலர்ச் சேவடிக் கண்நம் சென்னி மன்னிச் சுடருமே"

(திருவாசகம் – சென்னிப்பத்து-1)

"மருவினிய மலர்ப்பாதம் மனத்தில் வளர்ந் துள்ளுருகத்
தெருவு தொறும் மிகஅலறிச் சிவபெருமான் என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமாறு
அருள் எனக்கிங் கிடைமருதே இடங்கொண்ட அம்மானே"

(திருவாசகம்–திருவேசறவு-9)

"பந்தம் அறுத் தென்னை யாண்டு கொண்ட பாண்டிப்பிரான்
அந்த இடை மருதில் ஆனந்தத்தேன் இருந்த
பொந்தைப்பரவிநாம் பூவல்லி கொய்யாமோ"

(திருப்பூவல்லி-2.)

**77 ஏகம் பத்தி னியல்பா யிருந்து**
**பாகம் பெண்ணே டாயின பரிசும்**

**பதப்பிரிவு :**

**ஏகம்பத்தின் இயல்பாய் இருந்து**
**பாகம் பெண்ணேடு ஆயின பரிசும்**

**பொழிப்புரை :**

திருக்கச்சி ஏகம்பம் என்னும் தலத்தில் தனது இயல்பான அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்திலிருந்து தனது இடப்பக்கம் சத்தியோடு கூடியதான தன்மையும்

**விளக்கம் :**

கயிலாயத்தில் அம்மை விளையாட்டாகச் சிவபெருமானுடைய கண்ணைப் பொத்தினாள். சிவபெருமானுடைய கண்ணொளியிலிருந்தே சூரிய சந்திரர் ஒளிபெறுவராதலின் அம்மை கண்ணை மூடியவுடனே உலகம் இருண்டது. அப்போது பெருமான் நெற்றிக் கண்ணால் ஒளி தோன்றச் செய்தான். இத்தீவினை நீங்க அம்மை காஞ்சி புரத்தில் வந்து வழிபாடாற்றினாள். பூசை முடியும் வரை காலந்தாழ்க்காமல், இடையே கம்பை ஆற்றைப் பெருமான் வெள்ளம் பெருகச் செய்தான். அம்மை அச்சத்தோடு இலிங்கத்தைத் தழுவிக் கொண்டாள். இறைவன் அருள் வடிவமான அம்மையை இவ்வாறு வலிந்திறுகத் தழுவச் செய்து, தான் குழைந்து கொடுத்து அம்மையின் தனச் சுவட்டினைக் தன் மேனியிற் பொறித்து விளங்கச் செய்தான்.

"ஏகம்பத்துறை எந்தாய் போற்றி"

(போற்றித் திருஅகவல்-15.)

"படமாக என்னுள்ளேதன்னிணைப் போதவையளித்திங்
கிடமாகக் கொண்டிருந்து ஏகம்பம் மேயபிரான்"

(திருப்பூவல்லி-14.)

"தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சித்
திரு ஏகம்பன் செம்பொற் கோவில் பாடி"

(திருப்பொற்சுண்ணம்-4.)

**79 திருவாஞ் சியத்திற் சீர்பெற விருந்து**
**மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்**

**பதப்பிரிவு:**

**திருவாஞ்சியத்தில் சீர்பெற இருந்து**
**மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்**

**பொழிப்புரை :**

திருவாஞ்சியம் என்னும் திருப்பதியில் திருமணச் சிறப்படைய எழுந்தருளியிருந்து இயற்கை மணமுடைய

நீண்ட கூந்தலையுடைய அம்மையுடன் இன்புற்ற தன்மையும்

**விளக்கம் :**

இறைவன் அருள் வடிவான இறைவியோடு கூடி மகிழ்தல் ஒரு நாடக நடிப்பேயாகும். அவன் உயிர்களைப் போல் பெண்ணேடு கூடி மகிழ்பவனல்லன். உயிர்கள் இன்பந்துய்க்கும்படி அவன் இன்பந்துய்த்தல் போல் நடிக்கிறன்.

" இடப்பாக மாதராளோ டியைந்துயிர்க் கின்பம் என்றும்
அடைப்பானும் அதுவும் "

(சிவஞானசித்தியார், முதற்சூத்திரம்
அதிகரணம் 2-54)

வாஞ்சியம் — விருப்பம் நிறைவேறிய இடம், வாஞ்சை — விருப்பம்.

இத்தலத்தைப் பற்றிய வடமொழித் தலபுராணம் பின் வருமாறு கூறுகிறது:-

திருவாஞ்சியத்தில் நாககன்னிகை ஒருத்தி சிவபூசை செய்து வந்தாள்; ஆர்வமிகுதியால் ஒரு நாள் சிவபூசையில் சிவபெருமானைத் தழுவிக் கொண்டாள். அவளது காதல் மிகுதி கண்ட சிவபெருமான் அவள் விருப்பம் நிறைவெய்தும்படி அவளை மகிழ்வித்தான். தன்னைப் பூசை செய்வாரது விருப்பம் நிறைவுபெறச் செய்யும் சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் தலம் திருவாஞ்சியம்.

81 **சேவக னாகித் திண்சிலை யேந்திப்**
**பாவகம் பலபல காட்டிய பரிசும்**

**பதப்பிரிவு :**

**சேவகன் ஆகித் திண்சிலை ஏந்திப்**
**பாவகம் பலபல காட்டிய பரிசும்**

**பொழிப்புரை :**

வில்வீரன் ஆகி வலியவில்லைப் பிடித்துத் தனது திருவுள்ளப்பான்மையைப் பலபல தோற்றங்களில் காட்டிய தன்மையும்.

**விளக்கம் :**

விக்கிரமபாண்டியன் என்பவன் புறச்சமயங்களைக் களைந்து சிவாகம நெறிப் பயிர் வளர்த்து மெய்ப்பத்தியோடு மதுரையை ஆண்டு வந்தான். சோழனொருவன் விக்கிரமனை யழிக்குமாறு சமண முனிவர்களை வேண்டினான். சமண முனிவர்கள் தங்கள் மந்திர வலியால் ஒரு யானையைப் பாண்டி நாட்டின் மீது ஏவினர். அந்த யானையை அடக்க வலியில்லாதவனாய்ப் பாண்டியன் சோமசுந்தரக்கடவுளிடம் போய்க் குறையிரந்தான். சோமசுந்தரக்கடவுள் வில் வீரனாக வந்து, பாண்டியனது செங்கோலைச் சிங்க வாளியாக அமைத்து அந்த யானையை எய்தான். யானை உயிர் நீத்தது. யானையும் அது உயிர் நீத்தபோது போட்ட இலத்தியும் மலையாகக் கிடந்தன. அவற்றின் மேல் அம்பாய் வந்த நரசிங்கப் பெருமானை நிலைபெறுத்தினான் பாண்டியன். சோமசுந்தரக்கடவுள் சிம்புளாய் வந்தான், நரசிங்கத்தை வாளியாக் கொண்டான். ஆதலின் 'பல பல பாவகம் காட்டிய பரிசும்' என்றார்.

''வம்புளாய் மலர்ந்த ஆரான் வரவிடுமத்தக் குன்றிற்
சிம்புளாய் வடிவங் கொண்ட சேவகன் ஏவல்செய்த
அம்புளாய்த் தூணம்விள்ள அன்றவ தரித்த வாபோற்
செம்புளாய்க் கொடியநர சிங்காமாயிருந்த தன்றே''
(திருவிளையாடற் புராணம்-யானையெய்த
படலம்-41.)

வம்பு — மணம். உளாய்—அகத்தே கொண்டதாய். ஆரான் — ஆத்திமாலை யணிந்த சோழன். சிம்புள் — சரபம். செம்புள் — கருடன். பாவகம் — உள்ளக் கருத்தைப் புலப்படுத்துந் தோற்றம்.

நரசிங்காத்திரத்தைத் தொடுக்கும் சிலையாதலின் 'திண்சிலை' என்றார்.

83 கடம்பூர் தன்னில் இடம்பெற விருந்து
மீங்கோய் மலையி லெழிலது காட்டியும்

பதப்பிரிவு :

கடம்பூர் தன்னில் இடம் பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்

பொழிப்புரை :

திருக்கடம்பூரில் இறைவனுடைய பல பரிசுகளும் பல தோற்றங்களும் இடம்பெறும்படி பெரிய கோவில் கொண்டு எழுந்தருளியிருந்தும், திருஈங்கோய் மலையில் பச்சைத் திருமேனியில் தனது பேரழகினைக் காண்பித்தும்

விளக்கம் :

ஈங்கோய்மலை சோலைகள் நிறைந்து அம்மையின் பச்சை வடிவாய்க் காட்சி தந்தது. மரகதாசலமாய்க் காட்சி தந்தான் தீவண்ணனாகிய செம்மேனியெம்மான். தனது இடப்பாகப் பச்சை நாயகியின் சார்பாலும், தான் இடங் கொண்ட ஈங்கோய் மலைச் சோலைவளப் பசுமையாலும் குளிர்ந்த பச்சை வடிவமாய்க் காட்சி தந்தான். ஆதலின் 'எழிலது காட்டியும்' என்றார். திருஈங்கோய்மலை பச்சை மயில்கள் ஆடும் பசுஞ்சோலையுடையது.

''உண்டிருந்த தேனை அறுபதங்கள் ஊடிப்போய்ப்
பண்டிருந்த யாழ்முரலப் பைம்பொழில்வாய்-கண்டிருந்த
மாமயில்கள் ஆடி மருங்குவரும் ஈங்கோயே
பூமயிலி தாதை பொருப்பு''

(திருஈங்கோய்மலை எழுபது 10)

அறுபதம்—வண்டு. பண்டிருந்த—பண் + திருந்த. பூமயிலி - அழகிய மயிலூர்தியனாகிய முருகன்.

"விழவார் ஒலியும் முழவும்ஓவா வேணுபுரந்தன்னுள்
அழலார்வண்ணத் தடிகள் அருள்சேர் அணிகொள் சம்பந்தன்
எழிலார்சுனையும் பொழிலும் புடைசூழ் ஈங்கோய்மலையீசன்
கழல்சேர் பாடல் பத்தும் வல்லார் கவலை கழல்வாரே"
(திருஞானசம்பந்தர், திருமுறை 1)

**85 ஐயா றதனிற் சைவ னாகியும்**

**பதப்பிரிவு :**

**ஐயாறு அதனில் சைவன் ஆகியும்**

**பொழிப்புரை :**

திருவையாற்றில் ஆதி சைவ மறையோனாக வந்து அருள்புரிந்தும்

**விளக்கம் :**

திருவையாற்றில் திருக்கோவிலில் இறைவனைப் பூசனைபுரியும் மறையோனொருவன் தன் மனைவி மக்களை விட்டுக் காசியில் தங்கியிருந்தான். அவன் மீண்டும் வாராததினால், ஏனைய மறையவர் அவனுடைய பூசைக் காணி நிலத்தைத் தங்களுக்குள்ளே பிரித்துக் கொண்டார்கள். அவன் மனைவி ஐயாற்றப்பனிடம் முறையிட்டாள். இறைவன் காசி சென்ற மறையவன் வடிவத்தில் வரவே அவனுக்குரிய பங்கு நிலத்தை அவர்கள் அவனிடம் ஒப்புவித்தனர். அந்த மறையவன் வடிவத்திலேயே சிவபெருமான் அங்குச் சிலநாளிருந்தான். பின் காசி சென்ற மறையவன் வந்தான். இருவருக்கும் காணிப் பிணக்கு நேர்ந்தது. வழக்கு மன்றத்தில் இறைவன் முறியோலையொன்றைக் காட்டி மறைந்தான்.

**86 துருத்தி தன்னி லருத்தியோ டிருந்தும்**

**பதப்பிரிவு :**

**துருத்தி தன்னில் அருத்தியோடு இருந்தும்.**

**பொழிப்புரை :**

காவிரியாற்றின் நடுவில் ஆற்றிடைக் குறையாக அமைந்த குத்தாலம் என்னும் திருத்துருத்தியில் அடியவர்க்கு ஆகமப் பொருள் உணர்த்தும்பொருட்டு ஆசையோடு இருந்தருளியும்

**விளக்கம் :**

பெருமான் திருத்துருத்தியில் பகல் முழுதும் அம்மையோடு இருந்து ஆகமங்களை மாணுக்கருக்கு அறிவுறுத்தி இரவு திருவேட்குடிக்குச் சென்று அம்மையோடு மணக்கோலங் கொண்டிருப்பான். இக் கருத்துத் திருத்துருத்தியும் வேள்விக்குடியும் எனும் பதிகத் தலைப்பிலுள்ள ஒவ்வொரு பாடலிலும் வருகிறது.

'' மறியுலாங் கையினர் மங்கையோ டொருபகல் அமர்ந்தபிரான்
வெறியுலாந் துருத்தியார் இரவிடத் துறைவர் வேள்விக் குடியே''

(திருஞானசம்பந்தர் தேவாரம், 3ந் திருமுறை பதிகம் 90)

'' திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
அருத்தியினல் நாயடியேன் அணிகொள்தில்லை கண்டேனே ''

(திருவாசகம்)

'' உன்னி எப்போதும் நெஞ்சுள் ஒருவனை ஏத்துமின்னே
கன்னியை ஒருபால் வைத்துக் கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியின் நடுவுதன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந்
துன்னிய துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே ''

(திருநாவுக்கரசர்–திருத்துருத்தி-4)

87 திருப்பனை யூரில் விருப்ப ஞகியும்

**பதப்பிரிவு :**

திருப்பனை ஊரில் விருப்பன் ஆகியும்

**பொழிப்புரை :**

திருப்பனையூர் என்னும் பதியில் உயிர்களிடத்து விருப்பமுடையவனுக எழுந்தருளியும்

**விளக்கம் :**

திருப்பனையூரில் சௌந்தரேசுவரன் யாவராலும் விரும்பப்படும் சுந்தரவடிவினனாகக் காட்சியளிக்கிறான்.

இறைவன் வேண்டுதல் வேண்டாமை யில்லாதவன். வேறொரு விருப்பமும் இல்லாதவனாய் உயிர்கள் தாம் ஈடேறும் பொருட்டுத் தன்னை வழிபாடு செய்ய வேண்டு மென்னும் ஒரே விருப்பமுடையவனாய் அதற்காகத் தாபர வடிவமாகிய சிவலிங்கத்திலும் சங்கம வடிவ மாகிய சிவனடியாரிடத்தும் விளங்கித் தோன்றுகிறான்.

" விருப்பொன்றில்லான்
பூண்டனன் வேண்டல் செய்யும்
பூசனைபுரிந்து கொள்ளே. "
(சிவஞானசித்தியார் இரண்டாஞ் சூத்திரம்
அதி. 2-27)

88 கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்

**பதப்பிரிவு :**

**கழுமலம் அதனில் காட்சி கொடுத்தும்**

**பொழிப்புரை :**

திருக்கழுமலம் என்னுஞ் சீர்காழிப் பதியில் தனது திருக்கோலத்தைக் காண்பித்து ஞானம் அருளியும்

**விளக்கம் :**

மாணிக்கவாசகருக்குக் கழுமலத்திறைவன் மலங் கழுவுவதற்காகக் காட்சி கொடுத்தருளினன் போலும்! கழுமலநாதர் காட்சி கொடுத்தால்தான் அவன் அருளால் மாசு கழுவப்பெறும்.

திருக்கழுமலத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் இறைவன் காட்சி கொடுத்தமையின் " கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே " எனப் பாடுகிறார் சுந்தரர்:

"முத்தியும் ஞானமும் வானவர் அறியா முறை முறை பல பல
நெறிகளுங்காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை அடியேன் கழுமல வளநகர்க்
கண்டுகொண்டேனே"

89 கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்

*பதப்பிரிவு:*

**கழுக்குன்று அதனில் வழுக்காது இருந்தும்**

*பொழிப்புரை:*

திருக்கழுக்குன்றப்பதியில் ஒரு சிறிதும் மறைக்காமல் கணக்கிலாத உன் திருக்கோலத்தைக் காட்டக் குருவடிவத்தில் தவறுது எழுந்தருளி யிருந்தும்

**விளக்கம்:**

திருக்கழுக்குன்றத்தில் மாணிக்கவாசகர் கலங்காமலும் உலகத்தில் விருப்புருமலும் இருக்கும்படி அருளாசிரியத் திருக்கோலங்காட்டினமையால் 'வழுக்கா திருந்தும்' என்றுர். இது மாணிக்கவாசகர் இருவினையொப்பு வந்து குருவருள் பெற்ற இடம். திருப்பெருந்துறையிற் காட்சி தந்து அருள் புரிந்து மறைந்த கோலம் திருக்கழுக்குன்றில் மாணிக்கவாசகருக்குக் காட்டப் பெற்றது.

"என் வினையொத்த பின்
கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து
காட்டினுய் கழுக்குன்றிலே"
(திருவாசகம், திருக்கழுக்குன்றப்
பதிகம் 1.)

"பேணுைத பெருந்துறைப் பெருந்தோணி பற்றி யுகைத்தலும்
காணுைத் திருக்கோலம் நீவந்து காட்டினுய் கழுக்குன்றிலே"
(திருவாசகம், திருக்கழுக்குன்றப்
பதிகம்-4.)

90 புறம்பய மதனி லறம்பல வருளியும்

**பதப்பிரிவு :**

புறம்பயம் அதனில் அறம்பல அருளியும்

**பொழிப்புரை :**

*திருப்புறம்பயம் என்னும் பதியில் அறநூற் பொருள் பலவற்றையும் அறிவுறுத்தி அருள் புரிந்தும்*

**விளக்கம் :**

"பாவியேன் கண்ணுள்ளே பற்றிநோக்கிப்
போகாத வேடத்தர் பூதஞ்சூழப்
புறம்பயம் நம்மூர் என்று போயினாரே"

" புத்தகங் கைக்கொண்டு புலித்தோல்வீக்கிப்
புறம்பயம் நம்மூரென்று போயினாரே"

*என்று திருநாவுக்கரசர் திருப்புறம்பயத் திருத்தாண்டகத்துக் கூறுதலின், 'அறம்பல அருளியும்' என்பதற்கு அறநூற் பொருள் அறிவித்து அருள்புரிந்தும் என்ற பொருள் கொள்ளப்பெற்றது.*

91 குற்ற லத்துக் குறியா யிருந்தும்

**பதப்பிரிவு :**

குற்றாலத்துக் குறியாய் இருந்தும்

**பொழிப்புரை :**

*திருக்குற்றாலத்தில் அகத்திய முனிவரால் நெடியோன் உருவம் குறுமையாக்கப் பெற்றுச் சிவலிங்க வடிவமாகி இருந்தும்*

**விளக்கம் :**

*பாண்டி நாட்டிலுள்ள திருக்குற்றாலத்தில் நெடுமாலின் திருவுருவம் அமையப்பெற்றிருந்தது. அகத்திய முனிவர் மாயோன் அடியவர்போல் திருக்கோவில் உட்சென்று நெடுமால் வடிவத்தைக் குறு குறு குற்றாலம்*

ஆகுக எனக் கூறிக்கொண்டே தம் கையால் தடவினர். திருமால் வடிவம் மாறிச் சிவலிங்க வடிவமாயிற்று.

குறி — சிவ அடையாளம்.

சோழ நாட்டிலுள்ள திருத்துருத்தியும் குற்றால மென வழங்கப்பெறும். ஈண்டுக் கூறப்பெறும் குற்றலம் பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டத் தைச் சார்ந்த தென்காசி யருகில் திரிகூடமலை அடிவாரத்தில் அருவியோடு மலைவளம் மல்கப் பெற்ற குற்றலம். இத்திருக்குற்றலத்தில்தான் நெடுமால் குறு குறு எனக் குறுகிச் சிவலிங்கமாயினர். நெடுமாலாக இருந்து குறி ஆயினது இத்தலத்திலேயே.

**92 அந்தமில் பெருமை யழலுருக் கரந்து**
**சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்**
**டிந்திர ஞாலம் போலவந் தருளி**
**95 யெவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்**
**தானே யாகிய தயாபரன்**

***பதப்பிரிவு :***

**அந்தம் இல் பெருமை அழல் உருக் கரந்து**
**சுந்தர வேடத்து ஒரு முதல் உருவு கொண்டு**
**இந்திர ஞாலம் போல வந்து அருளி**
**எவர்எவர் தன்மையும் தன் வயின் படுத்துத்**
**தானே ஆகிய தயாபரன்**

***உரைநடை :***

அந்தம் இல்பெருமை ஒரு முதல் சுந்தர வேடத்து உருவுகொண்டு இந்திர ஞாலம் போல வந்தருளி எவ்வெவர் தன்மையும் தன்வயின்படுத்துத் தானே ஆகிய தயாபரன்.

***பொழிப்புரை :***

இவ்வாறெல்லாம் முடிவில்லாத மெய்ப்புகழ் வாய்ந்த ஒப்பற்ற முதற் கடவுள் தன்னுடைய தீப்பிழம்புச் சோதி

வடிவத்தினைத் தன்னுள்ளே மறைத்து வைத்துக் கொண்டு அழகிய கோலமுடைய வடிவினை எடுத்துக் கொண்டு இந்திரசால வித்தை செய்பவர்போல் விரைந்து வந்து அருள் புரிகிறான்; பக்குவத்தில் எவர் எவர் இயல்பினையும் தனது அருள் நிறைவில் உள்ளடக்கி அவர்களைத் தன்வயப்படுத்தி இரண்டறக்கலந்து நிற்ப வனாகிய பெருங்கருணையாளன் ஆகிய

**விளக்கம் :**

இறைவன் எல்லா உயிர்களையும் தனது அருள் நிறைவினுள் அடங்கச் செய்கிறான். சுந்தர வேடம் என்பதற்கு அழகிய பிரணவ வடிவமான காதணி எனவும் பொருள் கொள்வர். சிவபெருமான் அணுகுதற் கரிய அழலுருவினைக் கரந்து யாவரும் கண்டு மகிழ்ந்து அணைதற்கேதுவான அருள் வடிவமான மாதொரு பாகனாய்க் குளிர்ந்த அன்புருவிற் காட்சி தருவான். அடிமை முறை, மகன் முறை, தோழமை முறை, தலைவி முறை என்பவற்றுள் எம்முறையில் வழிபடினும் அவரவர்க்கேற்ப ஆண்டானும், தந்தையும், தோழனும், தலைவனும் தான் ஒருவனே ஆவன். ஆதலின் " எவ்வெவர் தன்மையுந் தன்வயிற்படுத்துத் தானே யாகிய தயாபரன் " என்றார்.

எம்மிறை
97 சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுட்
99 சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்

**பதப் பிரிவு :**

எம் இறை
சந்திர தீபத்துச் சாத்திரன் ஆகி
அந்தரத்து இழிந்து வந்து அழகு அமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்து இருந்து
அருளியும்

**பொழிப்புரை :**

எமது முதல்வன் திங்களாகிய விளக்கம் போன்று மெய்ந்நூல் அறிவுறுத்தும் ஞான குரவனாகி விண்ணி லிருந்து இறங்கி வந்து அருள் அழகு பொருந்திய பாலை நிலமாக இருந்த திருப்பெருந்துறையில் அழகிய இயல்போடு மாணவர் குழாத்துடன் நெருங்கி அவர் உள்ளத்திற் படிந்திருந்து தன் உண்மையுரு விளக்கி யருளியும்

**விளக்கம் :**

அழகமர்பாலை — திருப்பெருந்துறை.

"என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் அறியவொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பால் நீ அகநெகவே புகுந்தருளி ஆட்கொண்ட (து)
என்பாலே நோக்கியவா றன்றேஎம் பெருமானே !"

(திருவாசகம் – திருவேசறவு-7)

"அந்தமில் புகழான் மிக்கார் அடைந்தனர் நம்பா லென்று
கந்தமென் மலர்கள்தூவி வழிபடு கானம் நீங்கி
முந்தஉள் ளனதாய் ஆசை முதலிய ஒருங்கு மாய்த்த
பந்தமில் லவர்மனம்போற் பசையறு பாலை சார்ந்தார்"

(திருப்பெருந்துறைப்புராணம்)

"விண்ணின் றிழிந்து வினைக்கீடா மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே,"

(திருமந்திரம்-57)

100 மந்திர மாமலை மகேந்திர வெற்ப
னந்தமில் பெருமை யருளுடை யண்ண
102 லெந்தமை யாண்ட பரிசது பகரின்

**பதப்பிரிவு :**

மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தம்இல் பெருமை அருள் உடை அண்ணல்
எம்தமை ஆண்ட பரிசது பகரின்

**பொழிப்புரை :**

மறைமொழியாகிய ஆகமங்களை இறைவன் புலப் படுத்திய இடம் மகேந்திரமலை. அந்த மாமலையைச் சிவ பெருமான் இருப்பிடமாகக் கொண்டு எழுந்தருளி யிருப் பவன். அவன் முடிவில்லாத மேன்மையினையும் கருணை யினையும் உடையவனாகிய பெருமான். அவன் எம்மை ஆட்கொண்ட தன்மையைக் கூறின்

**விளக்கம் :**

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்"

என அடிகள் முன்னே கூறினமை காண்க.

பரிசது — அது பகுதிப் பொருள் விகுதி.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப"

என மந்திரத்தின் இயல்பு கூறுவர் தொல்காப்பியனார்.

## தசாங்கம் (பதிற்றுறுப்பு)

### 1. கொடி

103 **ஆற்ற லதுவுடை யழகமர் திருவுரு**
**நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்**

**பதப்பிரிவு :**

**ஆற்றல்அது உடை அழகு அமர் திருஉரு**
**நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்**

**பொழிப்புரை :**

எல்லா வல்லமையும் உடைய தனது அழகு பொருந் திய திருமேனியில் திருநீறு சண்ணித்த திருக்கோலத் தையே கொடியாகக் கொண்டு வளர்ந்து உயர்ந்து காட்டியும்;

**விளக்கம் :**

பத்து அரச உறுப்புக்களுள் மண்ணுளும் வேந்தர்க் கமைந்த கொடிபோல அடியாரை ஆளும் ஆண்டவனுக் குத் தனது திருநீற்றுக் கோலமே வெண்மையான கொடி யாக அமைந்தது.

> "ஆற்றல் அடல்விடைஏறும் ஆலவாயான் திருநீற்றை"
> (திருஞானசம்பந்தர் - திருநீற்றுப் பதிகம்.)

> "தினைவளங் காத்துச் சிலம்பெதிர் கூஉய்ச் சிற்றின் முற்றிழைத்துச்
> சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழுதெழுவார்
> வினைவளம் நீறெழ நீறணி அம்பல வன்தன்வெற்பில்
> புனைவளர் கொம்பர் அன்னுய் அன்ன காண்டும் புனமயிலே."
> (திருக்கோவையார்-118.)

"நீறணிந்த கோலம் நெஞ்சம்பிணிக்கும் எழிலு டைமையான், அக்கோலந் தொழுதெழுவார் உள்ளத்து நீங்காது நிற்றலான், ஆண்டுள்ள வினைநீரும் என்னுங் கருத்தான், '**வினைவளம் நீறெழ நீறணி அம்பலவன்**' என்றூர்.

"புதல்வர் பிணிக்குத் தாய் மருந்துண்டாற் போலத் தொழுதெழுவார் வினைக்குத் தான் நீறணிந்தான்."
— பேராசிரியர் உரை.

கொடி என்பது கோடி எனச் செய்யுள் பற்றி நீட்டல் விகாரமாயிற்று;

> "பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
> அலகுடை நீழ லவர்."

இதில் நிழல் என்ற சொல் நீழல் என்று நீட்டல் விகாரம் பெற்றது போல.

> "சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
> கோலம் பொலியுங் கொடிகூறாய் — சாலவும்
> ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டும்
> கோதிலா ஏறாங் கொடி."
> (திருத்தசாங்கம்-10)

பெருமான் ஆசானுயினமையின், ஏற்றுக் கொடி மறைத்து நீற்றுக் கொடி காட்டினுன் என்க.

## 2. ஆறு

105 ஊனந் தன்னை யொருங்குட னறுக்கு
106 மானந் தம்மே வாரு வருளியும்

பதப்பிரிவு :

ஊனம் தன்னை ஒருங்கு உடன் அறுக்கும்
ஆனந் தம்மே ஆறு அருளியும்

பொழிப்புரை :

மூவகைப் பாசத்தையும் ஒருசேர வேருடன் சாய்த்துத் தள்ளும் சிவானந்தப் பெருக்கே ஆறாகக் கொண்டு அருள்புரிந்தும்

விளக்கம் :

மூவகைப் பாசம்:- ஆணவம், மாயை, கன்மம். சிவானந்தப் பெருக்கில் திளைப்பார்க்கு 'நான்' என்னும் செருக்கும். உலகப்பொருள் மயக்கமும் மேல் வரும் பிறவிக்கு விதையாகும் செயல்களும் இல்லையாகும்.

ஆக என்பது ஆ எனக் குறைந்து நின்றது. ஆனந்தம்மே என்பதில் மகர ஒற்று விரித்தல் விகாரம்.

" செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீநஞ் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையான் ஆறுரையாய் — தையலாய்!
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காண்உடையான் ஆறு."

(திருவாசகம்- திருத்தசாங்கம்-4)

## 3. பறை

107 மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
108 நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்

பதப்பிரிவு :

மாதில் கூறு உடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்

**பொழிப்புரை :**

அருள் வடிவான அம்மையை ஒரு பாகத்தில் உடைய சிறந்த பேரருளாளன் நாதமாகிய பெரிய முரசினைப் பலகாலும் பயின்று ஒலிக்கச் செய்யவும்;

**விளக்கம் :**

நவிலல் — பலகாலும் பயிலல்.

"மூவிருமுகனும் முறை நவின்று ஒழுகலின்"

(திருமுருகாற்றுப்படை-103)

"இன்பான் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்கோன்
முன்பான் முழங்கு முரசியம்பாய் — அன்பாற்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை,

(திருவாசகம்-திருத்தசாங்கம்-8)

## 4. படை

109 அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்
110 கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்

**பதப்பிரிவு :**

அழுக்கு அடையாமல் ஆண்டுகொண்டு அருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண்டு அருளியும்

**பொழிப்புரை :**

உயிர்களின் மேல் மும்மல அழுக்குப்படியாமல் ஆட்கொண்டு அருள்புரிபவன் மூவிலைச் சூலப் படையைக் கையில் படையாகக் கொண்டு அருள்புரிந்தும்;

**விளக்கம் :**

"கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய் — ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயுங்
கழுக்கடைகாண் கைக்கொள் படை."

கழுக்கடை — சூலம்.

## 5. மாலை

111 மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
114 யேலுடைத் தாக வெழில்பெற வணிந்தும்

**பதப்பிரிவு :**

மூலம் ஆகிய மும்மலம் அறுக்கும்
தூய மேனிச் சுடர் விடு சோதி
காதலன் ஆகிக் கழுநீர் மாலை
ஏல் உடைத்து ஆக எழில்பெற அணிந்தும்

**பொழிப்புரை:**

எல்லாப் பெருங் கேட்டிற்கும் மூலகாரணமாகிய ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்றால் விளையும் இருளை ஒழிக்க வல்ல மாசற்ற திருவுருவுடைய மெய்யொளி பரப்பும் பேரொளிப் பிழம்பினன் உயிர் நாயகியிடம் உண்மையன்புடைய நாயகனாகிச் செவ்வாம்பற்பூமாலையைப் பொருத்தமாக, அம்மாலை எழுச்சி பெறும்படி அணிந்தும்;

**விளக்கம் :**

அடிகள் திருத்தசாங்கத்தில் தாளியறுகினைத் தாராகக் குறிப்பிடுகிறார். ஈண்டுக் கூறிய கழுநீர்மாலை ஆசான் உருவுக்கு ஏற்றதாதலின் "ஏலுடைத்தாக அணிந்து" என்றார்.

இயல்பாகவே சுந்தரனாகிய இறைவனுக்கு மாலை சூடியதால் அழகு என்பது இல்லை; இறைவன் அணிந்ததால் மாலைக்கு மேன்மையும் அழகும் வாய்த்தன.

" சிலம்பு அணிகொண்ட செஞ்சீறடி பங்கன் "

(திருக்கோவையார் -54)

"சிலம்பு, தான் அழகு பெற்ற செய்ய சிறிய அடியையுடையாளது கூற்றை உடையான்", — பேராசிரியர்.

## 6. ஊர்தி

115 அரியொடு பிரமற் களவறி யாதவன்
116 பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்

*பதப்பிரிவு :*

அரியொடு பிரமற்கு அளவு அறியாதவன்
பரிமாவின்மிசைப் பயின்ற வண்ணமும்

*பொழிப்புரை :*

திருமாலுக்கும் நான்முகனுக்கும் தனது அடிமுடிகளின் எல்லை காணமுடியாதவன் குதிரையின்மேல் பலகாலும் ஊர்ந்த தன்மையும்;

**விளக்கம் :**

பரிமா, இருபெயரொட்டுப் பண்புத் தொகை. செருக்குடையவர்க்குச் சிவபெருமான் அறிய ஒண்ணுதவன்; அடியவர்க்கு எளிதிற் காட்சி யளிப்பவன்.

பயிலுதல்—பல முறை எழுந்தருளல்.

"இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்பாடாச் சீருடையான் ஊர்வதென்னே — எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண் ணேத்திசைப்ப
வான்புரவி யூரும் மகிழ்ந்து"

(திருவாசகம்: திருத் தசாங்கம்-6.)

சிவபெருமான் பரிமேற் பன்முறை எழுந்தருளி வருவதனைப் பாண்டிப் பதிகம் பாராட்டிப் பாடும் :-

"தெரிவா ரின்றுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனர்
ஒருவரையன்றி உருவறியாதென்றன் உள்ளமதே."

(திருப்பாண்டிப் பதிகம்-6.)

## 7. நாடு

117 மீண்டு வாரா வழியருள்புரிபவன்
118 பாண்டி நாடே பழம்பதி யாகவும்

*பதப்பிரிவு :*

மீண்டு வாரா வழி அருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி ஆகவும்

**பொழிப்புரை :**

திரும்பவும் பிறவி வராதபடி வீட்டு நெறியை அருள் செய்பவன் பாண்டி நாட்டினையே தன்னுடைய பழைய இடமாகக் கொண்டும்;

**விளக்கம் :**

" ஏதமிலா இன்சொல் மரகதமே ஏழ்பொழிற்கும்
நாதனமை ஆளுடையான் நாடுரையாய் – காதலவர்க்
கன்பாண்டு மீளா அருள்புரிவான் நாடென்றும்
தென்பாண்டி நாடே தெளி."

(திருத்தசாங்கம்-2)

பண்டைய நாடு பாண்டி நாடு என மருவியது.

" அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த
அப்பார் சடையப்பன்."

(திருவாசகம் - திருவம்மானை-11.)

" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"

(திருக்குறள்-356.)

### 8. ஊர்

119 பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவ
120 னுத்தர கோச மங்கையூ ராகவும்

**பதப்பிரிவு :**

**பத்திசெய் அடியரைப் பரம்பரத்து உய்ப்பவன்**
**உத்தர கோச மங்கை ஊராகவும்**

**பொழிப்புரை :**

அன்பினால் வழிபாடு செய்கின்ற அடியார்களை மிக மேலான நிலையிற் கொண்டு சேர்ப்பவன் திருஉத்தர கோச மங்கை என்னும் ஊரினைத் தனக்குத் தலைமைப் பதியாகக் கொண்டும்

**விளக்கம் :**

"தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்
மாதாடும் பாகத்தன் வாழ்பதியென் — கோதாட்டிப்
பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்
உத்தர கோசமங்கை ஊர்"

(திருவாசகம்-திருத்தசாங்கம்-3)

பரம் மேலானது; பரம்பரம் — மிகமேலானது; வீட்டுலகு.

## 9. பெயர்

121 ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
122 தேவ தேவன் றிருப்பெய ராகவும்

**பதப்பிரிவு :**

ஆதி மூர்த்திகட்கு அருள்புரிந்து அருளிய
தேவ தேவன் திருப்பெயர் ஆகவும்

**பொழிப்புரை :**

தொன்று தொட்டன்றி ஆதியில் மேலான பதங்கள் பெற்ற அணுசதாசிவர், அநந்தர், சீகண்டர் முதலிய காரணேசர்களுக்குப் பத முத்திகளைக் கொடுத்து அருள் செய்தற்கு ஏதுவாய் நின்ற மாதேவன் என்பது தனது சிறப்புப் பெயராகவும்;

**விளக்கம் :**

தேவ தேவன் கடவுளர்க்கெல்லாம் முதற் கடவுள்; மாதேவன் என்பது சிவபெருமானுக்கே உரிய சிறப்புப் பெயர். இது சிவபிரான் உலகவுருவினனாகவும், தொழப் படுவோனாகவும் இருக்கும் முதன்மையைக் குறிப்பது. "ஆதிபகவன் முதற்றே உலகு" என்ற திருவள்ளுவனார்க்கும் இதுவே கருத்தாம். பெருந்தேவன் என்பது சிவபிரான் பெயராதலும் கருதத்தக்கது.

"மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த் தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே"

(திருவாசகம் – திருவெம்பாவை-1)

சிவபெருமான் அனாதி முத்தன்; ஏனைய காரணக் கடவுளர் ஆதி முத்தர். ஆதிமுத்தர் உயிர்கள்; சிவபெருமான் ஒருவனே கடவுள்.

"தேவர்கோ அறியாத தேவதேவன்"

(திருவாசகம் - திருச்சதகம்-30)

இத்தேவர்களை ஆட்டுத் தேவர் என்கிறார் மணிவாசகர்.

"ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐயனே யென்றுன் அருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே
நாதனே யுனைப் பிரிவுறா அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காயமாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர் பிரானே!
திருப்பெருந்துறை மேவிய சிவனே!"

(திருவாசகம்-செத்திலாப்பத்து-5.)

"ஏரார் இளங்கிளியே எங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய் — ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று."

(திருவாசகம்-திருத்தசாங்கம்-1.)

## 10. மலை

123 இருள்கடிந் தருளிய வின்ப வூர்தி
124 யருளிய பெருமை யருண்மலை யாகவும்

**பதப்பிரிவு :**

இருள்கடிந்து அருளிய இன்ப ஊர்தி
அருளிய பெருமை அருள்மலை ஆகவும்

**பொழிப்புரை :**

அறியாமையை நீக்கி யருளிப் பேரானந்த ஆறுனது ஊர்ந்து வருகின்ற ஊர்தியாக அமைந்து அந்த இன்ப ஆற்றினைத் தன்பால் தோற்றியருளிய பெருமைவாய்ந்த திருவருளே மலையாகவும்;

**விளக்கம் :**

பேரானந்த ஆறு உயிரின் பாசங்கழுவுகின்றது. ஆற்றிற்குத் தோற்றிடமாக இருப்பதும் மலை; ஊர்தியாக இருப்பதும் மலை. அதுபோலப் பேரானந்த ஆறு தோன்றுகின்ற இடமும் இறைவன் திருவருள்; அதனைச் சுமந்து கொண்டு உயிர்க்குச் சேர்ப்பதும் திருவருள்; அருளே இறையின்பத்தை உயிர்க்குக்கொண்டுசேர்க்கும். அருளிலிருந்தே பேரின்பம் சுரக்கும். திருவருளே சிவபெருமானுக்கு மலை.

125 எப்பெருந் தன்மையு மெவ்வெவர் திறமு
126 மப்பரி சதனு லாண்டுகொண் டருளி

**பதப்பிரிவு :**

எப்பெருந் தன்மையும் எவர்எவர் திறமும்
அப்பரிசு அதனால் ஆண்டு கொண்டு அருளி

**பொழிப்புரை :**

எவ்வளவு பெரிய பாச இயல்பினையும் எவர் எவர்களுடைய பக்குவ வகையினையும் அதற்கதற்கேற்ற முறையாலும் அவரவர் வகைக்கேற்ற முறையாலும் உண்மை அறிவுறுத்தி அருள் புரிந்து

**விளக்கம் :**

உயிர் வருக்கம் மலமறைப்பின் வைத்துக் காணும் போது மூவகைப்படும். ஆணவ மறைப்பு மாத்திரம் உடையவர் விஞ்ஞானகலர்; இவர்க்கு எளிதாக உண்மையை உணர்த்தலாமாதலின் இறைவன் இவர்க்கு உள்ளத்துள் நின்றே உண்மை அறிவிப்பான். ஆணவ மறைப்பும் கன்ம முனைப்பும் உடையவர் பிரளயாகலர்; இவர்களுக்குத் தன்னுடைய திருமேனிகாட்டி முன்னின்று உணர்த்துவான். ஆணவ மறைப்பும் கன்ம முனைப்பும் மாயை மயக்கமும் உடையவர் சகலர்;

*இவர்களுக்கு மனித வடிவத்தில் ஆசானுகி நின்று உண்மை உணர்த்துவான்.*

"உரைதரும் இப்பசுவர்க்கம் உணரின் மூன்றும்;
உயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர்
நிரையின்மலம் மலங்கன்மம் மலங்கன்மம் மாயை
நிற்கும்: முதல் இருவர்க்கும் நிராதாரமாகிக்
கரையிலருட்பரன் துவிதா சத்திநிபாதத்தாற்
கழிப்பன் மலம்; சகலர்க்குக் கன்ம ஒப்பில்
தரையிலா சான்மூர்த்தி ஆதாரமாகித்
தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்."

*(சிவஞான சித்தியார்-எட்டாஞ்சூத்திரம்-2)*

*திறம் — வகை, கூறுபாடு.*

**127 நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
வேல வென்னை யீங்கொழித் தருளி
130 யன்றுடன் சென்ற வருள்பெறு மடியவ
131 ரொன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்**

*பதப்பிரிவு :*

**நாயினேனை நலம்மலி தில்லையுள்
கோலம் ஆர்தரு பொதுவினில் வருகஎன
ஏல என்னை ஈங்கு ஒழித்து அருளி
அன்று உடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன் கலந்து அருளியும்**

**பொழிப்புரை :**

*நாய்போலும் கீழான அடியேனை நன்மை நிறைந்த சிதம்பரத்தில் அழகு பொருந்திய சிற்றம்பலத்தில் வருவாயாக என்று என் வினைக்கும், பக்குவத்துக்கும் பொருத்தமாக என்னை இந்நிலவுலகிலேயே இருக்கச் செய்து நீக்கிவிட்டு ஏனையடியார்க்கு அருள் புரிந்து அந்நாளிலேயே வீடு சேர்தற்குரியவராய்த் தன்னோடு போந்த அருள் பெற்ற அடியவர் தங்கள் அறிவு தேய்ந்து தேய்ந்து இறையறிவு நிறைவிற் புகுந்து அடங்கி இரண்டறக் கலந்து சிவமாதற்கு அருள்புரிந்தும்*

**விளக்கம் :**

***சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து*** இறைவனேடு **ஒன்ருதல்** கூறப்பட்டது. ஏல — பொருந்த. அருள் பெறும் — காலவழுவமைதி, வருக என — வருகென என்று தொக்கது. அடிகளார் தமது தொழும்பராந்தன்மையில் வழுவாது பணிவினையும் தாழ்வினையும் புலப்படுத்துவாராக "நாயினேன்" என்ருர்.

**132 எய்தவந் திலாதா ரெரியிற் பாயவும்**
**மாலது வாகி மயக்க மெய்தியும்**
**134 பூதல மதனிற் புரண்டு வீழ்ந் தலறியும்**

**பதப்பிரிவு :**

**எய்த வந்து இலாதார் எரியில் பாயவும்**
**மால் அது ஆகி மயக்கம் எய்தியும்**
**பூதலம் அதனில் புரண்டு வீழ்ந்து அலறியும்**

**பொழிப்புரை :**

அங்ஙனம் அடையும் பேறு பெருத சிலர் தீயிற் பாய்ந்தார்கள்; சிலர் சேரவேண்டுமென்ற வேட்கைப் பித்து உடையவர்களாகி மயக்கத்தை அடைந்தனர், சிலர் கூடப்பெருத வருத்தத்தால் நிலமிசை விழுந்து புரண்டு கதறினர்.

**135 கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி**
**நாத நாத வென்றழு தரற்றிப்**
**137 பாத மெய்தினர் பாத மெய்தவும்**

**பதப்பிரிவு :**

**கால் விசைத்து ஓடிக் கடல்புக மண்டி**
**நாத நாத என்று அழுது அரற்றிப்**
**பாதம் எய்தினர் பாதம் எய்தவும்**

**உரைநடை :**

கடல்புகக் கால் விசைத்து ஓடி மண்டி நாத நாத என்று அழுது அரற்றிப் பாதம் எய்தினர் பாதம் எய்தவும்

**பொழிப்புரை :**

கடலிற்போய் விழுவதற்குக் காலால் விரைந்து ஓடி நெருங்கி, "நாதனே, நாதனே" என்று உருகி அழுது கொண்டு ஓலமிட்டுக் கதறித் திருவடியை அடைந்தவர்கள் திருவடியிற் கூடும் பேறு எய்தவும்,

**விளக்கம் :**

"யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே"

என்றபடி அழுதவர்கள் இறைவன் திருவடியை அடைந்தார்கள்.

மண்டுதல் - நெருங்கிக் கூட்டமாகச் செல்லுதல்.

**138 பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்**
**139 றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்**

**பதப்பிரிவு :**

**பதஞ்சலிக்கு அருளிய பரம நாடக என்று**
**இதம் சலிப்பு எய்தநின்று ஏங்கினர் ஏங்கவும்**

**பொழிப்புரை :**

"பதஞ்சலி முனிவர்க்கு அருள் புரிந்த மேலான அற்புதக் கூத்தனே!" என்று வாழ்த்தி மனம் சோர்வடைய நின்று விம்மி அழுது நின்றவர் அழுது நிற்கவும்,

**விளக்கம் :**

பதஞ்சலிக்குக் காட்டியருளிய திருநடனத்தை எண்ணியபொழுதே உள்ள உருக்கமும், விம்முதலும், ஏக்கமும் இறைவன் கருணைப் பெருக்கின் உணர்வு காரணமாக உளவாம்.

தாருகா வனத்தில் இறைவன் திருக்கூத்து ஆடினான். திருமால் அதனைக் கண்டு களித்தான். திருமாலின் அணையாகிய ஆதிசேடன் இதனைக் கேள்வியுற்றான்.

தானும் சிவபெருமான் திருக்கூத்துக் காண விரும்பித் திருமாலின் அனுமதி பெற்றுக் கயிலை சென்றான்; கயிலை மலைப் பக்கமிருந்து கடுந்தவம் புரிந்தான். சிவபெருமான் காட்சி தந்து, "அன்பனே! தில்லை வனத்தில் நாம் எக் காலமும் நடனம் புரிகின்றோம். அங்கு நீ உன்னுடைய ஆயிரம் படங்களுடன் செல்லின் மக்கள் அஞ்சுவர்; அத்திரி முனிவனும் அவன் மனைவி அனசூயையும் உன்னைப் பிள்ளையாகப் பெறப் பெருந்தவம் புரிந்துள்ளனர். ஆண்டுச் செல்" என்றனர். அவ்வாறு சென்று அனசூயை குளித்துக் கரையேறும் பொழுது அவளுடைய அஞ்சலியில் ஐந்து தலைகள் பொருந்திய சிறு பாம்பாய் ஆதிசேடன் அமர்ந்தான். அவள் அஞ்சிக் கையை உதற ஆதிசேடன் கீழே விழுந்தான்; ஆதலின், பதஞ்சலி என்னும் பெயர் பெற்றான்.

பத் — விழுதல், அஞ்சலி — கும்பிடுதல்.

"பதஞ்சலி — அஞ்சலியினின்றும் விழுந்தவன்.

"இரண்டு கைகளையுங் கூட்டிக் குவித்து நிறுத்தி உள்ளங் கைகளைக் குழியாக்கின் அஃது அஞ்சலி எனப்படும்."

(கோயிற் புராணம் உரை, ஆறுமுகநாவலர்)

"அரி அவர்க்கு உன்னையீந்தான் அன்று நீ பிறத்தல் அஞ்சி
இருதுவாய்ப் புனிதையாய்வந் தேற்றஅஞ் சலிப்பால்எய்தி
மருவும் ஐந் தலையோர்பால மாசுண மாகக் கண்டு
பரிவினுற் பயத்தா னீப்பப் பதஞ்சலி யானபண்பால்"

(கோயிற் புராணம்: பதஞ்சலிச் சருக்கம் 74.)

எழில் பெறு மிமயத் தியல்புடை யம்பொன்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவ னீண்டிய வடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளின
னொலிதரு கயிலை உயர்கிழ வோனே.

பதப்பிரிவு :

**எழில் பெறும் இமயத்து இயல்புஉடை அம்பொன்**
**பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்**
**கனிதரு செவ்வாய் உமை யொடு காளிக்கு**
**அருளிய திருமுகத்து அழகுஉறு சிறுநகை**
**இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்**
**பொலிதரு புலியூர்ப் புக்கு இனிது அருளினன்**
**ஒலிதரு கயிலை உயர்கிழவோனே.**

இறைவன் (ஆகிய) கயிலை உயர்கிழவோன் புலியூர் இனிது புக்கருளினன்—எனக் கூட்டுக.

**பொழிப்புரை :**

எழுச்சி பொருந்திய இமயமலையின் தன்மையுடைய அழகிய பொன்னால் வேயப்பெற்று விளங்குகின்ற பெரும்பற்றப் புலியூர் என்னும் தில்லை அம்பலத்தில் திரு நடம் பயில்வோனும் கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயினையுடைய உமையம்மையாருக்கும் காளிக்கும் அருள் புரிந்த திருமுகத்தில் அழகு மிகுந்த புன்சிரிப்புடைய வனும் தேவர்களது வாழ்த்தொலி இடைவிடாது முழங்கு கின்ற கயிலைமலையின் முழுமுதல் ஆட்சியாளனும் ஆகிய எம்முடைய தலைவன் கூட்டமாகத் திரண்ட அடியார் களோடு விளங்காநின்ற தில்லைப்பதியிற் புகுந்து இனிதாக அமர்ந்தருளினான்.

**விளக்கம் :**

ஒலிதரு கயிலை என்பதற்கு மந்திரவொலி இடை விடாது ஒலித்துக் கொண்டிருக்கும் கயிலை எனவும் பொருள் கூறலாம்.

இமயமலை உச்சி உயர்ந்ததாகலின் எழில்பெறும் இமையம் என்றார். இமயமலையிற்படும் ஞாயிற்றின் ஒளி பொன்வண்ணமாகப் பொலிந்து தோன்றும். இப்

—9.

பொன்னொளி பொன்வேய்ந்த தில்லை மன்றின் ஒளிக்கு உவமையாயிற்று.

**புலியூர்ப் பெயர் அமைவு :**

மத்தியந்தின முனிவன் தன் மகனுக்குக் கல்வியறிவு நிரம்பச் செய்து "சிவபுண்ணியங்களெல்லாவற்றுள்ளுஞ் சிறந்தது சிவலிங்க பூசை, சிவதலங்கள் எல்லாவற்றுள்ளுஞ் சிறந்தது சிதம்பரம்" என்று அருள் புரிந்து "சிவார்ச்சனம் ஆர்ச்சனமாகிற் பவமகலும், பரபோகம் பெறலாகும்" எனப் பகர்ந்தான்.

(கோயிற் புராணம்)

தந்தையின் சொற்படி, அவன் சிதம்பரஞ் சென்று அன்பொடு சிவபூசை செய்து வாழ்வானாயினன்.

அவன் சிறந்ததோர் இடம் நாடிச் செல்கையில் ஓர் ஆலமரத்தடியில் ஒரு சிவலிங்கங்கண்டு அதனையே வழிபட்டு வந்தான். சிவபூசைக்கு வேண்டிய பூக்களை விடிந்தபின் எடுப்பின் அவை வண்டுகள் ஊதி எச்சிலாக்கப்பட்டவையாம் எனக்கருதி விடியுமுன் பூ எடுக்க எண்ணினான். விடிவதற்கு முன் மரங்களில் ஏறிப் பூ எடுப்பதற்கு மரங்கள் பனிமூடி வழுக்கின. ஆதலின், வழுக்காது ஏறுவதற்கேற்ற புலியின் நகங்களை இறைவனை வேண்டிப் பெற்றதுடன் விடியுமுன் பொருள்கள் தெரிவதற்குக் கால்களிலும் கைகளிலும் கண்களையும் வேண்டிப் பெற்றான். ஆதலின் இம்முனிவன் புலிக்கால் முனிவன் (வியாக்கிர பாதன்) எனப் பெயர் பெற்றான். புலிக்கால் முனிவன் வழிபட்ட தில்லைமாநகரம் புலியூர் எனப் பெயர் பெற்றது.

**காளிக்குத் திருக்கூத்துக் காட்டியது:**

தாருகாசுரனைக் கொல்லத் துர்க்கை காளியை ஏவினாள். காளி அவனோடு போர்புரிந்தாள்; அவனுடலைக் கிழித்தாள். அதிலிருந்து சிந்திய குருதியிற்

பின்னும் பல அரக்கர் தோன்றினர். ஆதலின் அவன் செங்குருதியைக் காளி தானே முழுதும் பருகினுள்; குருதி வெறிபிடித்து உலகிலுள்ள உயிர்களை யெல்லாங் கொன்று இரத்தங்குடிக்க ஆசைப்பட்டாள் காளி. இக் கொடுமையை ஒழிக்கக் கருதி இறைவன் அவள் முன் தோன்றித் திருக்கூத்தாடினுன். அதனைக் கண்டதும் காளி தனது வெறி நீங்கப் பெற்ருள்; இறையருளும் பெற்ருள்.

"வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
கன்றிவரு கோபமிகு காளிகதம் ஓவ
நின்றுநடம் ஆடியிடம் நீடு மலர்மேலால்
மன்றல்மலி யும்பொழில்கொள் வண்திரு வையாறே"

(திருஞானசம்பந்தர்.)



# 3. திருவண்டப் பகுதி

## இணைக்குறளாசிரியப்பா

*திருச்சிற்றம்பலம்*

அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்க
மளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
யொன்றனுக் கொன்று நின்றெழில் பகரி
னூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
வின்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியுந்
தோற்றமுஞ் சிறப்பு மீற்றொடு புணரிய
மாப்பே ரூழியு நீக்கமு நிலையுஞ்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியிற்
கொட்கப் பெயர்க்குங் குழகன்; முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன்: படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள்; காப்பவை
கரப்போன்; கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள்; திருத்தகு
மறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன்; நாடொறு
மருக்கனிற் சோதி யமைத்தோன்; றிருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் றிண்டிறற்
றீயின் வெம்மை செய்தோன்; பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன்; மேதகு
காலி னூக்கங் கண்டோ னிழறிகழ்
நீரி லின்சுவை நிகழ்ந்தோன்; வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோ னென்றென்
றெனைப்பல கோடி யெனைப்பல பிறவு
மனைத்தனைத் தவ்வயி னடைத்தோ னஃதான்று
முன்னோன் காண்க! முழுதோன் காண்க!
தன்னே ரில்லோன் றானே காண்க

வேனத் தொல்லெயி றணிந்தோன் காண்க!
கானப் புலியுரி யரையோன் காண்க!
நீற்றோன் காண்க! நினைதொறு நினைதொறு
மாற்றேன் காண்க வந்தோ! கெடுவே
னின்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
வன்னதொன் றவ்வயி னறிந்தோன் காண்க!
பரமன் காண்க! பழையோன் காண்க!
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
வற்புதன் காண்க வநேகன் காண்க!
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க!
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க!
பத்தி வலையிற் படுவோன் காண்க!
வொருவன் என்னு மொருவன் காண்க!
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
வணுத்தருந் தன்மையி லையோன் காண்க
விணைப்பரும் பெருமையி லீசன் காண்க
வரியதி லரிய வரியோன் காண்க!
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க!
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க!
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
வந்தமு மாதியு மகன்றோன் காண்க!
பந்தமும் வீடும் படைப்போன் காண்க!
நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க!
கற்பமு மிறுதியுங் கண்டோன் காண்க!
யாவரும் பெறவுறு மீசன் காண்க!
தேவரு மறியாச் சிவனே காண்க!
பெண்ணா ணலியெனும் பெற்றியன் காண்க!
கண்ணா லியானுங் கண்டேன் காண்க
வருணனி சுரக்கு மமுதே காண்க!
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க!
சிவனென யானுந் தேறினன் காண்க
வவனெனை யாட்கொண் டருளினன் காண்க!
குவளைக் கண்ணி கூறன் காண்க
வவளுந் தானு முடனே காண்க!

பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
வைம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
வெந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
வெஞ்சா வின்னரு ணுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
யிருமுச் சமையத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணந்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடு
மவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
வாயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழூ ழோங்கிய நங்க
ளிருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்
துருவ வருணீ ரோட்டா வருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகின்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
யருச்சனை வயலு ளன்புவித் திட்டுத்
தொண்ட வுழவ ராரத் தந்த
வண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க!
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
வருந்தவர்க் கருளு மாதி வாழ்க
வச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க!
நிச்சலு மீர்த்தாட் கொள்வோன் வாழ்க!
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க

வெய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க!
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க!
பேரமைத் தோளி காதலன் வாழ்க
வேதிலர்க் கேதிலெம் மிறைவன் வாழ்க!
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க!

நச்சர வாட்டிய நம்பன் போற்றி!
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி!
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி! நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோ
னுள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்;
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்;
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்;
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கு

மொழிவற நிறைந்து மேவிய பெருமை
யின்றெனக் கெளிவந் தருளி
யழிதரு மாக்கை யொழியச்செய்த வொண்பொரு
ளின்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
யளிதரு மாக்கை செய்தோன் போற்றி

ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
யாற்றா வின்ப மலர்ந்தலை செய்யப்
போற்றா வாக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்க
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்

திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்து
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்து
மொற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த உறைப்பவர்க் கொளித்து
மறைத்திற நோக்கி வருந்தினர்க் கொளித்து

மித்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தி னவ்வயி னொளித்து
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
யாணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயி

ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
யருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்து
மொன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயில்தொறு மின்றே பயில்தொறு

மொளிக்குஞ் சோரனைக் கண்டன
மார்மி னார்மி னாண்மலர்ப் பிணையலிற்
றாடளை யிடுமின்
சுற்றுமின்! சூழ்மின்! தொடர்மின்! விடேன்மின்!
பற்றுமி னென்றவர் பற்றுமுற் றொளித்துந்

தன்னே ரில்லோன் றானே யானதன்மை
யென்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
யறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலு
முளையா வன்பென் புருக வோலமிட்

டலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தி

னாற்றே னாக வவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தன
னேற்றார் மூதூ ரெழினகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயி னடியோ மடிக்குடி

லொருத்தரும் வழாமை யொடுக்கினன்
றடக்கையி னெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி! முறையோ?
தரியே னாயேன் றானெனைச் செய்தது
தெரியேன்; ஆவா! செத்தே னடியேற்

கருளிய தறியேன்; பருகியு மாரேன்;
விழுங்கியு மொல்ல கில்லேன்;
செழுந்தண் பாற்கடற் றிரைபு ரைவித்
துவாக்கட னள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கா றோறுந்

தேக்கிடச் செய்தனன் ; கொடியே னூன்றழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
வற்புத மான வமுத தாரைக
ளெற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ

துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
யென்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்றேன் கலக்க

வருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

திருச்சிற்றம்பலம்

---

## திருஅண்டப் பகுதி

*தில்லையில் அருளிச் செய்யப்பெற்றது*

சிவனது தூல சூக்குமத்தை வியந்தது. அதாவது அண்டம் ஓரணுவாம்படி சிவன் அண்டத்துக்கு அப்பாலாகிப் பரியனாகவும் அணுவுக்கு அணுவாகி நேரியனாகவும் நிற்கும் நிலை தோன்றச் செய்வது.

"நேரியனாய்ப் பரியனுமாய் உயிர்க்குயிரா யெங்கும்
நின்றநிலை எல்லாம்முன் நிகழ்ந்து தோன்றும்"
– சிவஞான சித்தியார்.

**திருஅண்டப் பகுதி** என்பது முதற்குறிப்பு. **அண்டப் பகுதி** என்று இவ்வகவல் தொடங்கலின் இதற்குத் **திருவண்டப் பகுதி** என்ற பெயர் வந்தது; **ஆத்திசூடி** என்று தொடங்குகிற நீதிநூற்கு **ஆத்திசூடி** என்றும், **வாக்குண்டாம்** என்று தொடங்குகிற நூலுக்கு **வாக்குண்டாம்** என்றும் பெயர் வந்தமை போல.

அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்க
மளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
யொன் றனுக் கொன்று நின்றெழில் பகரி
னூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
வின்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்;

**பதப்பிரிவு :**

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்புஅருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன் றனுக்கு ஒன்று நின் றஎழில் பகரின்
நூற்றுஒரு கோடியின் மேற்பட விரிந்தன
இல் நுழை கதிரின் துன் அணுப் புரையச்
சிறிய ஆகப் பெரியோன்:

**பொழிப்புரை :**

ஒன் றுக்கு ஒன் று மேலாக நின் ற எழுச்சியினை எடுத்துரைக்குங்கால் நூற்றொரு கோடிக்கதிகமாகப் பரந்தனவாகி விரிந்துள்ள பேருலகப் பிரிவுகளின் திரண்ட உருண்டை வடிவின் பெருகிய விளக்கமுடைய எல்லையறிய முடியாத இயற்கையும் செழுமை மல்கிய பெருமை மிக்க தோற்றமும், இறைவனுடைய பரியனாந் தன்மையோடு ஒப்பிடுங்கால், வீட்டினுள் புகுகின் ற பகலவன் ஒளிக் கதிரினிற் காணப்படும் நெருக்கமான அணுக்களைப் போலச் சிறியனவாகும்: அவ்வளவு பெரியனாய் எங்கும் நிறைந்த தன்மையன் இறைவன்.

**விளக்கம் :**

நூற்றொரு கோடியென்பது ஈண்டு அளவின்மை குறித்து நின் றது. அணுக்கள் இத்துணையன என் று நம்மால் கணக்கிட முடியாது; ஓர் அண்டத்துள் அடங்கிய பொருள்களும் அளவிட முடியாதன. நின்றெழில் — நின் ற எழில், பெயரெச்சத்து அகரம் தொக்கது. உண்டை — உருண்டை என்பதன் இடைக்குறை. பகரின் – எல்லை சொல்ல முடியாத

பொருளைச் சொல்ல முயலின், பிறங்கு+அம்=பிறக்கம். ஆராயுந் தோறும் குறையா வளமை உடைமையின் வளப்பெருங்காட்சி என்றார். பிறக்கம் — குவியல், தொகுதி. உலக அண்டம் உருண்டை வடிவு என்பதைப் பழந்தமிழரே தெரிந்திருந்தனர் என்பதை "அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்" என்பது உணர்த்தும். ஐம்பூதங்களாலாகிய எல்லா வகையான உலகங்களையும் தன்னுட்கொண்ட தொகுதி அண்டம் அல்லது பேருலகு (Material universe) எனப்படும். கதிரவனைச் சுற்றி யுள்ள உலகங்களின் தொகுப்பு ஓர் அண்டமாகும். வீட்டுக் கூரை முகட்டின் சிற்றிடுக்கல் வழியே ஞாயிற்றின் கதிர்களில் விரைந்தாடும் துகள்கள் இல் நுழை கதிரின் துன் அணுக்கள். புரைய — உவமச் சொல்.

**தெரியின்,**

**வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியுந்**
**தோற்ற முஞ்சிறப்பு மீற்றொடு புணரிய**
**மாப்பே ரூழியு நீக்கமு நிலையுஞ்**
**சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்**
**தெறியது வளியிற்**
**கொட்கப் பெயர்க்குங் குழகன்**

*பதப்பிரிவு :*

**தெரியின்,**

**வேதியன் தொகையொடு மாலவன் மிகுதியும்,**
**தோற்றமும், சிறப்பும், ஈற்றொடு புணரிய**
**மாப் பேர் ஊழியும், நீக்கமும், நிலையும்**
**சூக்க மொடு தூலத்துச் சூறை மாருதத்து**
**எறியது வளியின்**
**கொட்கப் பெயர்க்கும் குழகன்**

**பொழிப்புரை :**

ஆராய்ந்து பார்த்தால், படைப்புக் கடவுளரின் பெருந்திரளோடு காப்புக் கடவுளரின் பெருங் கூட்டமும்

அவர்களுடைய சிறப்புத் தொழில்களான படைத்தல் காத்தல்களும், அவர்களுடைய வாழ்நாட்களின் எல்லை யும், அவை முடிதலோடு கூடிய மிகப் பெரிய ஊழிக் காலமும், அவ்வூழியின் நீங்குதலும், மீண்டும் நான்முகன் முதலிய உயிர்களும், படைத்தல் காத்தல் தொழில்களும் தோன்றி நிற்றலும், தத்தம் காரண நிலை யில் அருவ நுண் பொருள்களாகவும்காரியநிலையில்உருவப் பருப்பொருள்களாகவும் இருந்து, நுண்பொருள் பருப் பொருள்களை இயக்குதலில் பெரிய புயற் காற்றின் சுழற்சியின்கண் சிறு காற்றுப் போல, ஒன்றன் பின் ஒன்றாகச் சுழன்று வரும்படி நிலை மாற்றஞ் செய்யும் இளையோன் சிவபெருமான். அவன் இத்துணை நுட்பப் பொருளாகவும் உளன்.

**விளக்கம் :**

நான்முகக் கடவுளரும் திருமால்களும் பலர் உளர்:

" நூறு கோடி பிரமர்கள் நொந்தினர்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே."

(திருநாவுக்கரசர் தேவாரம்)

தொகை - எண்; வாணாட்டொகுதியையுங் குறிக்கும்.

காரண தத்துவங்களாகிய சூக்கும தத்துவங்களை யும், காரியப் பொருள்களாகிய தூல தத்துவங்களையும், சொல்லுலகு பொருளுலகுகளையும் ஒடுக்கும்போது நான் முகன் மால் இவர்களையும் இறைவன் தன் அருள் வெளி யில் ஒடுக்கி விடுவான். இது மாசங்காரம், பேரொடுக்கம்; ஒவ்வொரு பகுதியை மட்டுமின்றி முழுதும் ஒடுக்கு பவன் சிவபெருமான்.

" இறுதியாங் காலந்தன்னில் ஒருவனே; இருவருந்தம்
உறுதியில் நின்ற ரென்னில், இறுதிதான் உண்டாகாதாம் "

(சிவஞானசித்தியார்)

சிறப்பு — காத்தல். மாப்பேர் — ஒரு பொருட் பன் மொழி. சூறை மாருதம்—சூறைக்காற்று. எறி—மிக்கு வீசுதல். வளி — சிறு காற்று.

ஒடுக்கமும் தோற்றமும் மாறி மாறி வந்திடு தற்கும், நுண் பொருள் பருப்பொருளை இயக்குதற்கும் சூறைக்காற்றின் அகப்பட்டுச் சுழலும் சிறு காற்றினை உவமையாகக் கூறினர்.

எறியது வளி—எறியதன்கண் வளி – பெருவீச்சின் கண் சிறு காற்று. வளியின் என்பதில் 'இன்' உவம உருபு. எறியது என்பதில் 'அது' பகுதிப் பொருள் விகுதி; அன் சாரியையும் ஏழனுருபும் தொக்கன. 'அது' பெயர்ப் பொருளையே அசைத்து நின்றதொரு சொல்' என்பர் இலக்கணக்கொத்துரை ஆசிரியர்.

கொட்கல்—சுழலல்.

"அந்தரக் கொட்பினர் வந்துடன் காண."

(திருமுருகாற்றுப் படை.)

குழகன் — இளையோன். "மழவும் குழவும் இளமைப் பொருள." (தொல்காப்பியம்.)

இறைவன் தான் பெயராது குழகனயிருந்து, எல்லாப் பொருள்களையும் உலகினையும் பெயர்க்கிருன் என்பதாம்.

சூக்கமொடு தூலத்துக் கொட்க — அருநிலையோடு கூடிய பருநிலையில் மாறி மாறி நின்று சுழலும்படி.

முன் இயல்பாக வீசிய சிறு காற்றனது சூறைக் காற்று வீசியவுடன் அதன் ஆற்றலில் அகப்பட்டுச் சுழலு கிறது. அதுபோல உலகத்தின் இருப்பு நிலையில் உலகப் பொருள்களை அவற்றின் உருக்கெடாமல் உள் நின்று ஆட்டுவிக்கின்றன் பெருமான். பின்னல் அழி நிலையில் அவற்றின் உருவைக் குலையச் செய்கிருன். தெரிதலின் அருமை நோக்கித் 'தெரியின்' என்றார். சிவபெருமான், நுண்ணிய பொருள்கள் பலவற்றுள்ளும் நுண்ணியனக இருந்து, அவற்றை இயக்கித் தொழிற்படுத்துகிருன், எல்லா உயிர்களையும் இறுதிக் காலத்தில் தன்னகத்து ஒடுக்கிக் கொள்கிருன். மீட்டும் அவனே படைப்பாதித்

தொழில்களைச் செய்கிறான். இவ்வாறு முத்தொழில்களை ஒன்றன்பின் ஒன்றாக நிகழச்செய்தும், தான் என்றும் மாறாத இளையனாகவிருக்கிறான் என்பதாம்.

முழுவதும்
13 படைப்போற் படைக்கும் பழையோன், படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள், காப்பவை
கரப்போன்; கரப்பவை கருதாக்
16 கருத்துடைக் கடவுள்

**பதப்பிரிவு :**

**முழுவதும்**
**படைப்போன் படைக்கும் பழையோன்; படைத்தவை**
**காப்போன் காக்குங் கடவுள்; காப்பவை**
**கரப்போன்; கரப்பவை கருதாக்**
**கருத்துடைக் கடவுள்;**

**பொழிப்புரை :**

பிரகிருதி மாயாதத்துவ புவனங்களைப் படைப்போனாகிய நான்முகனைப் படைக்கும் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய முந்தையோன்; நான்முகன் படைத்தவற்றைக் காப்போனாகிய திருமாலைக் காக்கும் கடவுள்.

இவ்வாறு காக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும், அவற்றின் மேம்பட்ட அசுத்தமாயை சுத்தமாயைகளின் காரியமாகிய தத்துவ புவனங்களையும் அவ்வவற்றின் முதற்காரணத்து ஒடுக்கி அருநிலையில் நிற்கச் செய்வோன்; அங்ஙனம் ஒடுக்கப்பட்டவற்றை மீளப் படைக்க வேண்டுமென்று கருதாது சில காலம் இளைப்பாற்ற வேண்டுமென்ற எண்ணமுடைய கடவுள்;

**விளக்கம் :**

அயன், மால், உருத்திரன் என்போர் ஒவ்வொரு பகுதிக்கு அவர் அவர் செய்த புண்ணியச் சிறப்பால்

முத்தொழில் செய்பவராகச் சிவபெருமானால் நியமிக்கப் பட்டவரே அன்றி, அவர்கள் முத்தொழில் செய்தலில் சுதந்திரர் அல்லர்.

"விரைக்கம லத்தோன் மாலும் ஏவலான் மேவினோர்கள்
புரைத்ததி கார சத்தி புண்ணியம் நண்ணலாலே"
(சிவஞானசித்தியார்)

உருத்திரன், அயன் மாலொடுங்கூடக் குண தத்துவத்தில் வைகுவான்; அவன் பிரகிருதி புவன முடியவே சங்கரிப்பான். பிரகிருதியின் மேற்பட்ட புவனங்களுக்கு அவன் சங்கார காரணனல்லன்; அவன் முக்குணங்களோடு கூடிய குணிஉருத்திரன். சுத்த மாயா புவனந்தம் அழித்து மூவர்க்கு மேலாய் விளங்குபவன் சிவன்.

"செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை
மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி"
(திருவாசகம்)

தோற்றுவிக்கப்பட்ட பொருள் அழிக்கப்படும் வரை அழியாது. ஆதலின், காத்தலென்றொரு தொழில் வேண்டா வெனின், படைக்கப்பட்ட பொருளினை 'இவ்வளவும் நிலைநிற்க' என்று இறைவன் கருதானாயின் நிலை நிற்காது. ஆகலின், காத்தலும் தொழிலாயிற்று.

"தண்ணீர்க் குடம் நிலைபெறுதல் அதனைத் தாங்கிச் செல்வோனது முயற்சியின்றி அமையாதவாறு போலத் தோன்றிய பிரபஞ்சம் ஒடுங்கும் அளவும் நிலைபெறுதலும் முதல்வனது முயற்சியின்றி அமையா தென்றுணர்க. அம்முயற்சியாவது தோன்றிய பிரபஞ்சம் ஒடுக்கம் வருங்காறும் நிலைபெறுக என்னும் இறைவனது ஆணையாகிய சத்தி சங்கற்பமே. இனிப் பிரபஞ்சத்துட்பட்ட உயிர்ப் பொருள்களும் உயிரில் பொருள்களும் முதல்வனால் ஏவப்படும் த்த்தங்

காரியத்தின் எல்லையைக் கடவாமல் நிற்றல் நிலை யென்பாரும் உளர். அதுவும் நிலை என்பதனுல் அடங்கும்.”

(சிவஞான பாடியம்)

எவற்றையும் படைக்க வல்லவன், தான் வேருெரு வனுல் படைக்கப்பட்டுப் பிறத்தல் இலனுதல் வேண்டும். எல்லாவற்றையும் காப்போன், தான் பிறத்தலும் பிறரால் காக்கப்படுதலுமிலனுதல் வேண்டும். நான் முகனும், திருமாலும் பிறந்து, இருந்து, இறந்தமை காணப்படுதலின் அவர்கள் முத்தொழிற்குஞ் சுதந்திரர் அல்லர். உயிர்கள் வினைப்பயன் துய்த்துக் களைப்பன. ஆகலின், அவைகளை இளைப்பாற்றுதற் பொருட்டு இறைவன் ஒடுக்குகிருன்.

"அழிப்பு இளைப்பாற்றல்"

(சிவஞான சித்தியார்)

ஒடுக்கிய உயிர்களை மீளப் பிறப்பிக்குமுன் சூக்கும ஐந்தொழிலால் அவைகளை இளைப்பாற்றி மறு பிறவிக்குத் தகுதிப் படுத்துகிருன் இறைவன்.

**திருத்தகு**
**17 மறுவகைச் சமையத் தறுவகை யோர்க்கும்**
**வீடுபே ருய்நின்ற விண்ணேர் பகுதி**
**19 கீடம் புரையுங் கிழவோன்**

**பதப்பிரிவு :**

**திருத்தகும்**
**அறுவகைச் சமையத்து அறுவகையோர்க்கும்**
**வீடு பேருய் நின்ற விண்ணேர் பகுதி**
**கீடம் புரையும் கிழவோன்;**

**பொழிப்புரை :**

கடவுட் கொள்கையாம் சிறப்பு வாய்ந்த ஆறு வகையான மதங்களில் நின்ருெழுகி ஆறு விதமாக ஆராய்கின்ற அவரவர்கள் முடிவாகக் கொள்கின்ற

தத்துவங்களின் பேற்றினை அவர்களுக்கு அருளும் முத்திப்பயனாகி நிலைபெற்ற உரிமையுடையன். அவர்கள் பெறுகின்ற தேவர்களின் வாழ்க்கைக் கூறு சிவன் அளிக்கின்ற பரமுத்தியை நோக்கப் புழுக்களின் வாழ்க்கை போன்றது. மேலான பேரின்பம் அளிக்கக் கூடிய பரமுத்திப் பேறு அளித்தற்கும் உரிமையாளன் சிவபெருமானே.

**விளக்கம் :**

'வீடு பேறாய் நின்ற கிழவோன்' என முன்னரும் கூட்டுக. அறுவகைச் சமயத்தவர்க்கும் அவர்கள் ஆராய்வுக் கேற்ற தத்துவங்கள் வரையே அவர்கள் அறிவு செல்லும். அந்தத் தத்துவபதியினிடமாக இருந்து அவர்களுக்கு அவ்வப்பதத்தை முத்தியாக அளிப்பவனும் சிவபெருமானே. கடவுட் கொள்கை யில்லாத சமயங்களை நீக்குதற்குத் "திருத்தகும் அறுவகைச் சமயம்" என்றார். சிவபெரு மானுடைய திருவடிப் பேற்றினை நோக்க விண்ணுலக வாழ்வு புழுக்களின் வாழ்க்கை போன்றதாதலின் 'விண்ணோர் பகுதி கீடம்புரையும் கிழவோன்' என்றார்.

"கொங்குலா வரிவண்டி னிசைபாடுமலர்க் கொன்றைத்
தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே"

(தேவாரம்)

"கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு"

(திருவாசகம்)

ஏனைச் சமயத்தார்க்கு முப்பத்தாறு தத்துவம் வரையில்தான் அறிவு செல்லும். சித்தாந்த சைவ சமை யத்தவர்க்கே தத்துவாதீதனாகிய சிவபெருமான் திரு வருளில் அறிவு பொருந்தும். "முப்பதும் ஆறும் படி முத்தி ஏணி" என்றார் திருமூலர்.

சேவடிபடரும் செம்மல் உள்ளத்தவர்க்கு முத்தி முருகப்பெருமான் திருவடிப் பேறே எனத் திருமுருகாற் றுப்படை கூறுகிறது.

" மண் பொருந்தி வாழ்பவர்க்கும், மாதீர்த்த வேதியர்க்கும்
விண் பொருந்து தேவர்க்கும் வீடுபேறய் நின்றனே."

(திருநாவுக்கரசர் தேவாரம்.)

" அறுவகைச் சமையத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் "

(சிவஞான சித்தியார்.)

"அறுவகைப்பட்ட சமையங்களில் நின்று கொண்டு அவற்றுள்ளும் பல வேறு வகைப்பட ஓர்த்து உணர்கின்ற அவரவர் கொண்ட முதற் பொருளாய்"

(சிவஞான முனிவர் உரை.)

19 நாடொறு
மருக்கனிற் சோதியமைத்தோன், றிருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் றிண்டிறற்
றீயின் வெம்மை செய்தோன், பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன், மேதகு
காலி னூக்கங் கண்டோ னிழறிகழ்
25 நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோ னென்றென்
றெனைப்பல கோடி யெனைப் பல பிறவு
28 மனைத்தனைத் தவ்வயி னடைத்தோ னஃதான்று

*பதப்பிரிவு* :

நாள் தொறும்
அருக்கனில் சோதி அமைத்தோன், திருத்தகு
மதியில் தண்மை வைத்தோன், திண்திறல்
தீயின் வெம்மை செய்தோன், பொய்தீர்
வானில் கலப்பு வைத்தோன், மேதகு
காலின் ஊக்கம் கண்டோன், நிழல் திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன், வெளிப்பட
மண்ணில் திண்மை வைத்தோன் என்று என்று
எனைப் பல கோடி எனைப் பல பிறவும்
அனைத்து அனைத்து அவ்வயின் அடைத்தோன்;
அஃது அன்று,

**பொழிப்புரை :**

ஒவ்வொரு நாளும் சூரியனிடத்தில் ஒளியைத் திகழச் செய்தவன்; அழகு சிறந்த திங்களிடத்தில் குளிர்ச்சியை அமைத்தவன்; மிகுந்த வலிமையுடைய நெருப்பில் சூட்டினை அமைத்தவன்; பொய் ஆதல் இன்றி, உள்ள பொருளாகிய வெளியில், அதுபிற நான்கு பூதங்களுக்கும் இடங் கொடுத்துப் பரந்து பொருந்துதலை அமைத்தவன்; மேல்எழுந் தகைமையுடைய காற்றிலே, பரந்து பொருள்களைச் சலித்துத் திரட்டுகின்ற எழுச்சியை நிகழச் செய்தவன்; பொருள்களின் சாயை விளங்குகின்ற தண்ணீரில் நன்றாகக் குளிர்ந்து பதஞ்செய்கின்ற தன் மையை அமைத்தவன்; யாவர்க்கும் தோன்றும்படியாக நிலத்திலே கடினத்தன்மையை அமைத்தவன் என்று பல கோடியாகவும், இவ்வாறே எத்தனையோ பல கோடிக் கணக்கான பிற பொருள்களிலும் அவ்வவற்றின் குணங்களையும் தொழில்களையும் அவ்வளவுக்கு அவ் வளவு அவ்வவ்விடங்களில் அடக்கிவைத்தவன். அதுவு மல்லாமல்,

**விளக்கம் :**

சூரியனுக்குப் பேரொளியும் சந்திரனுக்குத் தண்ணொளி யும், தீக்கு வெம்மையும், ஏனைய பூதங்களுக்கு அவ்வவற் றிற்குரிய குணங்களும் தொழில்களும் இயற்கையல்ல; இறைவனால் அமைக்கப்பெற்றனவே. இரவிற் கதிரவன் ஒளியின்மையின் நாள்தொறும் இறைவனிடமிருந்து பகலில் ஒளியைப் பெறுவதாகக் கூறுவர். உலகாயதர் வான் என்ற ஐந்தாவது பூதத்தின் உண்மையைக் கொள் ளாதவர்; ஆதலின் அவர்களை மறுத்து வான் என்ற ஐந்தாவது பூதம் உள் பொருள் என்று உணர்த்துதற்குப் பொய்யில் வான் என்றார். கலத்தல்—பரத்தல். வெம்மை வேறு, ஒளி வேறு. சூரியனில் ஒளி மிகுதி, வெம்மை குறைவு. தீயில் வெம்மை மிகுதி, ஒளி குறைவு; காலின் ஊக்கம் — காற்றின் வீசுதல் மிகுதி; எப்பொழுதும் இயங்கிக் கொண்டேயிருத்தலின் காற்று கால் எனப் பட்டது.

முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் றானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறு நினைதொறு
மாற்றேன் காண்க வந்தோ கெடுவே
னின்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
வன்னதொன் றவ்வயி னறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன் மால்காணாப் பெரியோன் காண்க
வற்புதன் காண்க வநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
வொருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க
வணுத்தருந் தன்மையி லையோன் காண்க
விணைப்பரும் பெருமையி லீசன் காண்க
வரியதி லரிய வரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
வந்தமு மாதியு மகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க
கற்பமு மிறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறு மீசன் காண்க
தேவரு மறியாச் சிவனே காண்க
பெண்ணா ணலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானுங் கண்டேன் காண்க
அருணனி சுரக்கு மமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க

வவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
வவளுந் தானு முடனே காண்க

*பதப்பிரிவு :*

முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்நேர் இல்லோன் தானே காண்க
ஏனத் தொல் எயி(று) அணிந்தோன் காண்க
கானப் புலி உரி அரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறும் நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்இசை வீணையில் இசைந்தோன் காண்க
அன்னது ஒன்று அவ்வயின் அறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொல்பதம் கடந்த தொல்லோன் காண்க
சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையில் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரி பொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத் தரும் தன்மையில் ஐயோன் காண்க
இணைப்பு அரும் பெருமையில் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவி எப்பொருளும் வளர்ப்போன் காண்க
நூல் உணர்வு உணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க

யாவரும் பெற உறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண் ஆண் அலி எனும் பெற்றியன் காண்க
கண்ணால் யானும் கண்டேன் காண்க
அருள் நனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியில் சேவடி தீண்டினன் காண்க
சிவன் என யானும் தேறினன் காண்க
அவன் எனை ஆட்கொண்டு அருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க.

**பொழிப்புரை :**

பொருள்கள் எல்லாவற்றிற்கும் முன்னே உள்ள முந்தைப் பழம்பொருளானவன் என்பதனை உணர்ந்து தெளிக. ஒவ்வோர் இறைமைக் குணத்திலும் நிறைவு வாய்ந்தவன். தனக்கு வேறு ஒப்புப் பொருள் இல்லாதவன். தனக்குத் தானே ஒப்பானவன். பண்டு தோன்றிய திருமாலாகிய பன்றியின் பற்களை மார்பிற் பூண்டவன், காட்டுப் புலியின் தோலை இடுப்பில் உடுத்தியவன் என்பதைத் தெளிக. திருநீற்றைப் பூசிய செம்மேனியன் எனத் தெளிக. திருநீறு அணிந்த கோலத்தை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் பிரிவாற்றாமையால் துயருறுவேன் என்பதனைத் தெளிக. இறைவனைப் பிரிந்திருந்தால் ஐயோ கெட்டொழிவேன், இனிய ஓசையானது வீணையின் பண்ணில் வேறின்றிக் கலந்திருந்தல் போல உயிர்களோடும் உலகப் பொருள்களோடும் அத்துவிதமாய்க் கலந்திருப்பன் என்பதனை அறிக. அத்தகைய இசைஒன்றினை அவ்வீணையில் அமைக்கும் முறை தெரிந்தோன் அவனே என்பதைத் தெரிந்து கொள்வாயாக, எவற்றிற்கும் மேலானவன் என்றறிக. எவற்றிற்கும் பழமையானவன் என்பது அறிக. அயனும் அரியும் தெரிந்து கொள்ளமுடியாத

பெருமையுடையவன் என்பதை அறிந்து கொள்வாயாக. வியத்தகு செயல்களைச் செய்பவன் என்பதனை அறிக. பலபல வடிவங்களை எடுப்பவன் என்பதனை அறிவாயாக. சொல்லின் அளவுக் கெட்டாத பழமையோன் என்று தெளிக. வாக்கேயன்றி மனமும் சென்று எட்டமுடியாத உயர்ந்த நிலையினன்; அவ்வாறு எட்டாத தூரத்தி லிருப்பினும் அன்பர் பத்தியோடு வழிபட்டால் அவ் வலையினுள் அகப்படுவான் என்பதைத் தெரிந்துகொள்க. திருநான்மறை முடிவாகிய உபநிடதம் ஒருவன் (ஏகன்) என்று ஏத்தும் பரம்பொருளே சிவபிரான் என்பது தெளிக. பரந்த உலகெங்கணும் நிறைந்து பரந்தவன் என்பதனைத் தெளிக. அவ்வாறு அண்டமெங்கணும் கலந்து பெரியோனாய் நிறைவுற்றிருப்பினும் அணுவிற் கணுவாய்க் காணப்படும் மிக நுண்ணிய தன்மையில் வியப்புறும் படியாக மிகமிக நுண்ணியன் என்பதைத் தெரிக. ஒப்பிடுதற்கரிய பேருருவாந் தன்மையில் தலைமையானவன் என்று உணர்க. அருமைப்பண்பில் அருமையான பொருள்கள் பலவற் றுள்ளும் அருமையிலும் அருமையுடையவன். எல்லாப் பொருள்களையும் பொருந்திக் கலந்திருந்து அவற்றை அறிவிலும் உருவிலும் ஆக்கத்திலும் ஓங்கச் செய்பவன் என்று தெரிக. நூற்பொருள் உணர்ச்சியால் உணரப் படாது அவன் அருளால் விளங்கும் மெய்யுணர்வாகிய பதிஞானத்தால் மட்டும் உணரத்தக்க நுட்பமானவன். மேலாயிருக்கின்ற சுத்தமாயா தத்துவங்களிலும் மத்தி யிலிருக்கிற அசுத்தமாயா தத்துவங்களிலும் கீழாயுள்ள பிரகிருதி மாயாதத்துவங்களிலும் பரந்து நிறைந்திருக் கின்ற நிறைவுப் பொருள் என்று உணர்வாயாக. ஈறும் முதலுங் கடந்தவன் இறைவன் என்று அறிக. பிறவிக் கட்டும் அதன் நீக்கமும் ஆக்குவோன் என்பதைத் தெரிந்து கொள்க. நிலையியற் பொருளும் இயங்கியற் பொருளுமாகிக் கலந்து நிற்பவன் என்பதை உணர்க. பேர் ஊழிக்காலத்தையும் ஒடுக்க முடிவினையும் ஒருங்கே அறிந்திருப்பவன் என உணர்க. பக்குவம் வந்துற்ற

பொழுது எவ்வகையினரும் தன்னுடைய திருவடியை அடையும்படி அவர்கள்பாற் சென்று பொருந்தும் தலைமையோன் காண்க. அன்பும் அருளும் பெருத வான வரும் தெரியொணுத மங்கலப் பொருளே என்பதைத் தெளிக். பெண்ணியல்பும் ஆணியல்பும் இவ்விரண்டுங் கலந்த அலியியல்பும் என்ற எல்லாத் தன்மைகளும் ஒருங்கே பொருந்தியவன் காண்க. அத்தகையவனை ஒன்றுக்கும் பற்ருத யானும் அவன் திருவருளே கண்ணுகக் கொண்டு நோக்கினேன் என்பதைத் தெரிந்து கொள்வாயாக. அருள் மிகுதியாக ஊறுகின்ற அமுத ஊற்று என்பதைத் தெரிந்து கொள்வாயாக. அவனது அருட் பெருக்கத்தை அனுபவத்தில் உணர்ந்து கொண்டேன் என்பதைத் தெளிக. இந்நில உலகத்தில் என்னை ஆட்கொள்ளும் பொருட்டுத் தனது செவ்விய திருவடி நிலம் பொருந்த நடந்து வந்து அருள் புரிந்தனன் காண்பாயாக. சிவனைக் காணும் பக்குவம் வராத நானும் அவன் சிவபெருமானே என்று தெளிந்து கொண்டேன்; காண்பாயாக. பரம்பொருளான அவனும் என்னை அடிமை கொண்டு திருவருள் பாலித்தான் என்பது தெரிந்து கொள்வாயாக. நீலக் குவளைப் பூப்போன்ற கண்களையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திற் கொண்டவன் என்று தெரிந்து கொள்வாயாக. அருட்சத்தியாகிய அம்மையும் சத்திமாணுகிய தானும் ஒரு திருமேனியில் உடன் கலந்து அம்மையப்பராக எழுந்தருளி வந்து எனக்குக் காட்சி யருளிப் பிறவி நீக்கிப் பேரருள் புரிந்தனன் காண்க.

**விளக்கம் :**

பன்றியின் பற்களை அணிந்த வரலாறு:—

இரணியாக்கன் ஒரு காலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதாளத்திற்குச் சென்ருன். திருமால் இரணியாக்கனைக் கொல்லப் பன்றி யுருவெடுத்துப் பாதாளஞ் சென்ருன்; இரணியாக்கனைக் கொன்று பூமியை மேலெடுத்து வந்தான். பன்றி யுருவெடுத்த

திருமால் இரணியாக்கன் குருதியைக் குடித்துப் பிறரைத் துன்புறுத்தினான். சிவபெருமான் அத்துன்பம் நீக்குதற் பொருட்டு அப்பன்றியின் பல்லைப் பறித்துத் தன் மார்பில் அணிந்து கொண்டான்.

வீணையில் எழும் இனிய பண்ணில் இசை ஒலி கலந்திருத்தல் போல் இறைவன் உயிரிற் கலந்திருக்கிறான் :

" பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்
எண்ணும் சுவையும்போல் எங்குமாம் -– அண்ணல்தாள்
அத்துவிதமாதல் அருமறைகள் ஒன்றென்ன(து)
அத்துவிதம் என்றறையும் ஆங்கு.

(சிவஞானபோத வெண்பா)

" பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவை யொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கடுஇருட் சுடரொப்பாய்
மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே,

(சுந்தரர் தேவாரம்)

**சிவபெருமான் வீணை வாசிப்பவன்**

" பெருங்கடல் மூடிப் பிரளயங்கொண்டு பிரமனும் போய்
இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீளநின்று எம்மிறை நல்வீணை வாசிக்குமே. "

(திருநாவுக்கரசர் தேவாரம்–தனித்திருவிருத்தம்)

இயற்கையின் ஒவ்வோர் ஆற்றலை இந்திரன், வாயு, வருணன் முதலிய தெய்வங்களாகக் கொண்டு வழிபட்டு வந்த வேதமுனிவர்கள், பின் ஒரு காலத்து அவ்வாற்றல்கள் எல்லாம் ஒரே முழுமுதற் கடவுளின் ஆளும் சத்தியின் கூறுகளே எனக் கண்டுணர்ந்தனர். உணர்ந்து, அம் முழுமுதலை **ஏகம், சத்து** என்னும் பெயர்களாற் குறித்தனர்.

சுவேதாசுவதரம் என்னும் உபநிடதம் அம் முழுமுதல் மகாருத்திரர் எனப்படும் சிவனே எனத் தெளிவிக்கும் வகையில் பின் வருமாறு கூறுகின்றது:-

"ஒருவன் ஆவான் உருத்திரனே, இரண்டாக நிற்பான் அல்லன். அவன் இவ்வுலகனைத்தையும் தன் ஆளும் சத்திகளால் ஆளுகின்ருன்." அடிகள் முடிந்த முடிவைத் திருவுளங்கொண்டு "ஒருவன் என்னும் ஒருவன் காண்க" என அருளிச் செய்வார் ஆயினர்.

உபநிடத முடிவை உடன்பட்ட நம்மாழ்வாரும் கண்ணபிரானது உயர்வைப் பாராட்டுகையில், "ஒளி வண்ணன் என்கோ! **ஒருவன் என்(று) ஏத்த நின்ற—நளிர்மதிச் சடையன் என்கோ!** ......கண்ண னெம் மாயனையே" என்று கூறியுள்ளமை சிந்தித்தற்கு உரியது.

"ஏகனு மாகி அநேகனு மானவன்
நாதனு மானென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற"

(திருவுந்தியார்)

முற்றழிப்புக் காலத்தில் எல்லாப் பொருள்களையும் தனது திருவருளில் அடக்கிக் கொண்டு **ஒருவனுயிருந்து,** பின் உலகைத் தோற்றுவிக்கையில், அவ்வப் பொருள் தோறும் கலந்து உடனுகி நிற்றலால் பலவாகவும் உளன் முதல்வன் என்பது திருவுந்தியின் கருத்து-

"உலகே ழெனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணேக்கம் ஆடாமோ"

(திருவாசகம்-திருத்தோணேக்கம்-5)

"ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ .......
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே"

என்னும் திருநாவுக்கரசர் வாய்மொழியும் ஒப்பு நோக்கத் தக்கது.

இறைவன் சொல்லும் பொருளுமாயினுன்; மனத்தகத்தான். இத்தன்மைகள் உடையவனுயினும் இவைகளுக்கெல்லாம் எட்டாது அப்பாற்பட்டவன். சித்தமும்—மேற் சொன்ன பதமும் என்பதை உம்மை தழுவுதலின் இறந்தது தழுவிய எச்ச உம்மை. எவற்றிற்கும் எட்டாத தூரத்தினனுயினும் இறைவன் பத்திவலையில் அகப்படுவான் என்பதாம். இறைவன் ஒருவனே; எஞ்ஞான்றும் ஒரே இயல்பினன்; ஒப்பற்றவன்.

**விரிபொழில் முழுதாய் விரிந்தோன் :**

"எல்லா உலகமும் ஆனுய் நீயே"

(திருநாவுக்கரசர் தேவாரம்—திருவையாறு)

பிரமனும் மாலும் பசுஞானச் செருக்குற்றவர்களாதலின் சிவனைக் காணுது திகைத்தனர். வலைஞன் வலையை வீசிவிட்டு வாளா இருத்தல் போல் அன்பர்கள் அன்பு வலையை வீசிவிட்டிருப்பர்; வேறு ஒன்றும் வேண்ட மாட்டார். இறைவன் தானே அவ் வலையில் அகப்படுவான்.

"கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினுர்"

பேரொடுக்கக் கடவுளாகிய சிவபெருமான் எல்லா உலகங்களையும் அழித்து உயிர்களைத் தன் திருவடிகளில் ஒடுக்கிப் பேரூழிக் காலத்து நிற்றலின் "நீற்றேன் காண்க" என்றுர்.

"வெந்த சாம்பல் விரை யென் பது தன(து)
அந்த மில்லொளி அல்லா வொளி யெலாம்
வந்து வெந்தற மற்றப் பொடியணி
சந்த மாக்கொண்ட வண்ணமுஞ் சாற்றினுர்."

பொழில் — உலகம்.

" ஏழுடையான் பொழில் எட்டுடையான் புயம் என்னை முன்னாள்
ஊழுடையான் புலியூரன்ன பொன்னிவ் வுயர்பொழில் வாய்ச்
சூழுடை ஆயத்தை நீக்கும் விதிதுணையா மனனே!
யாழுடையார் மணங்காண் அணங்காய் வந்தகப்பட்டதே."

(திருக்கோவையார்)

ஐ — வியப்பு; "ஐ வியப்பாகும்" (தொல்காப்பியம்) ஈசன் — இறைவன், Supreme Being; தலைவன்–Master (Lexicon) கடவுள் எல்லாங் கடந்த தன்மையனாயினும் மெய்யுணர்வுக் கண்ணால் காணக் கூடியவன் என்று உறுதி பகர்வார்.

" கண்ணால் யானுங் கண்டேன் காண்க."

என்றார். நீங்களும் அருட் கண்ணாற் காண்க. அருளமுதும் கருணைக் கடலுமாக மாணிக்க வாசகர் கடவுளைக் காண்கிறார். மாணிக்க வாசகருக்குச் சிவபெருமான் ஞானாசிரியனாக எழுந்தருளி வந்து அருள் புரிந்தான் என்பதாம். "குவளைக் கண்ணி கூறன்" என்பது குறிப்பு. ஒருருவில் ஈரியல்பாகிய, குணகுணியாகப் பொருந்திய திருமேனி.

" ஒருரு வாயினை மான் ஆங்காரத்(து)
ஈர் இயல்பாய்"

(திருவெழு கூற்றிருக்கை - திருஞானசம்பந்தர் - தேவாரம்)

## ஆசிரியனாகிய அருள் முகில்

66 பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய

வைம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
வெந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
வெஞ்சா வின்னரு ணுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
யிருமுச் சமையத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணந்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடு
மவப்பெருந் தாப நீங்கா தசைந்தன

*பதப்பிரிவு :*

பரமஆனந்தப் பழங்கடல் அதுவே
கருமா முகிலின் தோன்றித்
திரு ஆர் பெருந்துறை வரையில் ஏறித்
திருத்தகு மின் ஒளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாள் அரவு இரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடு எழில் தோன்றி வாள்ஒளி மிளிர
எம்தம் பிறவியில் கோபம் மிகுத்து
முரசு எறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்அருள் நுண்துளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளம் திசைதிசை தெவிட்ட வரை உறக்
கேதக் குட்டம் கைஅற ஓங்கி
இரு முச்சமையத்து ஒரு பேய்த் தேரினை
நீர் நசை தரவரும் நெடுங்கண் மான் கணம்
தவப் பெரு வாயிடைப் பருகி, தளர்வொடும்
அவப் பெருந் தாபம் நீங்காது அசைந்தன;

**பொழிப்புரை :**

(அருள்வடிவான அம்மையும், அதனைக் குண மாகவும் பிழம்பாகவும் உடைய அப்பனும் சேர்ந்து திருவருள் நோக்கம் புரிய) மேலான தொன்மையாகிய பேரின்பக் கடலான அதுவே இன்னருட்சூல் கொண்ட கரிய பெரிய மேகமாகிய ஞானாசிரியனாகக் காணப் பெற்றது; பக்குவப்பட்ட உயிர்கள் விரும்பும் தன்மை நிறைந்த திருப்பெருந்துறையாகிய மலையில் எழுந்தது; சிறப்பைத்தரத் தக்க மெய்ஞ்ஞானமாகிய மின்னல் ஒளியை எண்திசைகளிலும் நிறைவாக (வியாபகமாக)ப் பரவச் செய்தது; ஐம்புலக்கட்டாகிய ஒளி பொருந்திய பாம்புகளை அஞ்சி ஓடச்செய்தது; கொடுமையான பிறவித்துன்பமாகிய முதுவேனிலை அதன் பெரிய தலையை மறைத்துக் கொள்ளச் செய்தது. அருளாசிரி யருடைய கையாகிய பேரழகு வாய்ந்த செங்காந்தள் மலர் மிகுந்த விளக்கத்தோடு விளங்கியது. எங்களுடைய எண்ணற்ற பிறவிகள் கார்காலத்துத் தோன்றும் சிவந்த இந்திரகோபப் பூச்சிகள் போன்று மிகுதியாயினமையின் ஆசிரியமேகம் பெரும்பறை ஒலி போன்ற நாத ஒலியாகிய பெரிய இடி ஓசையைச் சிறந்த பேரருளால் முழங்கச் செய்தது, ஞானாசிரியனைக் கண்ட மாணவர்களுடைய இதழ் குவிந்த மலர் போன்ற கைகூப்பிய வணக்கத்தைக் காந்தள் மலர்கள் காட்டின. குறையாது மென்மேலும் வளர்கின்ற இனிய அருள்துளிகளாகிய கருணையானது சிறுமழைத் துளிகளாயமைய, நேர்மையான ஒளி பரப்பு கின்ற அருள் ஒளிஞானப்பெருக்கம் திக்கெலாம் நிறைந் தது. இவ்வாறு அருள் ஒளி ஞானவெள்ளம் எங்கும் பொங்கி நிறையவும் தத்துவ எல்லையுட் பொருந்திய துன்பக் கொள்கைகள் நிரம்பிய குளம் செயலற்றுப் போகும்படி அருள்வெள்ளம் பொங்கிமேலெழுந்தது. அறுவகைச்சமையங்கள் கூறும் நிலையற்ற மயக்க இன்ப மாகிய கானல் நீரினைத் தண்ணீரென எண்ணி விருப்பங் கொண்டு அதனைப் பருக வருகின்ற நீண்ட கண்களை

யுடைய மான் கூட்டங்கள் மிகப்பெரிய வாயினுற் குடித்துத் தளர்ச்சியோடு பெரிய நீர் வேட்கைத் துன்பமும் நீங்காது வீணுக உழன்றன. (பக்குவான்மாக்களுக்கு அறுவகைச்சமையங்களும் மனஅமைதியைத் தர மாட்டா தனவாய்க் கழிந்தன)

**விளக்கம் :**

இறைவியும் இறைவனுமாக, அம்மையப்பராகத் திருமேனி கொள்வது உயிர்களுக்குப் பேரானந்தம் கொடுத்தற்காதலின் அந்தத் திருமேனியாகிய பரமானந்தப் பழங்கடலிலிருந்து குருவடிவமாகிய அருள் மழை உண்டாகிறது.

> " ஆணும் பெண்ணுமாய் அடியார்க்கருள்நல்கிச்
> சேணின் றவர்க் கின்னஞ் சிந்தை செயவல்லான்
> பேணி வழிபாடு பிரியா தெழுந்தொண்டர்
> காணுங் கடல்நாகைக் காரோ ணத்தானே "

(சம்பந்தர் திருமுறை-1)

கடல்நீர் ஆவியாகிச் சூல் கொண்ட மேகமாவது போல, பரமானந்தக் கடல் அருட் சூல் கொண்ட கருமா முகிலாகிறது. மேகம் மலேயைச் சார்ந்து குளிர்ந்து மழை பொழிதலின், குருவடிவிற் பொருந்தித் தண்ணருளாகிப் பொழியும் திருவருள் உருவைத் " திருஆர்பெருந்துறை வரையில் ஏறி " என்ருர். மழைபொழியு முன் மின்னலேத் தோற்றுவிக்கும்; அதுபோல் குருவும் பதிஞான ஒளியைத் தருவர்; அவ்வருள்ஞானம் விந்துஞானமாகிய உபதேச மொழிவழியாக வருதலின், அதனை மின்னலாகத் தோன்றும் என வெளிப்படக் கூருது ' திருத்தகு மின்னொளி " என அடைகொடுத்துக் குறிப்பாக உருவகப் படுத்தினுர். மின்னொளி இடி ஒலி கேட்டுப் பாம்புகள் அஞ்சி ஓடுவது போல அருளொளியில் ஐம்புலன்களாகிய அரவுகள் அஞ்சி ஓடும் என்ருர்;

''அஞ்சு வருமரபின் வெஞ்சினப் புயலேறு
அணங்குடை அரவின் அருந்தலை துமிய''

(புறநானூறு–261)

''மேகம் பாம்பினம் பதைப்ப மின்னி''.

(சீவகசிந்தாமணி)

ஐம்புல ஆசைகளும் உயிரின் பரந்த அறிவினை விரிந்து விளங்கவிடாது கட்டுப்படுத்தி உலகில் ஒரு பொருளைச் சுட்டும்படி அதனிடைச் செலுத்தலின் ''ஐம்புலப் பந்தனை'' என்றார். இரிதல்—அஞ்சுதல், ஓடல், கெடுதல். கார் கால மழை தொடங்கிய உடன் முது வேனில் வெப்பம் தலைமடங்கலின் ''வெந்துயர்க்கோடை மாத்தலை கரப்ப'' என்றார். பிறவி வெந்துயர்க் கோடை தலைகரந்தது என்றமையின், அஃது இனித் தலை காட்டாது என்பதாம். தோன்றி—செங்காந்தள்; இது குருமூர்த்தியின் கைக்கு உவமையாயிற்று. ஞானாசிரியன் தனது கையை மாணவன் சென்னிமேல் வைத்துக் கர தீக்கை செய்தல் மரபு. இத்தீக்கையால் ஐம்புல ஆசை அறவே ஒழியும்; பேரின்பம் மிகும்.

''தாழ்கின்ற கூந்தல் மலர்சூட்டித் தையலர்த்தோயும் இன்பத்து
ஆழ்கின்ற என்னைத் தன்பாதத்தில் ஆர்வம் அளித்துளத்தைப்
போழ்கின்ற ஐம்பொறி போழ்ந்து பஞ்சாக்கரபூரணன் மெய்
வாழ்கென்று சென்னிமலர்க்கை வைத்தான் இன்பம் மல்கியதே''

இந்திரகோபப் பூச்சி மெல்லிய செந்நிற உடம்பு வாய்ந்தது. கணக்கின்றி எடுத்த எண்ணில் பிறவிக்கு அளவற்ற இந்திரகோபப் பூச்சிகள் உவமையாயின.

''எம்தம் பிறவியிற் கோபம் மிகுத்து'' என்பதற்கு எங்கள் பிறவி வெப்பத்தில் பெருஞ்சினங் கொண்டு எனவும் குறிப்புப் பொருள் கூறலாம்.

''எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்''

(சிவபுராணம்–31)

அருள் மழை முழக்கம்—அருள் நாத ஒலியாகும்: "நாதப் பறையாளன்" என்றார் அடிகள். பக்குவமானவர் கூப்பு கரத்துக்குக் குவிந்த காந்தள் உவமையாயிற்று. கானகத்து நீர் வேட்கையோடு தண்ணீரைத் தேடிவரும் மான் கூட்டங்கள் தண்ணீரைக் காணாது கானலினை நீரென்று நினைத்து விரைந்து வந்து எய்த்தல்போல அறுவகைச் சமையத்தவரும் உண்மையான பேரின்பம் நுகராது மயங்குவர் என்பதாம்.

" பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே எனக் கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதை குணம் ஆகாமே "

(திருவாசகம்-திருத்தோணோக்கம்-1)

" சடங் கொண்ட சாத்திரத்தார் சாக்கியர் சமண் குண்டர்
மடங் கொண்ட விரும்பியராய் மயங்கியோர் பேய்த் தேர்ப்பின்
குடங் கொண்டு நீர்க்குச் செல்வார் போதுமின் குஞ்சரத்தின்
படங் கொண்ட போர்வையினான் பருப்பதம் பரவுதுமே "

(சம்பந்தர்-திருமுறை-1)

குட்டத்திலிருந்து ஓங்கிய பேய்த்தேர் எனக் கூட்டிப் பொருள் காண்க. துன்பந்தரும் குட்டங்கள் கானல் பறக்கின்ற பள்ளங்கள். அவைகளை நீரென எண்ணிச் சென்ற விலங்குகள் தாகந் தணியாது குட்டத்தில் விழும்; அருள் வெள்ளம் அருந்தினோர் அறுவகைச் சமையத்தார் கூறும் மயக்க இன்பத்தில் அழுந்த மாட்டார். தண்ணீர்த் தாகத்தால் விலங்குகள் வாயினை அகலமாக விரித்தபடியே இருக்குமாதலின் "தவப்பெருவாய்" என்றார். தவப்பெருவாய்—மிகப் பெரிய வாய், அவம்—வீணாக, அசைந்தன—தளர்ந்தன, தவ—உரிச்சொல்.

*இருமுச்சமையம்—முக்கூற்று அறுவகைப் புறச்சமையம்.*

| | புறப்புறச் சமையம் 6. | புறச் சமையம் 6. | அகப்புறச் சமையம் 6. |
|---|---|---|---|
| 1. | உலகாயதம் | தருக்கம் | பாசுபதம் |
| 2. | மாத்தியமிகம் | மீமாஞ்சை | மாவிரதம் |
| 3. | யோகாசாரம் | ஏகான்மவாதம் | காபாலம் |
| 4. | வைபாடிகம் | யோகமதம் | வாமம் |
| 5. | சௌத்திராந்திகம் | சாங்கியம் | வைரவம் |
| 6. | ஆருகதம் | பாஞ்சராத்திரம் | **ஐக்கிய வாதம்.** |

## அருள் வெள்ளம்

ஆயிடை வானப் பேரியாற் றகவயிற்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழு ழோங்கிய நங்க
ளிருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்
துருவ வருணீ ரோட்டா வருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகின்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னேக்கி
யருச்சனை வயலு ளன்புவித் திட்டுத்
தொண்ட வுழவ ராரத் தந்த
வண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க

**பதப்பிரிவு.**

அ இடைவானப் பேர் யாற்று அகவயின்
பாய்ந்து எழுந்து இன்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்து எம் பந்தம் மாக்கரை பொருது அலைத்து இடித்து
ஊழ் ஊழ் ஓங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர் பறித்து எழுந்து
உருவ அருள் நீர் ஓட்டா அருவரைச்

சந்தின் வான்சிறை கட்டி மட்டு அவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறை அகில்
மாப் புகைக் கரைசேர் வண்டுஉடைக் குளத்தின்
மீக்கொள மேல்மேல் மகிழ்தலின் நோக்கி
அருச்சனை வயலுள் அன்பு வித்து இட்டுத்
தொண்ட உழவர் ஆரத் தந்த
அண்டத்து அரும் பெறல் மேகன் வாழ்க

**பொழிப்புரை :**

ஆறு சமையத்தவரும் கானல் முகந்து தவிக்கும் அச்சமயத்தில் வெளியிடத்திலுள்ள பெரிய வழியின் உள்ளிடத்தே பரந்து பெருகி எழுந்த பேரின்பமாகிய பெரிய நீர்ச் சுழற்சியானது தன்னிடத்து வந்த பொருள்களைக் கூட்டி ஒதுக்கி அதனுட் சுழலச் செய்து, எமது பாசக் கட்டாகிய பெரிய கரையினை மோதி அசைத்துத் தள்ளிஉடைத்து, முறை முறையாக வளர்ந்து கொண்டே வந்த எங்களுடைய நல்வினை தீவினைகளாகிய பெரிய மரங்களை வேரோடு பிடுங்கிப் பொங்கி எழுந்து அழகிய அருள் நீரைப் பாயச் செய்து, அவ்வருள்நீர் ஓடாது தேங்கும்படி அருமையான எல்லையாக இறைஉயிரிசைவு என்னும் பெரிய அணை அமைத்துப் பேரின்பத் தேன் பொழிகின்ற, சிவமணம் கமழ்கின்ற, சிவனுடைய அருள் திருமேனிப் பூக்கள் நிரம்பிய உள்ளமாகிய குளத்தின் மடையை வளைத்துக் கட்டிப் பொறியடக்கமென்னும் அகிலின் நறும்புகைக் கரையையடையும். ஓங்காரமாகிய சங்கொலியுடைய உள்ளக் குளத்தினில் அருள் வெள்ளமானது பெருகி நிறைய மேலும் மேலும் உவகையோடு சிந்தித்துச் சிவ வழிபாடு என்னும் வயலுள் அன்பாகிய விதை விதைத்து அகத்தொண்டு செய்கின்ற மெய்யன்பர்களாகிய மெய்ப்பயிரிடுவோர் விளைவு கொண்டு துய்க்க அளித்தருளிய சிதாகாய ஞானவெளியிற் பெறுதற்கு அரிய அருளாசிரிய மேகமாக விளங்குவோன் வாழ்க.

**விளக்கம் :**

வண்டு என்பதற்குச் சங்கு எனப் பொருள்கொண்டு ஓங்காரமாகிய சங்கு ஒலிக்கும் உள்ளம் எனப் பொருள் கொள்க. "குளவாய் கோலி" என்பதற்கு "உண்மை யாகிய நீர் மடை அமைத்து" எனவும் பொருள் கொள்ளலாம். பொறியடக்கம் கரையாக உருவகஞ் செய்யப்பட்டது எனவும் பொருள் கொள்ளலாம். அம்மையப்பராகிய மேகம் அருள் மழை பெய்வித்து அன்பர்க்குப் பாச நீக்கமும் சிவப் பேறும் அருளுவது முற்றுருவகஞ் செய்யப் பெற்ற நயம் பாராட்டத் தக்கது.

சந்து—இசைவு; இறைவனோடு கலப்பு; அத்துவித சம்பந்தம் இரண்டு மலைகளை இணைத்துப் பேரணை கட்டுவது போன்று இறைவனையும் உயிரையும் இணைத்து அருள் நீர்த்தேக்கம் கட்டப்பெறும். நிறை—பொறியடக்கம் என்றும் பொருள் கொள்க. ஓட்டா—ஓட்டி—ஓடச்செய்து. நல்ல உள்ளத்தில் சிவமணம் கமழும், அருள் பெருகும், தூய்மை குடிகொள்ளும், பிரணவ ஒலி ஒலித்துக் கொண்டிருக்கும். சிவ வழி பாட்டிற்குத் தொண்டர் அன்பும் இறைவன் அருளும் வேண்டப்பெறும். தொண்ட உழவர் கட்டி, கோலி, நோக்கி,இட்டு,ஆர்அருள் மழை பொழிகின்ற மேகன் என அமைக்கச் சிவனருள் உலகில் எந்நாளும் நிலைநிற்க என வாழ்த்துகிறார். கொழித்தல்—தெள்ளுதல், ஒதுக்குதல் "நன் பொன் மணி நிறம் கிளரப் பொன் **கொழியா**" — திருமுருகாற்றுப்படை, பழமுதிர் சோலை. "இன்பப் பெருஞ்சுழி" பேரின்பமாகிய பெருஞ்சுழியிற் பட்டோர் அதனுள் அழுந்துவராகலின் சுழி என்றார். இறைவன் தன்னிடத்திருந்து அருள் நீரைப் பாய்ச்சத் தொண்ட உழவர் அன்பு வித்திட்டு விளைத்த இன்பப் பயிர் நன்கு வளரும் என்பதாம். உருவ—அழகிய, **உரிச் சொல்.** உருவக் குதிரை மழவர் ஓட்டிய என்புழிப் போல; "உரு என்னும் உரிச்சொல் ஒரோ வழி வடிவழகை யும் உணர்த்தும்." (நச்சினார்க்கினியர்).

ஈண்டுச் சந்து (இறைவனோடு ஒற்றித்து நிற்றல்) வான் சிறையாக உருவகஞ் செய்யப் பெற்றது. குளவாய்க் கோடின்றி நீர் நிறைந்தாற் பயன்படாதாகும்; அதுபோலப் பொறியடக்கமாகிய கரையில்லாத அருள் நீர்க்குளம் அருள் நீரற்றுப் போதற்கு இடமாகும் என்பதாம். நிறை — பொறியடக்கம். செவியடக்கத்தால் ஏனைய ஓசைகள் கேளாதொழியவே ஓங்கார ஒலி இயல்பாய் ஒலிக்கும் என்பதாம்.
தொண்ட உழவர்:

"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தைவித்திப்
பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனு நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்பராகிற் சிவகதி விளையும் அன்றே."

தொண்டராகிய உழவர் அருள் நீர் வெள்ளத்தைத் தங்கள் வழிபாட்டு வயலில் நிரப்பித் தங்கள் அன்பாகிய வித்தின் முளைத்த பேரின்பப் பயிரை விளைவித்துச் சிவபோகந் துய்ப்பர். அண்டம் — வானவெளி.

## இன்ப இறைவன் வாழ்த்து.

கருப்பணக் கச்சைக் கடவுள் வாழ்க!
வருந்தவர்க்கருளு மாதி வாழ்க!
வச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க!
நிச்சலு மீர்த்தாட் கொள்வோன் வாழ்க!
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க!
வெய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க!
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க!
பேரமைத் தோளி காதலன் வாழ்க!
வேதிலர்க் கேதிலெம் மிறைவன் வாழ்க!
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க!

**பதப்பிரிவு.**

கரும் பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க்கு அருளும் ஆதி வாழ்க.
அச்சம் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்து ஆட்கொள்வோன் வாழ்க
சூழ் இருந்துன்பம் துடைப்போன் வாழ்க
எய்தினர்க்கு ஆர் அமுது அளிப்போன் வாழ்க
கூர் இருள் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேர் அமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க்கு ஏதுஇல் எம் இறைவன் வாழ்க
காதலர்க்கு எய்ப்பினில் வைப்பு வாழ்க.

**பொழிப்புரை :**

பெரிய படத்தையுடைய பாம்பை அரைப் பட்டிகை யாக அணிந்த கடவுள் வாழ்க. செயற்கு அரிய பெரிய மெய்த் தவஞ் செய்தவர்களுக்கு அருள்புரிகின்ற முதற் கடவுளே வாழ்க. பாண்டியன் முதலிய அன்பர்க்குப் பயத்தை நீக்கி அபயம் அளித்த ஞானப் போர்வீரன் வாழ்க. நாடோறும் என்னை வலிய இழுத்து அடிமை யாக் கொள்பவன் வாழ்க.

உயிர்களை வந்து சுற்றும் பெரிய பெரிய வினைத் துயரத்தைப் பற்றறக் கழிப்பவன் வாழ்க. தன்னை முறையே வந்து அடைந்தவர்க்கு நிறைந்த அமுத மாகிய பேரின்பத்தைக் கொடுப்பவன் வாழ்க. மிகுந்த நள்ளிருளில் நடனம் புரிதலோடு வளைந்து ஆடுபவன் வாழ்க. பெரிய மூங்கில் போன்ற தோள்களையுடைய சிவகாமியம்மையின் நாயகன் வாழ்க. தன்னைச் சாரும் இயைபு இல்லாதவர்களுக்குத் தனது உண்மைச் சார்பு காட்டாத எங்களுடைய இறைவன் வாழ்க. அன்பர் களுக்கு இளைத்த இடத்துச் சேமப் பொருளாயிருப்பவன் வாழ்க.

**விளக்கம் :**

பணம்—பாம்பு; சினையாகு பெயர். கச்சை—அரைப் பட்டிகை. பிறவி தோறும் வினைகள் காரண காரியத் தொடர்ச்சியாய் உயிரைச் சுற்றிக் கொள்ளுதலின் சூழ் இருந்துன்பமாயின. எய்தினர் — இருவினையொப்பு, சத்திநிபாதம், குருவருள் ஞானம் முதலியன படிப்படி யாகப் பெற்றுப் பக்குவம் அடைந்தவர்கள்.

> " இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன்தன் சத்தி தோயக்
> குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
> திரிமலம் அறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
> பெருகிநா யகன்தன் பாதம் பெறுவது சுத்த மாமே."

கூரிருட் கூத்து — உயிர்களின் உடம்பு நீங்கிய கேவல இருள் நிலையில் அவைகளை மேற் பிறவிக்குத் தகுதியாக்குதற்குச் செய்கின்ற சூக்கும ஐந்தொழிலைக் குறிக்கும். ஏது — இயைபு, சார்பு. ஏதில்பிணம் — இயைபில்லாததோர் பிணம். (பரிமேலழகர்)

> " பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
> ஏதில் பிணந்தழீஇ யற்று."

(திருக்குறள்)

காதலர்—பேரன்பினர்; காதலாவது அன்பின் முதிர்ச்சி. எய்ப்பு—பொருளின்மையான் வரும் இளைப்பு. அன்பரல்லாதார்க்கு இறைவன் அருளாமையும் அன்பர்க்கு அருளுதலும் உடையன் என்பதை விளக்கு வார்,

" ஏதிலார்க்கு ஏதிலன்,"

" காதலர்க்கு எய்ப்பினில் வைப்பு"

என உடன் வைத்து ஓதினார்; இறைவனோடு உண்மைத் தொடர்புக்குரிய இயைபு ஏது ஆகும். அதனை உணர்தல் சார்புணர்தலாகும்.

" சார்புணர்ந்து சார்புகெடவொழுகின்."

(திருக்குறள்)

வைப்பு — சேமித்து வைத்த பொருள். அமை — மூங்கில். மூங்கில் பசுமை நிறம், பளபளப்பொளி, மென்மையாகிய இத்தன்மைகளுடைமையின் அம்மை தோளுக்கு உவமையாயிற்று. ஆதி—முதற்கடவுள்; 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்ற திருக்குறளுக்கு "முதற்கடவுளது உண்மை கூறியவாறு" எனப் பரிமேலழகர் நுதலிய பொருள் வகுத்தமை காண்க.

நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றெடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோ
னுள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கு
மொழிவற நிறைந்து மேவிய பெருமை
யின்றெனக் கெளிவந் தருளி
யழிதரு மாக்கை யொழியச் செய்த வொண்பொரு
ளின்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
யளிதரு மாக்கை செய்தோன் போற்றி
யூற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
யாற்ற வின்ப மலர்ந்தலை செய்யப்
போற்ற வாக்கையைப் பொறுத்தல் புகலேன்

பதப்பிரிவு :

நச்சு அரவு ஆட்டிய நம்பன் போற்றி
பிச்சு எமை ஏற்றிய பெரியோன் போற்றி
நீற்றெடு தோற்ற வல்லோன் போற்றி, நால்திசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்

சொல் பதம் கடந்த தொல்லோன்
உள்ளத்து உணர்ச்சியில் கொள்ளவும் படாஅன்
கண்முதல் புலனால் காட்சியும் இல்லோன்
விண்முதல் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவில் நாற்றம் போன்று உயர்ந்து எங்கும்
ஒழிவு அற நிறைந்து மேவிய பெருமை
இன்று எனக்கு எளிவந்து அருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்
பொருள்
இன்று எனக்கு எளிவந்து இருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந்து உள்ளம் களிப்போன் போற்றி
ஆற்ற இன்பம் அலர்ந்து அலை செய்யப்
போற்ற ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்.

*பொழிப்புரை :*

*நஞ்சினையுடைய பாம்பை ஆடச் செய்த நம் பெருமான் காத்தருள்க. எம்மைத் தன்னையே நினைந்து ஆசையால் மயங்கச் செய்த பெரியோனுக்கு வணக்கம். திருநீறணிந்த கோலத்தோடு திருவுருக்காட்ட வல்லவனுக்கு வணக்கம். நான்கு திக்குகளின் உட்பட்ட இடங்களிலெல்லாம் உள்ள இயங்கும் பொருள்களை இயக்கியும், கிடக்கும் பொருள்களைக் கிடக்கச் செய்தும், நிலை நிற்கின்ற பொருள்களை அவைகளின் நிலையில் நிறுத்தியும் இன்ன தன்மையனென்று சொல்லும் தரத்தினைக் கடந்து உயர்ந்த பழமையானவன்; மனத்தின் கருதலளவினாற் பற்றிப்பிடிக்கவும் அகப்படாதவன்; கண் முதலிய பொறியுணர்வாற் காணவும் படாதவன்; வான் முதலிய ஐம்பெரும் பூதங்களையும் தத்தம் காரணமாகிய தன்மாத்திரைகளினின்று முறையாகத் தோன்றச் செய்தவன்; மலரினின்று எழுகின்ற மணம் உயர்ந்து பரவுவதுபோல உயர்ந்து, உலகு உயிர் எல்லா இடங்களிலும் நீக்கமின்றி*

நிறைந்து பொருந்தி, அத்துவிதமாய்க் கலந்து நின்ற பெருந்தகைமையுடன் இந்நாளில் ஒன்றுக்கும் பற்றாத அடியனேனுக்கு அருளாசிரியனாக எளிதில் எழுந்தருளி வந்து அறிவுறுத்தியருளி, மாய்கின்ற இவ்வுடம்பின் பற்றும் உடம்போடு கூடிய பிறவியும் நீங்கச் செய்த அருள்ஒளி ஞானமுதற் பொருளாய், இந்நாளில் எளிதாக அடியேனிடத்து அறிவினில் வந்து குடிகொண்டிருந்த வனுக்கு வணக்கம். அன்பால் உருகும் உடம்பினை அடியேற்கு ஆக்கி அளித்தவனுக்கு வணக்கம். பேரின்ப ஊற்றாக என் உள்ளத்தில் நிலைபெற இருந்து எனது மனத்தை மகிழ்விப்போனுக்கு வணக்கம். தாங்கமுடியாத பேரின்ப வெள்ளம் பொங்கிப் பரந்து திரைவீச அவ் வின்பத்தைப் பேணி மேன்மேலும் வளர்க்க முடியாத இந்த வெற்றுடம்பினைச் சுமக்க விரும்பேன்.

**விளக்கம் :**

திருப்புறம்பயத்தில் ஒருவன் பாம்பு தீண்டி இறந்தான். அப்பொழுது சிவபெருமான் கொடிய பாம்பு ஒன்றினை ஆடச்செய்து அதனைக் கொண்டு விடத்தை இழுக்கச் செய்து, அவனை உயிர்ப்பித்தான். நீறணிந்த கோலம் அன்பர்தம் நெஞ்சத்தைப் பிணிக்கும். உலகப் பொருள்களையெல்லாம் அழித்து நீறாக்க வல்லவனே திரு நீறணிதற்குரியன். சிவனே மாசங்காரக் கடவுளாதலின் "நீற்றோடு தோற்ற வல்லோன்" என்றார். தன் மாத்திரையாகிய ஓசையினின்று வானும், ஊற்றி லிருந்து வாயுவும், ஒளியிலிருந்து தீயும், சுவையிலிருந்து நீரும்; நாற்றத்திலிருந்து மண்ணும் இறைவனால் தோற்று விக்கப் பெறுகின்றன. நடத்தல், கிடத்தல், நிற்றல் களாகிய எல்லாச் செயல்களும் இறைவன் ஆணை யாலேயே நடக்கின்றன என்பதாம்.

> 'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலரெழுதரு நாற்றம்போற்
> பற்றலாவதோர் நிலையிலாப் பரம் பொருள்''

என வருதல் காண்க. இறைவன் அத்துவிதமாய்க்

கலந்து நிற்றல் சிவஞானத்தாலன்றி உணரப்படாமை யின் அவ்வுணர்ச்சி பிறவியறுதற்கு ஏதுவாயிற்று.

(உயிரோடு) "முதல்வன் பிரிப்பின்றி உடங் கியைந்து நின்று அதற்கு அதனை அறிவித்துத் தான் அறிந்து வருதலான், இவ்வாறு அத்துவிதமாய் நின்று உதவி செய்துவரும் பெருங்கருணையை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பாலே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும்."

(சிவஞான மாபாடியம்)

வேறு நினைவின்றி இறைவன் பிரிவாற்றாது அவனையே நினைந்து மயங்குதலைப் பிச்சு என்றார். பிச்சு—பித்து. "பெரும் பிச்சுத் தரும் பெருமான்" என அடிகள் மற்றோரிடத்துக் கூறுதல் காண்க. அளிதரும் ஆக்கையை அமைத்துத் தந்தான்.

"பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை
வெள்ளத் தழுத்தி வினை கடிந்த வேதியனை."

உள்ளுடம்பிலுள்ள மனத்தைப் பிசைந்து கனிபோற் குழைத்து அன்புடல் ஆக்கினான் என மணிவாசகனார் திருவம்மானையில் 'அளிதரும் ஆக்கையைச் செய்தலை' விளக்குகிறார்.

பாம்பின் நஞ்சினை இறக்கிய அவன், தான் தந்த பித்தையும் தீர்ப்பன் என்பதாம். புகலேன்—விரும்பேன் புகலுதல்—விரும்புதல்.

"போரெனிற் புகலும் புனைகழன் மறவர்."

(புறநானூறு. 31)

"நெஞ்சுடை புகல் மறவரும்—நெஞ்சு வலிமையுடைய போரை விரும்பும் மறவரும்."

"கிளை புகலத் தலைக் கூடியாங்கு" — தன்னினம் விரும்பத் தன்னினத்திலே சென்று பொருந்தினாற் போல.

சிவபோக நுகர்ச்சிக்கு ஊடம்பு தடையாயிருத்தல் ஆகாது என்பதாம்.

மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்க
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்து
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்து
மொற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்து
மறைத்திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்து
மித்தந்திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
யாணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென ஒளித்துஞ் சேண்வயி
னைம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
யருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்து
மொன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிறொறு மின்றே பயிறொறு
மொளிக்குஞ் சோரனைக் கண்டன
மார் மினார்மின் நாண்மலர்ப் பிணையலிற்
றாடளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் றொடர்மின் விடேன்மின்
பற்றுமி னென்றவர் பற்றுமுற் றொளித்துந்

*பதப்பிரிவு :*

மரகதக் குவாஅல் மாமணிப் பிறக்கம்
மின்ஒளி கொண்ட பொன்ஒளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க்கு ஒளித்தும்
முறையுளி ஒற்றி முயன்றவர்க்கு ஒளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கும் உள்ளத்து
உற்றவர் வருந்த உறைப்பவர்க்கு ஒளித்தும்
மறைத்திறம் நோக்கி வருந்தினர்க்கு ஒளித்தும்
இத்தந்திரத்தில் காண்டும் என்று இருந்தோர்க்கு
அத்தந்திரத்தில் அவ்வயின் ஒளித்தும்
முனிவுஅற நோக்கி நனிவரக் கௌவி

**ஆண்எனத் தோன்றி அலிஎனப் பெயர்ந்து**
**வாள் நுதல் பெண்என ஒளித்தும் சேண்வயின்**
**ஐம்புலன் செலவிடுத்து அருவரைதொறும் போய்த்**
**துற்றவை துறந்த வெற்று உயிர் ஆக்கை**
**அருந்தவர் காட்சியுள் திருந்த ஒளித்தும்**
**ஒன்று உண்டு இல்லை என்ற அறிவு ஒளித்தும்**
**பண்டே பயில்தொறும் இன்றே பயில் தொறும்**
**ஒளிக்கும் சோரனைக் கண்டனம்**
**ஆர்மின் ஆர்மின் நாள்மலர்ப் பிணையலில்**
**தாள் தளை இடுமின்**
**சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்**
**பற்றுமின் என்றவர் பற்று முற்று ஒளித்தும்**

*பொழிப்புரை :*

*பச்சைமணிக் குவியலும், சிறந்த மாணிக்கமணியின் பெருவிளக்கமும் ஒன்றுகூடி மின்னலொளியைத் தன்னகத்து அடக்கிய பொன்னொளிபோலச் சத்தியுஞ் சிவமுமாய் விளங்க, அதனை நான்முகனும் திருமாலும் மேலும் கீழும் போய்த் தேடினராகவும் அவ்விருவர்க்கும் அகப்படாமல் தன் மெய்யியல்பினை மறைத்தும், நூல்களிற் கூறப்பட்ட நெறியில் நூல்வழிப் பொருந்தி நின்று உணரும் முயற்சியுடையவர்க்கும் வெளிப் படாதும், மனமானது அன்பால் ஒன்று பட்டிருந்து காண்கின்ற சாதனமும் இரங்கும் மனமுடைய சுற்றத் தார் துன்பமுறத் தக்க தவமுயற்சியின் உறுதியுமுடைய வருக்கு ஒளித்தும், வேதத்தின் பொருட் கூறுபாடுகளை ஆராய்ந்து பார்த்து உண்மைப் பொருள் தெரிவதில் வருந்தி முயன்றவருக்கு ஒளித்தும், இந்த நூன் முறையாற் காண்போம் என்பார்க்கு அந்த முறையில் அவ்விடத்து ஒளித்தும், வெறுப்பின்றி ஊன்றிப் பார்த்து மிகுதியாகப் பற்றிப் பிடித்து ஆராய்வார்க்கு ஒருகால் ஆண் வடிவு என்று காணப்பட்டும், ஒருகால் அலிவடிவு என்று கருதும்படி மாறித் தோன்றியும்,*

மற்றொருகால் ஒளி பொருந்திய நெற்றியினை யுடைய பெண் என்று கருதும்படி உண்மை வடிவினை ஒளித்தும், நெடுந்தூரமான இடத்தே ஐம்புல அவாவினையும் போகும்படி நீக்கிப் பிறர் தம்மை வந்து அணுகுவதற்கு அருமையான மலைகட்கெல்லாம் சென்று தாம் முன்னே நுகர்ந்த போகங்களை யெல்லாம் அறவே விட்ட, மற்றெல்லாம் மிகையெனக் கருதி வெறுமையான உயிர் மட்டும் நிற்கும் ஊனில்லாத வற்றிய உடம்பினை யுடைய கடுந்தவம் புரிவோருடைய யோகக் காட்சிக்கும் (அவர்கள் சிவஞானம் பெற்றுப் பக்குவம் அடையும் வரை) ஒளித்தும், ஒப்பற்ற பரம்பொருள் உண்டோ இல்லையோ என்று ஐயுறுவார் உண்டுமாம் இல்லையுமாம் என்று பலபடக் கருதும் அறிவிற்கும் விளங்காது மறைந்தும், பழமை தொட்டுப் பயிலும் பொழுதும் இன்று புதிதாகப் பழகும் பொழுதும் எப்போதும் தன்னை மறைத்துக் கொள்கின்ற கள்வனை யாம் அருளாற் பார்த்துக் கொண்டோம்; எல்லோரும் கூடிப் பொருந்துங்கள், நிறையுங்கள், அன்றலர்ந்த பூக்களை வைத்துத் தொடுத்த மாலைகளால் இறைவன் திருவடிகளைப் பிணைத்துக் கட்டுங்கள், சுற்றி வலம் வாருங்கள், சூழ்ந்து நின்று வழிபடுங்கள், இறைவனைப் பின் தொடருங்கள், பற்றிவிடாதீர்கள், பிடித்துக்கொள்ளுங்கள்" என்று கூறுகிறவர்களுடைய பிடிக்கும் அகப்படாது முழுதும் மெய்யியல்பை மறைத்தும்,

**விளக்கம் :**

உமையம்மையின் நிறம் பச்சை; சிவபெருமான் செம்மேனியன் ஆதலின் "மரகதக் குவால் மாமணிப் பிறக்கம்" என்றார். தேடினர் என்ற பலர்பால் முடிவால் திருமாலும் திசைமுகனொடு சென்றான் எனக் கொள்க. திருமால் என்பது அவாய் நிலையால் வருவித்துரைக்கப் பெற்றது. திருமாலும் நான்முகனும் தேடிக் காண முடியாதபடி அழல் வடிவாய் நின்றமை கூறுவார் "**மின்னொளி கொண்ட பொன்னொளி திகழ**" என்றார்.

"முறை உளி — முறையால்;" உளி—மூன்றுவதன் பொருள்படுவதோர் இடைச் சொல் (பரிமேலழகர்)

(திருக்குறள் 545)

"இயல்புளிக் கோலோச்சு மன்னவனுட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு."

உளி — ஐந்தாவதன் பொருள் படுவதோர் இடைச்சொல்

(சிவஞான முனிவர்)

"இங்குளி வாங்குங் கலம்போல்"

(சிவஞான போதம்)

"மந்திர விதியின் மரபுளி வழாஅ"

(திருமுருகாற்றுப்படை)

ஈண்டு மூன்றுவதன் பொருள்படுவதோர் இடைச் சொல்.

"உறைப்பவர்" – தாமெடுத்த முயற்சியில் மிகுதியும் ஈடுபட்டுநிற்பவர்.

"திருத்தொண்டின் உறைப்பாலே"

(திருத்தொண்டர்புராணம்-
-திருநாவுக்கரசு புராணம்)

வேதம் பல படக்கூறலின் பொருளுண்மை அறிதல் மிகவும் கடினமாகும். தந்திரம்—நூல்; சூழ்ச்சியென்றும் பொருள் கொள்ளலாம்.

காண்டும் — உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்று.

"உம்மொடு வரூஉம் கடதற எதிர்காலம் பற்றிவரும்"

(சேனாவரையர்)

இறைவனை யோகக் காட்சியாற் காணமுடியாது என்பதனை :—

" எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினுங்
கண்ணா ரமுதினைக் கண்டறி வாரில்லை
உண்ணாடி யுள்ளே ஒளிபெற நோக்கிற்
கண்ணாடி போலக் கலந்திருந் தானே."

என்று திருமந்திரம் கூறும்.

" அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே "

(திருநாவுக்கரசர் தேவாரம்)

ஐம்புலன்களையும் அடக்கினாலும் மெய்யுணர்வா னன்றிக் காணமுடியாது.

" அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே."

(திருமந்திரம்)

" அவனருளாலே அவன்றாள் வணங்கி "

(திருவாசகம்)

துற்றவை — நுகர்ந்தவை; ஆர்தல் — நிறைதல்; பிணையல் — பின்னிய மாலை.

## இறைவன் அருள்திறம்

தன்னே ரில்லோன் றானேயான தன்மை
யென்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
யறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா வன்பென் புருக வோலமிட்
டலை கடற் றிரையி னார்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்

பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவுங்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தி
னாற்றே னாக வவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தன
னேற்றார் மூதூ ரெழில் நகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட் பெருந் தீயி னடியோ மடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
றடக்கையி னெல்லிக் கனியெனக் காயினன்

*பதப்பிரிவு :*

தன்நேர் இல்லோன் தானே ஆன தன்மை
என்நேர் அனையோர் கேட்க வந்து இயம்பி
அறைகூவி ஆள் கொண்டு அருளி
மறையோர் கோலம் காட்டி அருளலும்
உளையா அன்பு என்பு உருக ஓலம் இட்டு
அலைகடல் திரையின் ஆர்த்து ஆர்த்து ஓங்கித்
தலை தடுமாறா வீழ்ந்து புரண்டு அலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்
கடக்களிறு ஏற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றேன் ஆக அவயவம் சுவைதரு
கோல் தேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழில் நகை எரியின்
வீழ்வித்தாங்கு அன்று
அருள்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்
தடக்கையின் நெல்லிக்கனி எனக்கு ஆயினன்.

*பொழிப்புரை :*

தனக்கு ஓர் ஒப்பு இல்லாதவன், எல்லா உயிர்களோடும் பொருள்களோடும் அத்துவிதக் கலப்பினால் அவையேயாய்ப் பொருட்டன்மையால் தானேயான

தன்மையை என்னைப் போன்ற அத்தன்மையர் செவி கொடுத்துக் கேட்கக் குருவடிவில் எழுந்தருளி வந்து அத்துவித இலக்கணத்தை அறிவுறுத்தி வலியப் போர்க்கு அழைத்தாற் போன்று கூப்பிட்டு என்னை அடிமையாகக் கொண்டு அருள்புரிந்து அந்தண ஆசிரிய வடிவத்தைக் காட்டி அருள் புரிந்தான். அருள் புரிதலும் அவ்வளவிலே வெறுப்பில்லாத அன்பினால் என் என்பும் உருகும்படியாக முறையிட்டுக் கொந்தளிக்கின்ற கடலின் அலை ஒலிபோல ஆரவாரித்து ஆரவாரித்து எழுந்து தலை மயங்கிக் கீழே விழுந்து உருண்டு கதறிப் பித்துக் கொண்டவர் போல மயக்கங் கொண்டு, வெறி கொண்ட வரைப் போலக் களித்தேன். நாட்டிலுள்ளவரில் பார்த் தவர் திகைக்கவும், கேட்டவர் வியக்கவும், மதம் பொழியும் ஆண் யானை தன் மேல் பாகனை ஏறவிடாதபடி தள்ளும் மிகப் பெரு மதத்தினைப் போல அவ்வளவு மிகுதியாகப் பெருகிய இன்ப அன்பினை நான் தாங்க இயலாதவனாகவே என் உறுப்புக்களையெல்லாம் இன்சுவை தருகின்ற கொம்புத் தேன் போன்ற இன்ப அன்பினால் ஆக்கினான். பகைவர்களுடைய பழைமையான முப்புரங் களையும் உயர்ந்த அழகிய புன்சிரிப்பில் உண்டாகிய தீயினால் சுட்டு எரித்து வீழ்த்தியது போல எம்மை ஆட் கொண்ட அந்நாளில் அடியேங்களாகிய எங்களில் ஒருவரும் தவறாதபடி எல்லோரையும் குருவருளாகிய பெரிய ஞானத் தீயினால் அடியேங்களை அடிமையாக்கு கின்ற ஊன் உடலாகிய குடிசையை வேறு செய்து தன்னிடத்தே ஒடுங்கச் செய்தான். அடியேனுக்கு வளைந்த உள்ளங்கையில் நெல்லிக்கனிபோலத் தவறி வீழாத கைகண்ட அமுதம் ஆயினான்.

**விளக்கம் :**

கடவுளர்க்கும் அருந்தவர்க்கும் ஒளிக்கும் சிவபெரு மான் ஒன்றுக்கும் பற்றாத நானும் என்னைப்பாரும் கேட்கும்படி அந்தணனாகி வந்து ஆண்டு அத்துவித உண்மை விளக்கினான் என்னும் பெருமையை அடிகள்

பாராட்டுகிருர்கள். அறை கூவல் — போர்க்கு வலியக் கூப்பிடுதல். அறை கூவுதல் போன்று அடிகளை வலிய ஈர்த்து ஆட்கொண்டார் என்பதாம்.

"அங்கணன் அந்தணனுய் அறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானுய்"

எனத் திருவம்மானை முதற்பாட்டிலும் அறைகூவி ஆட்கொள்ளுதலோடு அறைகூவி வீடருளுதலும் வந்தமை காண்க.

பேரன்பினுல் நிரம்பினுர் செயலும் பித்தர் செயலை ஒக்கும்.

(ஞான நிட்டை யுடையோர்)

"பாலருடன் உன்மத்தர் பிசாசர் குணம் மருவிப்
பாடலினேடாடலிவை பயின்றிடினும் பயில்வர்"

(சிவஞான சித்தியார்)

'தடப் பெருமதத்தின் ஆற்றேனுக'

அளவுக்கு மிஞ்சிய இன்பமாதல் அன்பாதல் தாங்க முடியாததாகும்.

"பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே
புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே"

அவயவம் கோல்தேன் கொண்டு செய்தனன்— சீவன் முத்தி நிலையில் பேரின்பம் நுகர்தற்கேற்றவாறு சிவபெருமான் கருணையை நினைக்க நினைக்க உள்ளத்து ஊறுகின்ற இன்பத் தேனைச் சுவைத்துக் கொண்டிருக்கும்படி செய்தற் பாவனையால் விந்துத் தானத்திலிருந்து பொழியும் அமுத தாரைகளைச் சுவைக்கச் செய்தனன்.

தடப்பெரு—ஒரு பொருட்பன்மொழி. உறுப்பெலாம் கோற்றேன் கொண்டு செயப் பெறுதலை கண்ணப்பர் வடிவமெல்லாம் அன்புருவாய்த் திகழ்ந்தமை கொண்டு தெளிக.

"அவனுடைய வடிவெல்லாம் நம் பக்கல் அன்பு."

(சேக்கிழார்)

மும்மலங்களுமே முப்புரங்களாகக் கூறப்படுகின்றன. இறைவன் மும்மலங்களையும் ஞான எரியால் எரித்தலே முப்புர தகனம் ஆகும். ஏனைத் திருமால் முதலிய தேவர் களின் உதவியின்றிச் சிவபெருமான் ஒருவனே புன்னகை புரிந்து உயிர்களின் பாசம் நீக்கி அருள் புரிய வல்லான்.

"அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார் அறிவாரே"

(திருமந்திரம்)

தடக்கை — வளைந்த உள்ளங்கை;

"தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்"

(தொல்காப்பியம்)

ஊன் உடலைத் தன் ஆகத்தொடுக்கல்

"தன் ஆகத்தென்னுகம் ஒடுங்கும் வண்ணம்
உலைப்பாடே படத்தழுவிப் போகவொட்டேன்
ஒற்றியூர் உறைந்திங்கே திரிவானையே"

(அப்பர் திருத்தாண்டகம்-
திருஒற்றியூர்)

இறைவன், பித்தரின் மயங்கி மத்தரின் மதித்தவர் தடக்கையின் நெல்லிக் கனியாதல்.

"செய்ய மேனியன் தேனொடு பால் தயிர்
நெய்ய தாடிய நீலக்குடி யரன்
மையலாய் மறவா மனத்தார்க் கெலாம்
கையி லாமல கக்கனி யொக்குமே."

(திருநாவுக்கரசர்
திருமுறை 5 திருநீலக்குடி)

சொல்லுவதறியேன் வாழி முறையோ
தரியே னுயேன் ருனெனைச் செய்தது
தெரியே னுவா செத்தே னடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியு மொல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரைவித்
துவாக்கட னள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கா றேறும்
தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்றழைக்
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பை கொண்டின்றேன் பாய்த்தி நிரம்பிய
வற்புத மான வமுத தாரைக
ளெற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளு ருக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
யென்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்றேன் கலக்க
வருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.

*பதப்பிரிவு :*

சொல்லுவது அறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தான் எனைச் செய்தது
தெரியேன் ஆ ஆ செத்தேன் அடியேற்கு
அருளியது அறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பால்கடல் திரை புரைவித்து
உவாக் கடல் நள்ளுநீர் உள்அகம் ததும்ப
வாக்கு இறந்து அமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்தழைக்
குரம்பை தோறும் நாய் உடல் அகத்தே
குரம்பை கொண்டு இன்தேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்

**எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவது**
**உள்ளம் கொண்டு ஓர் உருச்செய்தாங்கு**
**எனக்கு**
**அள்ஊறு ஆக்கை அமைத்தனன் ஒள்ளிய**
**கன்னல் கனிதேர் களிறு எனக் கடைமுறை**
**என்னையும் இருப்பது ஆக்கினன் என்னில்**
**கருணை வான்தேன் கலக்க**
**அருளொடு பராஅமுது ஆக்கினன்**
**பிரமன் மால் அறியாப் பெற்றியோனே.**

**பொழிப்புரை :**

எம்பெருமான் எனக்கு எவ்வாறு அருள் புரிந்தான் என்பதை இதற்குமேல் பிறர்க்கு எடுத்து மொழிதலைத் தெரிந்திலேன். அவன் அருள்புரிந்த நெறி வாழ்வதாக. பேரின்ப நுகர்ச்சி என்னிடத்து வாழ்வதாக. அவன் என்னைத் தானாகச் செய்து சிவமாக்கி அடிமையாக்கிய கருணைப் பெருக்கை நாய் போன்ற கீழான அடியேன் தாங்க மாட்டேன். இன்னது என்றும் அதன் பெருமை தெரிந்து கொள்ளகில்லேன். ஐயோ! நான் என்ற முனைப்பு முழுதும் அற்று நானென ஒன்று இன்றி அழிந்து ஒழிந்தேன். அடியேனுக்கு அருள் புரிந்த பேரின்பத்தைத் தெரிந்திலேன். அப்பேரின்பத்தைக் குடித்து அனுபவித்தும் நிறைவு பெறேன். அதனை முழுதுமாய் விழுங்கியும் விழுங்க இயலாதவனுயிருக் கின்றேன். வளம் மிக்க குளிர்ந்த பாற்கடலின் அலையை ஒக்கும்படி செய்து முழுமதிக் காலத்துக் கடலின் நடு விலுள்ள நீரைப்போல எனது உள்ளத்தின் உள்ளிடத் தில் பேரின்ப வெள்ளம் நிரம்பிப் பொங்கி வழிய நான் பேச்சற்று இருந்தேன். நான்முகனும் திருமாலும் முடியும் அடியும் காண முடியாத தன்மையன் பேரின்ப அமுதமானது உள்ளத்தில் பொங்கித் ததும்பி உடம்பி லுள்ள மயிர்க்கால்களெல்லாம் வந்து நிறையச் செய் தான்; தீயவனாகிய எனது தசை செழித்து நிறைந்த உடம்பு எங்கும் நாய் போல் இழிந்த இவ்வுடலினுள்ளே

கோவில் கொண்டு இனிமையான பேரின்பத் தேனைப் பாயச் செய்து நிறைந்த வியக்கத்தக்க பேரின்ப அமுத தாரை ஒழுக்குகளை எலும்புகளின் துவாரங்களிலெல்லாம் செலுத்தினன்; உருகுந் தன்மையுடைய நுண்ணுட லாகிய மனத்தை முதலாக வைத்து ஓர் பருஉடல் அமைத்ததுபோல அடியேனுக்குப் பேரின்ப அமுதம் பெருகி நிறைந்து ஊறும் உடலினைச் செய்து வைத்தான். ஒளி பொருந்திய கரும்பையும் பழங்களையும் நல்லன தேர்ந்தெடுத்து உண்டு களிக்கும் ஆண்யானை போல இறுதியில் அடியேனையும் இறுமாந்திருக்கச் செய் தருளினன். அயனும் அரியும் காணமுடியாத தன்மை யுடைய சிவபெருமான் அடியேனிடத்தில் திருவருளாகிய சிறந்த தேனைக் குருவருளோடு கலந்து கொடுத்து என்னை மேலான அமுதமயமாகிய பேரின்ப நிறைவில் அடங்கியிருப்பதாகச் செய்தான்.

**விளக்கம் :**

முழுமதி நிறை என்பது வியாபக அறிவைக் குறிக்கும். முழுமதிக் காலத்தே நடுக்கடல் நீர் பொங்குமெனவே வியாபக அறிவு தலைப்பட்டதும் பேரின்பம் பொங்கும் என்றதாயிற்று. பேரின்பம் பருகுந் தோறும் பின்னும் புதிதாய் ஆரா அமுதாய் நிறையும்; ஆதலின் பருகியும் ஆரேன் என்றார்.

"புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்
.. ... வளர்கின்றதே" எனவும்,
"ஆரா இன்பத் தன்பு மீதூர"

எனவும் வருதல் காண்க.

இன்பமே உருவாயினர்க்கு அவ்வின்பந் துய்த்தல் ஒன்றுமே நிகழும். வேறொன்றிலும் அறிவு செல்லாமை யின், "சொல்லுவது அறியேன்" என்றார்.

"ஓங்குணர்வின் உள்ளொடுங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்." (திருவருட் பயன்)

தான் எனைச் செய்தது—என்னைத்தானாகச் செய்தது. ஆ, ஆ—இரக்கக் குறிப்பு, என்பு—எற்புஎன எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது.

அள் என்னும் முதனிலை அள்ளி யென்னும் வினை யெச்சம்போல் நின்றது; திருமுருகாற்றுப்படையில் "வரிந்து புனைபந்து," "வரிப்புனைபந்து" என நின்றாற் போல.

இவ்வடிகளில் மணிவாசக அடிகள் தாம் துய்த்த பேரின்பத்தைத் தூய திருவாய்மலராற் சொற்செய் கின்றார்கள்.

"பாய்பரியோன் தந்த பரமானந் தப்பயனைத்
தூயதிரு வாய்மலராற் சொற்செய்து—மாயக்
கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
திருவாத வூராளுந் தேன்."

வாழி—அசையாகவும் கொள்ளலாம்.

## பொங்கித் ததும்பல்

"பேச்சற்று அசைவற்றுப் பேரின்பத்தே
நீச்சற்று எவ்வாயும் நிறைந்தோங்கவும்."

(நமச்சிவாய மூர்த்திகள் மும்மணிமாலை)

"பிரமன்மால் அறியாப் பெற்றியோன்"

என்பதனை முன்னர்க் கொண்டு கூட்டுக.

நான்காவது

# போற்றித் திருவகவல்.

## சகத்தினுற்பத்தி.

### நிலைமண்டிலவாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்.

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
வீரடி யாலே மூவுலக ளந்து
நாற்றிசை முனிவரு மைம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியு மாதர வதனிற்

கடுமுர ணேன மாகிமுன் கலந்
தேழ்தல முருவ விடந்துபின் னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்

யானை முதலா வெறும்பீ றாய
வூனமி லியோனியி னுள்வினை பிழைத்து
மானுடப் பிறப்பினுண் மாதா வுதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்து
மொருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்து

மிருமதி விளைவி னொருமையிற் பிழைத்து
மும்மதி தன்னு ளம்மதம் பிழைத்து
மீரிரு திங்களிற் பேரிருள் பிழைத்து
மஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்து
மாறு திங்களி னூறலர் பிழைத்து

மேழு திங்களிற் றாழ்புவி பிழைத்து
மெட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்து
மொன்பதில் வருதரு துன்பமும் பிழைத்துந்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்து

மாண்டுக டோறு மடைந்தவக் காலை
யீண்டியு மிருத்தியு மெனைப்பல பிழைத்துங்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்துங்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயி

லொருங்கிய சாய னெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த வெழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா விளமுலை மாதர்தங்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்

பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுண்
மத்தக் களிறெனு மவாவிடைப் பிழைத்துங்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்துஞ்
செல்வ மென்னு மல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்

புல்வரம் பாய பலதுறை பிழைத்துந்
தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலு
மாறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைக டொடங்கின

வாத்த மானா ரயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியருஞ்

சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிக டத்த மதங்களில்
யமைவ தாக வரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாத மென்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்

துலோகா யதனெனு மொண்டிறற் பாம்பின்
கலா பேதத்த கடுவிட மெய்தி
யதிற்பெரு மாயை யெனைப்பல சூழவுந்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்

தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்
தாடியு மலறியும் பாடியும் பரவியுங்
கொடிறும் பேதையுங் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா வன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்

கசிவது பெருகிக் கடலென மறுகி
யகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்

சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரம வதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியு
மற்றோர் தெய்வங் கனவிலு நினையா
தருபரத் தொருவ னவனியில் வந்து

குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிரிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
யென்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி

யன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
யுரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்

சாயா வன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
யாடக மதுரை யரசே போற்றி

கூட லிலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
யின்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி

மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
யாவா வென்றனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி

யிடரைக் களையு மெந்தாய் போற்றி
யீச போற்றி யிறைவ போற்றி
தேசப் பளிங்கின் றிரளே போற்றி
யரைசே போற்றி யமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி

வேதி போற்றி விமலா போற்றி
யாதி போற்றி யறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
யுடையாய் போற்றி யுணர்வே போற்றி

கடையே னடிமை கண்டாய் போற்றி
யையா போற்றி யணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி

வானோர்க் கரிய மருந்தே போற்றி
யேனோர்க் கெளிய விறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
யாழா மேயரு ளரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி

வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
யத்தா போற்றி யரனே போற்றி
யுரையுணர் விறந்த வொருவ போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி

யருமையி லெளிய வழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருண் மலையே போற்றி
யென்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி

தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
யழிவிலா வானந்த வாரி போற்றி
யழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவது மிறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி

வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி

வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
யளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலு நாயேற் கருளினை போற்றி
யிடைமரு துறையு மெந்தாய் போற்றி

சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
யாரூ ரமர்ந்த வரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
யண்ணா மலையெம் மண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி

யேகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி

குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
யீங்கோய் மலையெம் மெந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி

யடைந்தவர்க் கருளு மப்பா போற்றி
யித்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய வரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
யெந்நாட் டவர்க்கு மிறைவா போற்றி

யேனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
யருளிட வேண்டு மம்மான் போற்றி
யிருள்கெட வருளு மிறைவா போற்றி
தளர்ந்தே னடியேன் றமியேன் போற்றி

களங்கொளக் கருத வருளாய் போற்றி
யஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
யத்தா போற்றி யையா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி

பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
யரியாய் போற்றி யமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி

யுறவே போற்றி யுயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி
யலந்தே னாயே னடியேன் போற்றி

யிலங்கு சுடரெம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி

திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
யருவமு முருவமு மானாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமு மிறந்த சுடரே போற்றி

தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
யாளா னவர்கட் கன்பா போற்றி
யாரா வமுதே யருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி

தாளி யறுகின் றாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி

யெந்தமை யுய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
யலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
யிரும்புலன் புலர விசைந்தனை போற்றி

படியுறப் பயின்ற பாவக போற்றி
யடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
யொழிவற நிறைந்த வொருவ போற்றி

செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மைய றுணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி

புரம்பல வெரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்

# போற்றித் திருவகவல்

***இது மணிவாசகப் பெருமான் திருவாசகத்திற் பாடியுள்ள மூன்று அகவல்களில் இறுதியில் உள்ள அகவல்.***

இவ்வகவல் 225 அடிகளையுடையது. இது நிலை மண்டில ஆசிரியப்பா. 'போற்றி' என்ற ஈற்றுச் சீருடைய அடிகளின் மிகுதி பற்றி இது "போற்றித் திருவகவல்" என்ற தலைப்புப் பெற்றது.

இவ்வாசிரியப்பாவில் மணிவாசகர் 41 அடிவரை உயிர் வகைகள் பிறக்கும் முறை, வளர்ந்து தொழில் இயற்றிக் காதலைப் பெருக்கி வாழும் முறை, கல்வி, செல்வம், நல்குரவு இவற்றின்நிலை கூறுகிறார்; 42ம் அடிமுதல் 75ம் அடிவரை அறிவு பெற்ற உயிர்கள் கடவுள் உண்டென்று உணர்ந்த அளவில் செருக்கி மயங்குகின்ற பலவித மத உணர்ச்சி, பயிற்சி, கிளர்ச்சி உடையன வாய்த் திகழ்ந்து, பின், பெருகவும், சூழவும் நின்று, கொடிறும் பேதையுங் கொண்டது விடா எனும்படியே ஆகி, இடையறு அன்பின் கசிவது பெருகி, கடலென மறுகி, அதிசயமாகி, கற்றுமனமெனக் கதறியும், பதறியும், மற்றோர் தெய்வம் கனவிலும் நினையாது, அருபரத்து ஒருவன் அவனியில் வந்து குருபரன் ஆகியருளிய பெருமையை (உணர்ந்து) இணையடி பிரியா நிழல் போல் நோக்கி அன்பாறு பாய 'நாத' என்றரற்றி, நுண்துளி அரும்ப, சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர் தாயே ஆகி வளர்த்தனை போற்றி எனத் தொடங்கி 87ம் அடி முதல் வணக்கப்பொருளைத்தரும் போற்றி எனும் முடிவு முறையே தொடர்ந்துவர 225ம் அடி இறுதி வரையில் முதல்வனைப் புகழ்ந்துரைக்கின்றார். முற்பகுதி "உயிர்களின் தோற்றம்" என்று குறிக்கப்பெறும்.

## உயிர்களின் தோற்றம்.

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
வீரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரு மைம்புலன் மலர
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியு மாதர வதனிற்
கடுமுர ணேன மாகி முன்கலந்
தேழ்தல முருவ விடந்து பின்னெய்த்
"தூழி முதல்வ! சய, சய" வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்

**பதப்பிரிவு;**

நான்முகன் முதல்ஆ வானவர் தொழுதுஎழ,
ஈரடி யாலே மூஉலகு அளந்து,
நால் திசை முனிவரும் ஐம்புலன் மலரப்,
போற்றிசெய் கதிர் முடித் திருநெடு மால், அன்று,
அடிமுடி அறியும் ஆதரவு அதனில்
கடு முரண் ஏனம் ஆகி, முன் கலந்து
ஏழ்தலம் உருவ இடந்து, பின் எய்த்து,
"ஊழி முதல்வ, சய! சய!" என்று,
வழுத்தியும் காணா மலர்அடி இணைகள்,
வழுத்துதற்கு எளிதுஆய் வார்கடல் உலகினில்

**பொழிப்புரை :**

நான்கு திருமுகங்களையுடைய படைப்புக் கடவுளாகிய பிரமன் முதலாக வானுலகத்துள்ள தேவர்கள் கும்பிட்டு நிற்க (வாமனாவதாரத்தில்) இரண்டு அடிகளாலே மூவுலகங்களையும் நீட்டி அளந்து நான்கு திக்கிலும் உள்ள முனிவர்களும் தம் ஐம்புலன்களும் மகிழ்ச்சியால் மலரும்படியாக வணக்கம் செய்கின்ற ஒளி வீசுகின்ற முடியினையுடைய அழகிய நீண்ட மால், இறைவன் அழற்பிழம்பாய அந்நாளில் நான்முகனோடு மாறு

பட்டுத் திருவடியின் எல்லையைக் காணும் பெருவிருப்பிஞல் மிக்க வலியினையுடைய பன்றியாக வடிவெடுத்து, முற்பட்டுக் கீழேயுள்ள ஏழு உலகங்களையும் ஊடுருவப் பிளந்து பின்னர், இளைப்புற்று, "உலகு முடிவுக் காலமாகிய ஊழியின் முதல்வனே! உனக்கு வெற்றி, வெற்றி" என்று பரவி வணங்கியும் காண முடியாத தாமரை போன்ற இரண்டு திருவடிகளாகிய இணை நெடிய கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தில் வழிபடுவதற்கு எளிதாக

**விளக்கம் :**

நான்முகன்—நான்கு திருமுகங்களையுடைய படைப்புக் கடவுளாகிய பிரமன். முதல் ஆ – முதல் ஆக என்பதன் கடைக்குறை, வானோர் – விண்ணோர். தொழுதெழ – தொழுது எழ – கீழே விழுந்து கும்பிட்டு எழுந்துநிற்க என்னும் பொருளது. மூவுலகு – கீழ் உலகு, நடு உலகு, மேல் உலகு. இவை பாதாளம், பூமி, சுவர்க்கம் எனப்படும். ஈரடியால் மூவுலகு அளந்து – மாவலி வேந்தனிடம் குறள் வடிவாய்ச் சென்ற திருமால் அவனிடம் மூவடி மண் இரந்து பெறுங்காலத்துக் கொடுக்காது தடைப்படுத்திய சுக்கிரன் கண்ணைக் கெடுத்து நெடிய வடிவங் கொண்டு தன் ஓர் அடியால் வானுலகையும், மற்றோர் அடியால் நடு, கீழ் உலகங்களையும் அளந்து மற்றோர் அடிக்கு இடமாக அவ்வேந்தன் தலையையே மிதித்து அவனைப் பாதாளத்தில் அழுத்தித் திருமால் ஆட்கொண்டான் என்பது.

இது, "மாலும் குறளாய் வளர்ந்து இரண்டு மாணடியால், ஞாலம் முழுதும் நயந்தளந்தான்" என்ற திருவள்ளுவ மாலைச் செய்யுளால் விளங்கும். நாற்றிசை:- மேல், கீழ், தென், வடபால் என்னும் நாலுதிசை. முனிவர்—அவாவை முற்றும் அறுத்தவர்; முனிதல் — வெறுத்தல். ஐம்புலன் மலர்தல்:- வாய், கண், மெய், செவி, மூக்கு ஆகிய ஐம்பொறிகளின் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தின் நுகர்ச்சியால் இன்பம் ஆர்தல்.

போற்றிசெய்—வணங்குகின்ற, அன்று—திருமாலும் பிரமனும் தமக்குட் பெரியவர் யார் என்று போரிட்டுச் செருக்குற்ற அந்நாள். அடிமுடி—திருஅடியின் எல்லை; ஆதரவு—பெருவிருப்பம். கடுமுரண் — மிக்க வலி, கடி என்ற உரிச்சொல் கடு எனத் திரிந்தது.

ஏனம்—பன்றி. (வராக அவதாரம்) ஏழ்தலம் — அதலம் முதலிய ஏழு உலகங்கள். இடந்து — பிளந்து, தோண்டி; எய்த்து—இறைத்து, சலித்து. ஊழிமுதல்வன் — யுகமுடிவாகிய ஊழிக்காலத்தும் அழியாது நிலை பெற்றிருக்கின்ற இறைவனாகிய சிவபெருமான். வழுத்தல் — பரவுதல், துதித்தல். காணா — காணாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மலரடி இணைகள் — மலரடிகள் இணை; தாமரை மலர் போன்ற திருவடிகளாகிய இணை; மலரடி—உவமைத்தொகை. **வழுத்துதற்கு எளிதாய்** என்ற தொடர் அருபரத்தொருவன் அவனியில் வந்து என்றதில் வந்து என்னும் எச்சத்தை (75-ம் அடியில்) கொண்டு முடிகிறது; இது மாட்டேற்று இலக்கணமாம்.

11 **"யானை முதலா வெறும்பீ றாய**
12 **வூனமி லியோனியி னுள்வினை பிழைத்தும்,"**

**பதப்பிரிவு :**

**யானை முதல்ஆ எறும்பு ஈறுஆய**
**ஊனம்இல் யோனியின் உள்வினை பிழைத்தும்,**

**பொழிப்புரை :**

(பெரிய) யானை முதலாக (சிறிய) எறும்பு இறுதியாக உள்ள குறைவு இன்றிப் பொருந்திய கருப்பைகளிலே அவற்றுள் நிகழும் செயல்களின் கேடுகளுக்குத் தப்பியும்,

**விளக்கம் :**

யானை முதல் எறும்பீறாக — நிலவுலகில் பெரிய உருவுடைய உயிர்ப் பொருளாகிய யானையும், மிகச் சிறிய உருவுடைய உயிர்ப் பொருளாகிய எறும்பும் உவமையாகச் சொல்லப்பெறும். யானை அறிவிலும், எறும்பு சுறுசுறுப்பான முயற்சியிலும் சிறந்தன. இது அத்தி முதல் எறும்பு ஈறாக என்றும் கூறப்படும்; அத்தி—யானை.

யோனி—கருப்பை. உள்வினையாவது ஈண்டு நல்வினை. இருவினை ஒருவன் தன் உள்ளத்தால் கருதிச் செய்யப்படுதலின் அவை அவ்வுள்ளத்தையே நிலைபேறாய்ப் பற்றி நிற்கும், 'வினை செய்வதற்குக் கருவியாகிய உடம்பு ஒழியினும் அவ்வினைகள் ஒழிவின்றி உளவாய்த் தாம் பிறத்தற்கு நிலைக்களனாகிய உள்ளத்தைப் பற்றிக்கொண்டு பிறவிகள் தோறும் சேர்தலின் உள்வினை' என்று மறைமலை அடிகள் விரித்துளார்.

**13 மானுடப் பிறப்பினுள், மாதா வுதரத்து,**
**14 ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து,**
**ஈனம்இல் கிருமிச் செருவினில் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

மக்களாகப் பிறக்கும் பிறவியுள்ளும் தாயின் கருப்பையினுள்ளே குறைவில்லாத புழுக்கள் இடும் போரிற் பட்டு, மடியாது தப்பியும்.

**விளக்கம் :**

பிறப்பினுள் — பிறவியில்; மாதா உதரம் — தாய் வயிறு; ஈனம் — கேடு, குறைவு; கிருமி — புழு; செரு—போர்.

**15 ஒருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்தும்;**

**பதப்பிரிவு :**

**ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்;**

**பொழிப்புரை :**

முதல் ஒரு திங்களில், தான்றிக் காயின் வடிவினை ஒப்பதாகிக் கருப்பையிற் பொருந்தி ஒன்று படாது பிளவு படுதலாகிய இருவகைப்படும் தன்மையினின்று பிழைத்தும்.

**விளக்கம் :**

ஒரு மதி-ஒரு திங்கள். தான்றியின்—தான்றிக் காய் உருவின்; இருமையிற் பிழைத்தல் — தந்தையின் வெண்பாலில் (சுக்கிலம்) தோன்றிய புழுக்களில் ஒன்று தாயின் செம்பாலிற் (சுரோணிதம்) தோன்றிய கருவிற் பதிந்து ஒன்ருகாமல் வேறுபடுகல் அமையாதிருத்தல்.

**16 இருமதி விளைவி னொருமையிற் பிழைத்தும்**

**பதப் பிரிவு :**

**இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

இரண்டாந் திங்களில் கருவிளைந்து உரு ஒன்றுபடும் நிலையில் புழுக்களுக்குத் தப்பியும்.

**விளக்கம் :**

பல புழுக்கள் கருப்பையுட் புகுந்து கருவினை மகவாய உருக்கூட ஒட்டாமல் அழித்து விடும். இஃது ஒரோவழி இரண்டாந் திங்களில் நிகழும்.

**17 மும்மதி தன்னு ளம்மதம் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

மூன்றுந் திங்களில் கருப்பையிற் பெருகும் கொழுப்பான மதநீர்ப் பெருக்கால் விளையும் கேட்டிற்குத் தப்பியும்

**விளக்கம் :**

மதம்—மதநீர்; கருப்பையில் பெருகுவது

**18 ஈரிரு திங்களிற் பேரிருட் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**ஈர் இரு திங்களில் பேர் இருள் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

(கரு நீரினுலே கருப்பையிலே) நாலாந்திங்களில் இருள் மிகுந்த அந்தப் பெரிய இருட்டினின்று தப்பியும், (பெருகிய மதநீர் கறுத்தலால் இருள் உண்டாகும். அஃது கருச்சிதைவிற்குக் காரணமாகும்.)

**விளக்கம் :**

பேரிருள்—மதநீர் கரிய நிறத்ததாய்க் கருப்பையினுள் பெருக, அக்கருப்பையினுள்ளகம் இருண்டு நிற்பது. மதநீர் மிகப் பெருகுதலின் கருப்பை வாயில் அடைபட்டு உயிர் இருட்டிற் கிடக்கும்.

**19 அஞ்சு திங்களின் முஞ்சுதற் பிழைத்தும்**

**பதப்பிரிவு.**

**அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

ஐந்தாம் திங்களில் மதநீர்ப் பெருக்கு, இருள் இவைகளால் சாதலினின்றும் தப்பியும்.

**விளக்கம் :**

முஞ்சுதல்—சாதல்.

20 **ஆறு திங்களி னூறலர் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**ஆறு திங்களின் ஊறுஅலர் பிழைத்தும்**

**பொழிப்புரை:**

ஆறும் திங்களில் வயிற்றில் சுரக்கின்ற தீநீர்க்குத் தப்பியும்.

**விளக்கம் :**

அலர்—தீநீர்.

21 **ஏழு திங்களிற் றாழ்புவி பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்.**

**பொழிப்புரை :**

ஏழாம் மதியில் கருப்பை சுமை தாங்காமையால் பூமியிற் காயாய்ச் சரிந்து விழுவதினின்று தப்பியும்.

**விளக்கம் :**

புவி—தரை, பூமி, நிலம். தாழ்புவி—முன்பின்னாகத் தொக்க ஏழாம் வேற்றுமைத் தொகை. தாழ்—தாழ்தல் — முதனிலைத் தொழிற் பெயர்.

22 **எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்**

**பதப்பிரிவு.**

**எட்டுத் திங்களில் கட்டமும் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

எட்டாவது மதியில் கருப்பையில் உண்டாகும் உறுப்பு வளர்ச்சியால் நெருக்குண்டு அடையும் துன்பத் திற்குத் தப்பிப் பிழைத்தும்.

**விளக்கம் :**

கட்டம் — துன்பம்.

**23 ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்.**

**பொழிப்புரை :**

ஒன்பதாம் மதியில் (குழவி) வெளிப்படமுடியாது அங்கும் இங்கும் அசைந்து வருதல் தருகின்ற துன்பங் கட்குத் தப்பியும்.

**விளக்கம் :**

வருதரு—வருகின்ற.

**24 தக்க தசமதி தாயொடு தான்படுந்**
**25 துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**தக்க தசமதி தாயொடு தான்படும்**
**துக்க சாகரத் துயர்இடைப் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

தாயின் கருப்பையை விட்டு அகலுவதற்குப் பொருத்தமான பத்தாம் மாதத்தில் தாயும், தானுமாய் அடைகின்ற துன்பக்கடலாகிய கவலை நோவினின்று தப்பியும்.

**விளக்கம் :**

தக்க தசமதி—கருமுற்றி வெளியே வருவதற்குரிய திங்கள். துக்க சாகரம் — துன்பக் கடல். சாகரம்— சகர புத்திரர்களால் தோண்டப்பட்டது, தத்திதாந்த நாமம், கடல்.

**26 ஆண்டுக டோறு மடைந்தவக் காலை**
**27 யீண்டியு மிருத்தியு மெனைப்பல பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை**
**ஈண்டியும், இருத்தியும், எனைப்பல பிழைத்தும்**

**பொழிப்புரை :**

பருவங்களிலெல்லாம் வளர்ந்து மனிதப் பருவம் எய்திய அப்பொழுது பொருளை ஈட்டியும், ஈட்டிய பொருளைத் தொகுத்தும், அதனைச் செலவு செய்யாது தன்னிடத்தே வைத்துக் காத்தும் இன்னும் இவை போன்ற பல செயல்களால் வரும் துன்பங்களுக்குப் பிழைத்தும்.

**விளக்கம் :**

காலை — வேளை; இருத்தியும் — தன்னிடத்திலேயே இருக்கச் செய்து சேமித்தும்; இருத்தி — பிறவினை; வினையெச்சம்.

**28 காலை மலமொடு கடும்பகற் பசிநிசி**
**29 வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**காலை மலமொடு கடும்பகல் பசிநிசி**
**வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்**

**பொழிப்புரை :**

காலைப் பொழுதில் மலங்கழித்தலாலும், நண்பகற் பொழுதில் பசியினாலும், தொழிலினாலும், நடு இராத்திரியில் தூக்கத்தாலும், இவையொழிந்த காலங்களில் ஊர்களுக்குப் போக்கு வரவு செய்தலினாலும் ஏற்படும் துன்பங்களினின்றும் தப்பியும்

**விளக்கம் :**

கடும்பகல்—கொடிய வெய்யில் எரிக்கும் நண்பகற் பொழுது. நிசி— நடு இருள்.

**கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயி**
**லொருங்கிய சாய னெருங்கியுண் மதர்த்துக்**
**கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்**
**தெய்த்திடை வருந்த வெழுந்து புடைபரந்**
**தீர்க்கிடை போகா விளமுலை மாதர்தங்**
**கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்**

**பதப்பிரிவு :**

**கருங் குழல், செவ் வாய், வெள் நகை, கார் மயில்,**
**ஒருங்கிய சாயல், நெருங்கி, உள் மதர்த்துக்**
**கச்சு அற நிமிர்ந்து, கதிர்த்து, முன் பணைத்து,**
**எய்த்து இடை வருந்த எழுந்து, புடை பரந்து,**
**ஈர்க்கு இடை போகா இள முலை மாதர்தம்**
**கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

கருநிறமுடைய கூந்தலினையும், சிவந்த வாயினையும், வெள்ளிய பற்களையும், கார்காலத்து மயில்போல ஒருவழிப்பட்ட மென்மையினையும், மிகப் பெருத்தலின் ஒன்றையொன்று நெருங்கி உள்ளே செழித்துப் பட்டிகை அறும்படி மேலெழுந்து ஒளிவீசி முன்னால் பருத்து இடையானது இளைப்புற்றுத் துன்புறும் வண்ணம் எழுச்சி பெற்றுப் பக்கங்களில் விம்மி விரிந்து

ஈர்க்கும்கூட நடுவிற் போகக் கூடாதபடி விளங்கும் இளமை பொருந்திய கொங்கைகளையுடைய பெண்களின் (வேல் போல்) கூர்மையான கண்களினால் கவர்ந்து கொள்ளப்படுதலாகிய கொள்ளைக்குத் தப்பியும்.

**விளக்கம் :**

கருங்குழல், செவ்வாய், வெண்ணகை — பண்புத் தொகைகள் முரண் தொடையில் அமைந்தன. சாயல்— மென்மை. பெண்களின் மேனி மயிலின் சாயலை ஒத்தது. கதிர்த்து—கதிரை உடையதாய். கதிர்—ஒளி; ஈர்க்கு— ஈர்க்கப்பட்டது; தொழில் ஆகு பெயர்; ஈர்த்தல்— பிளத்தல். கூர்த்த நயனக் கொள்ளை—கூர்மையான கண்களால் கவர்ந்து கொள்ளப்படுதல்.

**36–37 பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்**
**மத்தக் களிறெனு மவாவிடைப் பிழைத்தும்**

**பதப்பிரிவு:**

**பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்**
**மத்தக் களிறுஎனும் அவாஇடைப் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

மயக்கமுற்ற உலகத்தவராகிய பெரிய நீர்த்துறை யுடைய முயற்சியாகிய பரவையில் (கடலில்) மதச் செருக்குடைய ஆண்யானை என்னும் ஆசையிடத்தி னின்று தப்பியும்.

**விளக்கம் :**

பணப்பித்துப் பிடித்த உலகத்தவரை நீர்த்துறை யாகவும், அவர்கள் முயற்சியைக் கடலாகவும், அவாவினை அம்முயற்சியிற் செருக்குடன் செல்கின்ற மதயானையாகவும் உருவகஞ் செய்துள்ளார். ஆசைக் கோர் அளவு இல்லையாகலின், பரந்த இடமெங்கணும் திரியும் மதயானை போல் என்றார்.

பரப்பு — பரந்த இடம்; தொழிலாகு பெயர். மத்தம்—மதம். களிறு—களிப்பை உடையது, ஈண்டு ஆண்யானை; களிப்பு—செருக்கு.

38 கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்

**பதப்பிரிவு :**

**கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

கல்வி என்று உரைக்கப்படும் பலவாகிய கடலினின்றும் பிழைத்தும்.

**விளக்கம்:**

பல்கடல் — பலகடல்.

39 செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்

**பதப்பிரிவு :**

**செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும்**

**பொழிப்புரை :**

செல்வம் என்று சொல்லப்படுகின்ற துன்பத்திலிருந்து தப்பியும்.

**விளக்கம் .**

செல்வம் உன்னை விட்டுச் செல்வோம் என்று அச்சுறுத்துவது; நிலையாதது.

40 நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்

பதப்பிரிவு :

**நல்குரவு என்னும் தொல்விடம் பிழைத்தும்.**

பொழிப்புரை :

வறுமை என்று சொல்லப்படுகின்ற பழமையாகிய நஞ்சினின்று தப்பியும்.

விளக்கம் :

நல்குரவு–வறுமை. நல்கூர் என்னும் பகுதியினடி யாகப் பிறந்த தொழிற்பெயர். தொல்விடம்–பழமையாகிய நஞ்சு, பண்புத் தொகை.

**41 புல்வரம் பாகிய பல்துறை பிழைத்தும்**

பதப்பிரிவு ;

**புல்வரம்பு ஆகிய பல்துறை பிழைத்தும்**

பொழிப்புரை :

அற்பமான குறிக்கோளை உடைய பல (கடவுட் கொள்கையில்லாத) சமையத்துறையினின்று தப்பியும்

விளக்கம் :

வரம்பு—எல்லை; குறிக்கோள்.

**42 தெய்வ மென்பதோர் சித்தமுண்டாகி**
**43 முனிவி லாததோர் பொருளது கருதலும்**

பதப்பிரிவு :

**தெய்வம் என்பதுஓர் சித்தம் உண்டாகி**
**முனிவு இலாததுஓர் பொருள் அது கருதலும்**

பொழிப்புரை :

கடவுள் ஒருவர் இருக்கிறார் என்ற ஒரு நினைவு எழப்பெற்று, வெறுப்பற்றதாகிய ஒரு பரம்பொருளை எண்ணிய அளவில்.

**44 ஆறு கோடி மாயா சத்திகள்**
**45 வேறு வேறுதம் மாயைக டொடங்கின**

**பதப்பிரிவு :**

**ஆறு கோடி மாயா சத்திகள்**
**வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின**

பொழிப்புரை :

ஆறு கோடி எண்ணினவாகிய மாயா ஆற்றல்கள் வெவ்வேருகத் தமக்கு உரிய மயக்கச் சூழ்ச்சிகளைச் செய்ய ஆரம்பித்தன.

**46 ஆத்த மானு ரயலவர் கூடி**
**47 நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்**

**பதப்பிரிவு :**

**ஆத்தம் ஆனுர் அயலவர் கூடி**
**நாத்திகம் பேசி நாத்தழும்பு ஏறினர்**

**பொழிப்புரை :**

மெய்ம்மையான நண்பர்களும் பிறரும் சேர்ந்து கடவுள் இல்லை என்று பொய்யுரை எடுத்துரைத்து நாக்களும் வடுவேறப் பெற்ருர்கள்.

விளக்கம் :

ஆத்தம்—நெருக்கம், உரிமை. நாத்திகம்—கடவுள் இல்லையென்று சொல்வது, எதிர்மொழி : ஆத்திகம் — கடவுள் உண்டு என்பது.

**48 சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்**
**49 பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்**

பதப்பிரிவு :

**சுற்றம் என்னும் தொல் பசுக்குழாங்கள்**
**பற்றி அழைத்துப் பதறினர் பெருகவும்**

பொழிப்புரை :

உறவினர் என்று சொல்லப்படும் பழமையான உயிர்க் கூட்டத்தார் எம்மைப் பிடித்துக் கூப்பிட்டுக் கடவுள் உண்மையைக் கேட்டு மிகவும் பதைபதைத் தனர்.

விளக்கம் :

சுற்றம்—உறவு, சுற்றியிருப்பது. பசுக்குழாங்கள் —உயிர்க் கூட்டங்கள். பசு—பாசத்தால் கட்டப் பட்டிருப்பது. பசு—பதி, பசு, பாசம் என்ற நிலைத்த பொருள்கள் மூன்றில் ஒன்று. பதறுதல் — துடித்தல், பதைபதைத்தல். பெருகவும் பதறினர் என்க.

50 விரத மேபர மாகவே தியருஞ்
51 சரத மாகவே சாத்திரங் காட்டினர்.

பதப்பிரிவு :

**விரத மேபரம் ஆக வேதியரும்**
**சரதம் ஆகவே சாத்திரம் காட்டினர்**

பெரும் பாலும் நோன்பிருத்தலே வீடு பேற்றைத் தரும் என்பதாக வேதம் அறிந்த பார்ப்பனரும் மெய்ம்மைப் படுத்தத் தங்களுக்குரிய சமைய நூல்களை மேற் கோளாகக் காட்டினர்.

விளக்கம் :

வேதியர் — வேதமுணர்ந்தவர், மறையோர்; சரதம் — உண்மை; சாத்திரம் — நூல்; விரத வேதியர் — விரதங்களனுட்டித்தலே இறையடி சேர்க்கும் என்ற கொள்கையினர். இறையன்பு இறைவன் திருவடிப் பேற்றிற்கு இன்றியமையாததென உணர்த்தினருமல்லர்; தாம் உணர்ந்தாருமல்லர்.

"வீடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் னுவதும் எந்தை வலஞ்சுழி
நாடி ஞான சம்பந்தன் செந்தமிழ் கொண்டிசை
பாடும் ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே."

(திருஞான சம்பந்தர் தேவாரம்—திருமுறை-2
திருவலஞ்சுழி)

52 சமைய வாதிக டத்த மதங்களி
53 லமைவ தாக வரற்றி மலைந்தனர்

பதப்பிரிவு :

சமைய வாதிகள் தம்தம் மதங்களில்
அமைவது ஆக அரற்றி மலைந்தனர்

பொழிப்புரை :

பல்வகைப்பட்ட சமைய நூலோர்களும் தங்கள் தங்கள் சமைய நூல்களில் முடிந்த பேறு பொருந்தியிருப்பதாகச் சொல்லி முழக்கத்தோடு வாது செய்து எதிர்த்தனர்.

விளக்கம் :

சமையவாதிகள் — தத்தம் மத உண்மைகளை நிலை நிறுத்த வாதம் புரிகின்ற அறிஞர்கள்; மலைந்தனர் — போரிட்டனர், தாக்கினர்; அரற்றுதல் — தங்கள் பொய்ம்மையை நிலைநாட்ட ஆரவாரத்தோடு சொற்போர் புரிதல்.

54 மிண்டிய மாயா வாத மென்னுஞ்
55 சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்
துலோகா யதமெனு மொண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
58 யதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்

பதப்பிரிவு :

மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்டமாருதம் சுழித்து அடித்து ஆஅர்த்து

**உலோகா யதன் எனும் ஒண் திறல் பாம்பின்**
**கலா பேதத்த கடுவிடம் எய்தி**
**அதில் பெருமாயை எனைப் பல சூழவும்**

*பொழிப்புரை :*

அளவு கடந்த செருக்குடைய மாயா வாதம் என்று உரைக்கப்படும் பெருஞ்சுழற் காற்றானது சுழன்று வீசி முழக்கஞ் செய்ய, உலோகாயதன் என்று சொல்லப்படும் ஒள்ளிய வலிமையுடைய பாம்பினுடைய கலை வேறு பாடுகளாகிய நஞ்சு வந்து பொருந்தி அதிலுள்ள பெருமயக்கச் சூழ்ச்சிகள் எவ்வளவோ பல சூழ்ந்து கொள்ளவும்.

*விளக்கம் :*

உலோகாயதன் — உலகப் பொருள்களின் நுகர் வளவிலே தன் வாழ்நாளைப் போக்காக் கொண்டவன்; உலோகாயதம் — அரவு; அதன் கலாபேதம் — நஞ்சு; உருவகம். கலா பேதம் — வேறுபாடுள்ள பல நூல்கள்.

59 **தப்பா மேதாம் பிடித்தது சலியாத்**
60 **தழலது கண்ட மெழுகது போலத்**
**தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்**
**தாடியு மலறியும் பாடியும் பரவியுங்**
**கொடிறும் பேதையுங் கொண்டது விடாதெனும்**
64 **படியே யாகிநல் லிடையறு வன்பிற்**
65 **பசுமரத் தாணி யறைந்தாற் போலக்**
**கசிவது பெருகிக் கடலென மறுகி**
**யகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்**
**சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப**

*பதப்பிரிவு :*

**தப்பாமே தாம் பிடித்தது சலியாத்**
**தழல்அது கண்ட மெழுகுஅது போலத்**
**தொழுது உளம் உருகி அழுது உடல் கம்பித்து**

**ஆடியும், அலறியும், பாடியும், பரவியும்,**
**கொடிறும் பேதையும் கொண்டது விடாது எனும்**
**படியே ஆகிநல் இடை அரு அன்பின்**
**பசுமரத்து ஆணி அறைந்தால் போலக்**
**கசிவது பெருகிக் கடல் என மறுகி**
**அகம் குழைந்து அனுகுலம் ஆய்மெய் விதிர்த்துச்**
**சகம் "பேய்" என்று தம்மைச் சிரிப்ப**

பொழிப்புரை :

அவற்றால் நெறிதவறாது நாம் கைக்கொண்ட கடவுட் கொள்கையைத் தளர்ந்து விட்டுவிடாமல் (இறைவனை வழிபட்டு) நெருப்பின் எதிரே அணுகிய மெழுகைப் போல வணங்கி மனம் கரைந்து, அழுது, உடம்பு நடுங்கி, ஆனந்தக் கூத்து ஆடுதல் செய்தும்; ஓலமிட்டும், பாடலைப் பாடியும், புகழ்ந்தும், பற்றுக் குறடும் அறிவிலியும் தாம் கொண்டதைப் பற்றி விடாமை போன்ற தன்மையேயாகிக் குற்றமற்ற இடையீடில்லாத சிறந்த அன்பினால், பச்சை மரத்தில் அறைந்த ஆணி (எளிதிற் பிடுங்கி எடுக்க முடியாதபடி) இறுகப் பற்றிக் கொள்வது போல, மன உருக்கம் மிகுந்து, கடல் அலை போலப் புரண்டு புரண்டு, மனம் வாட்டமுற்று, அதற்கேற்ப, உடல் அசைந்து, உலகில் உள்ளவர்கள் தம்மைப் பேயென்று இகழ்ந்து நகை செய்ய.

விளக்கம் :

தப்பாமே — தவறாது; சலியாது — இளைத்துக் கைவிடாமல், தழலது கண்ட மெழுகது போல — இயற்கையில் இளக்கமுடைய மெழுகு தீயை அடுத்த பொழுது மிக நெகிழ்ந்து உருகுவது போல; கம்பித்து—நடுங்கி, கம்பம் — நடுக்கம்; பேதை — அறிவில்லாதவன், பசுமரம்—பசுமை மரம், பச்சை மரம்.

பச்சை மரத்தில் ஆணியை இறுக்க இறுக்க அது எளிதாக உள்ளே செல்லும், மரத்திலிருந்து நீர் கசிந்து பெருகும். கடவுளிடத்து அன்பு செலுத்தச் செலுத்த உள்ளம் உருகிக் கண்ணீர் கடல் போன்று பெருகும்.

மறுகி—கலங்கி; விதிர்த்து—நடுங்கி; "மெய் தான் அரும்பி விதிர்விதிர்த்து" என்பது காண்க.

**நாணது வொழிந்து நாடவர் பழித்துரை**
**பூணது வாகக் கோணுத லின்றிச்**
**சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்**
**கதியது பரமா திசய மாகக்**
**கற்ரு மனமெனக் கதறியும் பதறியும்**
**மற்ரேர் தெய்வம் கனவிலு நினையா**
**தருபரத் தொருவ னவனியில் வந்து**
**குருபர ஞகி யருளிய பெருமையைச்**
**சிறுமையென் றிகழாதே திருவடி யிணையை**

**பதப்பிரிவு :**

**நாண் அது ஒழிந்து நாடவர் பழித்துஉரை**
**பூண் அது ஆகக் கோணுதல் இன்றி,**
**சதுர் இழந்து அறிமால் கொண்டு சாரும்**
**கதியது பரம அதிசயம் ஆக,**
**கற்ரு மனம்எனக் கதறியும், பதறியும்**
**மற்று ஓர் தெய்வம் கனவிலும் நினையாது**
**அருபரத்து ஒருவன் அவனியில் வந்து**
**குருபரன் ஆகி அருளிய பெருமையைச்**
**சிறுமை என்று இகழாதே திருஅடி இணையை**

**பொழிப்புரை :**

நாணுதல் விட்டு நாட்டில் உள்ளவர்கள் தம்மைப் பழித்துப் பேசும் சொற்களை உள்ளம் கோணுதல் இல்லாமல் அணிகலன் ஆக ஏற்று, யாம் வலியுடையவராய் இருக்கின்ரேம் என்ற முனைப்பு உணர்ச்சி அற்றுச் சிவஞானத்தை அடையும் பேராசை மிகுந்து

அடையத்தக்க வீடு அடைதலையே மேலான வியப்புப் பொருளாகக் கொண்டு, கன்றை ஈன்ற தாய்ப்பசு தன் கன்றினைக் காணாத பொழுது அதன் மனம் பதறுவது போல் அலறியும், நடுங்கியும் வேறொரு கடவுளைக் கனா நிலையிலும் நினையாமல் அடைவதற்கு அரிய மேலான வீட்டினையுடைய ஒப்பற்ற சிவபெருமான் பூவுலகில் (வழுத்துவதற்கு எளிதாய்) எழுந்தருளி வந்து

**விளக்கம் :**

பூண் — பூணப்படுவது, அணி; அறி — அறிவு; முதனிலைத் தொழிற் பெயர். மால் கொள்ளல் — மயங்கல்; கதி—நிலை; கழி — கழித்தல்; மேனிலை — உயர்நிலை; கற்றா — கன்று + ஆ; கன்றையுடைய பசு; குருபரனாக வந்து அருள் புரிந்த இறைவன் திருவுருக் கரந்தபின் கன்றைக் காணாப் பசு கதறுவது போல் அன்பின் மிகுதியாற் காண விழைந்தார் அடிகளார் என்பதாம்.

குருபரனாகியருளிய பெருமையைச் சிறுமையென்றி கழாதே திருவடியிணையை.

78 **பிறிவினை யறியா நிழலது போல**

**பதப்பிரிவு :**

**பிறிவினை அறியா நிழல் அது போல**

**பொழிப்புரை :**

(திருப்பெருந்துறையில்) ஆசிரிய முதல்வன் ஆகி மெய்யுணர்த்தி அருள் செய்த பெருந்தன்மையை எளிமையாற் கிடைத்தமையால் அற்பமானது என்று இகழ்ந்து விடாமல், திரு அடிகள் இரண்டையும் ஒரு காலமும் பிரிதலைத் தெரியாத நிழலினைப் போல

**விளக்கம் :**

குருபரன் — குருவாகிய மேலானவன், குருமூர்த்தி; குரு— அறியாமை ஆகிய இருளை அழிப்பவன். உலகத்

தவர் பழியை அணியாக அணிந்து கொள்ளவே பிறர் புகழ்தலும் இகழ்தலும் சமம் என்ற இருவினை ஒப்பு உளதாகும். இருவினை ஒப்பு நேர்ந்ததும் இறையருள் பதியும்; குருமூர்த்தி எழுந்தருளி ஞான நன்னெறி காட்டு வார்.

> ''இருவினைச் செயல்களொப்பின் ஈசன்தன் சத்திதோயக்
> குருவருள் பெற்று''
>
> (சிவஞான சித்தியார்)

முன் பின்னாகி முனியா தத்திசை
யென்புநைந் துருகி நெக்கு நெக்கேங்கி
யன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
யுரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்
சாயா வன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி.

பதப்பிரிவு :

முன்பின் ஆகி முனியாது அத்திசை
என்புநைந்து உருகி, நெக்குநெக்கு ஏங்கி,
அன்புஎனும் ஆறு கரைஅது புரள
நன் புலன் ஒன்றி, நாதஎன்று அரற்றி,
உரைதடு மாறி, உரோமம் சிலிர்ப்ப
கரமலர் மொட்டித்து இருதயம் மலர
கண்களி கூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாள்தொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி.

பொழிப்புரை :

குருமூர்த்தி திருவுருவம் முன்னும், தான் பின்னுமாக நினைந்து வெறுப்பில்லாமல் குருபரன் எழுந்தருளிய திக்கை நோக்கி எலும்பும் தன்வலிமை கெட்டு இளகும்படி

இடைவிடாமல் நெகிழ்ந்து இரங்கி அன்பாகிய ஆறு உள்ளமாகிய கரை புரண்டு ஓட, நல்ல ஐந்து புலன்களும் ஒன்று பட்டுத் தலைவனே என்று புலம்பி ஓலமிட்டு அழைத்துச் சொற்கள் குழறி மயிர்க் கூச்சு எறியக் கைகளாகிய மலர்களைக் குவித்து, உளக்கமலம் விரிவுற்றுக் கண்கள் மகிழ்ச்சி மிகுதியினால் சிறிய நீர்த்துளிகளைத் தோற்றுவிக்கத் தளராத அன்பினை ஒவ்வொரு நாளும் வளர்க்கின்றவர்களை அவர்களுக்கு அன்னையே ஆகி வளர்த்த உனக்கு வணக்கம்

**விளக்கம் :**

என்பு நைந்து—எலும்பு நெகிழ்ந்து; அன்பு எனும் ஆறு—அன்பு இங்கு இடையறாது ஒழுகும் ஆறாக உருவகிக்கப்பட்டுள்ளது; ஒன்றி—பொருந்தி, புலன்—உளத்துடன் ஒற்றுமைப்பட்டிருப்பதால் நன்புலன் எனப்பட்டது; நன்புலன்—நல்ல இடத்திற் செல்கின்ற ஐம்பொறிகளும் ஒற்றுமைப்பட்டுக் கண்ணொன்றேயாகிக் காண விரும்பின. ஆதலின் 'நாத' என்று அரற்றினார்.

**'ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள'**

(பெரியபுராணம்)

கரமலர் மொட்டித்து இருதயம் மலர - மொட்டித்து மலர — முரண் தொடை. மொட்டித்து — குவித்து, மொட்டுப் போல் குவித்து, மொட்டு என்ற பெயரடியாகப் பிறந்த வினை. மலர — விரிய; களிகூர — மகிழ்ச்சி மிக; நுண்துளி—பண்புத் தொகை. அரும்புதல்—தோன்றுதல்; சாய்தல்—கெடுதல், தளர்தல்; தாயே ஆகி வளர்த்தனை—தாயே ஆகி வளர்த்தலாவது குழந்தையின் நலங்கருதித் தாய் தானே மருந்துண்ணல் முதலியவற்றை மேற்கொண்டு போற்றுதல் போலத் தயாபரன் தானே குருவடிவங் கொண்டு வருதல். "பால் நினைந்தூட்டும் தாய்" என்னும் தொடரால் நன்கு விளங்கும். "போற்றி" என்பதைப் போற்ற வேண்டும் (காக்க) என இகர ஈற்று வியங்கோளாகக் கொள்வதும் உண்டு.

88 மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி

பதப்பிரிவு :

மெய்தரு வேதியன் ஆகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி

பொழிப்புரை :

மெய்யுணர்வினைத் தரவல்ல மறையோனாகி வந்து இருவினையும் ஒழியும்படி கைதூக்கி எடுக்குந் திறமை வாய்ந்த கடவுளே வணக்கம்.

விளக்கம் :

மெய் — உண்மை; மெய்தரு — உணர்த்துகின்ற; வேதியன்—வேதாகமங்களை அருளிச் செய்த சிவபெருமான்; வினை — நல்வினை, தீவினை; கைதரல் — கை கொடுத்தல், உதவுதல், பிறவிக் கடலினின்றும் கரையேற்றும் சிறப்பால் கைதரல் என்றார்.

90 ஆடக மதுரை யரசே போற்றி
91 கூட லிலங்கு குருமணி போற்றி

பதப்பிரிவு

ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி

பொழிப்புரை

மதுரையில் எழுந்தருளியிருக்கும் பொன் வண்ணனை அரசனே வணக்கம். நான்மாடக் கூடலாகிய மதுரையில் விளங்கும் நன்னிற மாணிக்கமே வணக்கம்.

விளக்கம் :

ஆடகம் — நால்வகைப் பொன்னில் ஒருவகை. மதுரை — நான் மாடக்கூடல், பாண்டியன் தலை நகர்,

இத்தலத்தில் இறைவன் அறுபத்து நான்கு திருவிளை யாடல்கள் ஆற்றியுள்ளான்.

அரசு — சிவபெருமான், சோமசுந்தர பாண்டியனாய் ஆண்ட தன்மையைக் குறிக்கும்.

கூடல் — நான்மாடக் கூடல், வருணன் விட்ட மேகங் களைத் தடுக்கும் பொருட்டு இறைவன் அனுப்பிய மேகங்கள் மதுரையின் நான்கு மாடங்களில் (கோபுரங் களில்) கூடித் தடுத்தமையால் நான்மாடக் கூட லாயிற்று.

"கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழ்"

(திருக்கோவையார்: 20)

**92 தென்றில்லை மன்றினு ளாடி போற்றி**

பதப்பிரிவு:

**தென் தில்லை மன்றினுள் ஆடி போற்றி**

பொழிப்புரை:

அழகிய சிதம்பரப் பொன்னம்பலத்தில் திருக் கூத்தாடுகின்றவனே வணக்கம்.

விளக்கம்:

தென்தில்லை மன்று — அழகிய தில்லையாகிய சிதம் பரத்தில் உள்ள பொன்னம்பலம். ஆடி — ஆடுகின்ற வன்; வினையாலணையும் பெயர்.

**93 இன்றெனக் காரமு தானாய் போற்றி**

பதப்பிரிவு:

**இன்று எனக்கு ஆர்அமுது ஆனாய் போற்றி**

பொழிப்புரை:

இன்றைக்கு அடியேனுக்கு இனிமை நிறைந்த அமுத மானவனே வணக்கம்.

விளக்கம் :

ஆர் அமுது — அருமையாகிய அமுதம், உண்ணப் பெறும் அமுதம், நிறைந்த அமுதம்.

**94 மூவா நான்மறை முதல்வா போற்றி**

பதப்பிரிவு :

**மூவா நான் மறை முதல்வா போற்றி.**

பொழிப்புரை :

மூப்படையாத (கெடாத) நான்கு மறைகளைத் தோற்றுவித்த முதன்மை பெற்றவனே வணக்கம்.

விளக்கம் :

இறைவன் என்றும் ஓர் இயல்பினன். அவனால் அருளிச் செய்யப்பெற்ற நான்கு வேதங்களும் என்றும் ஒரே தன்மையன. மூவா — மூப்படையாத.

நான்மறை — நான்காகிய மறைகள்.

**95 சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி**

பதப்பிரிவு :

**சே ஆர் வெல் கொடிச் சிவனே போற்றி**

பொழிப்புரை :

ஆனேற்றின் வடிவம் அமைந்த வெற்றிக் கொடியை உயர்த்திய மங்கல குணத்தனே! வணக்கம்.

விளக்கம் :

**சே — ஆன் ஏறு, எருது.**

சிவன் — இன்பத்தைச் செய்பவன்; எங்கும் இருப்பவன், நன்மை தருபவன், அநாதி, நின்மலன்.

96 **மின்னுருவ விகிர்தா போற்றி**

*பதப்பிரிவு*

**மின் ஆர் உருவ விகிர்தா போற்றி**

*பொழிப்புரை*

*மின்னொளி பொருந்திய பலவேறு வடிவங்கள் உடையவனே! வணக்கம்.*

**விளக்கம் :**

*மின் ஆர் — மின்னொளி பொருந்திய.*

*விகிர்தன் வேறுபட்டவன். போக வடிவம், யோக வடிவம், கோர வடிவம் எனப்பல உருவங்கள் கொள் பவன்.*

"போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியாய் யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார்
வேகியானுற் போற்செய்த வினையினை வீட்டல் ஓரார்
ஊகியா மூடரெல்லாம் உம்பரின் ஒருவன் என்பர்."

*(சிவஞான சித்தியார்*
*சூத்திரம்1. அதி2. செ.50.)*

*"முதல்வன் கொண்ட திருமேனிகளிற் சில திரு மேனி போக வடிவமும், சில திருமேனி கோர வடிவமும், சில திருமேனி யோக வடிவமுமாகக் கொண்டது, முறையே, உயிர்கட்குப் போகம் புரிதற் பொருட்டும், வினையினை வீட்டுதற் பொருட்டும், யோகமுத்தியுதவுதற் பொருட்டும் ஆம்" — சிவஞான முனிவரர் உரை.*

"ஒன்றேடொன் றெவ்வாவேடம் ஒருவனே தரித்துக் கொண்டு
நின்றலால் உலகம் நீங்கி நின்றனன் என்றும் ஓரார்
அன்றியவ் வேடமெல்லாம் அருள்புரி தொழிலென் றோரார்
கொன்றது வினையைக் கொன்று நின்றஅக் குணமென் றோரார்

*(சிவ ஞானசித்தியார்,*
*சூத்திரம்1 அதி 2. செ. 51)*

**97 கன்னு ருரித்த கனியே! போற்றி**

பதப்பிரிவு :

**கல் நார் உரித்த கனியே! போற்றி**

பொழிப்புரை :

கல்லிலே நார் உரித்தாற் போல எனது நெஞ்சக் கல்லை (நெகிழ்வித்து)த் திருத்திய அன்புமுதிர்ந்த கனி போன்றவனே! வணக்கம்.

**விளக்கம் :**

கன்னூர்—கல் நார்; கல்லினின்றும் நாரை உரித்தல்; ஒரு பொருளை உரிப்பதற்கு அதனை மென்மையாக்க வேண்டும். நார் உரித்தற்கு ஏற்றவாறு கல் மனத்தைக் குழைவித்துக் கனி போலச் செய்து என்பதாம்.

"கல்லைமென் கனியாக்கும் விச்சை கொண்டு
என்னை நின்கழற் கன்ப னுக்கினய்."

(திருவாசகம், திருச்சதகம்-94)

"கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனை."

(திருவாசகம்-திருஅம்மானை 5)

**98 காவாய் கனகக் குன்றே போற்றி**

பதப்பிரிவு :

**காவாய் கனகக் குன்றே போற்றி**

பொழிப்புரை :

பொன்மலை போன்றவனே என்னைக் காத்தருள்க; (உனக்கு) வணக்கம்.

விளக்கம் :

(கனகக் குன்றே காவாய் எனக் கூட்டுக.)

99 ஆவா வென்றனக் கருளாய் போற்றி

பதப்பிரிவு :

**ஆ! ஆ! என்தனக்கு அருளாய் போற்றி**

பொழிப்புரை :

ஏழைக்கு இரங்கி அருள்வாய் ஐயனே! வணக்கம்.

**விளக்கம்**

ஆ ஆ — இரக்கப் பொருட்டு.

**100 படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி**

**பதப்பிரிவு :**

**படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி**

**பொழிப்புரை :**

படைப்பவனே! காப்பவனே! அழிப்பவனே! வணக்கம்.

**விளக்கம் :**

படைப்பாய், காப்பாய், துடைப்பாய் என்பன விளி மொழிகள்.

**101 இடரைக் களையு மெந்தாய் போற்றி**

**பதப்பிரிவு :**

**இடரைக் களையும் எந்தாய் போற்றி**

**பொழிப்புரை :**

துன்பத்தை நீக்கும் எமது தந்தையே! வணக்கம்.

**விளக்கம் :**

எந்தாய் — எந்தை என்பதன் விளி; களையும் — நீக்கும், பறித்து எறியும்.

102 ஈச போற்றி, யிறைவ போற்றி

பதப்பிரிவு :

**ஈச போற்றி, இறைவ போற்றி**

பொழிப்புரை :

திருவெல்லாம் உடையவனே! வணக்கம். எங்கும் தங்கியிருப்பவனே வணக்கம்.

விளக்கம் :

இறைவன் — எங்கும் தங்குபவன், முதல்வன்.

103 தேசப் பளிங்கின் றிரளே போற்றி

பதப்பிரிவு :

**தேசப் பளிங்கின் திரளே போற்றி**

பொழிப்புரை:

ஒளி வீசும் படிகப் பிழம்பே! வணக்கம்.

விளக்கம் :

தேசு — ஒளி.

104 அரைசே போற்றி யமுதே போற்றி

பதப்பிரிவு :

**அரைசே போற்றி அமுதே போற்றி**

பொழிப்புரை :

அரசனே வணக்கம்; அமுதம் போன்றவனே வணக்கம்.

விளக்கம் :

அரைசு — அரசு என்பதன் இடைப் போலி.

105 விரைசேர் சரண விகிர்தா போற்றி

**பதப்பிரிவு;**

விரைசேர் சரண விகிர்தா போற்றி

**பொழிப்புரை.**

அன்பர்கள் தூவிய மலர்களால் மணம் பொருந்திய, அடைக்கலத்திற்கு இடமான, திரு அடிகளையுடைய வனே, உலகினின்று வேறுபட்ட வடிவினையுடையவனே! வணக்கம்.

**விளக்கம்:**

விகிர்தன்—வேறுபாடுடையவன்; ஒரு படித்தல்லாது வேறுபட்ட செயலினன். God as different from the world (Lexicon)

"வெண்டலை கைக்கொண்ட விகிர்த வேடர்
வீழிமிழலையே மேவினாரே"

(அப்பர் தேவாரம், திருமுறை-6,
திருவீழிமிழலை 9)

"வெண் மதியங்கண்ணி விகிர்தா போற்றி

(அப்பர்-திருஆரூர் 5)

"வெள்ளை யேறேறும் விகிர்தா போற்றி

(அப்பர்-திருஆரூர் 8)

"வெண்காடு மேவிய விகிர்தனாரே"

(அப்பர்-திருமுறை 6—திருவெண்காடு)

"மீயச்சூர் பிரியாத விகிர்தன் கண்டாய்"

(அப்பர்-திருகோடிகா 1)

"வென்றிமிகு காலனுயிர் பொன்றிவீழ
விளங்கு திருவடி யெடுத்த விகிர்தன் தன்னை"

(அப்பர்-திருஓமாம்புலியூர்-4)

"கையாற் றொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விகிர்தனூர்
நெய்யாடு தலஞ்சடையார் நிலாவு மூர்போலும்
பைவாய் நாகங் கோடலீனும் பாசூரே"

(திருஞானசம்பந்தர்—தேவாரம்
திருப்பாசூர்3)

"வெண் திங்கள் சூடிய விகிர்தா"

(சுந்தரர்-திருப்பாச்சிலாச்சிராமம் 7)

"விகிர்தா அடியேனையும் வேண்டுதியே"

(சுந்தரர்-திருவெஞ்சமாக்கூடல்)

**106 வேதி போற்றி விமலா போற்றி**

**பதப்பிரிவு:**

**வேதி போற்றி விமலா போற்றி**

**பொழிப்புரை:**

அறிஞனே வணக்கம். மலமற்றவனே வணக்கம்.

**விளக்கம்:**

வேதி — வேதம் அருளிச் செய்தவன்.

**107 ஆதி போற்றி யறிவே போற்றி**

**பதப்பிரிவு:**

**ஆதி போற்றி அறிவே போற்றி**

பொழிப்புரை:

எல்லாப் பொருள்களுக்கும் முதல்வனே வணக்கம் மெய்யறிவே வணக்கம்.

**108 கதியே போற்றி கனியே போற்றி**

**பதப்பிரிவு :**

கதியே போற்றி கனியே போற்றி

**பொழிப்புரை :**

வீடு பேறே! வணக்கம். பழம் போன்ற இனிய பொருளே! வணக்கம்.

**விளக்கம் :**

"ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே."

(ஐந்தாந் திருமுறை – தனித் திருக்குறுந்தொகை)

109 நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி

**பதப்பிரிவு :**

நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி

**பொழிப்புரை :**

கங்கையாறு தங்கிய சிவந்த சடையை உடைய சிவபெருமானே! வணக்கம்.

**விளக்கம்.**

நம்பன் — விரும்பப் பெறுபவன்.

110 உடையாய் போற்றி யுணர்வே போற்றி

**பதப்பிரிவு :**

உடையாய் போற்றி உணர்வே போற்றி

**பொழிப்புரை :**

உயிர்களை அடிமையாக உடையவனே! வணக்கம். மெய்யுணர்வே! வணக்கம்.

**விளக்கம் :**

உடையாய் — உடையான் என்பதன் விளி.

**111 கடையே னடிமை கண்டாய் போற்றி**

பதப்பிரிவு :

**கடையேன் அடிமை கண்டாய் போற்றி**

**பொழிப்புரை :**

(நாயினும்) கீழ்ப்பட்டவனாகிய என்னையும் அடியவனாக்கக் கொள்ளக் கடைக்கணித்து அருள் புரிந்தவனே.! வணக்கம்.

**112 ஐயா போற்றி யணுவே போற்றி**

**பதப்பிரிவு :**

**ஐயா போற்றி அணுவே போற்றி**

பொழிப்புரை :

வியக்கத்தக்க பெருமை வாய்ந்தவனே! வணக்கம். நுண்ணிய வடிவினனே! வணக்கம்.

விளக்கம் :

ஐயன் — வியக்கத்தக்க பெரியோன், ஐ—வியப்பு.

**113 சைவா போற்றி தலைவா போற்றி**

பதப்பிரிவு :

**சைவா போற்றி தலைவா போற்றி**

பொழிப்புரை :

சிவநெறி வகுத்தவனே! வணக்கம்; எவ்வுயிர்க்கும் தலைவனே! வணக்கம்.

விளக்கம் :

சைவம் — சிவசம்பந்தம்; சிவனைப் பொருளாகக் கொண்டுள்ள நெறி சைவம்.

" சைவத்தின் மேற்சமையம் வேறில்லை அதிற்சார் சிவமாம்
தெய்வத்தின் மேல்தெய்வம் வேறில்எனும் நான்மறைச்
செம்பொருள்வாய்
மைவைத்த தேவாரமும் திருவாசகமும் "

(சைவ எல்லப்ப நாவலர்.)

**114 குறியே போற்றி குணமே போற்றி**

**பதப்பிரிவு :**

குறியே போற்றி குணமே போற்றி

**பொழிப்புரை :**

இலிங்கவடிவினனே! வணக்கம்; எண்குணனே! வணக்கம்.

விளக்கம் :

குறி — இலிங்கம். அன்பர்கள் தங்கள் திருந்திய உள்ளத்தில் குறியாகக் கொள்ளும் பொருள்.

" குறிகளும் அடையாளமுங் கோவிலும்
நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும் "

(திருமுறை 5, தனித் திருக்குறுந் தொகை-6)

" குறித்தடியில் நின்று "
குருவின் அருளினால் அறிவ தொருகுறியின்கண் உறைத்து நின்று.

(சிவஞான சித்தியார் 9-2-1 சிவஞான முனிவர் உரை)

எண்குணங்களாவன :

தன்வயத்தனுதல், தூய உடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை.

115 நெறியே போற்றி நினைவே போற்றி

பதப்பிரிவு :

நெறியே போற்றி நினைவே போற்றி

பொழிப்புரை :

முத்தியிற் சேர்க்கும் ஞானநல்வழியே! வணக்கம். உயிர்களின் கருத்தும், கருத்தறிந்து முடிக்கும் பொருளுமாய் இருக்கின்றவனே! வணக்கம்.

விளக்கம் :

நெறி — ஞான மெய்ந்நெறி; திருநாமம் அஞ்செழுத் தால் குறிக்கப் பெறுவது.

"ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும்
நமச்சி வாயச் சொலாம்"

(திருத்தொண்டர் புராணம்
— திருஞானசம்பந்தர்)

116 வானோர்க் கரிய மருந்தே போற்றி

பதப்பிரிவு :

வானோர்க்கு அரிய மருந்தே போற்றி.

பொழிப்புரை :

விண்ணிலுள்ள தேவர்கள் அடைதற்கு அருமை யான அமுதமானவனே! வணக்கம்.

விளக்கம் :

மருந்து—தேவாமிர்தம்.

117 **ஏனோர்க் கெளிய விறைவா போற்றி**

பதப்பிரிவு :

**ஏனோர்க்கு எளிய இறைவா போற்றி**

**பொழிப்புரை :**

(மண்ணுலகில் வாழும் செருக்கற்ற) மற்றை அடியார்கட்கு எளியனாய் இருக்கும் இறைவனே! வணக்கம்.

118 **மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை**
**யாழா மேயரு ளரசே போற்றி**

பதப்பிரிவு :

**மூஏழ் சுற்றம் முரண்உறு நரகிடை**
**ஆழாமே அருள் அரசே போற்றி**

பொழிப்புரை :

இருபத்தொரு தலைமுறையில் வருகின்ற அடியாராகிய உறவினர்கள், ஒன்றோடொன்று மாறுபாடு பொருந்திய நரகங்களிற் சென்று அழுந்தி விடாதபடி அருள்புரியும் வேந்தே! வணக்கம்.

விளக்கம் :

மூவேழ் சுற்றம்—மூன்று ஏழ் சுற்றம், இருபத்தொரு தலைமுறை. இதனைத் தாய் வழி, தந்தை வழி, மனைவி வழி என மூன்று வகைப்படுத்தி ஏழு தலைமுறையாகவும் குறிப்பர். முரண்—மாறுபாடு; ஆழாமே—எதிர்மறை வினையெச்சம்.

120 **தோழா போற்றி துணைவா போற்றி**

பதப்பிரிவு:

**தோழா போற்றி துணைவா போற்றி**

**பொழிப்புரை:**

உயிர் நண்பனே! வணக்கம். உயிர்த் துணைவனே! வணக்கம்.

விளக்கம்:

தோழன் — நண்பன். துணைவன் — உடனிருந்து உதவி புரிபவன்.

**121 வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி**

பதப்பிரிவு;

**வாழ்வே போற்றிஎன் வைப்பே போற்றி**

**பொழிப்புரை:**

என்னுடைய வாழ்வு முதலே! வணக்கம், நான் பேணி வைத்த பொருளே! வணக்கம்.

விளக்கம்:

"போற்றியென் வாழ்முத லாகிய பொருளே!"

(திருப்பள்ளியெழுச்சி)

"வைப்பு மாடென்றும் மாணிக்கத் தொளியென்றும்
மனத்திடை யுருகாதே."

(திருவாசகம்-அதிசயப்பத்து)

வாழ்வு, வைப்பு—தொழிலாகு பெயர்கள். வைப்பு—வைக்கப்பட்ட சேமிப்பு.

**122 முத்தா போற்றி முதல்வா போற்றி**

பதப்பிரிவு:

**முத்தா போற்றி முதல்வா போற்றி**

**பொழிப்புரை :**

இயல்பாகவே பாசங்களின் நீங்கியோனே! வணக்கம். முதன்மைப் பொருளானவனே ! வணக்கம்.

**விளக்கம் :**

முத்தன் — விடுதலை உடையவன், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன்.

**123 அத்தா போற்றி யரனே போற்றி**

பதப்பிரிவு :

**அத்தா போற்றி அரனே போற்றி**

**பொழிப்புரை :**

அப்பனே ! வணக்கம், பாசத்தை அரிப்பவனே! வணக்கம்.

**விளக்கம் :**

அத்தன் — அப்பன், ஐயன், தலைவன்.

**124 உரையுணர் விறந்த வொருவ போற்றி**

பதப்பிரிவு :

**உரை உணர்வு இறந்த ஒருவ போற்றி**

**பொழிப்புரை :**

சொல்லினையும் சுட்டறிவினையும் கடந்த ஒப்பற்றவனே! வணக்கம்.

**விளக்கம் :**

உரை உணர்வு—சொல்லும் சுட்டறிவும்; உம்மைத் தொகை. இறத்தல் — கடத்தல்.

**125 விரிகட லுலகின் விளைவே போற்றி.**

பதப்பிரிவு :

**விரிகடல் உலகின் விளைவே போற்றி**

பொழிப்புரை :

பரந்த கடல் சூழ்ந்த உலக வாழ்வின் பயனே! வணக்கம்.

**விளக்கம் :**

விரி கடல் — வினைத்தொகை; கடல் — நீந்திக் கடத்தல், நீந்திக் கடக்க வேண்டுவதுமாகும்.

126 **அருமையி லெளிய வழகே போற்றி!**

பதப்பிரிவு :

**அருமையில் எளிய அழகே போற்றி.**

பொழிப்புரை :

காண்டற்கரிய பொருளாக இருந்தும் அன்பர்க்கு எளியனாய்த் தோன்றும் அழகனே! வணக்கம்.

**விளக்கம் :**

இறைவன் அன்பற்றார்க்கு அருமையுடையவனாக வும், அடியவர்க்கு எளிமையுடையவனாகவும் இருக்கின்ற அழகு வடிவினன்.

" ஊனினுள் ளுயிரைவாட்டி உணர்வினார்க் கெளியராகி
வானினுள் வானவர்க்கும் அறியலா காதவஞ்சர்
நானெனிற் றானேயென்னும் ஞானத்தார் பத்தர்நெஞ்சுள்
தேனும்இன் னமுதுமானார் திருச்செம்பொன் பள்ளியாரே. "

(திருநாவுக்கரசர்—திருமுறை 4
திருச்செம்பொன்பள்ளி)

127 **கருமுகி லாகிய கண்ணே போற்றி**

பதப்பிரிவு :

**கருமுகில் ஆகிய கண்ணே போற்றி**

பொழிப்புரை :

கார்மேகம் போன்ற அருள்மழைக்கண்ணே ! வணக்கம்.

**விளக்கம் :**

கருமுகில் — பண்புத் தொகை.

கருக்கொண்ட மேகம் மழை பொழிவது போன்று அருட்சூல் கொண்ட முகிலாகிய கண்கள் திருவருள் மழை பொழியும்.

128 **மன்னிய திருவருள் மலையே போற்றி**

**பதப்பிரிவு :**

**மன்னிய திருஅருள் மலையே போற்றி**

**பொழிப்புரை :**

நிலைபெற்ற திருவருளாகிய மலையே! வணக்கம்.

**விளக்கம்:**

மேல் அருள் மழை என்றார்; அவ்வருள் என்றும் நிலைபெற்றிருக்கும் என்பதை விளக்க இறைவனை அருள்மலை யென்கின்றார்.

129 **என்னையு மொருவ னாக்கி யிருங்கழல்**

130 **சென்னியில் வைத்த சேவக! போற்றி.**

பதப்பிரிவு :

**என்னையும் ஒருவன் ஆக்கி இருங்கழல்**
**சென்னியில் வைத்த சேவக போற்றி**

பொழிப்புரை:

(ஒன்றுக்கும் உதவாத) அடியேனையும் அடியாருள் ஒருவன் ஆகச்செய்து உன்னுடைய பரந்த திருவடிகளை என் தலையிற் சூட்டி ஆட்கொண்ட வீரனே! வணக்கம்.

விளக்கம் :

என்னையும்--உம்மை இழிவு சிறப்பு; சென்னி—தலை, முடி ; சேவகன்—வீரன்.

**131 தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி**

பதப்பிரிவு :

**தொழுத கை துன்பம் துடைப்பாய் போற்றி**

பொழிப்புரை :

நின்னை வணங்கிய கைகளையுடையவர்க்கு வரும் துன்பங்களை அகற்றுவோனே! வணக்கம்.

விளக்கம் :

துடைத்தல்—அழித்தல், போக்கல்.

**132 அழிவிலா வானந்த வாரி! போற்றி**

பதப்பிரிவு :

**அழிவு இலா ஆனந்த வாரி போற்றி**

பொழிப்புரை :

அழிவு இல்லாத இன்பக் கடலே! வணக்கம்.

விளக்கம் :

ஆனந்த வாரி — இன்பக்கடல்.

**133 அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி**

**பதப்பிரிவு :**

**அழிவதும் ஆவதும் கடந்தாய் போற்றி**

**பொழிப்புரை :**

இழத்தலில் துன்பமும் பெறுதலில் இன்பமும் இல்லாது வென்றவனே! வணக்கம். (இறத்தல் பிறத்தல் களைக் கடந்தவன் எனினும் பொருந்தும்.)

**விளக்கம் :**

அழிவதும் ஆவதும் — போக்கும் வரவும்.

**134 முழுவது மிறந்த முதல்வா போற்றி**

பதப்பிரிவு:

**முழுவதும் இறந்த முதல்வா போற்றி**

பொழிப்புரை

எல்லாவற்றையும் கடந்த முதற் கடவுளே! வணக்கம்.

**135 மானேர் நோக்கி மணாளா போற்றி**

பதப்பிரிவு:

**மான் நேர் நோக்கி மணாளா போற்றி**

பொழிப்புரை:

மான்விழியை ஒத்த பார்வையையுடைய உமையம் மையின் நாயகனே! வணக்கம்.

விளக்கம் :

மான்நேர் நோக்கி—மான்விழியை ஒத்த கண்ணை உடையவள். நேர்தல்—ஒத்தல்; நோக்கி — நோக்கு உடையவள்; நோக்கு—கண்.

136 வானகத் தமரர் தாயே! போற்றி

பதப்பிரிவு :

வான்அகத்து அமரர் தாயே போற்றி

பொழிப்புரை :

விண்ணுலகிலுள்ள தேவர்கட்குத் தாயானவனே! வணக்கம்.

விளக்கம் :

அமரர்—மரணத்தினின்றும் நீங்கியவர். திருப்பாற் கடலில் தோன்றிய அமிர்தம் உண்டதால் மரணம் இல்லாதவர் தேவர். இறைவன் அடியார்களுக்குத் தாயாக இருக்கிறான்.

மனத்துள் மாயனை மாசறு சோதியைப்
புனிற்றுப் பிள்ளைவெள் ளைம்மதி சூடியை
எனக்குத் தாயைஎம் மான்இடை மருதனை
நினைத்திட் டூறி நிறைந்ததென் னுள்ளமே.

(அப்பர்–திருமுறை 5)

137 பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி

பதப்பிரிவு :

பார்இடை ஐந்து ஆய்ப் பரந்தாய் போற்றி

பொழிப்புரை:

நிலமாகிய பூதத்தில் ஐந்து குணங்களாகி விரிந்தவனே! வணக்கம்.

விளக்கம் .

நிலமானது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து குணங்களையுடையது. நாற்றம் மண்ணின் சிறப்புக் குணம்.

**138 நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி**

*பதப்பிரிவு:*

**நீர் இடை நான்கு ஆய் நிகழ்ந்தாய் போற்றி**

*பொழிப்புரை:*

*நீரின்கண் நான்கு குணங்களாய் விளங்குபவனே! வணக்கம்.*

விளக்கம்:

*நீரின் குணங்கள்: சுவை, ஒளி, ஊறு, ஓசை என்பவை. இவற்றுள் சுவை நீரின் சிறப்புக்குணம். நீரிடை, பாரிடை, தீயிடை முதலியவற்றில் உள்ள இடை ஏழனுருபு.*

**139 தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி**

*பதப்பிரிவு :*

**தீஇடை மூன்று ஆய்த் திகழ்ந்தாய் போற்றி**

*பொழிப்புரை :*

*அனலில் மூன்று குணங்களாய் விளங்குபவனே! வணக்கம்.*

விளக்கம் :

*உருவம் (ஒளி) தீயின் சிறப்புக்குணம். தீயானது ஒளி, ஊறு, ஓசை என்னும் மூன்று குணங்களை உடையது.*

**140 வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**

*பதப்பிரிவு:*

**வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**

பொழிப்புரை :

காற்றின்கண் இரண்டு குணங்களாய் விளங்கு பவனே ! வணக்கம்.

விளக்கம் :

வளி — காற்று; வளி ஊறு, ஓசை என்னும் இரண்டு குணங்களையுடையது. ஊறு வளியின் சிறப்புக் குணம்.

**141 வெளியிடை யொன்ருய் விளைந்தாய் போற்றி**

பதப்பிரிவு :

**வெளிஇடை ஒன்றுஆய் விளைந்தாய் போற்றி**

பொழிப்புரை :

விசும்பில் ஒரு குணமாய்த் தோன்றுவோனே! வணக்கம்.

விளக்கம் :

ஆகாயம் — வெளி; ஆகாயம் சத்த குணம் ஒன்றே உடையது.

"சத்த தன்மாத்திரையினின்றுந் தூலமாய் ஆகாயந் தோன்றிப் பலவேறு வகைப்பட்ட சத்தம் உடைத்து.

வாயு—காற்று, வளி. பரிச தன் மாத்திரையினின்றுந் தோன்றிய வாயு சத்தம், பரிசம் என்னும் இரண்டு குண முடைத்து. வளி—காற்று; தேயு—தீ. உருவ தன் மாத்திரையிற்ரேன்றிய தேயு சத்தம், பரிசம், உருவம் என்னும் மூன்று குணமுடைத்து.

அப்பு — நீர். இரத தன்மாத்திரையில் தோன்றிய புனல், சத்தம், பரிசம், உருவம், இரதம் என்னும் நான்கு

குணமுடைத்து. புனல் — நீர், பிருதிவி — பார், மண். கந்த தன்மாத்திரையில் தோன்றிய புடவி, சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம் ஆகிய ஐந்து குண முடைத்து. புடவி—பூமி.”

(சிவஞானபாடியம்—சூத்திரம் 2)
அதிகரணம்-2)

“மண்ணதனில் ஐந்தை மாநீரில் நான்கை
வயங்கெரியின் மூன்றை மாருதத் திரண்டை
விண்ணதனில் ஒன்றை விரிகதிரைத்
தண்மதியைத் தாரகைகள் தம்மின் மிக்க
எண்ணதனில் எழுத்தை ஏழிசையைக் காமன்
எழிலழிய எரியுமிழ்ந்த இமையா நெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.”

(அப்பர் திருத்தாண்டகம்-திருக்கற்குடி)

142 அளிபவ ருள்ளத் தமுதே போற்றி

பதப்பிரிவு :

அளிபவர் உள்ளத்து அமுதே போற்றி

பொழிப்புரை :

அன்பினால் உள்ளங்கனிபவர் மனத்திற் சுரக்கும் அமுதமே! வணக்கம்.

விளக்கம் :

அளியவர்—இரங்குகின்றவர். அளி—இரக்கம்.

143 கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி

பதப்பிரிவு :

கனவிலும் தேவர்க்கு அரியாய் போற்றி

பொழிப்புரை :

கனவின்கண்ணும் அன்பற்ற விண்ணவர்க்குக் காண்டற்கு அரியவனே! வணக்கம்.

விளக்கம் :

"வானினுள் வானவர்க்கும் அறியலாகாத வஞ்சர்."

(அப்பர் - திருமுறை-4)

144 நனவிலு நாயேற் கருளினை போற்றி

பதப்பிரிவு :

நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி

பொழிப்புரை :

விழிப்பு நிலையிலும் நாயிற் கீழ்ப்பட்ட அடியேனுக்கு அருள் புரிபவனே! வணக்கம்.

விளக்கம் :

கனவு — கனா, சொப்பனம்; இதற்கு எதிர்மொழி நனவு.

நனவிலுங் கனவிலு நாளுந் தன்னொளி
நினைவிலும் எனக்குவந் தெய்து நின்மலன்
கனைகடல் வையகந் தொழுக ருக்குடி
அனலெரி யாடுமெம் அடிகள் காண்மினே.

(திருஞானசம்பந்தர்-திருமுறை-3
திருக்கருக்குடி-1)

145 இடைமரு துறையு மெந்தாய் போற்றி

பதப்பிரிவு :

இடை மருது உறையும் எந்தாய் போற்றி

பொழிப்புரை :

திருவிடை மருதூரில் எழுந்தருளியிருக்கும் எம் தந்தையே ! வணக்கம்.

விளக்கம் :

இடைமருது—திருவிடைமருதூர் என்னும் பதி.

இது, தஞ்சை மாயூரம் வழியில் உள்ள தலம்; திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இவர்களால் இங்கு நிகழும் பூச முழுக்குப் போற்றப்பெற்றது. கோவில் மரம் மருது;வரகுண பாண்டியற்குப் பழிதீர்த்து முத்தி கொடுத்தது; பட்டினத்தார், பத்திரகிரியார் வாழ்ந்த பாங்குடையது; திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த பெரிய கோவில் கொண்டது; காவிரியின் தென் கரையில் உள்ளது. இது மத்தியார்ச்சுனம் எனப்படும்.

மத்தி – இடை; அர்ச்சுனம் – மருது; 'திருவிடை மருதூர்த் தெரு அழகு' என்பது பழமொழி.

"பூசம் புகுந்தாடிப் பொலிந்தழகாய
ஈச னுறைகின்ற இடைமருதீதோ"

(சம்பந்தர் - திருமுறை 1)

"ஈசன் எம்பெருமான் இடைமருதினில்
பூச நாட்புகுதும் புனலாடவே"

(அப்பர் திருமுறை-5)

146 சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி

பதப்பிரிவு:

சடை இடைக் கங்கை தரித்தாய் போற்றி

பொழிப்புரை;

சடையில் கங்கை யாற்றைத் தாங்கியவனே! வணக்கம்.

விளக்கம்:

கங்கை தரித்தது — பகீரத மன்னன் தன் முன்னோர் களை நற்கதிப் படுத்தும் பொருட்டுத் தவங்கிடந்து வானிலுள்ள கங்கையை நிலவுலகிற்குக் கொண்டு வருங் காலத்து, அதன் வேகக் கொடுமை கருதி இறைவன் தன் சடையில் தாங்கிக் கொஞ்சங் கொஞ்சமாக ஒழுக விட்டனன் என்ப. தரித்தல் — தாங்குதல்.

**147 ஆரு ரமர்ந்த வரசே போற்றி**

பதப்பிரிவு:

**ஆரூர் அமர்ந்த அரசே போற்றி**

பொழிப்புரை :

திருவாரூர் என்னும் பதியில் வீற்றிருந் தருளிய அரசனே ! வணக்கம்.

விளக்கம் :

அமர்ந்த—பொருந்திய; திருவாரூர் திருமகள் வழி பட்ட திருஊர்; பிறந்தார்க்குப் பிறவி நீக்குந் தலம்; பரவை நாச்சியார் திருத்தோற்றம் பெற்ற திருவூர்; சுந்தரரைத் தம்பிரான் தனது தோழராக்கிய தலம். சுந்தரர் திருத் தொண்டத் தொகை பாடியஊர். திருக்குளம் கமலாலயம். மனுச்சோழன் தன்மகனைத் தேர்க்காலிலிட்டு நீதி நிலை நாட்டிய ஊர்; இவ்வரலாறு காட்டுங் கற்றேரை இன்றுங் காணலாம்.

**148 சீரார் திருவை யாறு போற்றி**

பதப்பிரிவு :

**சீர்ஆர் திரு ஐஆறு போற்றி**

பொழிப்புரை :

சிறப்பமைந்த அழகிய ஐயாற்றடிகளே! வணக்கம்.

விளக்கம் :

திருஐயாறன் என்பதன் விளி திருவையாறு என்பது. ஐயாறு — ஐந்து ஆறு; இறைவன் — பஞ்சநதீசுரன், ஐயாறப்பன்; இறைவி—அறம் வளர்த்த நாயகி. இது அப்பர் பெருமானுக்குத் திருக்கயிலைக்காட்சி காட்டிய திருவூர். ஏழிடத் திருவூர்களில் முதன்மையானது. சுந்தரரும் சேரமான் பெருமாளும் காவிரி ஆற்று வெள்ளம் சுவர்போல் நிற்க ஆற்றைக்கடந்து வந்து ஐயாறடிகளை வழிபட்டுச் சென்றனர்.

**149 அண்ணு மலையெம் மண்ணு போற்றி**

**பதப்பிரிவு :**

**அண்ணு மலைஎம் அண்ணு போற்றி**

**பொழிப்புரை :**

திருவண்ணுமலையில் எழுந்தருளியிருக்கும் எங்களுடைய அண்ணலே! வணக்கம்.

விளக்கம் :

அண்ணுமலை — திருவண்ணுமலை; இது விழுப்புரம் காட்பாடி வழியில் உள்ளது; பஞ்ச பூதத் தலங்களில் நினைக்க முத்தி தருவது; தேயுவின் வடிவானது; தேயு—தீ. அயன், திருமால் இவர்கள் அகந்தையை ஒடுக்கச் சிவபெருமான் அனற்பிழம்பாய் நின்று அறிவுறுத்திய இடம்; அருணகிரிநாதர் பிறந்த இடம்; இங்கே கார்த்திகைப் பெருவிளக்குச் சிறப்பானது; மலையை வலம் வர எட்டு மைல் சுற்றவேண்டும். இது அருணுசலம், அருணகிரி, சோணசைலம் என்ற பெயர்களாலும் குறிக்கப்படும். இக்கோவிலில் உள்ள பெருங்கோபுரம் 217 அடி உயரமும் 11 நிலைகளும் கூடியது. இறைவன் — அருணுசல ஈசர். இறைவி — உண்ணுமுலையம்மை.

150 கண்ணா ரமுதக் கடலே போற்றி

பதப்பிரிவு :

கண் ஆர் அமுதக் கடலே போற்றி

பொழிப்புரை :

கண் நிறைந்த பேரின்பத் தேவாமுதக் கடலே! வணக்கம்.

151 ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி

பதப்பிரிவு :

ஏகம்பத்து உறை எந்தாய் போற்றி

பொழிப்புரை :

காஞ்சியில் உள்ள திரு ஏகம்பம் என்னும் திருக் கோவிலில் நிலைபெற எழுந்தருளியிருக்கும் எங்கள் அப்பனே! வணக்கம்.

விளக்கம் :

காஞ்சிபுரம் :

ஐம்பூதத் திருவூர்களுள், காஞ்சி நிலப்பூதத் தலம்; உமாதேவியார் சிவபெருமானைக் கம்பாநதிக் கரையிற் பூசித்த தலம்; வழிபடும் போது கம்பையாறு வெள்ளம் பெருகிவர அம்மை அன்புடன் சிவபெருமானைத் தழுவிக் கொண்டாள். சுந்தரர் இங்கு இடது கண் பெற்றார். திருக் குறிப்புத் தொண்டர், சாக்கிய நாயனார் முதலியோர் இறையடி எய்திய திருவூர்.

152 பாகம் பெண்ணுரு வானாய் போற்றி

பதப்பிரிவு :

பாகம் பெண்உரு ஆனாய் போற்றி

பொழிப்புரை :

இடப்பாகம் உமையாகிய பெண் வடிவாகக் கொண்டவனே! வணக்கம்.

**விளக்கம் :**

பாகம்—கூறு; இங்கே இடது பாகம்.

**153 பராய்த்துறை மேவிய பரனே போற்றி**

பதப்பிரிவு :

**பராய்த்துறை மேவிய பரனே போற்றி**

பொழிப்புரை :

திருப்பராய்த்துறை என்னும் தலத்தில் விரும்பி எழுந்தருளியிருக்கும் மேலோனே! வணக்கம்.

**விளக்கம் :**

பராய்த்துறை—திருப்பராய்த்துறை எனப்பெறும்; இது திருச்சிராப்பள்ளியை அடுத்த தலம்; கோவில் மரம் பராய்; இந்திரன், குபேரன், ஏழு முனிவர் முதலியோர் வழிபட்ட திருவூர்.

**154 சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி**

பதப்பிரிவு :

**சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி**

பொழிப்புரை :

திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளிய சிவபெருமானே! வணக்கம்.

**விளக்கம் :**

சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி: இறைவன் – தாயுமானவன், இறைவி – மட்டுவார்குழலி. மலையுச்சியில்

பிள்ளையார் திருக்கோவில் உள்ளது; கருப்பமுற்ற வணிகமகளுக்கு இறைவனே தாய் வடிவில் வந்து பேறு காலம் பார்த்த பெருமையுடையது. இதனால் இறைவன் தாயுமானவன் என்று அழைக்கப்படலானான். இதை யடுத்துத் திருவானைக்கா, திருவரங்கம் உள்ளன.

**155 மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி**

பதப்பிரிவு:

**மற்று ஓர் பற்று இங்கு அறியேன் போற்றி**

பொழிப்புரை:

உன்னை யன்றி வேறு ஓர் ஆதரவும் இவ்வுலகில் தெரியாதேனாக இருக்கின்றேன்; வணக்கம்.

**156 குற்றா லத்தெங் கூத்தா போற்றி**

பதப்பிரிவு :

**குற்றாலத்து எம் கூத்தா போற்றி**

பொழிப்புரை:

திருக் குற்றாலத்தில் திருக் கூத்தாடுகின்ற எம் பெருமானே! வணக்கம்.

விளக்கம்:

கூத்தா — கூத்தனே! குற்றாலத்தில் சித்திர சபையில் இறைவன் கூத்தாடுகின்றான். இச்சபை ஐந்து சபைகளில் ஒன்று.

**157 கோகழி மேவிய கோவே போற்றி**

பதப்பிரிவு:

**கோகழி மேவிய கோவே போற்றி**

பொழிப்புரை :

திருப்பெருந்துறையில் உள்ள கோகழி என்னும் கோவிலில் குருவடிவாய் எழுந்தருளியிருக்கும் எம் ஞான அரசே! வணக்கம்.

விளக்கம் :

கோகழி—திருப்பெருந்துறைக்கோவிலின் பெயர்.

**158 ஈங்கோய் மலையெம் மெந்தாய் போற்றி**

பதப்பிரிவு:

**ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி**

பொழிப்புரை :

திரு ஈங்கோய் மலை என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் எம் அப்பனே! வணக்கம்.

விளக்கம் :

ஈங்கோய்—திரு ஈங்கோய் மலை. இது குளித்தலையை அடுத்த சிவத்தலம்; அகத்திய முனிவர் ஈ வடிவில் வழிபட்ட திருவூர். "காலைக் கடம்பர், நண்பகல் வாட்போக்கி (இரத்தின கிரி), மாலை ஈங்கோய்" என்ற பழமொழிக்கேற்ப அப் பகுதியில் உள்ளவர்கள் ஒரு நாளில் இம் முப்பதிகளிலும் வழிபாடு இயற்றிச் சிறப்படைவர். "ஈங்கோய் மலை எழுபது" என்னும் நூல் பதினொன்றும் திருமுறையில் உள்ளது.

**159 பாங்கார் பழனத் தழகா போற்றி**

பதப்பிரிவு :

**பாங்கு ஆர் பழனத்து அழகா போற்றி**

பொழிப்புரை :

அழகு நிறைந்த திருப்பழனம் என்னும் பதியில் எழுந்தருளியிருக்கும் அழகனே! வணக்கம்.

விளக்கம் :

பழனம்—திருப்பழனம். திருவையாற்றின் அருகில் உள்ளது; அப்பூதி அடிகள் வாழ்ந்த திங்களூரை அடுத்தது. இத்திருவூருக்குக் கதலிவனம் என்ற பெயருண்டு. திங்களூரில் அப்பூதியடிகளின் மகனார் மூத்த திருநாவுக்கரசினைத் திருநாவுக்கரசர் "ஒன்று கொலாம்" என்னும் திருப்பதிகம் பாடிப் பாம்பு விடந் தீர்த்து உயிர்ப்பித்தெழுப்பினார். இது திங்கள் வழிபட்ட திருவூர். புரட்டாசி, பங்குனி முழுநிலா நாளில் திங்களின் நிலாக்கதிர் சிவபெருமான் மீது ஒளிவீசும்.

**160 கடம்பூர் மேவிய விடங்கா போற்றி**

பதப்பிரிவு :

**கடம்பூர் மேவிய விடங்கா போற்றி**

பொழிப்புரை :

திருக்கடம்பூர் என்னும் தலத்தில் விருப்புடன் எழுந்தருளிய இயற்கை இலிங்க வடிவினனே! வணக்கம்.

விளக்கம் :

கடம்பூர் — திருக்கடம்பூர், விடங்கா — விடங்கன் என்பதன் விளி. விடங்கன்—உளியாற் சமைக்கப் பெறாத சுயம்பு மூர்த்தி. விடங்கம்—ஆண்மையுமாம். இத்தலம் சிதம்பரத்திலிருந்து 15மைல் தூரத்திலிருக்கிறது. திருக்கோவில் 'கரக்கோவில்' எனப் பெயர் பெறும். வானவர் கோன் வழிபட்டு அமுதம் உண்டாக வரம் பெற்ற திருத்தலம்.

**161 அடைந்தவர்க் கருளு மப்பா போற்றி**

பதப்பிரிவு :

**அடைந்தவர்க்கு அருளும் அப்பா போற்றி**

பொழிப்புரை :

தன்னடிச் சேர்ந்தார்க்கு அருள் செய்கின்ற தந்தையே! வணக்கம்.

**162 இத்தி தன்னின் கீழிரு மூவர்க்**
**163 கத்திக் கருளிய வரசே போற்றி**

பதப்பிரிவு :

**இத்தி தன்னின் கீழ்இரு மூவர்க்கு**
**அத்திக்கு அருளிய அரசே போற்றி**

பொழிப்புரை :

இத்தி மரத்தின் நிழலில் அமர்ந்த இயக்கியர் அறுவர்க்கும், யானைக்கும் அருள் புரிந்த அரசே! வணக்கம்.

இத்தி – கல் ஆலமரம், இருமூவர் – இயக்கி மாதர் அறுவர், கல்லாய் இருந்து பின் இறைவன் அருளால் அட்டமாசித்தி கற்பிக்கப் பெற்றனர்.

அத்தி -- யானை; இந்திரன் துர்வாசமுனி சாபத்தாற் கேடடைந்த பொழுது அம்முனி கொடுத்த மாலையைக் காலால் மிதித்தழித்த ஐராவதமாகிய வெள்ளை யானை. இது பூமியில் காட்டானையாகத் திரிந்து கடம்ப வனமாகிய மதுரையை அடைந்து அங்கு எழுந்தருளிய சிவபெருமானை வழிபட்டுத் தன் பழைய உருவம் பெற்றது. அத்தி, அரசு என்னும் இரண்டும் மரப்பெயர்களாதல் ஓர் அழகு.

**164 தென்னா டுடைய சிவனே போற்றி**

பதப்பிரிவு :

**தென்நாடு உடைய சிவனே போற்றி**

பொழிப்புரை:

தென்னாடாகிய செந்தமிழ் நாட்டைப் பழமையான நாடாக உடைய சிவபெருமானே! வணக்கம்.

*விளக்கம் :*

தென்னாடு செந்தமிழ் நாடாகிய பாண்டிநாடு. இதில் இறைவனே சோமசுந்தர பாண்டியனாக வந்து மலையத் துவச பாண்டியன் மகளாகத் தோன்றிய அங்கயற் கண்ணி அம்மையை மணந்து பின் அவள் அளித்த அரசுரிமையையும் பெற்று ஆண்டனன்.

**165 எந்நாட்டவர்க்கு மிறைவா போற்றி**

பதப்பிரிவு :

**எ நாட்டவர்க்கும் இறைவா போற்றி**

*பொழிப்புரை :*

எந்த நாட்டில் உள்ளவர்கட்கும் தலைவனே வணக்கம்.

**166 ஏனக் குருளைக் கருளினை போற்றி**

*பதப்பிரிவு :*

**ஏனக் குருளைக்கு அருளினை போற்றி**

*பொழிப்புரை :*

பன்றிக்குட்டிகட்குத் தாயாக வந்து பாலூட்டி அருள் புரிந்தவனே ! வணக்கம்.

விளக்கம் :

*ஏனக்குருளை — பன்றிக்குட்டி. சொக்கநாயகன் அருளுதலாவது: தாயற்ற பன்றிக்குட்டிகட்குப் பெண் பன்றியாகி முலைப்பால் கொடுத்து அருள் புரிந்தது. இது*

> " மாயாமல் வெஞ்சுரத்து வல்ஏனக் குட்டிகட்குத்
> தாயாய் முலைகொடுத்தாய் போற்றி "

என்ற போற்றிக் கலிவெண்பாவாலும் உணரப்படும்.

ஒரு முனிவன் காட்டில் தவஞ் செய்து கொண்டிருந்தான். பன்னிரண்டு இளைஞர் அவனை அணுகி அவனுக்குக் கோப மூட்டினர். அவன் அவ்விளைஞரைப் "பன்றியாகப் பிறப்பீர்கள்" என்று சபித்தான். ஒரு காட்டுப் பன்றிக்கு அப்பன்னிருவருங் குட்டிகளாகப் பிறந்தனர். குட்டிகள் பிறந்தவுடன் தாய்ப்பன்றி பாண்டியனால் வேட்டையாடப்பட்டு இறந்தது. பன்னிரு பன்றிக் குட்டிகளும் பசியால் வருந்தின. ஆலவாய் அப்பன் தாய்ப்பன்றி வடிவெடுத்துச் சென்று குட்டிகளுக்கு முலைப் பாலூட்டி அருள் புரிந்தனன்.

**167 மானக் கயிலை மலையாய் போற்றி**

பதப்பிரிவு :

**மானக் கயிலை மலையாய் போற்றி**

பொழிப்புரை :

பெருமையுடைய திருக்கயிலாய மலையை உறையுளாக உடையவனே! வணக்கம்.

விளக்கம் :

மானம் — பெருமை, கயிலை — இமயமலை உச்சியுள் ஒன்று. வெள்ளிமலை எனப்படும்.

**168 அருளிட வேண்டு மம்மான்! போற்றி**

பதப்பிரிவு :

**அருளிட வேண்டும் அம்மான்! போற்றி**

பொழிப்புரை :

எனக்கு அருள் புரிந்திட வேண்டும்; அன்புடைய மாமனே! வணக்கம்.

விளக்கம்

அம்மான் — அழகியவன் ' எனவும் பொருள் கொள்ளலாம்.

**169 இருள்கெட வருளு மிறைவா போற்றி**

பதப்பிரிவு :

**இருள்கெட அருளும் இறைவா போற்றி**

பொழிப்புரை:

ஆணவமலம் வலிகெட்டொழியும்படி அருள்புரியும் தலைவனே! வணக்கம்

**170 தளர்ந்தே னடியேன் தமியேன் போற்றி**

பதப்பிரிவு :

**தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி**

பொழிப்புரை :

தனித்தவனாகிய அடியேன் தளர்ச்சியுற்றேன், வணக்கம்.

விளக்கம் :

தமியேன்--தனித்தவன். தமி—தனி. தமிழ் என்பதில் உள்ள " தமி " அம்மொழி தனித்தியலும் தன்மையது என்னும் சிறப்பைக் குறிப்பது. தளர்வு நீங்க அருள் புரிய வேண்டும் என்பது குறிப்பெச்சம்.

" இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன். "

(திருஞானசம்பந்தர்-திருமுறை 3)

**171 களங்கொளக் கருத வருளாய் போற்றி**

பதப்பிரிவு :

**களம் கொளக் கருத அருளாய் போற்றி**

பொழிப்புரை :

நிலையான இடத்தை அடைய எண்ணும்படி அருள் புரிவாயாக, வணக்கம்.

விளக்கம் :

கருதுதல்—நினைத்தல், கொள—கொள்ள என்பதன் தொகுத்தல். நிலையான இடம் வீட்டுலகமாகிய இறைவன் திருவடியிருப்பு.

**172 அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி**

பதப்பிரிவு :

**அஞ்சேல் என்று இங்கு அருளாய் போற்றி**

பொழிப்புரை :

அஞ்சாதே என்று சொல்லி இவ்விடத்தில் அருள் வாயாக. வணக்கம்.

விளக்கம் :

அஞ்சேல்—முன்னிலை ஒருமை எதிர்மறை வினைமுற்று.

**173 நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி**

பதப்பிரிவு :

**நஞ்சே அமுதா நயந்தாய் போற்றி**

பொழிப்புரை :

திருப்பாற் கடலிற்றோன்றிய ஆலகால விடத்தை அமுதமாக விரும்பி உட்கொண்டவனே! வணக்கம்.

விளக்கம் :

நயந்தாய், நயத்தல்-விரும்புதல், இப்பொருள்

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்"

என்ற குறளால் விளங்கும்.

நயத்தக்க — விரும்பத்தக்க.

174 அத்தா போற்றி யையா போற்றி

பதப்பிரிவு :

அத்தா போற்றி ஐயா போற்றி

பொழிப்புரை :

அப்பனே! வணக்கம், தலைவனே! வணக்கம்.

175 நித்தா போற்றி நிமலா போற்றி

பதப்பிரிவு :

நித்தா போற்றி நிமலா போற்றி

பொழிப்புரை :

தோற்றக்கேடுகள் இன்றி என்றுமுள்ளவனே! வணக்கம். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனே! வணக்கம்.

176 பத்தா போற்றி பவனே போற்றி

பதப்பிரிவு :

பத்தா போற்றி பவனே போற்றி

பொழிப்புரை :

அன்பனே! வணக்கம்; யாவையுந் தோன்றுதற்கிடமாக இருப்பவனே! வணக்கம்.

**விளக்கம் :**

"சிவனெனு நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்
அவன் எனை ஆட்கொண்டளித் திடுமாகில் அவன்தனையான்
பவன்எனும் நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் அழைத்தால்
இவன் எனைப் பன்னாள் அழைப் பொழியான் என்(று) எதிர்ப்
படுமே."

(அப்பர் அடிகள் தேவாரம்–திருமுறை 4)

"பவாய தேவாய நம," சிவார்ச்சனை மந்திரம்.

177 **பெரியாய் போற்றி பிரானே போற்றி**

*பதப்பிரிவு :*

**பெரியாய் போற்றி பிரானே போற்றி**

*பொழிப்புரை :*

*பெரியவனே!* வணக்கம்; ஆண்டவனே! வணக்கம்.
*விளக்கம் ;*

*உயிர்களையெல்லாம் அடிமையாக் கொண்டவன் பிரான். பிரான் – தலைவன்; பிராட்டி பெண்பால்.*

"என்னை யேதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும்முன் ஏதும் அறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரான்என் றறிந்தெனே"

(அப்பர்-தனித்திருக் குறுந்தொகை)

178 **அரியாய் போற்றி யமலா போற்றி**

*பதப்பிரிவு :*

**அரியாய் போற்றி அமலா போற்றி**

*பொழிப்புரை :*

*சொல்லற் கருமையானவனே!* வணக்கம்; *மலம் இல்லாதவனே!* வணக்கம்.

விளக்கம் :

" சொலற் கரிய சூழலாய்" (தேவாரம்)

**179 மறையோர் கோல நெறியே போற்றி**

பதப்பிரிவு :

**மறையோர் கோல நெறியே போற்றி**

பொழிப்புரை :

அந்தணர் வடிவு கொண்ட இன்ப அன்பு வழியே! வணக்கம்.

விளக்கம் :

கோல நெறி — அழகிய வழி. அது அன்பு நெறி.

**180 முறையோ தரியேன் முதல்வா போற்றி**

பதப்பிரிவு :

**முறையோ தரியேன் முதல்வா போற்றி**

பொழிப்புரை :

என்னை ஆட்கொண்ட பிறகு விட்டுப் பிரிதல் தக்கதோ! அதனை நான் தாங்கமாட்டேன். தலைவனே! வணக்கம்.

விளக்கம் :

முறை – நீதி, ஒழுங்கு.

**181 உறவே போற்றி யுயிரே போற்றி**

பதப்பிரிவு :

**உறவே போற்றி உயிரே போற்றி**

பொழிப்புரை :

உயிர்க்குச் சுற்றமே! வணக்கம். உயிர்க்கு உயிரே! வணக்கம்.

182 சிறவே போற்றி சிவமே போற்றி

பதப்பிரிவு :

சிறவே போற்றி சிவமே போற்றி

பொழிப்புரை :

சிறப்பே! வணக்கம்; மங்கலப் பொருளே! வணக்கம்.

விளக்கம் :

"சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு"

(திருக்குறள்;)

சிவன் எனும் நாமம் ஏனை மங்கலப் பொருள்களைக் குறியாது, சிவனையே குறிக்கும்.

"சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்"

"சிவனெனு நாமஞ் சிவனுக்கே உரித்து" எனச் செவி யறிவுறுத்தாதவழிப் பொதுவகையான் மங்கலப் பொருள் பற்றி ஏனைப் பொருள்களினுஞ் செல்லுமாகலின் அதனை நீக்குதற்கு அங்ஙனஞ் செவியறிவுறுப்பது எய்தியது ஒரு மருங்கு மறுப்பதா மென்க".

(சிவஞான பாடியம்)

183 மஞ்சா போற்றி மணாளா போற்றி

பதப்பிரிவு .

மஞ்சா போற்றி மணாளா போற்றி

பொழிப்புரை :

மழையுருவனே! வணக்கம், உமை மணவாளனே! வணக்கம்.

விளக்கம் :

மஞ்சு = மழை, அழகுமாம். மைந்தன் என்பதன் மரூஉ மஞ்சன் எனக் கொண்டு அதன் விளி மஞ்சா எனவும் கொள்ளலாம்; வலியுடையோன் என்பது அதற்குப் பொருள்.

**184 பஞ்சே ரடியாள் பங்கா போற்றி**

பதப்பிரிவு :

**பஞ்சு ஏர் அடியாள் பங்கா போற்றி**

பொழிப்புரை :

செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய அழகிய திருவடி யுடைய அம்மையை இடப் பாகத்தில் உடையவனே! வணக்கம்.

விளக்கம் :

செம்பஞ்சுக் குழம்பிஊைப் பெண்கள் தங்கள் அடி களில் அழகு கருதி ஊட்டுவார்கள். ஏர்—அழகு.

**185 அலந்தே னுயே னடியேன் போற்றி**

பதப்பிரிவு ;

**அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி**

பொழிப்புரை :

நாயேன் ஆகிய அடியேன் துன்பமுற்றேன். வணக்கம். (துன்பத்தை நீக்கியருள் என்பது குறிப் பெச்சம்.)

186 இலங்கு சுடரெம் மீசா போற்றி

பதப்பிரிவு :

இலங்கு சுடர்எம் ஈசா போற்றி

பொழிப்புரை :

(அத்துன்ப இருளில்) விளங்குகின்ற ஒளி வடிவஞகிய எங்களுடைய செல்வனே! வணக்கம்.

187 கவைத்தலை மேவிய கண்ணே போற்றி

பதப்பிரிவு :

கவைத்தலை மேவிய கண்ணே போற்றி

பொழிப்புரை :

கவைத்தலை என்னும் தலத்தில் விரும்பி எழுந்தருளி இருக்கும் கண் போன்றவனே! வணக்கம்.

**விளக்கம் :**

மேவிய = மேவு என்னும் வினையடியாகப் பிறந்த இறந்த காலப் பெயரெச்சம். இறைவனே இலங்கு சுடராகவும், விளங்கும் கண்ணுகவும் இருக்கிருன். இறைவன் துன்ப இருளகற்றும் இன்ப ஒளி.

188 குவைப்பதி மலிந்த கோவே போற்றி

பதப்பிரிவு :

குவைப்பதி மலிந்த கோவே போற்றி

பொழிப்புரை :

குவைப்பதி என்னும் தலத்தில் மகிழ்ச்சி நிறைந்திருந்த மன்னனே! வணக்கம்.

**189 மலைநா டுடைய மன்னே போற்றி**

பதப்பிரிவு :

**மலைநாடு உடைய மன்னே போற்றி**

பொழிப்புரை :

மலை நாட்டினை உடைய வேந்தனே! வணக்கம்.

**190 கலையா ரரிகே சரியாய் போற்றி**

பதப்பிரிவு :

கலை ஆர் அரிகேசரியாய் போற்றி

பொழிப்புரை :

கல்வி நிறைந்த அரிகேசரி என்னும் ஊரில் உள்ளவனே! வணக்கம்.

**191 திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி.**

**பதப்பிரிவு :**

**திருக்கழுக் குன்றில் செல்வா போற்றி**

**பொழிப்புரை :**

திருக்கழுக்குன்றம் என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் திருவருட் செல்வனே! வணக்கம்.

**விளக்கம் :**

கழுகுகள் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் திருக்கழுக்குன்றம். இரண்டு கழுகுகள் இன்றும் நாடோறும் மலைமேல் வந்து திருவமுது அருந்தி வருதல் காணலாம். உச்சிக் காலத்தில் இக்காட்சி நிகழும். இது மாணிக்க வாசகருக்கு இறைவன் குருவடிவைக் காட்டியருளிய தலம்.

192 பொருப்பமர் பூவணத் தரனே போற்றி

**பதப்பிரிவு :**

பொருப்பு அமர் பூவணத்து அரனே போற்றி

**பொழிப்புரை :**

மலைகள் பொருந்திய திருப்பூவணத்தில் எழுந்தருளி யிருக்கின்ற சிவனே ! வணக்கம்.

திருப்பூவணம் மதுரைக்குக் கிழக்கே பன்னிரு மைல் தொலைவிலுள்ளது; நான்முகன் வழிபட்ட திருத்தலம்; பொன்னனையாளுக்கு மதுரைச் சொக்கலிங்கப்பெருமான் இரசவாதஞ் செய்து பொன்னருளிய தலம். பொன்னனை யாள் அம்மையார் அந்தப் பொன்னினால் இறைவன் திருவுருச் சமைத்து வழிபட்டுக் கன்னத்தை அள்ளி முத்தம் கொண்டனர். இறைவன் திருவுருவில் முத்த நகக்குறியை இன்றும் காணலாம். நம்பி ஆரூரர் மூவேந்தரும் உடன்வரக் கண்டு வழிபட்ட பதிகளுள் ஒன்று. பொருப்பமர் பூவணம்.—

> '' குன்றிலொன்றி யோங்கமல்கு குளிர்பொழில்சூழ் மலர்மேல்
> தென்றலொன்றி முன்றிலாருந் தென்திருப்பூ வணமே. ''
>
> (திருஞானசம்பந்தர் திருமுறை-1)

193 அருவமு முருவமு மானாய் போற்றி

**பதப்பிரிவு :**

அருவமும் உருவமும் ஆனாய் போற்றி

**பொழிப்புரை :**

அருவத் திருமேனியும் உருவத் திருமேனியும் அரு உருவத் திருமேனியும் ஆனவனே ! வணக்கம்.

**விளக்கம் :**

இரட்டுற மொழிதலால் அருஉருவத்திருமேனி பெற்றும். அருவம் — நிட்களம்; உருவமில்லாதது; உருவம் — சகளம்; வடிவுடையது.

" அருவமோ உருவா ரூபமானதோ அன்றி நின்ற
உருவமோ உரைக்குங் கர்த்தா வடிவெனக் குணர்த்திங்
கென்னின்
அருவமும் உருவா ரூபமான தும் அன்றி நின்ற
உருவமும் மூன்றும் சொன்ன ஒருவனுக்குள்ள வாமே."

(*சிவஞான சித்தியார் சூத்திரம் 1. அதி 2. 38*)

**194 மருவிய கருணை மலையே போற்றி**

*பதப்பிரிவு :*

**மருவிய கருணை மலையே போற்றி**

***பொழிப்புரை :***

பொருந்திய அருள் மலையே! வணக்கம்.

**195 துரியமு மிறந்த சுடரே போற்றி**

***பதப்பிரிவு :***

**துரியமும் இறந்த சுடரே போற்றி**

***பொழிப்புரை :***

துரியமாகிய அருள் நிலையுங் கடந்து துரியாதீத நிலையில் விளங்கும் ஒளியே! வணக்கம்.

**விளக்கம் :**

துரியம் — மெய்யுணர்வு நெறியில் பாச பசு ஞானம முற்றும் நீங்கித் திருவருளோடு ஒன்றி வயப்படும் நிலை. இது மீதானம்; நாலாம் நிலை; அருள் நிலை எனக் குறிக்கப் படும். துரியநிலை கடந்து துரியாதீத நிலையில் இறைவன் பேரின்பமாத் தோன்றுவான்.

" துன்னியசாக் கிரமதனில் துரியாதீதந்
தோன்ற முயல் சிவாநுபவம் சுவாநுபூதிகமாம் "

பொருள் :

"கருவிகளோடுந் தொழிற்பட்டு நிற்பதாகிய சகல சாக்கிரத்தில்தானே கருவியொன்றனேடுங் கூடாது தொழிலிறந்து நிற்கும் நின்மல துரியாதீதநிலை கை கூடும்படி முயல்வீர். சிவானுபவம் தமதாகக் கொண்டு அனுபவிக்கப் பெறலாம்''.

(சிவஞான சித்தியார்-சூத்திரம் 8'
அதி 2. 34. சிவஞான முனிவர் உரை)

''பொற்புறு கருவியாவும் புணராமே அறிவிலாமைச்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமே தோன்றிநின்ற
சிற்பரமதனுல் உள்ளச் செயலறுத்திட உதிக்கும்
தற்பரமாகி நிற்றல் சாக்கிரா தீதந்தானே''

(சிவப்பிரகாசம்)

**196 தெரிவரி தாகிய தெளிவே! போற்றி**

**பதப்பிரிவு :**

**தெரிவு அரிது ஆகிய தெளிவே! போற்றி**

**பொழிப்புரை :**

உயிரறிவினுல் தெரிந்து கொள்வதற்கு அருமை யாயும் ஆனுல் சிவஞானத்தால் சிந்தித்துத் துணியப் பெறும் பொருளாயும் உள்ளவனே! வணக்கம்.

**விளக்கம் :**

தெரிவு — தெரிதல், தொழிற் பெயர்.

**197 தோளா முத்தச் சுடரே! போற்றி**

பதப்பிரிவு :

**தோளா முத்தச் சுடரே போற்றி**

**பொழிப்புரை :**

துளேயிடப்படாத முத்தின் ஒளியே! வணக்கம்.

**விளக்கம் :**

தோளல் — துளைத்தல்.

"கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி"

(திருக்குறள் 418)

198 ஆளா னவர்கட் கன்பா போற்றி

**பதப்பிரிவு :**

ஆள் ஆனவர்கட்கு அன்பா போற்றி

**பொழிப்புரை :**

அடிமையானவர்கட்கு அன்பனே! வணக்கம்.

**விளக்கம் :**

ஆளானவர் — அடியவர். அடியவர்களுக்கு அவர்கள் காட்டுகின்ற அன்பினுஞ் சிறந்த அன்பு காட்டுவான். ஆதலின் இறைவனை அன்பன் என்றார்.

"தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்ப போற்றி"

(திருச்சதகம் 69)

199 ஆரா வமுதே யருளே போற்றி

**பதப்பிரிவு:**

ஆரா அமுதே அருளே போற்றி

**பொழிப்புரை :**

உண்டு அமையாத அமுதமே, அளவற்ற அருளே, வணக்கம்.

**விளக்கம் .**

ஆரா—அமையாத, இதனை ஈரிடத்துங் கூட்டுக.

"அமையாக் காதல்
மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவிற் பெருமானை
வணக்கஞ் செய்வாம்"
(காஞ்சிப்புராணம்: கடவுள் வாழ்த்து)

200 பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி

*பதப்பிரிவு :*

பேர் ஆயிரம் உடைப் பெம்மான் போற்றி

*பொழிப்புரை :*

ஆயிரம் திருப்பெயர்களை உடைய பெருமானே! வணக்கம்.

விளக்கம் :

பேர் ஆயிரம் — எண்ணற்ற பெயர்கள். பெம்மான் — பெருமான் என்பதன் திரிபு.

"பேரோர் ஆயிரமும் உடையானைப் பேசினுற் பெரிதும் இனியானை
நீரூர்வார் சடை நின்மலன்தன்னை நீடுர் நின்றுகந்திட்டபிரானை
ஆருரன் அடிகாண் பதற்கன்பாய் ஆதரித்தழைத் திட்ட
இம்மாலை
பாரும் பரவித் தொழவல்லார் பத்தராய் முத்திதாம் பெறுவாரே.
(சுந்தரர் தேவாரம்—திருநீடுர்)

"ஒரு நாமம் ஓருருவம் ஒன்று மில்லாற் காயிரம்
திரு நாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ"
(திருவாசகம்—திருத்தெள்ளேணம்)

201 தாளி யறுகின் றுராய் போற்றி

*பதப்பிரிவு :*

தாளி அறுகின் தாராய் போற்றி

*பொழிப்புரை :*

கொடி அறுகினல் கட்டிய மாலையை அணிந்தவனே! வணக்கம்.

**விளக்கம்:**

தாளி அறுகு — தாளித் தழையும் அறுகம்புல்லும் என்பாரும் உளர். தார் — மாலை, மார்பில் அணியும் சிறப்புடையது.

**202 நீளொளி யாகிய நிருத்தா போற்றி**

பதப்பிரிவு:

**நீள் ஒளி ஆகிய நிருத்தா போற்றி**

**பொழிப்புரை:**

ஓங்கிய ஒளியுருவாகிய கூத்தனே! வணக்கம்.

**விளக்கம்:**

நீளொளி — பரஞ்சோதி, கெடாத சுடர்.

**203 சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி**

பதப்பிரிவு:

**சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி**

**பொழிப்புரை:**

சந்தனத்தோடு திருநீறு அணிந்த அழகனே! வணக்கம்.

**விளக்கம்.**

சந்தனம் — சந்தனக் குழம்பு. சாந்து — திருநீறு,

"ஈசன சாந்தும் எருக்கும்"

(திருக்கோவையார் 74)

**204 சிந்தனைக் கரிய சிவமே போற்றி**

பதப்பிரிவு:

**சிந்தனைக்கு அரிய சிவமே போற்றி**

**பொழிப்புரை :**

*நினைத்தற்கரியனாகிய சிவபெருமானே !* வணக்கம்.

**205 மந்திர மாமலை மேயாய் போற்றி**

பதப்பிரிவு:

**மந்திர மாமலை மேயாய் போற்றி**

**பொழிப்புரை :**

மந்திர நூல்கள் வெளிவந்த மகேந்திர மலையில் வீற்றிருந்தவனே ! வணக்கம்.

**206 எந்தமை யுய்யக் கொள்வாய்! போற்றி**

பதப்பிரிவு :

**எம்தமை உய்யக் கொள்வாய்! போற்றி**

பொழிப்புரை :

எம்மையும் உய்யும்படி அடிமை கொண்டவனே! வணக்கம்.

விளக்கம் :

உய்யக் கொள்ளுதல் — தப்பிப் பிழைக்கும்படி அருளல். பிறவிக்கடலினின்றும் கரை ஏற்றல்.

**207 புலிமுலை புல்வாய்க் கருளினை! போற்றி**

பதப்பிரிவு :

**புலிமுலை புல்வாய்க்கு அருளினை! போற்றி**

பொழிப்புரை :

ஓர் பெண்புலியை மான் கன்றுக்குப் பால் கொடுக்கும்படி செய்வித்தவனே! வணக்கம்.

**விளக்கம் :**

*புல்வாய்—மான்*

பாண்டி நாட்டிலிருந்த கடம்ப வனத்தில் புலிகள் மிகுதியாயிருந்தன. ஆதலின் மானினம் அருகி வந்தது. இறுதியில் பெண்மான் ஒன்று கன்றுபோட்டு, அதனை ஒரு புதரில் மறைத்து வைத்துவிட்டுத் தண்ணீர் பருக ஒரு குளக்கரை சென்றது. அப்பொழுது ஒரு வேட்டுவன் அதனை அம்பெய்து கொன்று வீழ்த்தினன். அது கீழே விழும்போது தன் கன்றை நினைந்து உயிர் விட்டது. அதனையறிந்த அருட் கடலாகிய ஆலவாயண்ணல், அக் காட்டில் வேறு பெண்மான் இல்லாமையால் ஒரு பெண் புலியை அதற்குப் பாலூட்டி வளர்க்குமாறு அதன் உள்ளத்தில் கடுமை களைந்து கருணையைப் பெருகச் செய்தான். பெண்புலி மான் கன்றுக்கு முலைப் பாலூட்டி வளர்த்தது.

**208 அலை கடல் மீமிசை நடந்தாய்! போற்றி**

**பொழிப்புரை :**

அலைகளையுடைய கடல் மீது வலைஞனாய்ச் சென்றவனே! வணக்கம்.

**விளக்கம் :**

இது சிவபெருமான் மதுரையில் வலைஞன் வடிவினனாய வந்து கடலில் வலைஞரைத் துன்புறுத்திய நந்தியாகிய கெளிற்று மீனை அகப்படுத்திய பொழுது அக்கடலின் மீது சென்றதைக் குறிப்பது. மீமிசை — ஒரு பொருட் பன்மொழி.

**209 கருங்குரு விக்கன் றருளினை போற்றி**

**பதப்பிரிவு:**

**கருங்குருவிக்கு அன்று அருளினை போற்றி**

பொழிப்புரை :

கரிக்குருவிக்கு அக்காலத்தில் அருள் செய்தவனே! வணக்கம்.

**விளக்கம் :**

காக்கைகளால் வருத்தப்பெற்ற கரிக்குருவிகள் அத்துயரினின்றும் தப்பும்வழி யாதெனக் கருதி அறிவுள்ள குருவி யொன்றின் முறைப்படி நாடோறும் பொற்ருமரையில் நீராடி இறைவனிடம் முறையிட இறைவன் மறையொன்று ஓதுதற்குக் கூற அதை ஓதியதன் பயனாக அக்குருவி மட்டுமன்றி அதன் கிளையும் பெருவலி படைத்தன. காகம் முதலியவை துன்புறுத்தா தொழிந்தன. கரிக்குருவிக்கு வலியான் என்ற பெயரும் ஏற்படுவதாயிற்று.

**210 இரும்புலன் புலர விசைந்தனை போற்றி**

பதப்பிரிவு :

**இரும்புலன் புலர இசைந்தனை போற்றி**

பொழிப்புரை :

பெரிய ஐம்புல ஆசைகளும் அற்றொழியும்படி உள்ளத்திற் பொருந்தினவனே ! வணக்கம்.

**விளக்கம்**

புலன் — ஆசை; புலர்தல் — வாடுதல், பசையறுதல்.

**211 படியுறப் பயின்ற பாவக போற்றி**

பதப்பிரிவு :

**படிஉறப் பயின்ற பாவக போற்றி**

பொழிப்புரை:

நிலத்தில் பொருந்தும்படி பல காலும் காட்டிய தோற்றங்கள் உடையவனே! வணக்கம்.

விளக்கம் :

படி—நிலம், பாவகம்—தோற்றம்.

212 அடியொடு நடுவீ றானாய்! போற்றி

பதப்பிரிவு :

அடியொடு நடு ஈறு ஆனாய் போற்றி

பொழிப்புரை :

முதலும், இடையும், இறுதியும் ஆனவனே! வணக்கம்.

விளக்கம் :

அடி—ஆதி, முதல். ஈறு — கடை, இறுதி.

213 நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமற்
214 பரகதி பாண்டியற் கருளினை போற்றி

பதப்பிரிவு :

நரகு ஒடு சுவர்க்கம் நால்நிலம் புகாமல்
பரகதி பாண்டியற்கு அருளினை போற்றி

பொழிப்புரை:

நரகமும் துறக்கமும் நால்வகையான நில உலகும் புகாதபடி பாண்டியனுக்குப் பரமுத்தி நிலையை (மேலான வீடு பேற்றை) அருள் செய்தவனே! வணக்கம்.

**விளக்கம் :**

நரகொடு — ஒடு எண்ணுப் பொருளது. நிலத்தின் நால் வகை — குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். பரகதி — பரமுத்தி நிலை.

**215 ஒழிவற நிறைந்த வொருவ போற்றி**

பதப்பிரிவு :

**ஒழிவு அற நிறைந்த ஒருவ போற்றி**

**பொழிப்புரை :**

நீக்கம் இன்றி எங்கும் பரவியிருக்கின்ற ஒப்பற்றவனே! வணக்கம்.

**விளக்கம் :**

ஒழிவு அற — இடையில்லாமல்; ஒருவ — ஒருவனே. ஒருவன் என்பதன் அண்மை விளி.

**216 செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி**

பதப்பிரிவு :

**செழுமலர்ச் சிவபுரத்து அரசே போற்றி**

**பொழிப்புரை :**

வளப்பமான பூக்கள் செறிந்த சிவபுரத்தின் அரசனே! வணக்கம்.

**விளக்கம் :**

சிவபுரம் திருப்பதிகம் பெற்ற சோழநாட்டுத் திருத்தலம்; திருமால் வெள்ளைப் பன்றி வடிவில் சிவபிரானை வழிபட்ட தலம்; மணிவாசகர் திருப்பெருந்துறையில் உள்ள பெருமானைச் "செழுமலர்க் குருந்த மேவிய சீர் ஆதி" என்றமையின் இது திருப்பெருந்

துறையே ஆம் என்பர் சிலர்; ''பார்மேற் பத்தரெலாம் சிவபுரம் போற் கொண்டாடும் உத்தரகோசமங்கை ஊர்'' என அடிகள் கூறுதலின் இதனைத் திருவுத்தர கோச மங்கை என்பர் வேறு சிலர். திருக்கயிலையே முதல்வன் ஆட்சியிடமாதலின் சிவபுரம் என்றது திருக்கயிலையே என்பாரும் உளர். சிவபுரம் சண்பகவனம் எனவும் பெயர் பெறுதலால், செழுமலர்ச் சிவபுரம் என்றதை இயற்பெயராகக் கொண்ட சோணாட்டுத் திருத்தலம் என்றலே சிறப்புடையது.

**217 கழுநீர் மாலைக் கடவுள் போற்றி**

பதப்பிரிவு :

**கழுநீர் மாலைக் கடவுள் போற்றி**

**பொழிப்புரை :**

செங்கழுநீர் மாலையை அணிந்த கடவுளே! வணக்கம்.

**விளக்கம்:**

கழுநீர் மாலை குரு மூர்த்தத்திற்கு அணியப் பெறுவது.

**218 தொழுவார் மைய றுணிப்பாய் போற்றி**

பதப்பிரிவு :

**தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி**

பொழிப்புரை :

வணங்குவாரது மயக்கத்தை அறுப்பவனே! வணக்கம்.

219 பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
220 குழைத்த சொன் மாலை கொண்டருள் போற்றி

பதப்பிரிவு :

**பிழைப்பு வாய்ப்பு ஒன்று அறியா நாயேன்**
**குழைத்த சொல் மாலை கொண்டருள் போற்றி**

பொழிப்புரை:

தகாதது யாது, தக்கது யாது என்று உய்யும் நெறி ஒன்றும் தெரியாத நாய்போற் கீழானவனை அடியேன் தொடுத்த சொல் மலர்ப் பாமாலையை ஏற்றுக் கொண்டருள்வாய்; உனக்கு வணக்கம்.

விளக்கம் :

பிழைப்பு—பிழைத்தல், தகாதது, குற்றம். வாய்ப்பு—வாய்த்தல், பொருத்தம், தக்கது, தவறற்றது. குழைத்த — கூட்டிச் செய்த; சொன் மாலை — பாமாலை.

221 புரம் பல வெரித்த புராண போற்றி

பதப்பிரிவு :

**புரம் பல எரித்த புராண போற்றி**

பொழிப்புரை :

முப்புரங்களையும் சிரித்தெரித்த பழைமையானவனே! வணக்கம்.

விளக்கம் :

புரம் — முப்புரம்

புராணன் — பழமையானவன்.

222 பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி

—18.

*பதப்பிரிவு :*

**பரம் பரம் சோதிப் பரனே போற்றி**

*பொழிப்புரை :*

*மேலானவற்றிற் கெல்லாம் மேலான ஒளியை உடைய மேலோனே! வணக்கம்.*

**விளக்கம்:**

*பரம் பரம் சோதி — திருவருள் ஒளி.*

**223 போற்றி போற்றி புயங்கப் பெருமான்**

*பதப்பிரிவு :*

**போற்றி போற்றி புயங்கப் பெருமான்**

*பொழிப்புரை :*

*பாம்பணிந்த பெருமானே! வணக்கம், வணக்கம்.*

**விளக்கம் :**

*புயங்கம் — பாம்பு.*

**224 போற்றி போற்றி புராண காரண**

*பதப்பிரிவு :*

**போற்றி போற்றி புராண காரண**

*பொழிப்புரை :*

*பழைய மூல காரணப் பொருளே! வணக்கம், வணக்கம்.*

**விளக்கம் :**

*புராண காரண — மூல காரணனே.*

**225 போற்றி போற்றி சயசய போற்றி**

*பதப்பிரிவு :*

**போற்றி போற்றி சயசய போற்றி**

*பொழிப்புரை :*

*வணக்கம், வணக்கம், வெற்றி வெற்றி, வணக்கம்*

**விளக்கம் :**

*சயம் — வெற்றி.*

*போற்றி, போற்றி; சய, சய அடுக்குத் தொடர்.*

*திருச்சிற்றம்பலம்.*

---

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் அருளிய

# 5. திருச்சதகம்

தெய்வத் தன்மை அமைந்த நூறு திருப்பாடல் களைத் தன்னகத்துக்கொண்டது திருச்சதகம். இந்நூறு பாடல்களும் ஒரு பாட்டின் முடிவு (அந்தம்) அடுத்த பாட்டின் தொடக்கம் (ஆதி) ஆகவும் நூறும் பாட்டின் முடிவே முதற்பாட்டின் தொடக்கமாகவும் அந்தாதித் தொடையால் அமைத்தருளப் பெற்றுள்ளன. பிற் காலத்து இயற்றப்பட்ட பதிற்றுப்பத் தந்தாதிகளுக்கு மூல இலக்கியம் இத்திருச்சதகம். சதகம் — நூறுபாடல் நூல்.

பத்தி வைராக்கிய விசித்திரம்.

(பேரன்புப் பற்றறுதிப் பல் வியப்பு நிலை)

பத்தி — பேரன்பு; இறைவன்பால் மெய்யடியார் நெஞ்சம் ஆர்வத்தாற் குறைவற ஈடுபடுதல். வைராக்கியம் — பற்றறுதி; அப்பேரன்புக்கு இடையூறுகும் பொய்ப் பொருட்பற்றை அதன் பொய்ம்மை (நிலையாமை) உணர்ந்து வெறுத்து விடுதல். விசித்திரம் — பல் வியப்புநிலை; பேரன்பு காரணமாகப் பற்றறுதி கொண்டு பொய்ப் பொருட்பற்றைப் பலவகையிலும் அறுத்தலாகிய வியத்தகு செயல்.

இத் திருச்சதகம் (1) மெய்யுணர்தல், (2) அறி வுறுத்தல், (3) சுட்டறுத்தல், (4) ஆன்மசுத்தி, (5) கைம்மாறு கொடுத்தல், (6) அனுபோக சுத்தி,

(7) காருணியத்திரங்கல், (8) ஆனந்தத்து அழுந்தல், (9) ஆனந்த பரவசம், (10) ஆனந்தாதீதம் எனப் பதிற்றுப் பத்தாய் அமைக்கப் பெற்றுள்ளது.

## க. மெய்யுணர்தல்

மெய்ப்பொருளாகிய கடவுளை உணர்தல், அல்லது, இறை, உயிர், கட்டு, பிறப்பு, வீடுபேறு என்னும் இவற்றைத் திரிபு ஐயங்களான் அன்றி உண்மையான் உணர்தல்மெய்யுணர்தலாகும். குருந்தமர நிழலில்மாணிக்க வாசகர் அருளுரை பெற்றபின், திருத்தொண்டர்கள் இறை யடி சேர்ந்தார்கள். மாணிக்கவாசகர் தில்லை முதலிய தல வழிபாட்டிற்கும் பௌத்தரை வாதில் வெல்வதற்கும் இவ் வுலகில் நிறுத்தப் பெற்றார். உடன் வீடுபெறுமைக்கு அடிகள் வருந்திப் பிரிவு தாங்காதவராய்க் குருந்த மரத்து நிழலிலுள்ள திருவடியைப் பற்றி நின்று திருச்சதகத்தை அருளிச் செய்தார்.

"அங்நிலை தெளிந்து பொய்கை
அகன்றுயர் குருந்த நீழற்
பன்னரு மறைகள் காணுப்
பதமலர் பற்றி வீழ்ந்து
மன்னிய நிலத்தி னுள்ளார்
வல்வினைப் பிறவி மாள
இன்னருட் சதகம் 'மெய்தான்
அரும்பி'யென் றெடுத்துச் சொன்னார்."

(திருவாதவூரடிகள் புராணம்
திரு அம்பலச்சருக்கம் 25)

"சத்தியஞா னந்தருதே சிகர்மோகஞ் சதகமதாம்."

(திருவாசக உண்மை)

## கட்டளைக் கலித்துறை

1 மெய்தா னரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றியென்னுங்
கைதான் நெகிழ விடேனுடை
யாயென்னைக் கண்டுகொள்ளே.

**பதப்பிரிவு:**

மெய்தான் அரும்பி விதிர் விதிர்த்து
உன்விரை ஆர் கழற்கு என்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பி உள்ளம்
பொய்தான் தவிர்ந்து உன்னைப் போற்றி
சயசய போற்றி என்னும்
கைதான் நெகிழ விடேன் உடை
யாய்என்னைக் கண்டு கொள்ளே.

கொண்டுகூட்டு :

உடையாய்! மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உனது விரை ஆர்ந்த கழலுக்கு என்னுடைய கைதான் தலைமேல் வைத்துக் கண்ணீர் ததும்பி உள்ளம் வெதும்பிப் பொய்தான் தவிர்ந்து உன்னைப் போற்றி 'சயசய' போற்றி என்னும் கைதான் நெகிழவிடேன்; என்னைக் கண்டு கொள்ளே.

பொழிப்புரை :

எல்லாம் உடையவனே! (உன்பால் வைத்த பேரன்பு காரணமாக) என் உடல் சிலிர்த்து மிக மிக நடுங்கினேன்; உனது தெய்வமணம் நிறைந்த திருவடிகளைக் கருத்திற்

கொண்டேன்; என்னுடைய கைகளைத் தலைமேல் வைத்து (கும்பிட்டு)க் கண்ணீர் பெருகி வழிய நின்றேன்; நெஞ்சம் வாடி உருகினேன்; பொய்ப் பொருள்களை நினையாமல் உன்னையே நினைத்தேன்; உன்னைத் துதித்து, 'வெல்க, வெல்க; வணக்கம்' எனக்கூறி நிற்கும் ஒழுக்கத்தைத் தளராமல் மேற்கொண்டேன்; என்னைக் கடைக்கண் நோக்கி (உன் அடிமையாக) ஏற்றுக்கொள்வாயாக.

**விளக்கம் :**

தான் நான்கும் அசைநிலை; ஏகாரம் ஈற்றசை. இயல் பாகத் தெய்வமணங் கமழுந்தன்மை விளங்க "விரையார் கழல்" என்றார். இறைவனுக்கு எல்லாப் பொருள்களும் உடைமைப் பொருள்கள்; உயிர் அவனுக்கு மீளா அடிமை.

"அவையுடைமை ஆளாம் நாம் அங்கு"

(சிவஞானபோதம் சூ. 2- அதி' 4 வெண்பா)

"பாய ஆருயிர் முழுவதும் பசுபதி அடிமை
ஆய எவ்வகைப் பொருள்களும் அவனுடைப் பொருள்கள்
மேய இவ்வணம் அலது வேறின்றென உணர்ந்த
தூய மெய்த்தவத் தடியவர் துணையடி தொழுவாம்"

(தணிகைப் புராணம்)

உள்ளத்தில் நிறைந்த பேரன்பு மேலீட்டால் மெய்யரும்புதல் முதலிய மெய்ப்பாடுகள் தோன்றின. 'பொய்தான் தவிர்ந்து' என்பதனால் மனமும், 'சயசய போற்றி' என்பதனால் மொழியும், 'கைதான் நெகிழவிடேன்' என்பதனால் மெய்யும் இறைவயப் பட்டமை உணர்த்தினார்.

நெகிழவிடாமைக்குத் துணையாக இன்னின்ன செய்யேன் என அடுத்துவரும் பாட்டிலுணர்த்துகிறார். உள்ளம் பொய் தவிர்தல் — மனத்தில் பொய்ப் பொருள்

களில் ஆசையின்றித் தூய்மை நிலவுதல். விரை – 'அன்பரிட்ட நறும்போதுகளால் உளதாம் மணம்' எனவும் பொருள் கொள்ளலாம்.

> "விண்ணுஞ் செலவறியா வெறியார்கழல் வீழ்சடைத்தீ
> வண்ணன் சிவன்."

எல்லாப் பொருள்களையுங் கடந்து நின்றனவாயினும் அன்பர்க்கணியவாய் அவரிட்ட நறுமலரான் வெறி கமழு மென்பது போதர வெறியார் கழல் என்றார்.

**திருக்கோவையார் 256. பேராசிரியர் உரை.**

> "நறுமலரால் நாறுமலர்ச் சேவடி"

(திருவதிகை வீரட்டம். திருவடித் திருத்தாண்டகம் 8)

**2 கொள்ளேன் புரந்தரன் மாலயன்**
**வாழ்வு குடிகெடினு**
**நள்ளே னினதடி யாரொடல்**
**லானர கம்புகினு**
**மெள்ளேன் றிருவரு ளாலே**
**யிருக்கப் பெறினிறைவா**
**வுள்ளேன் பிறதெய்வ முன்னையல்**
**லாதெங்க ளுத்தமனே.**

பதப்பிரிவு :

கொள்ளேன் புரந்தரன் மால் அயன்
வாழ்வு; குடிகெடினும்
நள்ளேன் நினது அடியாரொடு
அல்லால்; நரகம் புகினும்
எள்ளேன் திருஅருளாலே
இருக்கப் பெறின்; இறைவா!
உள்ளேன் பிறதெய்வம் உன்னை அல்லாது
எங்கள் உத்தமனே!

கொண்டு கூட்டு :

இறைவா! எங்கள் உத்தமனே! புரந்தரன், மால், அயன் வாழ்வைக் கொள்ளேன்; குடி கெடினும் நினது அடியாரொடு அல்லால் நள்ளேன்; திருவருளாலே இருக்கப்பெறின் நரகம் புகினும் எள்ளேன்; உன்னை அல்லாது பிற தெய்வங்களை உள்ளேன்".

பொழிப்புரை :

எங்கும் இருப்பவனே! எங்களுடைய சிறந்த தலைவனே! இந்திரன், திருமால், பிரமன் என்னும் இம் மூவர் வாழ்க்கையையும் ஒரு பொருளாக மதித்துப் பெறக் கருதேன்; என் குலம் அழிவதற்கு ஏதுவாயினும் உன்னுடைய தொண்டரோடு அன்றிப் பிறரொடு நட்புக் கொள்ளேன்; உனது திருவருளால் வருவதெனின், நரகஞ் சென்று அடைவதெனினும் இழிவெனக் கொள் ளேன்; உன்னை அல்லாமல் மற்ற எந்தத் தெய்வத்தையும் நினைக்கவும் மாட்டேன்.

**விளக்கம் :**

இப்பாட்டு, அடிகள் 'பொய்தவிர்ந்து' நிற்றலைப் புலப்படுத்துகின்றது.

"மனந் தூயார்க் கெச்சம் நன்றாகும்;" "மனந் தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும், இனந்தூய்மை தூவா வரும்" எனத் திருவள்ளுவர் தீயினத்தால் குலங் கெடுதல் குறித்தார். சிவனடியாரொடு நட்புக்கொள்வ தால் குடிகெடுதல் இல்லை என்பது, 'கெடினும்' என்பதன் உம்மையால் உணர்த்தப்பட்டது. குடிகெடினும் என்ப தற்குக் குடிப்பிறப்புக்குரிய பெருமை கெட நேரினும் எனவும் பொருள் கூறுவர். இப்பொருள் கூறின் உம்மை இழிவு சிறப்பு. நரகம் புகினும் – உம்மை இழிவு சிறப்பு. புரந்தரன் மால் அயன் வாழ்வு கொள்ளேன்; வாழ்வும் கொள்ளேன் என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது.

'சிவனருளால் எனின் நரகமும் கொள்வேன்' என்றமையால் மணிவாசகர் பொய்ப்பொருட் பற்று அறுத்து மெய்ப்பொருளைப் பற்றியமை விளங்கும். திருவருட் பேற்றின் அருமை தோன்றத் 'திருவருளாலே இருக்கப் பெறின்' என்றார். கொள்ளேன், நள்ளேன் என்றமையால் மெய்யும், எள்ளேன் என்றமையால் மொழியும், உள்ளேன் என்றமையால் மனமும் பிறர்வயப்படாமை உணர்த்தினார். உத்தமன் – பிறவித்தளை நீக்கிப் பேரின்ப வாழ்வாகிய சிறந்த நன்மை அளிக்கும் ஒருவன்; உத்தமம் — நன்மை (பிங்கலம்). 'எங்கள் உத்தமன்' என்றார் ஏனைய அடியாரையும் உளப்படுத்தி. மாணிக்கவாசகர் நிலையற்ற விண்ணரசினைப் பொருள் எனக் கருதார்; அழிவுக்கு அஞ்சி அடியார் இணக்கம் கைவிடார்; இன்னலுக் கஞ்சி இறைவன் திருவருளை இகழார். சிவபெருமான் ஒருவனையே உள்ளத்திற் கொள்வார்'' என்பதாம்.

3 **உத்தம னத்த னுடையா**
**னடியே நினைந்துருகி**
**மத்த மனத்தொடு மாலிவ**
**னென்ன மனநினைவி**
**லொத்தன வொத்தன சொல்லிட**
**வூரூர் திரிந்தெவரும்**
**தத்த மனத்தன பேசவெஞ்**
**ஞான்றுகொல் சாவதுவே.**

பதப்பிரிவு :

உத்தமன் அத்தன் உடையான்
அடியே நினைந்து உருகி
மத்த மனத்தொடு மால் இவன்
என்ன மன நினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட
ஊர் ஊர் திரிந்து எவரும்
தம்தம் மனத்தன பேச எஞ்
ஞான்றுகொல் சாவதுவே.

*பொழிப்புரை :*

அண்ணலும், அப்பனும், ஆண்டவனும் ஆகிய இறைவனுடைய திருவடிகளையே சிந்தித்து மனங் கசிந்து, "இவன் மயக்கங் கொண்டான்" எனப் பிறர் கூறும்படி, களிப்புமிக்க நெஞ்சுடனே, பல ஊர்களிலும் அலைந்து என் உள்ளக் கருத்தினுக்கு மிகப் பொருந்தியவற்றையே நான் மொழிந்திட, இந்நிலைகண்டார் எத்தகையராயினும் தங்கள் தங்களுடைய உள்ளத்தில் தோன்றிய கருத்துக்களை உரைக்க, நான் உலக வாழ்வினின்றும் ஒழிவு பெறுதல் எப்பொழுது வாய்க்குமோ?

*விளக்கம் :*

இறைவன் எல்லையற்ற நற்பண்புடையனாதலின் உத்தமன்; எல்லாம் படைத்துக் காத்தலின் அத்தன்; எல்லாவற்றையும் தன் உடைமையாகக் கொண்டவனாதலின் உடையான். தேவரினும் யாவரினும் சிறந்தவனாதலின் உத்தமன் என்றார். இம்மை மறுமை வாழ்வுக்கு இறைவன் திருவடிகள் அல்லாமல் வேறு பற்றுக்கோடு இல்லையாதலின் "அடியே நினைந்து" என்றார். திருவடி நினைந்துருகி இறையின்ப நறுந்தேனுண்டு களித்தமையின் "மத்த மனத்தொடு" என்றார். மனநினைவில் ஒத்தன — மெய்ப் பொருளே விரும்பும் தம் விழைவுக்கு ஒத்த இறைவனது பெருமை. 'எவரும் தத்தம் மனத்தன பேச' என்றமையால் நல்லவர் அடிகளாரின் மெய்யன்பை உய்த்துணர்ந்து புகழ்தலையும், தீயவர் உண்மை உணராது இகழ்தலையும் குறித்தருளினார். இங்ஙனம் உலகத்தவர் புகழ்தலில் விருப்புக் கொள்ளாதும் இகழ்தலில் வெறுப்புக்கொள்ளாதும் திருவருள் ஒன்றிலேயே தோய்ந்து நிற்றலால் தம்பால் நிகழும் நல்வினை தீவினைகள் முறையே புகழ்வார்பாலும் இகழ்வார்பாலும் அடையத் தமக்கு வினை ஒழிவு எப்போது வாய்க்குமோ என அடிகளார் ஏக்கறுதலை இப்பாடலிற் புலப்படுத்தினார்.

"சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாக."

(போற்றித் திருஅகவல்-68-70)

4 சாவமுன் னாட்டக்கன் வேள்வித்
தகர்தின்று நஞ்சமஞ்சி
யாவவெந் தாயென் றவிதா
விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடு
மெண்ணிவிண் ணாண்டுமண்மேற்
றேவரென் றேயிறு மாந்தென்ன
பாவந் திரிதவரே.

**பதப்பிரிவு.**

சாவ முன்நாள் தக்கன் வேள்வித்
தகர்தின்று நஞ்சம் அஞ்சி
ஆவ எந்தாய் என்று அவிதா
இடும் நம்மவர் அவரே
மூவர் என்றே எம்பிரானொடும்
எண்ணி விண்ஆண்டு மண்மேல்
தேவர் என்றே இறுமாந்து என்ன
பாவம் திரிதவரே.

உரைநடை :

முன்நாள் தக்கனது வேள்வியில் தகர் தின்று, நஞ்சத்தினைக் கண்டு சாவ அஞ்சி, எந்தாய்! ஆ அ! என்று அவிதா இடும் நம்மவர் அவரே எம்பிரானொடு மூவர் என்று எண்ணி விண்ணினை ஆண்டு மண்மேல் தேவர் என்று இறுமாந்து திரிதவரே; என்ன பாவம்!

பொழிப்புரை :

பண்டைக் காலத்தில் தக்கனது யாகத்தில் அவியாக இடப்பட்ட ஆட்டின் இறைச்சியை உண்டும், திருப்பாற்

கடலில் தோன்றிய பெருவிடத்தினைக் கண்டு இறத்தற்கு நடுங்கியும் "எங்கள் தந்தை! ஆ அ!" என்று அவல முறையீடு செய்த அயனும் அரியும் நம்மை ஒத்த உயிர்களே. அவர்கள் எமது பெரியோனாகிய சிவ பிரானோடு தம்மைச் சேர்த்து மூவரில் உள்ளோர் ஆக மதித்து வானலோகப் பகுதியை ஆட்சி செய்து மண்ணுலகில் மக்களால் வணங்கப்படும் தெய்வமாகத் தம்மை நினைத்துச் செருக்குக் கொண்டு திரிவார்கள். இஃதெத்தகைய தீவினைப் பயன்?

**விளக்கம் :**

உழிதர்வர் — அப்பர்: திருவொற்றியூர் 5 } என்பன
திரிதர்வர் — அப்பர்: திருநல்லூர் 5 } போலப்
பாடங்கொள்ளலாம்.

திரிதருவர் என்ற சொல் ரகர உகரங்கெட்டுத் 'திரிதவர்' என நின்றது. இறுமாந்து திரிதவர் — 'செருக்கிக் கொண்டு அலைவர்' எனத் திரிதவர் என்பதற்குப் பொருள் கொள்க. தக்கன் சாவ எனக் கூட்டி, 'தக்கன் அழிவிற்குக் காரணமாயிருந்த' எனவும் பொருள் கொள்ளலாம். வேள்விக்குரிய சிவபெருமானை அழையாது தக்கன் மற்றைத் தேவர்களை அழைத்து அவர்களுக்கு அவி உணவளித்தது அவன் கேட்டிற்குக் காரணமாயிருந்தது. அவியுணவை ஏற்று வேள்வி செய்பவன் நன்மையைக் கருதாது தம் வயிறு நிறைய உண்டு என்பார் 'தின்று' என்றார். வேள்வித் தலைவனாகிய சிவபெருமானின்றிச் செய்த யாகத்திற்குச் செல்லலாகாதெனக் கருதாது சென்று ஆட்டிறைச்சி தின்றவரும் பாற்கடலைக் கடைந்தபோது தோன்றிய விடத்திற்கு அஞ்சியவருமாகிய தேவர் நம் போன்று பாசக்கட்டுடைய உயிர்களே என்பார், 'நம்மவர் அவரே' என்றார்.

ஆ! ஆ! என்று அலறிய ஒலி, ஆ, அ எனக் குறைந்து நின்றது இரக்கக் குறிப்பு மொழி, அபயக் குறிப்பு மொழி, அவிதா — துன்பம் நேர்ந்த இடத்து நிகழும் முறையீட்டுச் சொல்.

"அப்பொழு தணைய வொட்டா தடற்களி றகன்றுபோக
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்லமாட்டார்
தப்பினர் விழுந்து கையால் தரையடித் தெழுந்துநின்று
செப்பருந் துயரம் நீடிச் செயிர்த்துமுன் சிவதா என்றார்."

(திருத்தொண்டர் புராணம், எறிபத்தநாயனார்.)

"அவிதா, சிவதா" துன்பமுறையீட்டுச் சொற்களின் ஒப்புமை காண்க.

மூவர் — அயன், மால், குணிஉருத்திரன். சிவபெருமான் மாசங்கார உருத்திரன். குணி உருத்திரன் குணதத்துவத்தின் வைகி, பிரகிருதி தத்துவம்வரை அழிப்பவன். மாசங்கார உருத்திரனாகிய சிவபெருமான் முப்பத்தாறு தத்துவங்களுநங் கடந்து சுத்தமாயா புவனம் முடிய அழிப்பவன்.

இவ்வேறுபாடுணராது மகாருத்திரனாகிய பரம சிவனைக் குணிருத்திரனாக வைத்து எண்ணுவாரை நோக்கி "நம்மவர் அவரே மூவரென்றே எம்பிரானோடும் எண்ணி விண்ணாண்டு மண்மேல் தேவரென்றே என்ன பாவந் திரிதவரே" என வாதவூரடிகள் இரங்கிக் கூறிய திருவாக்கும் அறிக.

(சிவஞானபாடியம்-முதற் சூத்திரம்.)

பின்வரும் காஞ்சிப்புராணச் செய்யுட்கள் தக்கன் அழிவினையும், தேவர் நஞ்சினுக்கு அஞ்சினமையையும் விளக்கும் :—

"சகந்தனில் எவருந் தம்மின் உயர்ந்தவர் தமைப்பூ சிப்பர்;
உகந்தவர்க் கன்றித் தம்மோ டொத்தவ ரிழிந்தோர் தம்மை
அகந்தெறப் பூசை செய்வா ராருளார்? விதியுமற்றே
மகந்தனக் கரசன் முக்கண் வள்ளலே யென்னும் வேதம்"

தக்கன் பெற்ற சாபம்

" அச்சமின்றிப்
பொன்னவிர் சடிலத்தேவை யிகழ்ந்தனை பொறியிலாதாய்
நின்னுடைக் குலத்துக் கின்னே முடிவென நினைவிற்கோடி."

தேவர்கள் விடத்துக்கு அஞ்சுதல்

" அடுங்காலம் இது என்ன விடம் எழலும் நனிவெருவி
அயன் மாலேனோர்
கொடுங்காலன் தனைக்குமைத்த குரைகழற்கீழ்ச் சரண்புகுதக்
கொதித்து வாழ்நாள்
பிடுங்காமல் அருள்புரிந்த பரம் பொருளை யன்றியுமோர்
பிரானுண்டென்ன
நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினு மென்னுள்ள
நடுங்குமாதோ."

5 தவமே புரிந்திலன் றண்மல
ரிட்டுமுட் டாதிறைஞ்சே
னவமே பிறந்த வருவினை
யேனுனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு வெய்திற்றி
லேனின் றிருவடிக்காம்
பவமே அருளுகண் டாய்அடி
யேற்கெம் பரம்பரனே.

**பதப்பிரிவு :**

*தவமே புரிந்திலன் தண் மலர் இட்டு*
*முட்டாது இறைஞ்சேன்*
*அவமே பிறந்த அருவினையேன்*
*உனக்கு அன்பர் உள் ஆம்*
*சிவமே பெறும் திரு எய்திற்றிலேன்*
*நின் திருவடிக்கு ஆம்*
*பவமே அருளுகண்டாய் அடி*
*யேற்கு எம் பரம்பரனே.*

**உரை நடை :**

எம் பரம்பரனே! உனக்கு அன்பர் உள் ஆம் சிவமே பெறும் திருவை எய்திற்றிலேன்; தவத்தையும் புரிந்திலன்; தண் மலர் முட்டாது இட்டு இறைஞ்சேன், அவமே பிறந்த அருவினையேன்; நின் திருவடிக்கு ஆம் பவமே அருளு, கண்டாய்.

**பொழிப்புரை :**

எங்கள் மிகமேலோனே! உன்பால் பேரன்புமிக்க தொண்டர்களுடைய மனத்தகத்து விளைவதாய்ப் பிறப்பு அறுதற்கு உரிய சிவமாந்தன்மைப் பெருவாழ்வை நான் பெற்றிலேன்; நோற்றல் ஆகிய அகப்புற வழிபாடுகளை விரும்பிச் செய்திலேன்; குளிர்ந்த பூக்களைக் குறைவின்றி இடைவிடாது உன் திருவடிகளில் தூவித் தொழுதிலேன். ஆதலின் இப்பிறப்பில் வீணாய் இவ்வுலகில் தோன்றிய தீராத் தீச்செயல் உடையேன் ஆனேன். இனியாவது உனக்கு அடித்தொண்டு செய்து உய்யும் பிறப்பையே தொண்டனாகிய எனக்கு அருள்வாயாக!

**விளக்கம் :**

சிவமே பெறுந்திரு — சிவமாந்தன்மை பெற்று இன்புறுதலாகிய சிவப்பேறு.

"திகழ்ந்த மெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானாகச் செயுமவன்"

—திருஞான சம்பந்தர் தேவாரம்.

"பத்திப்பேர் வித்திட்டே" எனத் தொடங்கும் பாட்டு.

"பொன்னும் மெய்ப் பொருளும் தருவானைப்
போகமும் திருவும் புணர்ப்பானை"

(சுந்தரர் தேவாரம்.)

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு."

(திருக்குறள் 266)

தவமே புரிதலும் தண்மலரிட்டு இறைஞ்சுதலும் சிவமே பெறுந் திரு எய்துதற்கு ஏதுவாகும்.

" தவஞ்செய்தார் என்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத் — தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர் சூழ் சொல்லுமாங் கண்டு.

(சிவஞானபோதம் -சூ-8. அதி. 4)

" இறப்பில் தவத்தால்
மருவுவனும் ஞானத்தை வந்து." ( ,, ,, )

" தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்.
நீபரன் தன்னை நெஞ்சில் நினைவையேல் நிறைந்த பூசை
ஆய்பரம் பொருளை நாளும் அர்ச்சி நீ அன்பு செய்தே."

(சிவஞான சித்தியார் -சூ-2. அதி. 2-28)

6 பரந்துபல் லாய்மல ரிட்டுமுட்
டாதடி யேயிறைஞ்சி
யிரந்தவெல் லாமெமக் கேபெற
லாமென்னு மன்பருள்ளங்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன்
வார்கழற் கன்பெனக்கு
நிரந்தர மாயரு ளாய் நின்னை
யேத்த முழுவதுமே.

பதப்பிரிவு :.

பரந்து பல்ஆய் மலர் இட்டு
முட்டாது அடியே இறைஞ்சி
இரந்த எல்லாம் எமக்கே பெறலாம்
என்னும் அன்பர் உள்ளம்
கரந்து நில்லாக் கள்வனே நின் தன்
வார்கழற்கு அன்பு எனக்கு
நிரந்தரமாய் அருளாய் நின்னை
ஏத்த முழுவதுமே.

உரை நடை :

பரந்து ஆய்ந்த பல மலர்களை முட்டாது இட்டு நின் அடியே இறைஞ்சி இரந்த எல்லாம் எமக்குப் பெறலாம் என்னும்அன்பர் உள்ளத்தில் கரந்து நில்லாக் கள்வனே! நின்தன் வார்கழற்கு அன்பை முழுவதும் நின்னை ஏத்த நிரந்தரமாய் எனக்கு அருளாய்.

பொழிப்புரை;

சிவதலங்கள் எங்குஞ் சென்று ஆராய்ந்து எடுக்கப் பட்ட பலவகைப் பூக்களை விதிமுறையிற் குறைவறப் பெய்து திருவடிகளையே வணங்கிப் பணிந்து, வேண்டி யன எல்லாவற்றையும் எமக்கு அடைதல் கூடும் என்று கருதுகின்ற தொண்டர்களுடைய மனத்தில் மறைந்து உறையாது வெளிப்படத் தங்குகின்ற கள்வனே! உன்னு டைய நீண்ட கழலணிந்த திருவடிகளிடத்து நிகழும் பேரன்பை, உன்னையே முழுதும் வாழ்த்துமாறு, என்றும் உள்ளதாக நீ எனக்கு அருள்புரிவாயாக.

விளக்கம் :

பரத்தல் — சிவதலங்கள்தோறும் செல்லுதல்.

ஆய் மலர் — பழுதில்லாதனவும், அன்றலர்ந்தன வும், வண்டுகள் படியாதனவுமாகிய தேர்ந்தெடுக்கப் பெற்ற பூக்கள்.

அன்பருள்ளத்து இறைவன் தயிரின் நெய்போல் விளங்கி நிற்பன். அன்பரல்லாதார் உள்ளத்துப் பாலில் நெய்போல் மறைந்து நிற்பன். ஏ. ஈற்றசை.

'இறைவனை இறைஞ்சின் இரந்த வெல்லாம் பெறலாம்' என்றமையின் மெய்ப் பொருளுணர்ந்தமை புலப்படுத்தினர். அன்பர் அல்லார்க்கு அவர் உள்ளத்தே முதல்வன் கரந்து நிற்றலை "உள்ளத்தே நிற்றியேனும் உயிர்ப்புளே வருதியேனும், கள்ளத்தே நிற்றியம்மா

—19.

எங்ஙனம் காணு மாறே?" என்னும் திருநாவுக்கரசர் திருவாக்கால் தெளிவாய் உணரலாம். இறைவன்பால் இடையீடில்லாமற் பேரன்பு கொண்டு அவனை வாழ்த்து தற்கும் அவனே அருள் செய்யவேண்டுமென்ற மெய்யுணர்வு புலப்படுத்தப் பெற்றது.

"— தன்னுணரு
நேசத்தர் தம்பால் நிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றும் பதி"

(சிவஞானபோதம் சூ-12 அதி 4)

(ததி — தயிர்).

பொருள் :

"தன்னை உள்ளவாறுணரும் அன்பர் மாட்டுத் தயிரின் கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றும்; பாசக் கட்டுடையார்க்கு இவ்வியல்பில்லாமையான் அவர் மாட்டுப் பாலின் கண்ணதாகிய நெய்போல மறைந்து நிற்கும் என்க."

(சிவஞானபாடியம்)

நிரந்தரம் — இடையீடில்லாமல், எப்பொழுதும்.

கருத்துரை :

இறைவனை ஏத்துதல் எப்பேற்றினுக்குஞ் சிறந்த சாதனமாகும்; ஏத்துதற்கு இடையறாப் பேரன்பு இன்றி யமையாதது; அவ்வன்பினை இறைவனே அருள்புரிவான்.

7 முழுவதுங் கண்ட வனைப் படைத்தான்
முடிசாய்த்து முன்னாட்
செழுமலர் கொண்டெங்குந் தேடவப்
பாலனிப் பாலெம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடக
மாடிக் கதியிலியா
யுழுவையின் றோலுடுத் துன்மத்த
மேற்கொண் டுழிதருமே.

**பதப்பிரிவு :**

முழுவதும் கண்டவனைப் படைத்தான்
முடி சாய்த்து முன் நாள்
செழு மலர் கொண்டு எங்குந் தேட
அப்பாலன் இப்பால் எம்பிரான்
கழு தொடு காட்டிடை நாடகம்
ஆடிக் கதி யிலியாய்
உழுவையின் தோல் உடுத்து உன்மத்தம்
மேல் கொண்டு உழிதருமே.

**உரைநடை :**

முன் நாளில் முழுவதும் கண்டவனைப் படைத்தான் செழு மலர் (போலும் திருவடியைக் காணும் உறுதி) கொண்டு முடியைச் சாய்த்து எங்குந்தேட அப்பாலன் ஆகிய எம்பிரான் இப்பால் கழுதொடு காட்டிடை நாடகம் ஆடிக் கதியிலியாய் உழுவையின் தோலை உடுத்து உன்மத்தம் மேற்கொண்டு உழிதரும்.

**பொழிப்புரை :**

முன் ஒரு காலத்தில் உலகங்களை யெல்லாம் படைத்தவனாகிய அயனைத் (தன் உந்தித் தாமரையில்) தோற்றுவித்தவனாகிய திருமால் வளமான தாமரைப்பூப் போலும் திருவடிகளைக் கண்டு அடைய வேண்டும் என்னும் உறுதியைப் பூண்டு, தலையைத் தாழ்த்தி (நிலனகழ்ந்து) எல்லாவிடத்தும் போய்க் காண முயல அவனுக்குக் காணப்படாதவாறு கடந்து அப்பாற்பட்டு நின்றவனாகிய எமது சிவபெருமான் இப்பக்கத்தில் சிவகணத்தொடு சுடுகாட்டில் காபாலக் கூத்து ஆடுவான்; புகலிடம் அற்றவனாகிப் புலித் தோலை ஆடையாகக் கட்டி அளவின் மிக்க களிப்பினை மேம்பட்ட குணமாகக் கைக்கொண்டு பலவிடத்தும் திரிவான்.

**விளக்கம் :**

முன்னாள் முழுவதும் கண்டவனை — எனக் கூட்டுக.

கண்டவன்—படைத்தவன் என இலக்கணைப் பொருள் தந்தது. முடி சாய்த்து என்பது கீழ் நோக்குந் தலையை யுடைய பன்றி வடிவெடுத்ததைக் குறித்தது. தந்தை யாகிய திருமாலாற் காண முடியாதவன். ஆதலின் மைந்த னாகிய பிரமனாலும் காணமுடியாதவன் என்பது பெறப் படும். தருக்குக் கொண்டவர் தேடினும் அவர்க்கு அப்பாற்பட்டவனாவான்; தருக்கற்றவர்க்கு இப்பாற் பட்டவனாதல் அன்றி எப்பாற்பட்டவனுமாய் எளியனும் ஆவன் என்பது தெளிவித்தார்.

கதியிலி — புகலிடம் இல்லாதவன். அதனால் புலித் தோல் உடுத்தான் எனவும், உயிர்களுக்கு உரிய நாற் கதிகளுள் ஒன்றினும் அடங்காத பிறவாயாக்கை உடையோன் எனவும் இருபொருள்படும். தாருக வனத்து முனிவரால் ஏவப்பட்ட புலியைக் கொன்று அதன் தோலை ஆடையாகக் கொண்டது அன்பில்லாதாரை மறக் கருணையால் ஒறுத்தலாம். உன்மத்தம் — மயக்கம், அளவின் மிக்க களிப்பு; ஊமத்தம் பூ. இஃது இறைவன் இன்ப வடிவினன் என்பதைக் குறிக்கும். உழிதரல் — யாண்டும் உளனாய்த் திரிதல்.

"கதியிலியாய் உழுவையின் தோலுடுத்து" — ஆடைக்கு வழியின்றிப் புலித்தோலை உரித்துடுத்து எனவும், செல்கதி வேண்டாது எவற்றையும் அடக்கி ஆள வல்ல முதல்வன் எனவும் இரு பொருள்படும்.

> "கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்
> தலையங்கை கொண்டு நீ காபால மாடுங்கால்"

**(கலித் தொகை: கடவுள் வாழ்த்து.)**

செழு மலர் கொண்டு — வளமாக அலர்ந்த தாமரை மலர் போன்ற திருவடிகளைத் தேடும் நோக்கங்கொண்டு,

"அருச்சனைபுரிவதற்குச் செழிப்பான தாமரை மலர்களைக் கையிற்கொண்டு" எனவும் பொருள் கூறுவர். காட்டிடை நாடக மாடல் — மாசங்காரத்தின் பின் மீளவும் படைத் தற்குத் தகுதியாகும்படி சூக்கும ஐந்தொழில் செய்தல்.

**8 உழிதரு காலுங் கனலும்**
**புனலொடு மண்ணுவிண்ணு**
**மிழிதரு காலமெக் காலம்**
**வருவது வந்ததற்பி**
**னுழிதரு காலத்த வுன்னடி**
**யேன் செய்த வல்வினையைக்**
**கழிதரு காலமு மாயவை**
**காத்தெம்மைக் காப்பவனே.**

***பதப்பிரிவு :***

*உழிதரு காலும் கனலும்*
*புனலொடு மண்ணும் விண்ணும்*
*இழிதரு காலம் எக்காலம்*
*வருவது? வந்ததன் பின்*
*உழிதரு காலத்த! உன் அடியேன்*
*செய்த வல்வினையைக்*
*கழிதரு காலமும் ஆய் அவை காத்து*
*எம்மைக் காப்பவனே*

உரைநடை :

உழிதரு காலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும் இழிதரும் காலம் வந்ததன் பின்னும் உழிதரு காலத்த! உன் அடியேன் செய்த வல் வினையைக் கழிதரு காலமும் ஆய் அவைகாத்து எம்மைக் காப்பவனே! (அந்த இழிதரு காலம்) வருவது எக்காலம்?

பொழிப்புரை :

அலைகின்ற காற்றும் தீயும் நீருடனே நிலமும் விசும்பும் ஆகிய ஐம்பெரும் பூதங்களும் காரிய நிலை விழுந்து அடங்குகின்ற பேரூழிக் காலம் நிகழ்ந்த பின்னும் ஐந்தொழில் திருக்கூத்து ஆடும் திருவடிகளை யுடைய தந்தையே! உனது அடிமையாகிய யான் செய்த கொடுஞ் செயல்களைக் கழிக்கின்ற காலதத்துவமும் ஆகி அச்செயல்கள் மேலும் பற்றித் தொடராமல் விலக்கி எங்களைக் காப்பாற்றுபவனே! உன் தொண்டராகிய எங்களைப் பேணுகின்ற பெருமானே! அப்பேரூழிக் காலம் உண்டாவது எப்பொழுது?

**விளக்கம் :**

நீர் உணவுமாம், உணவுக்குத் துணையுமாம்; அச் சிறப்புப் பற்றியே புனலொடு என்றார். "ஒருவினை ஒடுச் சொல் உயர்பின் வழித்தே". தொல்–சொல் 91. தம்வினை எளிதில் கழிக்க முடியாததாய்த் தாம் செய்யும் தவ முயற்சியால் ஒழியாதது எனக் கொண்டு வல்வினை என்றார். அவ்வல்வினை கழிதற்கு இறைவனே பேரூழிக் கால தத்துவமாய் நின்று அருள்புரியவேண்டி "வல்வினையைக் கழிதரு காலமுமாய்" என்றார். அவ் வினைகள் மீண்டுந் தம்மைப் பற்றிப் பிறப்புக்கு ஏதுவாகா வண்ணம் அவற்றைத் தடுத்துத் தம்மை மட்டுமன்றிப் பிற அடியாரையும் காப்பாற்றும் பேரருள் உடையான் என்பதை அடிகள் உணர்ந்தவராதலின் "அவைகாத்து எம்மைக் காப்பவனே" என்றார். இறைவனது பேரருள் துணையின்றித் தமது தவமுயற்சி வன்மையால் வினை யொழித்தல் முடியாது என்ற மெய்யுணர்வு இதனால் விளங்கும். எம்மை–என்னையும் என்போன்ற அடி யாரையும்."ஊழிக்காலம் வர எவ்வளவோ காலந்தாழ்க்கும், அதுவரை என்னை அல்லற் பிறவியிற் படுத்தாது இப் பொழுதே ஆண்டுகொள்" என அடிகள் வேண்டுகிறார்.

உழிதரு கால் அத்த எனப்பிரித்து — ஆடுகின்ற காலினையுடைய அப்பனே எனவும் பொருள் கொள்ள லாம். கழிதரு–ஒரு சொல், கழிதா பகுதி. காலதத்துவ மாயும் இருப்பன் ஊழிக் காலத்திற்குப் பின்னும் திருக் கூத்து நிகழ்த்துவன் இறைவன் என்பதாம்.

**9 பவனெம் பிரான்பனி மாமதிக்**
**கண்ணிவிண் ணோர்பெருமான்**
**சிவனெம் பிரானென்னை யாண்டுகொண்**
**டானென் சிறுமைகண்டு**
**மவனெம் பிரானென்ன நானடி**
**யேனென்ன விப்பரிசே**
**புவனெம் பிரான்றெரி யும்பரி**
**சாவ தியம்புகவே.**

**பதப்பிரிவு ;**

பவன் எம்பிரான் பனிமாமதிக்
கண்ணி விண்ணோர் பெருமான்
சிவன் எம்பிரான் என்னை ஆண்டுகொண்
டான் என் சிறுமை கண்டும்
அவன் எம்பிரான் என்ன நான்
அடியேன் என்ன இப்பரிசே
புவன் எம்பிரான் தெரியும் பரிசு
ஆவது இயம்புகவே.

**உரைநடை :**

பவனும் எம்பிரானும் பனிமா மதிக்கண்ணி விண்ணோர் பெருமானும் சிவனுமாகிய எம்பிரான் என் சிறுமையைக் கண்டும் என்னை ஆண்டு கொண்டான்; அவன் எம்பிரான் என்ன நான் அடியேன் என்ன (உள்ள) இப்பரிசே எம்பிரானைத் தெரியும் பரிசாவது புவன் இயம்புகவே.

**பொழிப்புரை:**

தானே முதல் ஆகி எல்லாம் உண்டாதற்குக் காரணனு மாகிய எங்கள் இறைவன், குளிர்ந்த சிறந்த பிறைத் திங்களைத் தலையணி மாலையாகக் கொண்டவனாகிய தேவர் தலைவன், சிவன் என்னும் பெயரைத் தனக்கே யுடைய தலைவன்; எங்கள் பெரியோனாவன். அவன் என் புன்மையை அறிந்தும் என்னை அடிமையாக ஏற்கும் அருள் உடையனாயினன். அத்தகையான் எமது ஆண்டவன் என்று அமையவும் நான் தொண்டன் என்று அமையவும் ஏற்பட்டுள்ள (இந்த ஆண்டான் அடிமை) முறைமையே எம்பெருமானை மக்கள் அறிந்து கொள்ளும் முறைமை ஆகும். இதனை உலக மக்கள் இனிமை பெறக் கூறிப் போற்றுவாராக.

**விளக்கம் :**

எம்பிரான் என்பதனால் இறைவன் பெருமையை உணர முடியாது; ஆதலின் அவன் பெருமையைத் தெளிவிப்பதற்கு, அவனைத் தஞ்சமென அடைந்தோரை வேறு வழியில் விலக்க முடியாத அழிவினின்றும் காப்பவன் என்பதை உணர்த்தப் "பனிமாமதிக் கண்ணி" எனவும், தேவர்க்குந் தலைவன் என்பதை உணர்த்த 'விண்ணோர் பெருமான்' எனவும் கூறினார். தக்கன் தந்த சாபத்தால் தேய்ந்து மாய்ந்துபோம் நிலையில் சிவபெருமானைத் தஞ்சமென அடைய ஈடேற்றமும், அவன் சடைமுடி அணியாகும் ஏற்றமும் பெற்றது மதி. ஆதலின் பிறைமதி மாமதி எனப்பட்டது. எவ்வளவு தாழ்ந்த வரையும் அவர் சிறுமை நோக்கிப் புறக்கணியாது ஆண்டு கொள்ளும் பேரருளின் திறம் கருதி எம்பிரான் என்பதைப் பன்முறை கூறினார். பவன்–தானே முதலாகி மற்று யாவும் தோன்றுதற்கு மூலமுமானவன். புவன் என்பது புவனம் என்பதன் அம்முக் கெட்டது. மெய்ப் பொருளை உணரும் முறை ஆண்டான் அடிமைத் திறம் உணர்ந்து, இறைவனை நெஞ்சார நினைத்து

வாயாரப் புகழ்ந்து, மெய்யாரத் தொழுதலே என்பதும் அதுவே தான் இறைவன் மிகவும் விரும்புவது என்பதும் விளங்க "எம்பிரான் தெரியும் பரிசாவது இயம்புகவே" என்றார்.

புவன் என்பதற்கு ஒளிவடிவினன் எனவும் பொருள் கொள்ளப்படும். அவ்வாறு கொள்ளின் இயம்புக என்பதற்கு உலகம் தோன்ற எழுவாயாம்.

பவன் —எம்பிரான்.

உலகம் சங்காரகாரணனால் தோற்றுவிக்கப்படும் அவனிடத்து ஒடுங்குதலின்; ஈறேமுதல். உலகத்தை ஒடுக்குகின்ற, மாசங்காரக் கடவுளாகிய சிவபெருமானே உலகத்தைத் தோற்றுவிப்பவன்; அவனே பவன்.

ஒடுங்கி உளதாம் புவன்—சுயம்பு, தானே தோன்றியவன்.

புவனாகிய எம்பிரானே சிவன், எனது ஆண்டவன், நான் அவன் அடிமை. அவன் எவ்வளவோ பெருந்தகையன். நான் எவ்வளவோ சிறியவன். அப்படியிருந்தும் என்னை ஆண்டு கொண்டான். இஃது அவனது பேரருட்டிறம்.

பரிசு—தன்மை. சிவன்—குறைவிலா மங்கல குணம் முதலியவை உடையவன்.

"குறைவிலா மங்கலக் குணத்த னாதலின்
நிறைமலம் அறுதியி னீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்
இறையவன் பெருமையை யாவர் கூறுவார்?"

(காஞ்சிப்புராணம்)

'கண்ணி' — ஆடவர் தலையில் அணியும் மாலை.

"பெருந்தண் கண்ணிமிலைந்த சென்னியன்"

(திருமுருகாற்றுப்படை)

10 புகவே தகேனுனக் கன்பருள்
யானென்பொல் லாமணியே
தகவே யெனையுனக் காட்கொண்ட
தன்மையெப் புன்மையரை
மிகவே யுயர்த்திவிண் ணோரைப்
பணித்தியண் ணாவமுதே
நகவே தகுமெம் பிரானென்னை
நீசெய்த நாடகமே.

பதப்பிரிவு :

புகவே தகேன் உனக்கு அன்பருள்
யான் என் பொல்லா மணியே
தகவே எனை உனக்கு ஆட்கொண்ட
தன்மை எப் புன்மையரை
மிகவே உயர்த்தி விண்ணோரைப்
பணித்தி அண்ணா அமுதே
நகவே தகும், எம்பிரான் என்னை
நீசெய்த நாடகமே.

உரைநடை :

என் பொல்லா மணியே! யான் உனக்கு அன்பருள் புகவேதகேன். எனை ஆட்கொண்ட தன்மை உனக்குத் தகவே? எப்புன்மையரை மிக உயர்த்தி, விண்ணோரைப் பணித்தி; அண்ணா! அமுதே! எம்பிரான் நீ செய்த நாடகம் என்னே? நகவே தகும்.

பொழிப்புரை :

தொளைக்கப்படாத எனது முழு மாணிக்கமே! நான் உன்பால் பற்றுடையார் கூட்டத்துள் நுழைவதற்கு ஏற்ற பண்புடையன் அல்லன். என்னை உன் அடிமை யாகக் கொண்ட முறைமை உனக்குப் பெருமையாகுமா? (ஆகாதே); எவ்வளவு கீழானவரையும் மேலாக உயர்த்தி விடுகின்றாய்!; மேலான வானவரைத் தாழ்த்தி விடு

கின்ருய்; பெரியோனே! நெடுநல்வாழ்வளிக்கும் அரு மருந்தே! எம்பெருமானே! நீ நடத்திக் காட்டிய இத் திருக்கூத்துச் சிரிப்பை உண்டாக்கத் தக்கதாகவே உள்ளது.

விளக்கம் :

உனக்கு அன்பர் :

(1) உன்பால் அன்பர் (7ம் வேற்றுமை)
(2) உன்னுடைய அன்பர் (6ம் வேற்றுமை)
(3) உனக்கு அன்பர் (4ம் வேற்றுமை)
நட்புப் பொருள்.

இறைவன் பால் மெய்யான பற்றுடைய அடியாரை நோக்கத் தாம் கொண்ட பற்று மிகக் குறைந்தது என உணரும் தமது பணிவுடைமையைப் "புகவே தகேனுனக் கன்பருள்" என்பதனுல் புலப்படுத்துகிருர். உலக வாழ்வில் சிறியோரைப் பெரியோராகவும் பெரியோரைச் சிறியோராகவும் நாடகக் காட்சி நடத்துகிறவர்கள் நடிக்கச் செய்தல் உண்டு. அது போலத் தாழ்ந்தோரா யினும் பணிவுடைய தொண்டரை ஆட்கொண்டு உயர்த்துவதும் தேவரெனினும் செருக்குடைய மற்ற வரை ஆட்கொள்ளாது தாழ்த்துவதும் முதல்வன் இயல் பாகும். அவற்றுள் தாம் ஆட்கொள்ளப்பட்டிருத்தல் அன்பே இல்லாத தாழ்ந்தோரை உயர்த்தியது ஆம். ஆதலின், தம்மைப் பிறர் நோக்கி இகழ்ந்து நகுதல் தகும் என மணிவாசகர் கருதியதாகவும் பொருள் காணலாம்.

"பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து"

என்னும் திருக்குறளுக் கியைய இறைவன் தாழ்ந்து பணிபவரை உயர்த்தியும் தம்மைத் தாம்வியந்து அணிப வரைத் தாழ்த்தியும் அருள் செய்தல் பொருத்தமே என்பது உணரத் தகும். உயர்த்தி, பணித்தி என்பவை முன்னிலை ஒருமை வினைமுற்றுக்கள். மேலே கண்ட இப் பத்துப் பாடல்களும் கட்டளைக் கலித்துறை என்ற செய்யுள் வகைப்படுவன.

## 2. அறிவுறுத்தல்

திருவருட் பேற்றிற்குத் துணை நின்று உதவிபுரிய வேண்டிய தம் மனம் அவ்வுதவியைச் செய்யாமையோடு தடையாகவும் இருந்து உயிரை உலகத்தில் இழுக்கிறது. முதல் எட்டுப் பாடல்களில் இறைவனிடம் இதனை விண்ணப்பித்தல் வாயிலாக நெஞ்சிற்கு அறிவுறுத்து கிறார் அடிகள். இறுதி இருபாடல்களிற் "பாழ் நெஞ்சே! நீ ஏன் சாகாமல் இருக்கின்றாய்? உனக்கே கேடு சூழ்கின்றாய்" என அடிகள் இடித்துரைத்து நெஞ்சறி வுறுத்துகிறார்.

**11 நாடகத்தா லுன்னடியார்**
**போனடித்து நானடுவே**
**வீடகத்தே புகுந்திடுவான்**
**மிகப்பெரிதும் விரைகின்றே**
**னாடகச்சீர் மணிக்குன்றே**
**யிடையறு வன்புனக்கென்**
**னூடகத்தே நின்றுருகத்**
**தந்தருளெம் முடையானே**

பதப்பிரிவு :

நாடகத்தால் உன்அடியார்
போல்நடித்து நான்நடுவே
வீடுஅகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே
இடைஅறுஅன்பு உனக்குஎன்
ஊடுஅகத்தே நின்றுஉருகத்
தந்தருள்; எம் உடையானே!

பொழிப்புரை :

நடன சபையில் விளங்கும் சிறப்புடைய மாணிக்க மலையே! எம்மை ஆட்கொண்ட தலைவனே! மெய்யன்பு

இல்லாமையால், யான் உன்னுடைய தொண்டர்களை ஒப்ப அன்புடையன்போலப் புறத்தே காட்டி, (அங்ஙடிப் பும் முற்றுப் பெறாத) இடைப் பொழுதிலே பேரின்ப நிலையுட் சென்று தங்குதற்கு மிக விரும்பி முந்துகின் றேன். (மெய்யன்பின்றி இன்புறுநிலை கிட்டாதாதலால் உன்பால் இடையீடின்றித் தொடர்ந்து நிகழும் அன்பு என்னுடைய உள்ளத்துள்ளே நிலைபெற்று அமைந்து, அதனால் உள்ளம் உருகும்படி செய்தருள்க.

**விளக்கம் :**

**ஆடகம்** — ஆடு + அகம் = ஆடும் இடம், நடன சபை.

**ஆடகச்சீர் மணிக்குன்றே** என்பதை **சீர்மணி ஆடகக்குன்று** எனக் கூட்டி, "சிறந்த நீல மணி போலும் உமையம்மையை இடத்திற் கொண்ட பொன் மலை போலும் பெருமானே!" எனப் பொருள் கொள்ளுதலுந் தக்கதே. பொன்னாலாகிய சிறந்த அழகுடைய மலையே எனப் பொன்னார் மேனியன் என்பதற்கிணங்கப் பொருள் கொள்ளலும் ஆம்.

மெய்யுணர்வின் பயனாகிய அன்பு தம் நெஞ்சில் எழவில்லை எனத் தம் நெஞ்சைக் குற்றப்படுத்துதற்கு 'உன் அடியார்போல் நடித்து' என்றார். பிற பற்றுக்கோ, சலிப்புக்கோ இடங்கொடாது ஒரே தொடர் பாக இறைவன்பால் மெய்ப்பற்றுக் கொள்ளவேண்டும் எனத் தம் நெஞ்சுக்குக் குறிப்பாக அறிவுறுத்துகின்றார்.

உனக்கு—மணற்கீன்ற முளை என்பது போல நான் கனுருபு ஏழன் பொருளில் வந்த வேற்றுமை மயக்கம். விரைந்து வீடு பெறவேண்டுமென்று மனம் விரும்பு கிறது. ஆனால் வீடுபேற்றிற்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகிய மெய்யன்பு இல்லை என்பதாம். உண்மை அடியார்கள்

**" கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார் "**

(திருத்தொண்டர் புராணம்)

ஆதலின், அடிகள் இறைவனிடம் "உனக்கு இடையறு அன்பு என் ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்" என வேண்டுகிறார். மெய்யன்புள்வழி வீடுபேறு தானே எய்தும் என்பதாம். ஊடகத்து — அகத்தூடு என மாற்றுக. புகுந்திடுவான்—வான்ஈற்று வினையெச்சம்.

அன்பினால் உள்ளம் உருகுதலே வேண்டுகிறார் மணிவாசகர். உள்ளமும் அன்பும் இடமும் இடத்து நிகழ் பொருளுமாம். அன்பினால் உள்ளம் உருகினால் இறைவன் நெஞ்சில் நிற்பான்.

**"உள்ளம் உருகில் உடனாவ ரல்லது**
**தெள்ளஅரிய ரென் றுந்தீபற**
**சிற்பரச் செல்வரென் றுந்தீபற."**

**(திருவுந்தியார்)**

இக்கருத்துக்களை யெல்லாம் உள்ளடக்கி 'இடையறு அன்புனக்கு என் ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்' எனத் தம்மையாளுடைய நாயகனை அடிகள் வேண்டுகிறார். உண்மை அன்பினால் வீடுபேறு எய்தலாம்; பொய்வேடத் தானன்று என்பதாம்.

**12 யானேதும் பிறப் பஞ்சே**
**னிறப் பதனுக் கென்கடவேன்**
**வானேயும் பெறில் வேண்டேன்**
**மண்ணாள்வான் மதித்துமிரேன்**
**றேனேயும் மலர்க் கொன்றைச்**
**சிவனேயெம் பெருமானெம்**
**மானேயுன் னருள் பெறுநா**
**ளென்றென்றே வருந்துவனே.**

பதப்பிரிவு :

யான் ஏதும் பிறப்பு அஞ்சேன்
இறப்பதனுக்கு என் கடவேன்
வானேயும் பெறில் வேண்டேன்
மண் ஆள்வான் மதித்தும் இரேன்
தேன் ஏயும் மலர்க் கொன்றைச்
சிவனே எம்பெருமான் எம்
மானே உன் அருள் பெறும் நாள்
என்று என்றே வருந்துவனே

**பொழிப்புரை :**

யான் உலகில் வந்து பிறத்தலைச் சிறிதும் அஞ்சேன். இறப்பதற்கு (அஞ்சி) யாது செய்யத் தகுவேன்? (அது பற்றியும் அஞ்சேன்) மேலுலக இன்பத்தையே பெறினும் அதனை விரும்பேன்; நிலவுலகில் அரசாளுதலைப் பொருளாக எண்ணியதும் இல்லை. தேன் பொருந்திய கொன்றைப் பூவைச் சிறப்படையாளமாகக் கொண்ட பேரின்ப வடிவினனே! எம் தந்தையே! உன் திருவருள் கிடைக்கப்பெறும் நல்ல நாள் என்று வருமோ? எனவே கவல்கின்றேன்.

**விளக்கம் :**

பிறப்பினுற் பெறக்கூடிய எந்த இன்பத்தையும் விரும்பாது திருவருட்பேறு ஒன்றையே பெறுதல் காரணமாகப் பிறவிக் கடலுக்கு அஞ்சேன் எனவும், இறப்பினுற் பெறக்கூடிய எந்தப் பதவியையும் விரும்பாது வீடு பேற்றையே விழைதல் காரணமாக இறப்பதற்கும் கவலை கொள்ளேன் எனவும், எங்ஙனமும் இறைவன் ஆட்கொண்டருள்வான் எனும் நம்பிக்கையால் துணிந்துரைத்தார்.

"பிறப்பினோ டிறப்பு மஞ்சேன்"

(அச்சப்பத்து-5.)

மண்ணுலக வாழ்விலும் விண்ணுலக வாழ்விலும் இன்பம்பெற விழையும் நெஞ்சினுக்கு அவ்வின்பத்தை வெறுத்துத் திருவருட்பேறு விரைவிற் கைகூடும் நெறியிற் செல்லவேண்டுமெனக் குறிப்பால் அறிவுறுத்துகின்றார்.

அடிகளுக்கு இறைவன் திருவருட்பேறு ஒன்றிலேயே விருப்பம், வேறொன்றினும் அவாவின்மையின் அவாவினையேவிதையாகக் கொண்டு முளைக்கின்ற பிறப்பில்லை, பிறந்தன இறக்கும்; தோன்றியன மறையும்; ஆதலின்

பிறப்பினுக்கு அஞ்சவேண்டியதின்மையின், பிறப்பிருந்தால்தானே இறப்புண்டு; பிறப்பின்றி ஒழியவே இறப்புமின்மையின் இறப்பதனுக்கென் கடவேன் என்றார். அடிகள் விண்ணுலக வாழ்வும் விரும்பவில்லை; மண்ணரசினையும் மதிக்கவில்லை. ஆதலின் மறுமையில் மண்ணுலகப் பிறவியேயன்றி வானுலகப்பிறப்பும் இல்லையென்பதாம்.

'அருள் தந்திருக்க இரங்குங்கொலோ என்று, அழுமதுவேயன்றி மற்றென் செய்கேன்? பொன்னம்பலத்தரசே!' என்ற அருள் வாக்கின்படி திருவருளின் தேட்டமொன்றே அடிகளுக்கிருந்தது என்பதாம்.

**13 வருந்துவனின் மலர்ப்பாத**
**மவைகாண்பா னாயடியே**
**னிருந்துநல மலர்புனையே**
**னேத்தேனாத் தழும்பேறப்**
**பொருந்தியபொற் சிலைகுனித்தா**
**யருளமுதம் புரியாயேல்**
**வருந்துவனத் தமியேன்மற்**
**றென்னேநா னுமாறே.**

**பதப்பிரிவு :**

வருந்துவன் நின்மலர்ப் பாதம்
அவை காண்பான் நாய் அடியேன்
இருந்து நலமலர் புனையேன்
ஏத்தேன் நாத்தழும்பு ஏறப்
பொருந்திய பொன்சிலை குனித்தாய்
அருள் அமுதம் புரியாயேல்
வருந்துவன் அத்தமியேன் மற்று
என்னே நான் ஆம் ஆறே.

உரைநடை :

பொருந்திய பொன்சிலை குனித்தாய்! நாய் அடியேன் நின்மலர்ப் பாதம் அவை காண்பான் வருந்துவன்.

இருந்தும் நலமலர் புனையேன். நாத் தழும்பு ஏற ஏத்தேன். அருள் அமுதம் புரியாயேல் அத்தமியேன் வருந்துவன். மற்று நான் ஆம் ஆறு என்னே ?

**பொழிப்புரை:**

தக்கதாகிய மேரு மலையை வில்லாக வளைத்தவனே! நாய் போன்ற தொண்டனாகிய நான் உன்னுடைய செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைக் காணவேண்டு மென்று கவல்கின்றேன். ஆயினும், அமர்ந்திருந்து நல்ல பூக்களைத் தொடுத்து உனக்கு அணிந்து பூசனை புரியேன். என் நாவினில் வடுவுண்டாம் அளவு பல காலும் உன்னைப் புகழேன். என்றும் உள்ளதாம் நல் வாழ்வளிக்குந் திருவருளாகிய அருமருந்தை அடியே னுக்கு இரங்கி வழங்கவில்லையெனின் துயர் அடைவேன். அத்தகைய ஆதரவு அற்ற நான் கடைத் தேறும் வழி யாது?

**விளக்கம் :**

மலையை வில்லாக வளைத்தல் செயற்கரிய செயல்; திரிபுரங்களை அழிப்பதற்குப் பொன்மலையாகிய மேருவை இறைவன் வில்லாக வளைத்தான் என்பது புராணம். அத்தகைய ஆற்றலுடையான் திருவருள் புரிந்தால் மட்டுமே தமக்கு வீடுபேறு கிட்டும், அன்றெனின் துன்பமே என்பதை உணர்த்த மணிவாசகர் "சிலை குனித்தாய்! அருளமுதம் புரியாயேல் வருந்துவன்" என்றார். வருந்தி முயன்றும் தமது தொண்டு மிக இழிந்ததே எனக்கொள்ளும் தமது பணிவுடைமையை "வருந்துவன்......நாயடியேன்" என்பதிற் புலப்படுத்தி னார். "மலர்ப்பாதம் அவை"—இறைவன் திருவடிகள் தம் நெஞ்சினுக்கு மிகத் தொலைவிலுள்ளன என்பதை "அவை" என்பதால் உணர்த்தினார். "வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை" என்பதற்கு இணங்க, தமக்குக் கையும் நாவும் இருந்தும், மலர் புனைந்தும் விடாது ஏத்தியும்

வழிபாடு செய்தற்குத் தம் நெஞ்சு துணியவில்லை என்பதை "இருந்தும் மலர் புனையேன், ஏத்தேன் நாத் தழும்பேற" என்பதனுல் உணர்த்துகிருர். இக்கருத்திற் கிணங்க "வாயும் நெஞ்சும் கையும் பூவும் நீரும் குறைவற இருந்தும் வழிபாடாற்றேன்" எனவும் பொருள் கொள்ளலாம்.

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனுல் முனிவுண்பதே?"

சிவபூசை இருந்து செய்தல் வேண்டும் :

"சிவபூசை செய்யுங்கால் இருந்து செய்தல் வேண்டு மென்பது விதியா தொழியினும், இருந்து சிவபூசை செய்யற்பாற்று என்னும் பொதுவிதியால் எய்திற்றே யாம், ஒரோ வழி நின்று செய்தலுங் கூடுமாகலின், அவ்வழி இருந்து செய்தல் எய்தாமையானும், இருந்து செய்தல் விதியாக்கால் சிவபூசைச் சிறப்பு விதி எய்தாமையானும் அதனை வரையறுத்து எய்துவிப்பது நியமவிதியாம்."

(சிவஞானபாடியம்)

"அத்தமியேன்" என்புழிச் சுட்டு, மலர் புனையாமை யும், நாத்தழும் பேற ஏத்தாமையுமாகிய அந்நிலைமையை உணர்த்தும்."

(மு. க. செ.)

"துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி."

(குறள் 1299)

என்பதற்கொப்ப இறைவழி பாட்டிற்குத் தம் நெஞ்சு உ.றுதுணையாகவில்லை ஆதலின் 'தமியேன்" என்ருர். திருவருள் பெற்ருலன்றித் தாம் கடைத்தேறுதற்கு வழியொன்றும் இல்லை என்பதை உணர்த்த "என்னே நான் ஆமாறே" என்ருர். நற்றமியேன் எனப் பாடங்

கொள்ளின், (வருந்துவன்) நல் தமியேன் எனப் பிரித்து மிகுந்த தமியேன் எனப் பொருள் கொள்க.

புரிதல் — தானே விரும்பிக்கொடுத்தல். பொற்சிலை குனித்தாய் — பொன்சிலை குனித்தாய்; பொன்மலையாகிய மேரு மலையை வில்லாக வளைத்தாய்; முப்புரங்களை அழித்தற்கு மாமேரு மலையை வில்லாக வளைத்தாய். சிலை—வில், மலை.

'கல்லினுற் புரமூன்றெய்த கடவுளைக் காதலாலே
எல்லியும் பகலும் உள்ளே ஏகாந்தமாக ஏத்தும்'

(திருநாவுக்கரசர்: திருமுறை 4)

14 ஆமாறுன் றிருவடிக்கே
யகங்குழையே னன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் றிருக்கோவி
றூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே.

பதப்பிரிவு :

ஆம் ஆறு உன் திருஅடிக்கே
அகம் குழையேன் அன்பு உருகேன்
பூ மாலை புனைந்து ஏத்தேன்
புகழ்ந்து உரையேன் புத்தேளிர்
கோமான் நின் திருக் கோவில்
தூகேன் மெழுகேன் கூத்து ஆடேன்
சாம் ஆறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே.

உரைநடை :

புத்தேளிர் கோமான்! உன் திருவடிக்கே ஆமாறு அகம் குழையேன், அன்பு உருகேன், பூமாலை புனைந்து

ஏத்தேன், புகழ்ந்து உரையேன், நின் திருக்கோயில் தூகேன்; மெழுகேன், கூத்து ஆடேன். சதுராலே சார்வானே விரைகின்றேன் சாமாறே.

**பொழிப்புரை :**

தேவர்கட்கும் இறைவனே! அறிஞர் அறிவு ஆராய்ச்சியாலும் அநுபூதியாலும் தெளிந்து அறியப் படுபவனே! உன்னுடைய திருவடிகட்குத் தொண்டன் ஆகும் வகையில் நான் உள்ளங்கனியவில்லை, அன்பினால் உள்ளங் கசியவில்லை, மலர்மாலை அணிந்து உன்னைப் போற்றவில்லை, வாழ்த்திப் பாராட்டவில்லை. உனது தெய்வத்தன்மை வாய்ந்த கோவிலை அலகிட்டுத் தூய்மை செய்யமாட்டேன், சாணமிட்டுப் பூசமாட்டேன், (களிப்புக் கொண்டு) ஆனந்தக் கூத்து ஆடமாட்டேன். தொண்டாற்றாது வித்தகம் பேசி வீணே அழிகின்றேன்.

**விளக்கம் :**

இறைவன்பால் வயப்படுதற்கு மனம் கனிந்து கசிந்து பக்குவப்படவில்லை யாதலின் "அகங்குழையேன், அன்புருகேன்" என்றார். தம் மொழி இறைவனைப் போற்றியும் பாராட்டியும் பக்குவப்படவில்லை யாதலின் "ஏத்தேன், புகழ்ந்துரையேன்" என்றார். தம் மெய் திருக் கோவிலை அலகிட்டும் சாணமிட்டும் துப்புரவு செய்து ஒழுகாமையின் "தூகேன், மெழுகேன்" என்றார். மன மொழி மெய் இறைவன் வயப்பட்டமையின் உண்டாம் உவகை அகத்தில் நிறைந்து மெய்ம்மறந்து கிளர்ந்து ஆடும் நிலை ஏற்படாததால் உண்டாய வருத்தத்தைக் "கூத்தாடேன்" என்பதாற் புலப்படுத்தினார். இறை வனுக்குத் தொண்டாற்றாமல் தம் அறிவுத்திறத்தால் அவனை அடைதற்கு முற்படல் அழிவுக்கு வழியாகுமே யன்றி வேறில்லை என்பதைச் "சாமாறே விரைகின்றேன், சதுராலே சார்வன்" எனக் கூறினார். சதுர்—அறிவுத் திறம், அறிவு வகை, வித்தகம்.

''வித்தகம் பேசவேண்டா பணிசெய்ய வேண்டும் என்றார்.''

(திருத்தொண்டர் புராணம்)

*சதுரானே சார்வானே :*

"அறிஞர் ஆராய்ச்சி அறிவிற்கு நின் பொது இயல்பு அறிவித்து, அனுபூதியிற் காணும்படி அணைபவனே!" என, இவ்வடிகளுக்கு 'அருந்துயர்க் குரம்பையின் **ஆன்மா நாடிப்**, பெரும் பெயர்க் கடவுளிற் **கண்டு**' என வரும் சிவஞானபோதச் சிறப்புப் பாயிரப் பொருள் கோடல் சிறந்தது.

அகங் குழைந்து மனத்தினாலும், புகழ்ந்துரைத்து வாயினாலும், திருக்கோவில் அலகிட்டு மெழுகிக் கையினாலும் தொண்டு புரியாது அவமே சாதற்கே விரைகின்றேன் என்பது திரண்ட பொருள். இதனால்

'' நிலை பெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே! நீவா;
நித்தலும் எம்பிரானுடைய கோவில்புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடி ''

என அப்பரடிகள் செம்பொருளாகத் தம் நெஞ்சுக்கு உணர்த்தியதையே குறிப்பாக வாதவூரடிகள் தம் நெஞ்சுக்கு அறிவுறுத்துகின்றார்.

மெய்ப்பொருட் பற்றுக்கு ஏற்றன செய்யாமை கூறிப், பின் "சாமாறே விரைகின்றேன்" என மொழிந்தது கொண்டு பொய்ப் பொருட் பற்றுக்கு ஏற்பன செய்தமையும் பெறப்படும்.

ஆமாறு × சாமாறு; ஆகூழ் × போகூழ்.

ஏத்துதல் — பாடலால் துதித்தல்;

15 வானாகி மண்ணாகி
வளியாகி யொளியாகி
யூனாகி யுயிராகி
யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென்
றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
யென்சொல்லி வாழ்த்துவனே.

**பதப்பிரிவு :**

வான் ஆகி மண் ஆகி
வளி ஆகி ஒளி ஆகி
ஊன் ஆகி உயிர் ஆகி
உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோன் ஆகி யான் எனது
என்று அவர் அவரைக் கூத்து ஆட்டு
வான் ஆகி நின்றாயை
என் சொல்லி வாழ்த்துவனே.

**பொழிப்புரை :**

விசும்பு (விண், நீர்) வடிவுகொண்டும், நிலவடிவு கொண்டும், காற்று வடிவுகொண்டும், சுடர் (தீ, ஞாயிறு, திங்கள்) வடிவுகொண்டும், உடல் வடிவு கொண்டும், உயிர் (இயமானன்) வடிவுகொண்டும் நின்றாய். (அருட் கண்ணார்க்கு) உள் பொருளாகவும், (இருட் கண்ணார்க்கு) இல் பொருளாகவும் நின்றாய். யாவற்றுக்கும் தலைவன் ஆகி நான் என்றும் என்னுடையது என்றும் அகப்பற்றும் புறப்பற்றும் கொண்ட அவரவர்களை அவரவர் செய்த வினைக்கேற்ப ஆட்டுவிப்பவனாகியும் நின்ற உன்னை எவ்வகையான மொழி கூறிப் போற்றுவேன்?

விளக்கம்:

"வானாகி உயிராகி" என்பதன் பொருள்:

"இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியுங் காற்றுமாகி,
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய்
அட்டமூர்த்தியாகி"
(திருநாவுக்கரசர்)

என்பதில் விளங்கும். "இவ்வெண்வகைப் பொருள்களும் அல்லாமல் உலகம் என்பது ஒன்றில்லையாதலின், இஃது, எல்லாமாய் நிற்கும் இறைவனது வியாபக நிலையைக் கூறிய படியாம்."

(மு. க. செ.)

உண்டெனத் தாமே நம்புவார்க்கும், தம்மால் உணர்த்தப்படுவார்க்கும் உள்ளபொருளாகியும், இல்லையெனத் தாமே கொள்வார்க்கும் தம்மால் உணர்த்தப்படுவார்க்கும் இல்லாப்பொருளாகியும் இறைவன் இருத்தலின் "உண்மையுமா யின்மையுமாய்" என்றார் அடிகள்.

"அருக்கனேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன்–அருட் கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்தும் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்."

(சிவஞானபோதம்–உதாரண வெண்பா)

யாவர்க்கும் தலைவனாயிருந்து, யான் எனது என்னும் அவர்தம் பற்றுக் காரணமாக அவர் செய்யும் வினைகளுக்கு ஏற்ற பயன்களை நுகர்விக்கின்றான் என்பது விளங்கக் "கோனாகி யான் எனதென்று அவரவரைக் கூத்தாட்டு வானாகி" என்றார்.

மன மொழி மெய்களைக் கடந்தவனாகிய இறைவனை எவ்வண்ணம் போற்றுவது என மயங்கிய தம்

நெஞ்சுக்கு இயலும் வகையில் அவன் இயல்பு உணர்ந்து அவனைப் போற்றலாம் என்ற குறிப்பை "என் சொல்லி வாழ்த்துவனே" என்பதனால் அறிவுறுத்தினார்.

"உலகெலாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா உயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவு சீர் அமலனாகி நின்றனன் நீங்கா தெங்கும்"

என்ற சிவஞான சித்தியார், திருவிருத்தப் பொருளின்படி உலகுயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் இறைவன் இயல்பு இப்பாட்டில் விளங்குதல் காண்க.

.............உயிராகி என்றதனால் ஒன்றாதலும், உண்மையுமாய் இன்மையுமாய் என்றதனால் வேறாதலும், கூத்தாட்டுவானாகி என்றதனால் உடனாதலும் கூறினார். இம்மூவியல்பில் எவ்வியல்பைச் சொல்லி வாழ்த்துவேன்? என்பது கருத்து. இறைவன் வான் முதலிய ஐம்பூதங்களாகவும், ஞாயிறு திங்களாகிய இரு சுடராகவும், உயிராகவும் நிற்கிறான்.

"நிலம் நீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப் பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்"

(திருவாசகம் : திருத்தோணோக்கம்)

ஒளி — மூச்சுடர் — ஞாயிறு, திங்கள், தீ.

16 வாழ்த்துவதும் வானவர்க
டாம்வாழ்வான் மனநின்பாற்
றாழ்த்துவதுந் தாமுயர்ந்து
தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந்
தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
யானுமுனைப் பரவுவனே.

**பதப்பிரிவு :**

வாழ்த்துவதும் வானவர்கள்
தாம் வாழ்வான் மனம் நின்பால்
தாழ்த்துவதும் தாம் உயர்ந்து
தம்மை எல்லாம் தொழ வேண்டி
சூழ்த்து மதுகரம் முரலும்
தாரோயை, நாய் அடியேன்
பாழ்த்த பிறப்பு அறுத்திடுவான்
யானும் உன்னைப் பரவுவனே.

**உரை நடை :**

மதுகரம் சூழ்ந்து முரலும் தாரோயை வானவர்கள் வாழ்த்துவது தாம் (நெடுங்காலம் இன்பமாக) வாழ்வான், மனம் நின்பால் தாழ்த்துவது தாம் உயர்ந்து எல்லாந் தம்மைத் தொழ வேண்டி, நாயடியேன் யானும் பாழ்த்த பிறப்பு அறுத்திடுவான் உன்னைப் பரவுவனே.

**பொழிப்புரை :**

தேன் வண்டுகள் மொய்த்துச் சுற்றி வந்து இசைக்குங் (கொன்றை மலர்) மாலை அணிந்த உன்னைத் தேவர்கள் போற்றுதல் தாம் (இன்புற்று நீண்ட காலம்) உயிர் பிழைத்திருப்பதற்காகவே; தம் உள்ளத்தை உன்னிடம் பணியச் செய்வது தாம் மேன்மையடைந்து எல்லா உயிர்களும் தம்மை வழிபடுதலை விரும்பியே. நாய் போலும் கீழ்ப்பட்டவனாகிய நானும் பயனற்ற இப் பிறவியை ஒழிப்பதற்காகவே உன்னைத் தொழுவேன்.

**விளக்கம் :**

தேவர்கள் இறைவனை வழிபடுவது தமது வான் வாழ்வை வளப்படுத்துவதற்காக; அவர்கள் இறைவனைப் பணிதல் தம் வாழ்வில் உயர்வு பெறுவதற்காக. ஆனால் அடிகளார் இறைவனை வழிபடுதல் அத்தகைய

வாழ்வுக்கும் உயர்வுக்கும் அன்று; பயனற்ற பிறப்பை அறுத்து வீட்டை அடைவதற்காகவே என்றருளிச் செய்கின்றார். வினையீட்டுதற்கு ஏதுவாம் பிறப்பினையும், விண்ணுலக வாழ்வின் உயர் பதவிகளையும் தாம் வேண்டாமையை அடிகளார்,

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" எனவும்,
"போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்"

எனவும் விளக்கமாகக் கூறியுள்ளார்.

(திருச்சதகம் 2 திருச்சதகம் 72)

சூழ்ந்து என்பது எதுகை நோக்கிச் சூழ்த்து என வல்லின விகாரம் பெற்றது.

'உயர' எனும் செய என் எச்சம் உயர்ந்து எனச் செய்து என் எச்சமாகத் திரிந்தது.

ஏனையோர் தமைப்பணியுமாறு வானவர் இறைவனைப் பணிகிறார்கள்.

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
வேண்டின்அஃ தொன்றுமே வேண்டுவது."

என்ற திருக்களிற்றுபடியார்ச் செய்யுளுக்கிணங்க அடிகள் பிறவாமை யொன்றினையே வேண்டுகிறார்.

பூசைக்கு முன் செய்து கொள்ளவேண்டிய சங்கற்பம் உணர்த்துவது இப்பாட்டு. பூசையின் நோக்கம் பிறவாமையை வேண்டுதலே.

பூசையும் பிறவாமையை யளிக்கும் :—

"சேவார் பெருமான் திருக்குளத்தூர் சேரப்பெற்றேன் திருப்புகழை
நாவால் வாழ்த்தக் கைகுவிக்க மனத்தான் நினைக்க நறுந்தேனார்
பூவால் நீரால் அனுதினமும் போற்றப்பெற்றேன் ஆங்கவனும்
ஆவா எனவந் தாண்டருளப் பெற்றேன் பிறவியற்றேனே."

(குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி,
சிவஞானமுனிவர்பெருமான்)

மதுகரம் — வண்டு. மது — தேன், கரம் — செய்வது. யானும் என்பதில் உள்ள உம்மை இறந்தது தழீஇயிற்று.

17 பரவுவா ரிமையோர்கள்
பாடுவன நால்வேதங்
குரவுவார் குழன்மடவாள்
கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பி
னடியார்கண் மேன்மேலுன்
னரவுவார் கழலிணைகள்
காண்பாரோ வரியானே.

**பதப்பிரிவு :**

பரவுவார் இமையோர்கள்
பாடுவன நால் வேதம்
குரவுவார் குழல் மடவாள்
கூறு உடையாள் ஒரு பாகம்
விரவுவார் மெய் அன்பின்
அடியார்கள் மேல்மேல் உன்
அரவுவார் கழல் இணைகள்
காண்பாரோ அரியானே.

*உரைநடை :*

அரியானே! இமையோர்கள் பரவுவார், நால் வேதம் பாடுவன; குரவு (அணிந்த) வார் குழலுடைய மடவாள் ஒரு பாகம் கூறு உடையாள்; மெய் அன்பின் அடியார்கள் விரவுவார் (அவரெல்லாம்) உன் அரவு வார் கழல் இணைகள் மேலும் மேலும் காண்பாரோ?

**பொழிப்புரை :**

வாக்கு மனங்களாலாகிய பாசஞான பசுஞானக் காட்சிக்கு எட்டாதவனே! தேவர்கள் உன்னை முன்னிலைப்படுத்திப் பாராட்டுவர்; நான்கு மறைகளும்

(படர்க்கைப்படுத்திப்) பாராட்டுவன; குரவம் பூவை அணிந்த நீண்ட கூந்தலையுடைய இளமையளாகிய இறைவி நின் இடப்பாகத்தைத் தனக்குப் பங்காகக் கொண்டிருக்கிறாள். உண்மையான அன்பினைக்கொண்ட தொண்டர்கள் உன்னோடு இரண்டற ஒன்றித்துக் கலந் திருப்பர். ஒலி பொருந்திய நெடிய ஞான வீரக் கழல்கள் அணிந்த உன் இரண்டு திருவடியை இவர் எல்லோரும் மேலும் மேலும் காண்பாரோ? (இமையோர் காணார்; நால் வேதமும் காணா; மெய்யன்பின் அடியார் விரவிக் கண்டு இன்புறுவர்; அவர்க்கு உமையம்மை துணை செய்வாள்.)

**விளக்கம் :**

"பரவுவார்; பாடுவன," என்பதற்கு உரைமுறை யிற் பாராட்டுவார், பாடல்முறையிற் பாராட்டுவன எனவுங்கொள்வர். "மேன் மேல்............ காண்பாரோ அரியானே!" என்றமையால் இறைவன் திருவருளின் துணைகொண்டு மக்கள் தம் இயல்புக்கும் தகுதிக்கும் ஏற்பக் காணக்கூடுமே யன்றிக் கடவுள் காட்சிக்கு அரிய பொருளே என்பதைப் புலப்படுத்தினார் அடிகளார். காணுதல் — தலைப்பட்டுணர்தல், நுகர்தல். இறைவன் திருவடியினை அத்துவிதமாய்க் கலந்தவர்கள் மேலும் மேலும் புதிது புதிதாக விளைகின்ற பேரின்பந்துய்ப்பர் என்பதாம். காண்டல் — நுகர்தல். 'அறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள் சைவ உபநிடதங்களினும் சிவாகமங்களினும் அங்கியமின்றி நின்றுணரும் அநுபவ மாத்திரையின் அறிந்து நுகரப்படுவது.'

(சிவஞானபாடியம் சூ. 6. அதிகரணம் 2)

இமையோரும் நால்வேதங்களும் காண்பாரோ? மெய்யன்பின் அடியார்கள் விரவிக் கலப்பர் எனவும் பொருள் கூறலாம். குராமலர் பாலைத்திணைக்கு உரியது. பாலைக்குத் தெய்வம் சத்தியின் ஒரு கூறான கொற்றவை.

ஆதலின் குரா சத்தியாகிய உமைமடவாளுக்குரிய மலராயிற்று.

**18 அரியானே யாவர்க்கு**
**மம்பரவா வம்பலத்தெம்**
**பெரியானே சிறியேனை**
**யாட்கொண்ட பெய் கழற்கீழ்**
**விரையார்ந்த மலர்தூவேன்**
**வியந்தலறேன் நயந்துருகேன்**
**றரியேனு னுமாறென்**
**சாவேனுன் சாவேனே.**

**பதப்பிரிவு :**

அரியானே யாவர்க்கும்
அம்பரவா அம்பலத்து எம்
பெரியானே சிறியேனை
ஆட் கொண்ட பெய் கழல் கீழ்
விரை ஆர்ந்த மலர் தூவேன்
வியந்து அலறேன் நயந்து உருகேன்
தரியேன் நான் ஆம் ஆறு என்
சாவேன் நான் சாவேனே.

**பொழிப்புரை :**

எத்தகையார்க்கும் அவர்தம் அறிவுக்கு எட்டாது கடந்தவனே! (ஞானமயமான) பரவெளியில் விளங்கு பவனே! மன்றுள் திருக்கூத்தாடும் எமது மேலோனே! கீழ்மையுடைய என்னை அடிமையாக ஏற்றருளிய மாணிக்கம் முதலிய பரல்கள் இட்ட கழல் அணிந்த திருவடிகளின் மீது நான் நறுமணம் நிறைந்த பூக்களை யிட்டு வழிபடேன், என்னை ஆட்கொண்டருளிய கருணைத் திறனை எண்ணி எண்ணி வியப்பு மிகுந்து கூக்குரல் இடேன். உன்னை விரும்பி மனம் நெகிழேன். நான் கடைத்தேறும் வழி யாதோ? இவ்வுலகில் வாழேன்; நான் மாள்வேன், மாள்வேன்.

**விளக்கம்:**

"அரியானே யாவர்க்கும்"

என்பதை அடிகளார்

"பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார்
யாராலும் காண்டற் கரியான்"

(திருவம்மானை)

என்பதனால் விளக்குகிறார்.

அம்பரம்—ஞான நுண்வெளி; இதனைச் சிதாகாசம் எனவும், தகராகாசம் எனவும் பரவெளி எனவுங் கூறுவர். இறைவன் இந்நுண்ணிய பரவெளியிற் சூக்குமமாக விளங்குந் தன்னை எல்லோரும் கண்டு கும்பிட்டு உய்யவேண்டும் என்னும் கருணை காரணமாக அம்பரமாகிய பொதுப் பெருவெளியில் நின்று, மேள தாளங்களுடன் அருட்கூத்தியற்றும் இயல்பைக் குறித்தே "அம்பரவா! அம்பலத் தெம் பெரியானே!" என்றார். தேடிக்காண்டற்கு அரிய நிலை அம்பரத்திலும், எளியநிலை அம்பலத்திலும் தோன்றுவன என்பது வேறு பட உணரத்தக்கது. "பெரியானே சிறியேனை" என்பது "யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடையான், யாவருக்குங் கீழாம் அடியேனை" (திருவெண்பா–8) என்பதனால் விளங்கும். "இறைவன் தன் திருவடியைக் காட்டி அன்பரை ஆட்கொள்வானாயினும், ஆட்படும் அன்பர்க்குப் பற்றுக்கோடாக இருப்பது அத்திருவடியே. ஆதலின், ஈண்டு அதனை வினைமுதலாக்கி "ஆட் கொண்ட பெய்கழல் என்றார்." (மு. க. செ.)

தூவுதல்—மென்மையாகப் பெய்தல், தூவுதல், அலறுதல், உருகுதல் இம் மூன்று செயல்களும் முறையே மெய், மொழி, மனம் ஆகிய முக்கரணங்களாலும் நிகழ்வனமாம்.

என்?—எவன் என்னும் வினாவினைக் குறிப்புமுற்று என் என்றாகி, ஈண்டு இன்மை குறித்து நின்றது.

"கற்றதனுலாய பயனென்" என்பது போல. சாவேனே ஏகாரம் தேற்றம். அம்பரம் வெட்டவெளி யென்றுங் கூறப்பெறும்.

> "பண்ணுர் பதிகத் திருக்கடைக் காப்புப்பரவி
> உண்ணுடும் என்பும் உயிருங் கரைந்துருக்கும்
> விண்ணுயகன் கூத்து வெட்டவெளியே திளைத்துக்
> கண்ணுரமுதுண்டார் காலம்பெற அழுதார்."

(திருத்தொண்டர் புராணம்
திருஞானசம்பந்தர் புராணம் 163)

**19 வேனில்வேண் மலர்க்கணைக்கும்**
**வெண்ணகைச் செவ் வாய்க்கரிய**
**பானலார் கண்ணியர்க்கும்**
**பதைத்துருகும் பாழ் நெஞ்சே**
**ஊனெலா நின்றுருகப்**
**புகுந்தாண்டா னின்று போய்**
**வானுளான் காணுய் நீ**
**மாளா வாழ்கின்ருயே.**

**பதப்பிரிவு:**

வேனில் வேள் மலர்க் கணைக்கும்
வெண் நகைச் செவ்வாய்க் கரிய
பானல் ஆர் கண்ணியர்க்கும்
பதைத்து உருகும் பாழ் நெஞ்சே
ஊன் எலாம் நின்று உருகப்
புகுந்து ஆண்டான் இன்று போய்
வான் உளான் காணுய் நீ
மாளா வாழ்கின்ருயே.

**பொழிப்புரை :**

இளவேனிற் காலத்தை விரும்பும் மன்மதன் எய்யும் அம்புக்கும், வெள்ளை நிறமான பற்களையும் சிவப்பு நிறமான வாயையும் கருமை நிறமான குவளை மலர் போலும் கண்களையும் உடைய பெண்களுக்கும் துடித்

துக் கசிகின்ற பயனற்ற என் உள்ளமே! உடல் முழுதும் இளகும்படி நுழைந்து அமர்ந்து அடிமையாகக் கொண்ட இறைவன் இப்போது அகன்று எழுந்து பரவெளியில் தங்கியிருக்கின்றான். இதை நீ அறிவாயாக; அவனைக் கண்டு கூடாமல் வாழ்வதைவிட இறத்தலே நன்று நீ சாவாது இருக்கின்றாயே!

**விளக்கம்.**

வேள் என்ற சொல் செவ்வேளாகிய முருகனையுங் குறிக்கும். இளவேனிற் காலம் மன்மதனுக்குரிய காலம். ஈண்டு வேனில்வேள் என்னும் அடையால் மன்மதன் என்பது விளங்கிற்று.

கரிய பானல் என்றதில் "கரிய" இனம் விலக்கிய அடைமொழி. ஆர், போல என உவமைப் பொருள் தந்தது. "மலர்க் கணைக்குப் பதைத்துக் கண்ணியர்க்கு உருகும்" என நிரனிறையாகப் பொருள்கொள்ளுதல் சிறப்பு. "இறைவன் பொருட்டு மேற்கொள்ளத்தக்க பதைத்தலையும் உருகுதலையும் இழிந்த காமங் கருதி மேற்கொள்ளுதல் மிக்க தீங்கு பயக்குமாதலின் அந் நெறியிற் செல்லும் நெஞ்சத்தை வெறுத்துப் "பாழ் நெஞ்சே" என்றார்.

கணை — பால் பகா அஃறிணைப் பெயர்.

ஆட்கொண்ட அருள் நாயகன் பிரிவினை ஆற்றாது வருந்தி மாள்தலேயன்றி வாழ்தல் அன்பற்ற பாழ் நெஞ்சின் செயலாகும் என்பதாம்.

20 வாழ்கின்றாய் வாழாத
நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றா யாழாமற்
காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச்
சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக்
கடலாய வெள்ளத்தே.

பதப்பிரிவு :

வாழ்கின்றாய் வாழாத
　　நெஞ்சமே வல்வினைப் பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமல்
　　காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடு உனக்குச்
　　சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீ அவலக்
　　கடல் ஆய வெள்ளத்தே.

உரைநடை :

வாழாத நெஞ்சமே! வாழ்கின்றாய்; வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்; ஆழாமற் காப்பானை ஏத்தாது உனக்குக் கேடு சூழ்கின்றாய்; பல்காலும் சொல்கின்றேன்; அவலக் கடலாய வெள்ளத்தே நீ வீழ்கின்றாய்.

பொழிப்புரை :

மெய்ப்பொருளை உணர்ந்து கடைப்பிடிக்கும் ஒழுக்கத்தில் நில்லாத என் உள்ளமே! நீ உண்மையில் வாழ்கின்றாயா? இல்லையே. கொடிய தீவினைக் கடலுள் வீழ்ந்து முழுகிக் கீழே செல்கின்றாய். அதில் மூழ்கிப் போகாமல் கரையேற்றிப் பாதுகாப்பவனாகிய இறைவனைப் புகழ்ந்து பாராட்டாமல் உனக்கு அழிவை நாடிக்கொள்கின்றாய். இவ்வுண்மையை உனக்குப் பல முறையும் இடித்துரைத்து வருகின்றேன். எனினும் நீ துன்பக் கடலாகிய நீர்ப்பெருக்கிடை வீழ்ந்து ஆழவே செய்கின்றாய்! (இஃது எவ்வளவு இரங்கத்தக்கது !)

—21.

**விளக்கம் :-**

பேரின்பத்தை நாடி எழுந்து உய்தற்கும் சிற்றின்பத்தில் அழுந்திக் கெடுதற்கும் நெஞ்சே கருவியாகும். ஆகவே தம் நெஞ்சு தாம் விரும்பும் வாழ்க்கைக்குப் பயன்படாமை குறித்து "வாழாத நெஞ்சமே" என்றும், தீமை செய்தற்கு முற்படுதல் குறித்து "மாளாது வாழ்கின்றாய்" என்றும் இரங்கிக் கூறினார் அடிகள்.

வல்வினை—வலிய தீவினை.

**"வல்வினை வளைத்த கோலை மன்னவன்**
**செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது"**

*(சிலப்பதிகாரம், காட்சிக்காதை 98-99)*

உனக்கு—இடைநிலை விளக்கு; உனக்குக் கேடு சூழ்கின்றாய்; உனக்குச் சொல்கின்றேன்.

[மேலே கண்ட பத்துப் பாடல்களும் தரவு கொச்சகக் கலிப்பா என்ற செய்யுள் வகைப்படுவன.]

---

## 3. சுட்டறுத்தல்

சுட்டு+அறுத்தல்=சுட்டறுத்தல்; சுட்டை ஒழித்தல். சுட்டு—சுட்டி அறிதல். இஃது இத்தன்மையுடைய மண்; அஃது அத்தன்மையுடைய விண் எனப் பொருள்களை ஒவ்வொன்றாக அறியும் அறிவு. இஃது ஒன்றை அறியும் போது பிறவற்றை அறியாமையால் ஏகதேச அறிவு எனப்படும். இவ் வேகதேச அறிவு நீங்கினாலன்றி முதற் பொருளை உணரும் வியாபக உணர்வாகிய மெய்யுணர்வு விளங்காது. சுட்டறிவைக் கழித்துக் கொள்ளும் உபாயம் இப்பகுதியிற் கூறப் பெறுகிறது.

" உள்ளும் புறம்பும் நினைப்பறில் உன்னுள்ளே
மொள்ளா அமுதாம்என் றுந்தீபற
முளையாது பந்தம்என் றுந்தீபற "

(திருஉந்தியார் 26)

அகத்தும் புறத்தும் சுட்டும் நிலையற்றால் முதல்வன் பேரின்பப் பொருளாய் விளங்குவான். சுட்டறிவு—ஆன்ம போதம், வியாபக உணர்வு—மெய் யுணர்வு—சிவபோதம். சுட்டறிவால் அறியப்படுவன எல்லாம் அழியும் இயல்பின.

" அசத்தாஞ் சுட்டியுணர் பொருளான எல்லாம் "

(சிவஞான சித்தியார்)

ஐம்பொறிகளாகிய கருவிகளோடு கூடாது, திருவருளோடு கூடி உணரும் வியாபக அறிவாகிய மெய்யுணர்வில் விளங்குபவன் பரம்பொருளாகிய சிவ பெருமான். சுட்டியுணர்தலையொழித்து இறைவன் புலனு மாறு மெய்யுணர்வில் நிலைபெறுதலைக் கூறுவது இப் பதிகம்.

"அசத்தின் வயப்பட்டு நின்று சுட்டியறிந்து வந்தாநீ அதனை யொழிந்து அங்ஙனந் தோன்றிய சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால் அப்புணர்ச்சி யானே சுட்டுணர்வாகிய அப் பொதுஇயல்பு நின்னை விட்டு நீங்கும் "

(சிற்றுரை சூத்திரம் 9, அதி. 2
சிவஞான முனிவர் பெருமான்)

*எண்சீர் ஆசிரிய விருத்தம்*

21 வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறு புனலிற் கீழ்மே லாகப்
பதைத் துருகுமவர் நிற்க, வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே.

*பதப்பிரிவு:*

வெள்ளம் தாழ் விரி சடையாய்! விடையாய்! விண்ணோர்
பெருமானே! எனக் கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளம் தாழ் உறு புனலின் கீழ் மேல் ஆகப்
பதைத்து உருகும் அவர் நிற்க, என்னை ஆண்டாய்க்கு
உள்ளந் தாள் நின்று உச்சி அளவும் நெஞ்சாய்
உருகாதால், உடம்பு எல்லாம் கண்ணாய், அண்ணா,
வெள்ளம் தான் பாயாதால்; நெஞ்சம் கல் ஆம்;
கண் இணையும் மரம் ஆம்;தீ வினையினேற்கே.

உரைநடை :

"வெள்ளம் தாழ் விரி சடையாய்! விடையாய்! விண்ணோர் பெருமானே!" எனக் (கூறக்) கேட்டு வேட்ட நெஞ்சாய், பள்ளத்தில் தாழும் உறுபுனலின் கீழ் மேல் ஆகப் பதைத்து உருகும் (மெய்யன்பராம்) அவர்கள் (ஒருபுறம்) நிற்க, என்னை ஆண்டாய்க்கு உள்ளந்தாள் நின்று உச்சி அளவும் நெஞ்சாய் உருகாதால்; உடம்பு எல்லாம் கண்ணாய் வெள்ளம் பாயாதால்; அண்ணா!

தீவினையினேற்கு ( அங்ஙனம் உருகாத ) நெஞ்சம் கல் ஆம். ( அங்ஙனம் கண்ணீர் வெள்ளம் பாயாத ) கண் இணையும் மரம் ஆம். ( என் செய்வேன்? )

பொழிப்புரை :

"கங்கை நீர்ப்பெருக்கு அடங்கிய பரந்த சடை முடியையுடைய சிவபெருமானே! காளையை ஊர்தியாகக் கொண்டு நடத்துபவனே! அதனைக்கொடியாகவும் உடையவனே! தேவர்கட்குத் தலைவனே!" என்று கூறி அன்பர்கள் இறைவனை விளித்தனராக, அப்பெயர்களைத் தம் செவியில் ஏற்று உடனே விழைவு மிகுந்த உள்ளத்தினராய் மேட்டிலிருந்து பள்ளத்தில் விரைந்து பாயும் பெருவெள்ளம்போல் புரளத் துடிதுடித்துக் கசியும் மெய்யன்பர் நின் அருளே நோக்கி ஒரு பக்கம் நிற்கவும் (அத்தகுதி உடையார்க்கு அருள்புரியாது) என்னை அடிமையாகக் கொண்ட உன் பொருட்டு உள்ளங்கால் முதல் முடித்தலை வரையும் உள்ளமாகிக் கசியாதிருக்கிறதே; உடம்பின் புறம் முழுவதும் கண்களாகிக் கண்ணீர் பெருகாமலிருக்கிறதே; ஐயனே! பாவ மிகுதி உடைய எனக்கு அவ்வுருக்கம் இல்லாமையின் உள்ளம் கல்லைப்போன்றதாகும், கண்கள் இரண்டும் கண்ணீர் வடிக்காமையின் மரம் போன்றன ஆகும்.

விளக்கம் .

வெள்ளம் தாழ்தல் அடங்குதலாகும். விரிந்த சடையின் ஒரு பாகத்து வெள்ளமெல்லாம் ஏற்று அடங்கச் செய்தது இறைவனது பேராற்றலைக் குறிக்கும். விடை அறத்தின் வடிவம். அதனை ஊர்தியாகவும் கொடியாகவும் கொண்டது உலகை முறை செய்து காப்பாற்றும் தலைமையினையும் பேரருளினையும் குறிக்கும். 'எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்' – இறைவன் பெயர் கேட்ட அளவில் நெஞ்சம் வேட்கை மிக்கதாயிற்று எனத் தலையன்பு உண்மை கூறப்பெற்றது. நெஞ்சின் உருக்க

மிகுதியால் உடல் முழுவதும் குழையும். ஆதலின் "உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாயுருகாது" என்றார். உள்ளத்தின் அன்புப்பெருக்கம் கண்ணீரைப் பெருக்கும்; ஆதலால் உடம்பெல்லாம் கண்ணாய் வெள்ளந்தான் பாயாதால் என்றார். பேரன்பர்கள் இருப்பவும், அவ்வன்பில்லாத தம்மை முதல்வன் ஆட்கொண்ட கருணையைக் கண்ட பின்னும், இவை தம் பால் நிகழாமையின் 'நெஞ்சம் கல்லாம், கண்ணிணையும் மரமாம்' என்றார். அவ்வாறு அன்பு நிகழாமைக்குக் காரணம் முன் செய்த வல்வினையே என்பார் "தீவினையினேற்கு" என்றார். உறுபுனல் – உரிச் சொற்றொடர்; மிகுந்த வெள்ளம். பேரன்பு ஒன்றே சுட்டறிவை நீக்கி வியாபக மெய்யுணர்வைப் பயப்பது; அப்பேரன்பை வேண்டி யிரங்கினமையின் இப்பாட்டுச் சுட்டறுத்தலைக் கருதியதாயிற்று,

> அவிழ இருக்கும் அறிவுடை யார்கட்கு
> அவிழும் இவ்வல்லல் என் றுந்தீபற
> அன்றி அவிழாதென் றுந்தீபற."

(திருவுந்தியார்–27)

## கங்கை வெள்ளந் தாழ்ந்த வரலாறு

பகீரதனின் முன்னோர் கபிலமுனிவர் கோபத்தீயால் எரிந்து நீறாயினர். அவர்களை நற்கதியிற் சேர்க்க அவர்களது சாம்பலைக் கங்கை நீரிற் கரைக்க விரும்பினான் பகீரதன். அவன் பரமசிவனை நோக்கி நெடுந்தவம் புரிந்து கங்கையைப் பூவுலகிற்கு வரச் செய்தான். கங்கை மிகுந்த வேகத்தோடு வரவே அதனைத் தாங்கிக் கொள்ளும்படி சிவபெருமானை வேண்டினான். சிவபெருமான் கங்கையைத் தன் சடைமுடியில் ஏற்றுக் கொண்டு துளிகளாக நிலத்தில் வரச் செய்தான்.

22 வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போது நான் வினைக்கேட னென்பாய் போல
வினையனு னென்றுன்னை யறிவித் தென்னை
யாட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை
யனையநான் பாடேனின் றாடே னந்தோ
வலறிடே னுலறிடே னாவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயி னானே.

**பதப்பிரிவு :**

*வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று*
*'போது நான் வினைக் கேடன்' என்பாய் போல*
*'இனையன் நான்' என்று உன்னை அறிவித்து, என்னை*
*ஆட் கொண்டு, எம்பிரான் ஆனாய்க்கு, இரும்பின் பாவை*
*அனைய நான் பாடேன்; நின்று ஆடேன்; அந்தோ*
*அலறிடேன்; உலறிடேன்; ஆவி சோரேன்;*
*முனைவனே முறையோ நான் ஆனஆறு*
*முடிவு அறியேன், முதல் அந்தம் ஆயினானே.*

**பொழிப்புரை :**

*எல்லாவற்றுக்கும் முன் உள்ளவனே! யாவும் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் காரணம் ஆனவனே! முன்னைவினைப்பயன் நுகர்ச்சியில் பின்னை வினை விளைவதாய் வரும் வினைத்தொடர்பில் அகப் பட்டிருந்த என்னகம் வந்து தங்கி, "வருக, நான் வினையை ஒழிப்பவன்" எனக் கூறுவாய் போல "நான் இவ்வியல்பினன்" என்று உன்னை எனக்கு உணர்த்தி என்னை உனது அடிமையாக்கி எங்கள் தலைவனாகிய உன்னை இரும்பினாற் செய்யப்பட்ட பொம்மையை ஒத்த நான் பாடமாட்டேன்; களிப்பு மிகக்கொண்டு நின்று ஆடேன்; ஐயோ! அழுது அரற்றமாட்டேன்; வாடிப் போகேன்; உயிர் தளர்கிலேன். நான் இங்ஙனம் ஆன முறை தக்கதாகுமா? இதன் விளைவு என்னவாக முடியுமோ எனக்குத் தெரியவில்லை.*

**விளக்கம்**

இறைவனருளானன்றி உயிர் இருவினைப் பாசத்தினின்று நீங்குதலரிது என்பது உணர்த்துவார், 'புகுந்து நின்று' என்றார். பிணியினால் வருந்துவோன் எழும் ஆற்றலின்றிக் கிடப்பவன்போல் உயிர் வினைப்பிணிப்பிற் செயலற்றுக் கிடக்கும். இறைவன் வினைநோய் மருத்துவனாகத் தானே வந்து தன் இயல்பைக் குறிப்பாக உணர்த்தி ஆட்கொள்வான் என அவனது பேரருளின் திறத்தை இப்பாட்டில் அடிகள் எடுத்துக் காட்டுகிறார்.

'' **வினைக்கேடன் என்பாய் போல உன்னை அறிவித்து** ''

என்பதிலிருந்து இறைவன் தன் இயல்பை வாக்கானன்றி நோக்கானறிவுறுத்தினான் என்பதாம். ஆனாய்க்கு-நான்கனுருபு பொருட்டுப் பொருளிலும் தகுதிப் பொருளிலும் வந்தது. அலறிடு, உலறிடு, பகுதி. இவ்வளவு பெருங் கருணையாளனுக்கு அடியேன் செய்யத் தக்கனவற்றைச் செய்திலேன் என்பதாம். முதல் அந்தமாயினான் — முதலும் அந்தமும் ஆயினான்; உம்மைத் தொகை. போதும் நான் வினைக்கேடன் எனப்பிரித்து, போதும்—நாம் போவோம், எனவும் பொருள் கூறலாம்.

எனக்கு முயற்சி இன்றாகவும் பேரருளால் உள்ளம் புகுந்து குறிப்பாகவும் வெளிப்படையாகவும் தன்னை அறிவித்து ஆண்ட பின்னும் என் கடமைகளைச் செய்யாதிருக்கின்றமையின், இனி எனக்கு முடிவது ஏதோ என அடிகள் இரங்கிக் கூறியபடி.

23 **ஆயநான் மறையவனு நீயே யாத**
**லறிந்தியான் யாவரினுங் கடைய னாய**
**நாயினே னாதலையு நோக்கிக் கண்டு**
**நாதனே நானுனக்கோ ரன்ப னென்பே**
**னாயினே னாதலா லாண்டு கொண்டா**
**யடியார்தா மில்லையே யன்றி மற்றோர்**
**பேயனே னிதுதானின் பெருமை யன்றே**
**யெம்பெருமா னென்சொல்லிப் பேசு கேனே.**

பதப்பிரிவு :

ஆயநான் மறையவனும் நீயே ஆதல்
அறிந்துயான் யாவரினும் கடையன் ஆய
நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டு
நாதனே நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன்
ஆயினேன்; ஆதலால் ஆண்டு கொண்டாய்;
அடியார் தாம் இல்லையே அன்றி மற்று ஓர்
பேயனேன் இது தான் நின் பெருமை அன்றே
எம் பெருமான் என் சொல்லிப் பேசுகேனே.

உரை நடை :

நாதனே! ஆய நான் மறையவனும் நீயே ஆதலை அறிந்தும் யாவரினும் கடையன் ஆய நாயினேன் யானே ஆதலை நோக்கிக் கண்டும் நான் உனக்கு ஓர் அன்பன் என்பேன் ஆயினேன். ஆதலால் ஆண்டு கொண்டாய்; என்னை அன்றி மற்றோர் அடியார் தாம் இல்லையே; நான் பேயனேன்; இதுதான் நின்பெருமை அன்றே! எம் பெருமானை என் சொல்லிப் பேசுகேனே?

பொழிப்புரை :

தலைவனே! தோன்றியுள்ள நான்கு மறைகட்கும் தலைவன் உன்னைத் தவிர வேறில்லை என்பதைத் தெரிந்தும், எல்லாரினும் கீழ்ப்பட்டவன் ஆகியவனும் வீணே அலைந்து திரியும் நாய் போன்றவனும் நானே ஆகுந் தன்மையும் ஆராய்ந்து பார்த்து அறிந்தும் நான் 'உனக்கு ஒரு சிறந்த அன்பன் எனச் சொல்லுபவன் ஆனேன். ஆதலால் என்னை உன் அடிமையாக்கி வைத்துள்ளாய். என்னை அல்லாமல் வேறு ஒரு மெய்யன்பர் உனக்குக் கிடைக்கவில்லையோ ? நான் நல்லியல்பும் நல்ல செயலும் இல்லாத பேய் போன்றவன். இங்ஙனம் கடையன் ஆகிய என்னை ஆட்கொண்டது உனது உயர்ந்த அருட் குணத்தால் ஆகிய தகைமை அன்றி மற்றில்லை. எங்கள் பெரியோனாகிய உன்னை எவ்வகையாகப் புகழ்ந்து பாராட்டிப் போற்றுவேன் ?'

**விளக்கம் :**

வேதத் தலைதரு பொருள் சிவன். நாதனே நாத தத்துவத்தில் விளங்குபவன் எனவும் பொருள் கொள்ளலாம்.

"ஆயநான் மறையவனும் நீயே"
நான்கு வேதங்களின் பொருளாக விளங்குபவன் சிவனே,

நான்கு வேதங்களையும் அருளிச் செய்தவனும் சிவனே. நீ நான்கு வேதங்களாலும் போற்றப்படுகிற அத்துணைச் சிறப்பு வாய்ந்தவனாக இருந்தும், உனக்கு அன்பன் என்று சொல்லளவில் கூறினமை கொண்டே என்னை ஆண்டு கொண்டாய். வேறு தகுந்த அடியார் எத்துணையோ பேர் இருந்தும் கடையனாகிய என்னை ஆண்டுகொண்டதிலிருந்து நின் பெருங்கருணைத் திறம் விளங்கும். மற்று–வினைமாற்றுப் பொருளில் வந்தது. நோக்கிக் காண்டல் – ஆய்ந்து சீர்தூக்கிப் பார்த்தல், அன்றி – குறிப்பு வினையெச்சம். அக் கருணைத்திறம் சொல்லளவைக் கடந்தது என்பார், "என் சொல்லிப் பேசுகேனே" என்றார். 'பேசு—பகுதி' 'க்' எதிர் கால இடைநிலை, 'ஏன்' தன்மை ஒருமை வினைமுற்று விகுதி. ஏகாரம் – ஈற்றசை.

இதன்கண் சிவபிரான் மறைமுதல் என்றதும், அவன் அருட்டிறம் பேச்சின் எல்லையைக் கடந்தது என்றதும் சுட்டறுத்தலைப் புலப்படுத்துவன.

24 பேசிற்றா மீசனே யெந்தா யெந்தை
பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்றாந் திருநீறே நிறையப் பூசிப்
போற்றியெம் பெருமானே யென்று பின்றா
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
யாண்டானே யவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே யெந்தா யந்தோ
வென்னைநீ யாட்கொண்ட வண்ணந் தானே.

**பதப்பிரிவு**

பேசின் தாம் ஈசனே எந்தாய் எந்தை
பெருமானே என்று என்றே பேசிப் பேசிப்
பூசின் தாம் திருநீறே நிறையப் பூசிப்
போற்றி எம்பெருமானே என்று பின்ரு
நேசத்தால் பிறப்பு இறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே அவாவெள்ளக் கள்வனேனை
மாசுஅற்ற மணிக்குன்றே எந்தாய் அந்தோ
என்னை நீ ஆட்கொண்ட வண்ணம் தான்ஏ.

உரைநடை

மாசு அற்ற மணிக்குன்றே எந்தாய் தாம் பேசினல், ஈசனே! எந்தாய்! எந்தை பெருமானே! என்று என்றே பேசிப்பேசியும், தாம் பூசினல் எம்பெருமானே போற்றி என்றுகூறித் திருநீறே நிறையப்பூசியும் (உம்பால்) பின்ரு நேசத்தால் பிறப்பையும் இறப்பையும் கடந்தாராகிய மெய்யன்பரை ஆண்டானே! அந்தோ! அவா வெள்ள முடைய கள்வனேனை நீ ஆட்கொண்ட வண்ணம் என்னை?

**பொழிப்புரை :**

மறுவில்லாத மாணிக்க மலேயே! எம் தந்தையே! தாம் ஏதேனும் மொழிவதெனின் "இறைவனே! எங்கள் தந்தையே! எங்கள் தந்தையர்க்கும் தலேவனே" என்று இறைவன் பெயர்களே ஒழிவின்றிச் சொல்லியும், தாம் தம் மேல் பூசுவதாயின் திருநீற்றையே குறைவற உடம்பு முழுவதும் பூசியும் பின்னடையாத மெய்யன்பால் பிறப்பு இறப்புக்களேக் கடக்கும் தகுதி பெற்ற அடியாரைத் தொண்டராக ஆட்கொண்ட முதல்வனே! ஐயோ! பொய்ப் பொருள்கள்பால் ஆசைப் பெருக்கினைக் கொண்டுள்ள வஞ்சனுகிய என்னையும் அடிமையாகக் கொண்ட முறை என்னவோ? ( அறியேன் )

**விளக்கம்:**

திருநீறே — ஏகாரம் பிரிநிலை. பின்றுதல் — பிறழ்தல்; பின்னடைதல். பின்ரு – ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்.

இறைவனிடத்து வைத்த என்றும் ஓர் பெற்றித் தாய நேயத்தால் பிறவி நோய் நீக்குவர் அடியார் என்பார் "பின்ரு நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார்" என்ருர்.

ஈசன் — செல்வன், தலைவன். என்றேன்றே, பேசிப் பேசி என்ற அடுக்குகள் பன்மைபற்றி வந்தன. பல காலும் சிவபெருமானுடைய திருப்பெயர்களையே எடுத்துச் சொல்லியும் என்பது கருத்து.

எந்தை பெருமானே — எந்தந்தைக்கும் தலைவனே. நான்கனுருபும் இறந்தது தழீஇய எச்சவும்மையும் தொக்கன.

திருநீறு தவிர வேறு நறுமணக் கலவைகள் அணி யார் என்பது தோற்றப் 'பூசிற்ரும் திருநீறே நிறையப் பூசி" என்ருர்.

பிறப்பு இறப்பு—இரண்டனுருபுகளும் எண்ணும்மை யும் தொக்கன. தகுதியுடைய மெய்யன்பர்களை ஆட் கொண்ட இறைவன் ஆசை நிறைந்த வஞ்சனுகிய அடியேனையும் ஆட்கொண்டது பெருவியப்புக்குரியது என்பதாம். ஒன்றுக்கும் பற்ருத தம்மையும் ஆட்கொண்ட அருளின்திறனை நினைந்து வியந்து தம் சிறுமை கண்டு இரங்குகின்ருர் அடிகள். அந்தோ—வியப்பும் இரக்கமும் குறிக்கும் இடைச்சொல். வண்ணந்தானே — தான், ஏ, அசைகள்.

25 வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்ற
நேகனேக னணுவணுவி லிறந்தா யென்றங்
கெண்ணந்தான் றடுமாறி யிமையோர் கூட்ட
மெய்துமா றறியாத வெந்தா யுன்றன்
வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டா
யெம்பெருமா னென்சொல்லிச் சிந்திக் கேனே.

பதப்பிரிவு :

வண்ணம்தான் சேயது அன்று வெளிது ஏ அன்று
அநேகன் ஏகன் அணு அணுவில் இறந்தாய் - என்று அங்கு
எண்ணம்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்தும் ஆறு அறியாத எந்தாய் உன்தன்
வண்ணம் தான் அது காட்டி வடிவு காட்டி
மலர்க் கழல்கள் அவைகாட்டி வழி அற்றேனைத்
திண்ணம் தான் பிறவாமல் காத்து ஆட்கொண்டாய்
எம்பெருமான் என் சொல்லிச் சிந்திக்கேனே.

உரைநடை :

வண்ணம்தான் சேயது அன்று; வெளிது அன்று; (நீ) அனேகன், ஏகன், அணு, அணுவில் இறந்தாய் என்று இமையோர் கூட்டம் அங்கு(த்தம்) எண்ணந்தான் தடுமாறி (உன்னை) எய்தும் ஆறு அறியாத எந்தாய்! உன்தன் வண்ணம் அது காட்டி(ப் போகும்) வழி அற்றேனைத் திண்ணந்தான் பிறவாமல் காத்து ஆட்கொண்டாய். எம்பெருமானை என் சொல்லிச் சிந்திக்கேன்? ஏ.

**பொழிப்புரை :**

உனது நிறம் சிவப்பு அன்று, வெண்மை அன்று, நீ பல் பொருளாயிருக்கின்றாய்; தனிப்பொருளாயிருக்கின்றாய்;

அணு ஆவாய்; அணிவினும் மிக நுண்ணியை என்று தேவர் கூட்டம் (பலவாறு கூறி) அவ்விடத்துத் தம் சிந்தனை ஒரு நெறிப்படாமையாற் கலங்கி உன்னை அடையும் வழி தெரியாத எமது தந்தையே! (ஒரு தகுதியும் இல்லாத) எனக்கு உனது நிறத்தையும் உருவத்தையும் செந்தாமரைப்பூப் போன்ற திருவடிகளையும் காட்டியருளி, ஒழுகும் நெறியறியாதொழிந்த என்னையும் இனிப் பிறவாதபடி உறுதியாகக் காப்பாற்றி அடிமையாக்கி வைத்துள்ளாய். (அத்தகைய பேரருள் நிறைந்த) எங்கள் தலைவனாகிய உன்னை எதைச்சொல்லி நினைவு கூர்வேன்?

**விளக்கம் :**

சேயது அன்று வெளிதே அன்று: வெளிதே என்பதிலுள்ள பிரிநிலை ஏகாரத்தைச் 'சேயது' என்பதனோடுங் கூட்டுக. "சிவனெனும் நாமம் தனக்கேயுரிய செம்மேனி யெம்மான்" வெண்ணீறு சண்ணித்த மேனியனாதலின், அவன் வண்ணம் செம்மை மட்டுமன்றி வெண்மையும் ஆம். அதனால் "சேயதன்று, வெளிதன்று" என்றனர்.

"நீற்றுக்கோலம் நிமிர்ந்து காட்டியும்"

(திருவாசகம்)

"வினைவளம் நீறெழ நீறணி அம்பலவன்"

(திருக்கோவையார்)

இறைவன் ஏகனாயும் அநேகனாயும் நிற்பவன், "ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க" என முன் அடிகள் வாழ்த்தினர். அவன் ஒருவனாயிருத்தலின் ஏகன். உயிர்கள் தோறும் உலகப் பொருள்கள் தோறும் அருள் வடிவங் தோறும் நிற்றலின் அநேகன்.

"ஏகனுமாகி அனேகனு மானவன்
நாதனு மானா னென்றுந் தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற"

(திருவுந்தியார்)

இறைவன் அணுவிற் கணுவாய் இருப்பவன் ஆதலால், மறைதனைக் கற்ற இமையோர், 'அநேகன், ஏகன், அணு, அணுவில் இறந்தாய்' என்று எண்ணந்தடு மாறினர். அது, அவை என்பவற்றைப் பகுதிப் பொருள் விகுதியாகவும் பண்டறி சுட்டாகவும் கொள்ளலாம். தான் அசை. கல்வியறிவு மனத்தை ஒரு நெறிப் படுத்தாது பல தலைப்பட எண்ணித் தடுமாறும்படி செய்யும் என்பது கருத்து.

அறியாத எந்தாய் — அறியப்படாத எந்தாய்; அறியாத என்னும் பெயரெச்சம் செய்யப்படு பொருள் கொண்டது. உன் என்பதனை நடுநிலை விளக்காக் கொண்டு உன் வண்ணந்தான் சேயதன்று என முன்னும் கூட்டுக.

உன்தன்—தன் சாரியை; மலர்க்கழல்கள் உவமைத் தொகை. கழல்கள் ஆகுபெயர். பிறவாமற் காத்தல் பிழையா தென்பார் திண்ணமாய் என வலியுறுத்தார்.

**26 சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்**
**கண்ணிணை நின் றிருப்பாதப் போதுக் காக்கி**
**வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்**
**மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார**
**வந்தனை யாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை**
**மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்**
**தந்தனை செந் தாமரைக்கா டனைய மேனித்**
**தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.**

**பதப்பிரிவு :**

சிந்தனை நின் தனக்கு ஆக்கி நாயினேன் தன்
கண் இணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி
வந்தனையும் அ மலர்க்கே ஆக்கி வாக்கு உன்
மணி வார்த்தைக்கு ஆக்கி ஐம் புலன்கள் ஆர
வந்தனை ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை
மால் அமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
தந்தனை செம் தாமரைக் காடு அனைய மேனித்
தனிச் சுடரே இரண்டும் இல் இத்தனியனேற்குஏ.

உரை நடை :

வந்தனை ஆட்கொண்டு உள்ளே புகுந்த விச்சை யினையுடைய மால் அமுதப் பெருங் கடலே! மலையே! செந்தாமரைக் காடு அனைய மேனியையுடைய தனிச் சுடரே! நாயினேன் சிந்தனை நின் தனக்கு ஆக்கிக் கண் இணை நின் திருப்பாதப் போதுக்கு ஆக்கி வந்தனையையும் அம் மலர்க்கே ஆக்கி, வாக்கினை உன் மணிவார்த்தைக்கு ஆக்கி (நூலறிவும் பட்டறிவும்) இரண்டும் இல்லாத இத்தனியனேற்கு ஐம்புலன்களும் ஆர உன்னைத் தந்தனை.

**பொழிப்புரை :**

நீயே எழுந்தருளிவந்து என்னை அடிமையாக ஏற்று என் நெஞ்சினுள் நுழைந்த வியத்தகு செயலையுடைய, யாவராலும் விரும்பத்தக்க அருமருந்தாகிய பெரிய கடலே! சலித்தல் இல்லாத மலையே! செந்தாமரைப் பூத் தொகுதி போன்ற திருவுருவையுடைய ஒப்பற்ற ஒளியே! என் நினைவு முழுவதையும் உனக்கு உரிமைப்படுத்தி, கண்கள் இரண்டையும் உன் திருவடி மலர்களுக்கு உரிமைப்படுத்தி, வணக்கத்தையும் அத்திருவடித் தாமரைகளுக்கே உரிமைப்படுத்தி, என்மொழி எல்லாம் உனது அழகிய மாணிக்க மொழிகளுக்கே உரிமைப் படுத்தி, எவ்வாற்றானும் சத்தே ஆதலும் அசத்தே ஆதலும் ஆகிய இரண்டு இல்லாத சதசத்தாகிய, ஆதர வில்லாத எனக்கு என் ஐந்து உணர்வுகளும் நிறையும்படி உன்னையே தந்தருளினாய். (உனது பேரருளின் திறத்தை எவ்வாறு வியப்பேன்?)

**விளக்கம் :**

ஆளுடைய அடிகள் தம்முடைய வாக்கினைச் சிவபெருமானுடைய மணி வார்த்தைக் காக்கினமையின் மாணிக்கவாசகர் எனப் பெயர் பெற்றார். சிவம்—சத்து.

"இன்னணந் துதிக்கும் வாதவூர் முனிவர் இருந்துதி திருச்செவி யேற்று
முன்னவர் மலர்ப்பைங் குருந்தடி யமர்ந்தார் முனிவிலாப் பேரருள் பொங்க
மன்ன நன் மணியே வார்த்தையாய்த் திரண்டு வருமொரு காரணக்குறியால்
அன்ன மாணிக்க வாசக ரெனும் பேராக இன்ருதி யென் றறைந்தார்."

(திருப்பெருந்துறைப் புராணம்)

உலகம் அசத்து. சிவம் தானே அறிந்து அறிவிக்கும். உலகமாகிய அசத்துப் பொருள் ஒருவகையானும் அறியாது. உயிரோ தானே அறியும் திறமுடைய சத்துப் பொருளுமன்று. ஒருவாற்ருனும் அறியாத அசத்துப் பொருளுமன்று. அறிவித்தால் அறிவதாய், சத்தைச் சார்ந்து சார்ந்து சத்தாயும் அசத்தைச் சார்ந்து சார்ந்து அசத்தாயும் நிற்பதன்றி இரண்டும் ஆகாதது. அதனுல் அது சதசத்து எனப்படும். ஆன்மாவின் இவ்வியல்பு புலப்படத் தம்மை 'இரண்டும் இல் இத்தனியனேன்' என்ருர் அடிகளார்.

'இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா'

(சிவஞானபோதம்)

கலைஞானமும் அனுபவ ஞானமுமாகிய உயர்ஞானம் இரண்டும் இல்லாத தனியனேன் என்றுரைப்பினும் பொருந்தும். 'ஆரவந்தனை' வந்தனை முற்றெச்சம். இதனை முற்றுத்திரிசொல் லென்பர் சேனுவரையர். வந்தனை என்பது பக்குவ மறிந்து நீயே வந்தனை என்று பொருள்படும். உயிர்க்குப் பக்குவமாவது ஆசிரியன் அறிவித்தவாறே அறியும் செவ்வித்தாதல். பருவம் அறிதலும், தானே வருதலும் ஆட்கொள்ளலும் உள்ளம் புகுதலும் ஐம்புலன்களும் ஆரத் தனது இன்பம் கொடுத்தலும் அவனுடைய வியக்கத்தக்க செயல்களாகும். ஆதலின் விச்சை என்ருர். வியாபகமும் இன்புருவாதலும் பற்றிச் சிவனை யாவரும்

விரும்பத்தக்க அமுதப் பெருங்கடலாகவும், சலியாமையும் பெருமையும் அருள் வளமுமுடைமை பற்றி மலையாகவும் உருவகஞ்செய்தார். செம்மேனி யொளியைப் புலப்படுத்தத் தாமரைக்காடு அனைய மேனியென்றார். இருளின் ஆற்றல் எள்ளளவு மின்றி மடங்கச் செய்யும் ஒளியாதலின் ஒப்பற்ற தனிச்சுடர் என்றார். நெய்தல் நிலப்பொருளாகிய கடலையும், குறிஞ்சிப் பொருளாகிய மலையையும், மருதப் பொருளாகிய தாமரையையும், முல்லைப் பொருளாகிய காட்டினையும் உருவகப் பொருள்களாகத் தொடுத்தது இறைவன் உலக உருவினன் என்பது குறிப்பிக்க. உயிர் இறைவனை நினைக்கவும் காணவும் வாழ்த்தவும் வணங்கவும் இறைவனே செய்ய வேண்டுமென்பார், 'ஆக்கி ஆரத்தந்தனை' என்றார். இன்பந் துய்த்தற்கும் தனது இன்ப வடிவினைத் தானே தந்தருள வேண்டு மென்பார் 'உன்னைத் தந்தனை' என்றார்.

> **"தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச்**
> **சங்கரா ஆர் கொலோ சதுரர்"**

என்ற அவர் தம் திருவாக்கினையும் ஒப்பு நோக்குக.

ஐம்புலன்களும் ஆரவந்து இன்பங் கொடுத்தலை—

> **"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி உருவின்கண்**
> **அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை"**
>
> **(திருத்தொண்டர் புராணம்)**

என்ற திருமுறைப் பாடலிலும் காண்க.

குருமூர்த்தி, சிந்தனை, கண் முதலிய உறுப்புக்களைத் தனக்கே ஆக்கிக் கொள்ளத் தன்னையே அடிகளுக்கு அளித்தார். அடிகள் மண்ணில் வாழும் வரை எண்ணம் முதலியவற்றை இறைவன்கண் பதியவைத்தல் அரிதா கின்றது என வருந்துகிறார்கள் :—

"பண்ணினேர் மொழியாள் பங்கநீ அல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே யாண்டாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே உடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மேல் அடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருக என்றருள் புரியாயே."

(திருவாசகம்-வாழாப்பத்து. 5)

27 தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியை நேர் துவர்வாயா ரென்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
யஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே.

பதப்பிரிவு:

தனியனேன் பெரும் பிறவிப் பௌவத்து எவ்வம்
தடம் திரையால் எற்றுண்டு பற்று ஒன்று இன்றிக்
கனியை நேர் துவர் வாயார் என்னும் காலால்
கலக்குண்டு காம வான் சுறவின் வாய்ப்பட்டு
இனி என்னே உய்யுமாறு என்று என்று எண்ணி
அஞ்சு எழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதல் அந்தம் இல்லா மல்லல்
கரை காட்டி ஆட் கொண்டாய் மூர்க்கனேற்கு ஏ.

உரை நடை:

முனைவனே! தனியனேன் பெரும் பிறவிப் பௌவத்தில் (வீழ்ந்து) எவ்வம் ஆகிய தடம் திரையால் எற்றுண்டு, பற்று ஒன்று இன்றிக் கனியை நேர் துவர் வாயார் என்னும் காலால் கலக்குண்டு காமம் ஆகிய வான் சுற

வின் வாய்ப்பட்டு இனி உய்யுமாறு என்னே என்னே என்று எண்ணி அஞ்சு எழுத்தின் புணையைப் பிடித்துக் கிடக்கின்றேனை முதல் அந்தம்இல்லாத மல்லல் (முத்திக்) கரையை மூர்க்கனேற்குக் காட்டி ஆட்கொண்டாய்.

**பொழிப்புரை:**

எவற்றுக்கும் முன்னவனாகிய தலைவனே! உதவியற்ற வனாய்ப் பிறவியாகிய பெரிய கடலுள் (விழுந்து) துன்ப மாகிய பெரிய அலைகளால் தாக்கப்பட்டுப் பற்றுக்கோடு யாதும் இல்லாமல் கோவைப் பழத்தைப் போன்ற சிவந்த வாயினையுடைய பெண்களாகிய பெருங் காற்றால் அலைக் கழிக்கப்பட்டுப் பேரவாவாகிய பெரிய சுறாமீனின் வாயிலகப்பட்டு இங்குநிலையிற் பிழைக்கும் வழி என்ன என்று பலமுறை நினைந்து (வேறு வழி காணாது) சிவாயநம என்னும் திரு ஐந்தெழுத்தாகிய தெப்பத்தைப் பற்றிக் கிடக்கும் மூடனாகிய எனக்குத் தோற்றமும் முடி வும் இல்லாத பேரின்பவளம் நிறைந்த முத்தியாகிய கரையைக் காட்டி உனக்கு ஆளாகக் கொண்டாய். (இங்ஙனம் செய்த நின் திருவருட் பெருமைதான் என்னே!)

விளக்கம் :

பிறவியைப் பெருங்கடலாக உருவகம் பண்ணி னார் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின். தனியனேன் என்றார் தாம் உதவியற்றிருந் தமையின். அப்பொழுது தமக்கிருந்த இயல்பு கூறுவார், பிறவிப் பெருங்கடலில் துன்பப் பேரலையால் அலைப்புண்ட தையும் மாதராகிய காற்றினாற் கலக்குண்டு தடுமாறிய தையும், பெண்ணாசையாகிய பெருமீனின் வாய்ப்பட்ட தையும் கூறினார். இங்குநிலையில் அவர் மேற்கொண்ட சாதனம் திருவைந்தெழுத்து. அதுவே புணைபோலப் பற்றுதற்கு எளிதாயிற்று; அத்திருவைந்தெழுத்தின் வழி முதல்வன் தன் திருவருளைப் பற்றச் செய்து கரை சேர்த்தினான்.

இன்பவளச் செழிப்புப் பற்றி மல்லல் கரை என்ருர். காமங்காரணமாக அவாவின பொருள் கிட்டாதாயின் வெகுளியுண்டாதல் இயல்பு. வெகுளியில் மூர்க்ககுணம் ஏற்படும். காமம், வெகுளி, மயக்கம் இம் மூன்றனுள் மயக்கத்தால் காமமும், காமத்தால் வெகுளியும் விளையும். அறிவில்லாத மக்கள் இயல்பினை விளக்கி அவர்களை ஈடேற்றும் கருணை காரணமாகத் தம்மையே மூர்க்கனேற்கே எனச் சொல்கிருர்கள் அடிகள். ஐந்தெழுத்தின் பொருள் தெரிந்து அறிவிஞற்கணித்தால் பாச நீக்கமும் உண்மை ஞானவிளக்கமும் உண்டாகும். மயக்கக் கடலினின்றுங் கரையேற்றும் முத்திவளம் பொருந்திய கரையினை உயிரறிவினுக்கு ஐந்தெழுத்திற் காட்டுபவன் சிவபெருமான். திருஐந்தெழுத்தைப் பொருள் தெரிந்து இடைவிடாமற் கணித்துக் கொண்டிருக்கச் செய்து பிறவிக் கடலினின்று தோணியைக் கரைக்குச் செலுத்துவன் இறைவன். பிறவியை இருங் கடலாகவும் துன்பத்தைப் பேரலையாகவும் பெண்களைக் காற்ருகவும் காமத்தைச் சுருமீனுகவும் அஞ்செழுத்தைப் புணையாகவும் முத்தியைக் கரையாகவும் உருவகஞ் செய்தார் அடிகள்.

உயிரின் கடமை ஐந்தெழுத்தாகிய புணையைப் பற்றிப் பிடித்துக் கொண்டு விடாமற் கிடக்க வேண்டும்; இறைவன் கரை சேர்ப்பாஞதலின் கிடக்கின்றேனை என்ருர். பிறவித்துன்பக் கடலிலிருந்து எவ்வாறு கரை யேறுவோம் என்ற தீவிர உணர்ச்சி உண்டாகவேண்டும் என்பார் இனி என்னே உய்யுமாறு என்று என்று எண்ணி என்ருர்.

**28 கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்**
**கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டா**
**ஞட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே**
**நாயினுக்குத் தவிசிட்டு நாயினேற்கே**
**காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்**
**கேளாதன வெல்லாங் கேட்பித் தென்னை**
**மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டா**
**னெம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.**

**பதப்பிரிவு :**

கேட்டுஆரும் அறியாதான் கேடுஒன்று இல்லான்
கிளைஇலான் கேளாதே எல்லாம் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே
நாயினுக்குத் தவிசுஇட்டு நாயினேற்கே
காட்டாதன எல்லாம் காட்டிப் பின்னும்
கேளாதன எல்லாம் கேட்பித்து என்னை
மீட்டேயும் பிறவாமல் காத்து ஆள்கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.

உரைநடை :

கேட்டாரும் அறியாதான் கேடு ஒன்றும் இல்லான் கிளைஇலான் கேளாதே எல்லாம் கேட்டான் ஞாலத்துள்ளே நாட்டார்கள் விழித்திருப்பத் தவிசை நாயின் மேல் இட்டாங்கு நாயினேற்கே காட்டாதன எல்லாங் காட்டிப் பின்னும் கேளாதன எல்லாம் கேட்பித்து மீட்டேயும் பிறவாமல் என்னைக்காத்து ஆட்கொண்டான். எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.

பொழிப்புரை :

(மெய்யுணர்வின்றிச்) செவிப்புலன் வழியால் எவராலும் தெரிந்து கொள்ளப் படாதவனும், அழிவு சிறிதளவேனும் இல்லாதவனும், உறவுத் தொடர்பு இல்லாதவனும், செவிவழிக் கொள்ளாமலே யாவற்றையும் தெரிந்து கொண்டவனும் ஆகிய சிவபிரான் இவ்வுலகத்து மக்கள் யாவரும் பார்த்துக் கொண்டிருக்க (யானைமேல் இடவேண்டிய) இருக்கையை நாயின் மேல் அமைத்தது ஒப்ப நாயினும் கடையன் ஆகிய எனக்குக் காண்பிக்க வாராத யாவற்றையும் காண்பித்து, மேலும் கேட்கவாராத யாவற்றையும் கேட்கச் செய்து திரும்பவும் பிறவி இல்லையாம்படி என்னைக் காப்பாற்றி அடிமையாக ஏற்று அருள் புரிந்தான். இது எங்கள் தலைவன் நிறைவேற்றி வைத்த வியத்தகு செயலே.

இப்பாட்டு ஐந்தெழுத்தின் புணையைப் பற்றியதால் வரும் பயன்களை வகுத்துக் கூறியது.

விளக்கம்:

ஆரும் கேட்டறியாதான் — எத்தகைப் புலமைய ரானும் கேள்வியான் மட்டும் தெரிந்துணரப்படாதவன். உம்மை—உயர்வு சிறப்பு. ஆர் யார் என்பதன் விகாரம். அறியப்படாதான் என்பது அறியாதான் என நின்றது. செய்யப்படுபொருள் செய்தது போல நின்றது. கிளை— தந்தை, தாய். சிவன் தாய் தந்தையரில்லாதவன் என்பது தெளிவு; பிறப்பிலன் என்பதாம்.

"தமக்குத் தந்தையர் தாயிலர் என்பது
எமக்கு நாதர் பிறப்பிலர் என்றதாம்"

(திருத்தொண்டர் புராணம்)

கேளாதே எல்லாம் கேட்டான்—உயிர்களின் செயல்களை உண்ணின்று உணர்கின்றான் என்பதாம்.

நாட்டார்கள் என்பதற்கு வீட்டின்பத்தில் நாட்டம் உடையவர்கள் எனவும் பொருள் கொள்ளலாம். நாயினுக்கு உட்காருவதற்கு நல்ல இருக்கை அமைத்தாற் போல எனவும் உவமையைக் கொள்ளலாம். அவ்வாறு கொண்டால், அடியேனை எந்நிலையினும் தள்ளாது எடுத்துச் சுமந்து என உவமேயத்தைக் கொள்ள வேண்டும்.

"கிடைக்கத் தகுமோநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை இன்று."

(திருவருட் பயன்)

நாயின் மேல் நல்லிருக்கை அமைத்தாற்போல என உவமம் கருதின், சிறந்த திருவடிகளை என் தலைமேல் வைத்து எனப் பொருள் கொள்ளவேண்டும்.

காட்டாதன எல்லாங் காட்டி என்றது தத்துவங்களின் இயல்பு, ஆன்ம விளக்கம், திருவருட் காட்சி என்பவற்றை உணர்த்தியது. இவ்வுணர்வு தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் எனப்பத்து வகைப்படும்.

கேளாதன எல்லாங் கேட்பித்தல் திருவைந்தெழுத்தில் முப்பொருள் உண்மையை இயைத்து அதனை ஓதி நிற்கும் முறையை முற்கூறிய படிவழியாகிய ஞான மெய்ந்நெறி உணர்வை நெறிப்படுத்தியதாம்.

காட்டாதன காட்டல் தம்மை உணர்தலாகிய ஆன்ம சுத்தி எனவும், கேளாதன கேட்டல் சிவப்பேறு எய்துவித்தல் எனவுங் கூறுவர். அவ்வுணர்வின் படிநிலைகளைப் பற்றிப் பன்மையிற் கூறப்பட்டன.

நாய்க்குத் தவிசிடுதல் :

"நானூரடி யணைவான்ஒரு நாய்க்குத் தவிசிட்டிங்
கூனுருடல் புகுந்தா னுயிர்கலந்தான் உளம்பிரியான்
தேனார் சடைமுடியான் மன்னுதிருப் பெருந்துறை யுறைவான்
வானோர்களும் அறியாததோர் வளமீந்தனன் எனக்கே."

(திருவாசகம்: உயிருண்ணிப்பத்து 2)

நாய்மேல் தவிசிடல்

"பூமே லயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேற் றவிசிட்டு நன்றுப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

(திருவாசகம்)

பொன் தவிசு நாய்க்கிடுதல்

"கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகே னாயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேன்எம் பெருமானே அடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா நன்றேநின் பொன்னருளே"

(திருவாசகம் — திருவேசறவு)

காட்டாதன எல்லாங் காட்டல்

"இருவினை தாம் இவை மும்மலம் ஈங்கிவையீது சிவம்
கருவுறும் ஆருயிருண்மை யிது என்று காட்டவல்ல
குருபரன் நீயன்றி வேறறியேன் இக்குவலயத்திற்
றிருவெண்ணெ மெய்கண்ட தேவே பஞ்சாக்கர தேசிகனே"

(சிவஞான சுவாமிகள் பஞ்சாக்கர தேசிகமாலை)

கேளாதன எல்லாங் கேட்கச் செய்தல்

"ஞானசிரியன் என்று வரும் நம்உள்ளுறையுஞ் சங்கையெலாம்
ஆனவிருப்பின் வினய் வினய் அறையத் தெளிவதெப்போது
மானஅவன் பேரருட்கிலக்காய் வயக்கியடிக் கீழ்வைப்பதென்று
தேனதரிக்குஞ் சிவானந்தந் திளைத்தின்புறல் என்றென
நினைப்பார்"

(திருப்பெருந்துறைப் புராணம்)

29 விச்சைதா னிதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாத லடியார்தம் மடிய னாக்கி
யச்சந்தீர்த் தாட்கொண்டா னமுத மூறி
யகநெகவே புகுந்தாண்டா னன்பு கூர
வச்சனாண் பெண்ணலியா காசமாகி
யாரழலா யந்தமா யப்பா னின்ற
செச்சைமா மலர்புரையு மேனி யெங்கள்
சிவபெருமா னெம்பெருமான் றேவர் கோவே.

பதப்பிரிவு.

விச்சை தான் இது ஒப்பது உண்டோ கேட்கின்
மிகு காதல் அடியார் தம் அடியன் ஆக்கி
அச்சம் தீர்த்து ஆட்கொண்டான் அமுதம் ஊறி
அகம் நெகவே புகுந்து ஆண்டான் அன்பு கூர
அச்சன் ஆண் பெண் அலி ஆகாசம் ஆகி
ஆர் அழலாய் அந்தமாய் அப்பால் நின்ற
செச்சை மா மலர் புரையும் மேனி எங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர் கோவே.

*பொழிப்புரை :*

தந்தையாய் அமைந்தும், அவன் அவள் அது என நின்றும், ஞானப் பரவெளியாய் அமைந்தும் அதன்கண் விளங்கும் அரிய ஒளி வடிவுகொண்டும், முடிவு இடமாய் அமைந்தும் யாவற்றையும் கடந்த இடமாய் நிலைபெற்று நின்று வெட்சியின் சிறந்த பூவை ஒக்கும் உடல் வண்ணங் கொண்ட எங்கள் சிவபெருமானும் எங்கள் மேலோனும் தேவர்கட்கு வேந்துமாகிய இறைவன் மேல் மேல் வளருகின்ற அன்புகொண்ட தொண்டர்க்குத் தொண்டன் ஆகச் செய்து (வினைப்பயன் பிறப்பிறப்பு இவை பற்றிய) கலக்கத்தைப் போக்கி, அடிமையாகக் கொண்ட ஆண்டவன், உள்ளம் உருகவும், மெய்யன்பு வளரவும் என் நெஞ்சினுள் நுழைந்து அடிமை ஆக்கினான். அவன் அருஞ்செயல்களை வினவின் இதற்கு இணையாவதாகிய வியத்தகு செயல் வேறு உள்ளதோ? (இல்லையே)

விளக்கம் :

விச்சை தான் — தான் அசை. சிவபெருமான் தன் அன்பரை முதலில் தொண்டர்க்குத் தொண்டராம் பேறளித்துக் காக்கின்றான்; பின்தான் அவர் உட்புகுந்து தனக்கு அடிமையாக்குகிறான். தொண்டர்க்குத் தொண்டராதலின் இன்றியமையாமையையும் பெருமையையும் கருதியே, **"அமணர் சொல் திடமென்றுதுரிசுப் பட்டேற்கும் உண்டுகோலோ தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே"** என்று திருநாவுக்கரசர் ஒருபதிகம் பாடியருளியுள்ளார். உயிர்களின் எவ்வகை அச்சங்களையும் தீர்க்க வல்லவன் சிவனே. அவனே மெய்த் தந்தை, உண்மை அச்சன். அச்சன் — தந்தை. இறைவன் — ஆண் பெண் அலியாகிய உடற்கூற்றிற் கலந்திருப்பினும் அதற்கு அப்பாற்பட்டவன்; ஆகாசம் முதலிய பூத உலகிற் கலந்திருப்பினும் அதற்கும் அப்பாற்பட்டவன். சிவபெருமான் எல்லா உயிரும் உலகமும் ஒடுங்குதற்கு நிலைக்களமாய்த் தான் எதனிலும் ஒடுங்காது முடிவிடமாய் நிற்றலின் **அந்தமாய்** என்றார்.

இவ்வாறு அப்பாலைக் கப்பாலாய் நிற்பவன் பக்கு வப்பட்ட தனக்கு ஆசிரியனாக எழுந்தருளி வந்து அருள் புரிந்தமையின் உரிமை பற்றி **'எங்கள் சிவபெருமான்' 'எம் பெருமான்'** என்றார்.

பரமுத்தியைத் தலைப்பட்ட மெய்யன்பர்களையும் பாச வாதனை தாக்காதபடி தொண்டரொடு கூட்டுதலாகிய புறக்காப்பும், உள்புகுந்து உருக்கி இன்புறுத்துதலாகிய அகக்காப்புஞ் செய்து பிறவி அச்சத்தை நீக்குகிறான் இறைவன்; அவன் புறத்தே உலகவுருவினனாகவும் (ஆண் பெண் அலி) அகத்தே ஒளிமயமான அருள் வெளியா கவும் அதன்கண் விளங்கும் பேரின்பச் சுடராகவும் இருந்து அருள்புரிவன் என்பதாம்.

**30 தேவர்கோ வறியாத தேவ தேவன்**
**செழும் பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை**
**மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி**
**மூதாதை மாதாளும் பாகத் தெந்தை**
**யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்**
**யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோ**
**மேவினோ மவனடியா ரடியா ரோடு**
**மேன்மேலுங் குடைந்தாடி யாடுவோமே.**

**பதப்பிரிவு :**

தேவர் கோ அறியாத தேவ தேவன்
செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை
மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாது ஆளும் பாகத்து எந்தை
யாவர்கோன் என்னையும் வந்து ஆண்டு கொண்டான்
யாம் ஆர்க்கும் குடி யல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோம் அவன் அடியார் அடியாரோடும்
மேல் மேலும் குடைந்து ஆடி ஆடுவோமே.

உரைநடை :

தேவர்க்குக் கோவாலும் அறியப்படாத தேவதேவன் செழும் பொழில்களைப் பயந்து காத்து அழிக்கும் மற்றை மூவர்கோனாய் நின்ற முதல்வனும், மூர்த்தியும், மூதாதையும் மாதுஆளும் பாகத்தனுமாகிய எந்தையும் யாவர் கோனும் ( ஆகிய சிவபெருமான் ) வந்து என்னையும் ஆண்டு கொண்டான். (ஆதலால்) யாம் ஆர்க்கும் குடியல்லோம். யாதும் அஞ்சோம். அவன் அடியார்க்கு அடியாரோடு மேவினோம். மேல் மேலும் குடைந்து ஆடி ஆடுவோமே.

**பொழிப்புரை :**

இமையவர்க்கு அரசனாகிய இந்திரனாலும் தெரிந்து கொள்ளமுடியாத தேவர்களுக்குத் தேவனும், வளமுடைய உலகங்களைப் படைத்துக் காப்பாற்றி ஒடுக்குகின்ற, இந்திரனின் வேறாய பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மூன்று பேர்க்கும் இறைவன் ஆகிய நிலை பெற்ற முதற்கடவுளும், அம்மூவரையும் வடிவாகக் கொண்டு நடத்துவோனும், பாட்டனும், உமையாம் மங்கை உரிமை கொள்ளும் இடப் பாகத்தையுடைய எங்கள் தந்தையும், எல்லோர்க்குந் தலைவனும் ஆகிய சிவபெருமான் கடையேனாய என்னையும் வலியவந்து தனக்கு ஆளாகக்கொண்டான். ஆதலால், நாம் வேறு எவர் பாதுகாப்பிலும் வாழும் குடிகள் ஆக மாட்டோம்; எதற்கும் கலங்க மாட்டோம். சிவபெருமான் தொண்டர்க்குத் தொண்டராவாரோடு விரும்பிக் கூடினோம்; இடையறாது பேரின்ப வெள்ளத்துள் திளைத்துக் கூத்தாடுவோம்.

விளக்கம் :

இயக்கனாய் முன்னின்ற சிவபிரான் இயல்பை இந்திரன் அறியாது பின் உமையம்மை உணர்த்த உணர்ந்து தேவர்க்குத் தலைவன் ஆனதைக் கேளாபநிட

தம் கூறும். முன்னர் பிரமன் முதலிய காரணக் கடவுளரைப் படைத்துப் பின் அவர் மூலம் உலகைப் படைத்தலின், சிவபிரான் உலகிற்கு முதாதை எனப் பட்டான்.

பொழில்கள் — உலகங்கள். மூவர் — அயன், அரி, குணிருத்திரன். குணிருத்திரன் மூவரோடு வைத்து எண்ணப்படுவன். சிவனுக்கு உருத்திரன் எனப் பெயரிருப்பினும் அவன் அருள் பெற்றோரும் உருத்திரன் எனப்படுதலின், அவனை மாருத்திரன் என ஆகமங்கள் கூறும். மெய்கண்ட தேவரும் சிவபிரானைச் "சங்கார காரணன்" என்ற அளவிற் குறியாது "சங்கார காரணனாகிய முதல்" எனக் குறித்தருளினமை கருதத் தக்கது.

பரமசிவன் வேறு, குணிருத்திரன் வேறு எனத் தெளிவித்தற்குச் சிவஞான முனிவரர் இத்திருவாசகப் பாட்டைச் சிவஞான பாடியத்தில் மேற்கோளாகக் காட்டியருள்கின்றார். சிவபிரான் மூர்த்திமான்; அயன் அரி, உருத்திரன் மூர்த்திகள் என்பதைப் "படைத்தளித் தழிப்ப மும்மூர்த்திகள் ஆயினை" என்னும் திருஞான சம்பந்தர் திருவாக்குத் துலக்கும்.

திருநாவுக்கரசு சுவாமிகளும்,

"நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்."
... ... ... ... ... ...
"நற்சங்க வெண்குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே"

என அருளிச் செய்துள்ளமையை இப் பாட்டோடு ஒப்பு நோக்குக. இவ்வஞ்சாமையும் சுதந்திரமும் சிவனைப் பொதுநீக்கி வழிபடும் பேற்றால் உளவாவன. குடைந் தாடுதல் — அருள் வெள்ளத்தில் திளைத்தாடுதல். என்னையும் உம்மை இழிவு சிறப்பு.

# 4. ஆத்தும சுத்தி

ஆன்மத் தூய்மை (உயிர்த்தூய்மை)

சுட்டறிவு (சீவ போதம்) ஒழிந்து உயிர் மாசற்ற பளிங்கு வண்ணம் பெறும்போது பதி அறிவு பதிவதற் குரிய பக்குவம் அடையும். அத்தகைய தூயதன்மை நான் என்னும் அகப்பற்றும் எனது என்னும் புறப்பற்றும் தோன்றுதற்கு மூலமான வினை தூய்மைப்படுதலால் விளையும். அத்தூய்மை தானும் மனமொழி மெய்கள் முற்றும் இறைபணியில் ஈடுபட்டு இறைவயப்படுதலின் பயனாக வேண்டும். எனவே இறைபணிக்கு முதற் காரணமாகிய மனத்தை முன்னிலைப் படுத்தி அறிவுரை செப்பும் முறையாக "உயிரின் தூய்மைக்கு உரிய பணிகளை இப்பதிகத்து முதல் ஐந்து திருப்பாட்டுக் களாலும், அப்பணியின் பயனாகக் கிடைத்த இறைவனது அணுக்கம் பண்டைப் பாசத்தொடர்பினால் ஒரோவழி நெகிழ்ந்த நிலையில் அது பற்றித் தமக்கு உண்டாகிய ஆற்றாமையைப் பின் ஐந்து திருப்பாட்டுக்களானும் அடிகள் அருளிச் செய்கின்றார்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

31 ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்
கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை
பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை
துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை
செய்வதொன் றறியேனே.

பதப்பிரிவு :

ஆடுகின்றிலை, கூத்து உடையான் கழற்கு
அன்புஇலை; என்புஉருகிப்
பாடுகின்றிலை; பதைப்பதும் செய்கிலை
பணிகிலை; பாதமலர்
சூடுகின்றிலை; சூட்டுகின்றதுமிலை;
துணையிலி, பிண நெஞ்சே
தேடுகின்றிலை; தெருவுதோறு அலறிலை
செய்வது ஒன்று அறியேனே.

**பொழிப்புரை :**

செயலற்ற என் உள்ளமே! நீ, திருநடம் புரியும் சிவ பெருமான் திருவடிகளிடம் பற்றுக் கொள்கிறதில்லை; அத் திருவடிகளிடம் கொண்ட அன்பு மிகுதியால் ஆனந்தக் கூத்தாடுகிறதில்லை. எலும்பும் இளகி நிற்கும்படி எம் பெருமானுடைய பொருள்சேர் புகழைப் பாடுகின்றதில்லை. அன்பினால் ஆடல் பாடல் புரியாத வழி துடி துடிப்பும் கொள்கிறதில்லை. தலை வணங்குகிறதில்லை, அவன் திருவடித் தாமரைகளைத் தலைமேல் அணிகிறதில்லை, அவ்வடிகளில் மலரிட்டுத் தொழுகிறதில்லை, துணையாகும் அப்பெருமானை நாடுகிறதில்லை; தெருக்களிலெல்லாங் கதறித் திரிகிறதில்லை. ஆதலின் நீ ஆதரவற்றாய். இந் நிலையில் யான் செய்வதொன்றும் புலப்படவில்லையே.

விளக்கம் :

நல்லுயிருண்மைக்கு அடையாளமாகவுள்ள மெய் யன்பு பற்றிய வழிபாட்டுச் செயல்கள் ஒன்றும் புரியாமையின் "பிண நெஞ்சே" என விளித்துக் கண்டிக் கிறார். முதல்வன் திருக்கூத்து உயிர்களுக்குப் பொருள் களைக் காட்டியும் நுகர்வித்தும் செய்யும் உபகாரம் ஆதலின் அதனை எண்ணி அவன் கழலின்கண் அன்பு வைக்கவில்லையே என்கிறார் அடிகள்; நெஞ்சின்கண்

மெய்யன்பு இல்லாமையால் உடம்பின் கண்ணும் வாயின்கண்ணும் ஆடல், பாடல் நிகழவில்லை. செய்யத் தகுந்தன செய்யாமையும் ஆதரவின்மையும் எண்ணாத கயமை காரணமாக நெஞ்சம் பதைக்காது அலறாது கவலையற்றிருக்கிறது.

'பாதமலர்' என்பது இடைநிலை விளக்காகிப் பாத மலர்களிற் பணிகிலை என முன்னும், பாதமலர் சூட்டு கின்றதும் இலை எனப் பின்னும் சென்று இயைந்து பொருள் தந்தது.

என்புருகிப் பாடுகின்ற பாட்டே இறைவனுக்கு உகந்த பாடலாகும்.

ஆன்மசுத்திக்கு வேண்டப்படும் பணிகளில் நிற்றற்குத் துணைசெய்ய வேண்டிய நெஞ்சம் அது செய்யாமல் பிணம் போற்கிடந்து தனக்குத் துணையாகிய அன்பையும் இழந்து நிற்றலின் செய்வது ஒன்றும் அறிந்திலன் என வருந்துகின்றார் அடிகள்.

இங்ஙனம் அடிகள் முன்னும் பின்னும் தம்மேல் வைத்துக் கூறும் குறைகள் உலகத்தார் தம்மிடத்து நிகழாது காத்துக்கொள்ள வேண்டும் என்பது கருத்து.

**32 அறிவி லாதவெ னைப்புகுந் தாண்டு கொண்**
**டறிவதை யருளிமே**
**னெறியெ லாம்புல மாக்கிய வெந்தையைப்**
**பந்தனை யறுப்பானைப்**
**பிறிவி லாதவின் னருள்கள் பெற்றிருந்து**
**மாறுடுதி பிணநெஞ்சே**
**கிறியெ லாமிகக் கீழ்ப்படுத் தாய்கெடுத்**
**தாயென்னைக் கெடுமாறே.**

**பதப்பிரிவு :**

அறிவு இலாத எனைப் புகுந்து ஆண்டு கொண்டு
அறிவதை அருளி மேல்
நெறி எலாம் புலம் ஆக்கிய எந்தையைப்
பந்தனை அறுப்பானை
பிறிவு இலாத இன் அருள்கள் பெற்றிருந்தும்
மாறு ஆடுதி பிண நெஞ்சே
கிறி எலாம் மிகக் கீழ்ப் படுத்தாய்
கெடுத்தாய் என்னைக் கெடுமாறு ஏ.

**பொழிப்புரை :**

பிறிவு இலாத — வேறு படாத.

இறைவனைச் சிந்தனை செய்யாமையால் உயிரற்ற உள்ளமே! மெய்யுணர்வு இல்லாத என்னை, வலிய வந்து உள் நுழைந்து, அடிமையாகக்கொண்டு தன்னைத்தெரிந்து கொள்வதற்குரிய மெய்யுணர்வை அருளோடு கொடுத்து, உயர்ந்த முத்திக்குரிய வழிகள் பலவற்றையும் விளங்கச் செய்த எம் தந்தையை, பிறவிக் கட்டினை ஒழிப்பவனாகிய சிவபெருமானை, நீங்குதல் இல்லாத நல்ல தண்ணளியால் வரும் உதவிகளைப் பெற்றிருந்தும், அவற்றிற்கேற்ப ஒழுகாது மாறிப்பிணங்குகின்றாய், பொய்யெல்லாம் பெருகி நிற்க என்னை அதனுள் தாழச்செய்தாய்; நான் அழியும்படி கேடும் விளைத்தனை. (நீ திருந்துவது எப்போது?)

**விளக்கம் .**

கிறி — பொய்ம்மை.

**"கிறி பேசி மடவார் பெய்வளைகொள்ளும்.**

**(தேவாரம் 228-6.)**

கிறி — மாயம்.

"கேட்டாயோ தோழி! கிறி செய்த வாறொருவன்"
(திருவா. 8-6)

கிறி செய்தல் — பொய்யாக்குதல்.
"பழவினையைக்

கிறி செய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ"
(திருவாசகம்: திருப்பூவல்லி 8)

முன் செய்யுளில் நெஞ்சம் செய்யவேண்டியவற்றைச் செய்யாதிருந்தது குற்றம் எனக் கூறப்பட்டது. இச் செய்யுளில் அதற்கு மாருகத் தீமையும் புரிகிறது நெஞ்சம் எனக் கூறப்படுகிறது. தன்னையும் தலைவனையும் அறியும் அறிவிலாத என்னையும் ஆண்டுகொண்டான் இறைவன்.

தகுதியில்லாத என்னைத் தானுகவந்து ஆட்கொண்டதோடு அமையாது தகுந்த அறிவுடையவனுகவும் ஆக்கினுன் என்பார், 'மேல் நெறியெல்லாம் புலம் ஆக்கிய எந்தை' என்ருர். மேல் நெறி – முத்தி நெறி. மேல் நெறிகளைப் புலப்படுத்தியதோடு அமையாது பாச நீக்கமும் செய்தான் என்பார் "**பந்தனை அறுப்பானை**" என்ருர்.

இத்தகைய இன்னருள்கள் பெற்றிருந்தும் மாறுபட நிற்கின்ருய் நெஞ்சமே என நெஞ்சத்தின் கொடுமையை விளக்கியதாம். மாருடுதி — மாருடு — பகுதி; த்— எழுத்துப் பேறு, இ — முன்னிலை வினை, முற்று விகுதி. தடுமாறுகின்ருய் மிக—செய எனும் வாய்பாட்டு வினையெச்சம்.

**33 மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையையெம்**
**மதியிலி மடநெஞ்சே**
**தேறு கின்றில மினியுனைச் சிக்கெனச்**
**சிவனவன் றிரடோண்மே**
**லீறு நின்றது கண்டனை யாயினு**
**நெக்கிலை யிக்காயங்**
**கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது**
**கேட்கவுங் கில்லேனே.**

பதப்பிரிவு :

மாறி நின்று எனைக் கெடக் கிடந்தனையை
எம் மதி இலி மடம் நெஞ்சே!
தேறுகின்றிலம் இனி உனைச் சிக்கெனச்
சிவன் அவன் திரள் தோள் மேல்
நீறு நின்றது கண்டனை ஆயினும்
நெக்கிலை இக்காயம்
கீறுகின்றிலை கெடுவது உன் பரிசு இது
'கேட்கவும் கில்லேனே.

பொழிப்புரை :

எம் (அறிவுரையை ஏற்றுக் கொள்ளாத) பேதை உள்ளமே! என் கொள்கைக்கு வேறுபட நினைத்துக் கொண்டு நான் அழியும்படி என்னிடம் இருந்தது போன்றுயாகிய உன்னை இனி உறுதியாய்த் தெளிய மாட்டேம். சிவனாகிய அப்பெருமானுடைய பருத்த தோள்களிடத்துத் திருநீறு நிலைபெற்று விளங்குதலைப் பார்த்தாய் ஆயினும் உருகமாட்டாய்; இவ்வுடலைச் சிதைக்கவும் ஒருப்படாய்; உனது தன்மை எனக்கு அழிவைத் தருவது ஆம். இது போன்ற தன்மை உன்பால் உண்டு என்பதைக் காதால் கேட்பதற்கும் என்னால் இயலாது. ( அத் தன்மையை உன்பால் இன்று காண்கிறேன்! )

விளக்கம் :

கெடுவது என்பதற்கு (உன் இத்தன்மை) கெடுக எனவுரைப்பின் கெடுவது – வியங்கோள் வினைமுற்று; ஆறுவது சினம் என்பதிற்போல.

கெடக்கிடந்தனையை உன்னை — கெடுமாறு கிடந்தோயாகிய உன்னை. கிடந்தனை — வினையாலணையும் பெயர்.

எனைக்கெடுத்தனை என்றவர் எம்மதியிலி மடநெஞ்சே, எனப் பன்மையாற் கூறினர். எனது உரையன்றி

என்னுடன் சேர்ந்த இறையன்பர் அறிவுரையும் கேளாமை பற்றியும்,யான் தெளியாமை மட்டும் அன்றி அவரும் தெளியார் என அறிவுறுத்தவும்.

'நீறணி அம்பலவன்' என்ற திருக்கோவைத் தொடருக்குப் பேராசிரியர் "நீறணிந்த திருக்கோலம் நெஞ்சம் பிணிக்கும்" எனக் கூறியுள்ளமை நினைத் தற்கு உரியது. நெஞ்சைப் பிணிக்கும் நீற்றுக்கோலங் கண்டும் நெஞ்சுருகாமை பற்றி இரங்குகிறார்.

கில் — ஆற்றலுணர்த்தும் இடைச்சொல். கில்லேன் கில் என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த வினை.

"அவன் தோள் பூசத் திருநீறு என வெளுத்து"

(திருக்கோவையார்-109)

"தவளத்த நீறணியுந் தடந் தோளண்ணல்"

(திருக்கோவையார்-112)

என்பவை முதல்வனுடைய நீறு பூசிய பவளம் போன்ற தோள்களைக் கண்டு, பின் பல்காலும் நினைந்து அடிகள் உருகினர் என்பதைப் புலப்படுத்தும்.

ஞானாசிரியனாய்க் காட்சி நல்கி உருக்கரந்த இறைவன் பிரிவுக்கு உள் உடைந்து உருக வேண்டும் என்பது கருத்து.

34 கிற்ற வாமன மேகெடு வாயுடை
யானடி நாயேனை
விற்றெ லாமிக வாள்வதற் குரியவன்
விரைமலர்த் திருப்பாத
முற்றி லாவிளந் தளிர்பிரிந் திருந்துநீ
யுண்டனை வெல்லாமுன்
னற்ற வாறுநின் னறிவுநின் பெருமையு
மளவறுக் கில்லேனே

**பதப்பிரிவு:**

கிற்றவா மனமே கெடுவாய் உடை
யான் அடி நாயேனை
விற்று எலாம் மிக ஆள்வதற்கு உரியவன்
விரை மலர்த் திருப்பாதம்
முற்றுஇலா இளந்தளிர் பிரிந்திருந்து நீ
உண்டன எல்லாம் முன்
அற்ற ஆறும் நின் அறிவும் நின் பெருமையும்
அளவு அறுக்கில்லேன்ஏ

பொழிப்புரை :

நெஞ்சே! உலகப் பொருள்களையெல்லாந் தனக்கு உடைமையாகவும் உயிரை அடிமையாகவும் கொண்ட இறைவனும், அடிமையாய் நாய் போன்ற என்னை விலைக்குக் கொடுத்து எனக்கு நன்மை யாவும் பெருகுமாறு ஆட்கொள்ளும் உரிமையுடையவனும் ஆகிய சிவபெருமானுடைய மணம் பொருந்திய செந்தாமரைப்பூப் போன்ற திருவடிகளாகிய முதிர்தல் இல்லாத இளந்தளிர்களின் நீங்கியிருந்து முன்பு நீ துய்த்தன யாவும் அழிந்த விதத்தையும் உனது உணர்வையும் வரையறை செய்து மதிக்க இயலாதவன் ஆகின்றேன். நீ செய்த முறை என்னே! நீ கெட்டுவிடுவாய்.

**விளக்கம்**

கிற்றவா—கிற்றவாறு என்பதன் தொகுத்தல். செய்த முறை. கிற்றல்—செய்தல். என்னே என்பது சொல்லெச்சம். விற்றற்கு உரியன் என்றது நெறிப்படுத்த வேண்டிப் பிறப்பித்தல். அதனால் பாசவலி கழன்று முதல்வனை அறியும் தன்மை வரும். விரை மலர்த் திருப்பாத முற்றிலா இளந்தளிர்—மலர் போன்ற திருவடி; திருவடியாகிய இளந்தளிர்—உவமையும் உருவகமுமாய் வந்தன.

இறைவனைச் சேர்ந்தபோது மனம் சிற்றின்ப நுகர்ச்சி நீங்கி வியாபக உணர்விற்கு இடந்தந்து பெருமை உடையதாயிருந்தது. இப்பொழுது உடையானைப் பிரிந்து வருந்தாது இருந்தமையின் சிற்றின்ப நுகர்ச்சியும் சிற்றுணர்வும், சிறுமையும் எய்தி நின்றது என்னுங் கருத்தில் துதிநிந்தையாக முன் உண்டன அற்றதும் நின் அறிவும் நின் பெருமையும் அளவறுக் கில்லேன்! என்று இழித்துரைத்தார்.

தினைத்துணைப் போதும் திருவடியை நீங்கின் விளக்கற்றம் பார்க்கும் இருள்போல் உலக நுகர்ச்சியும், சிற்றறிவும், சிறுமையும் கரணங்கள் மூலம் வந்து ஆன்மாவின் தூய்மையை அழிக்கும் என்பதாம்.

கில்—தல் (கிற்றல்) to be able to (Lexicon) ஆற்றல் கொள்ளுதல்; கிற்பன் × கில்லேன்.

கில் தவா—ஆற்றல் கெடாத—எல்லாப் பொருள் களிலும் விரைந்து சென்று பற்றுகின்ற வலிமை ஒழியாத மனமே, நீ கெடுவாய். கிற்று+அவா+மனம்—கிற்றவா மனம் — ஆற்றலுடைய ஆசையினை மேற்கொண்ட மனம்.

ஏ மனமே உனது ஆசை வலியுடைத்தாக இருக் கின்றது. உன்னால் அதனை வெல்ல முடியவில்லை. ஆதலின் நெஞ்சமே, நீ அழிவாய்.

பின்வரும் கருத்துக்கள் உளங்கொளற்கு உரியவை :—

' குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
பரப்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்டு ''

(இருபா இருப∴து)

' பரந்து வானமுந் திசைகளுங் கணத்தினிற் படர்ந்து
கரந்து செல்லுமென் னெஞ்சினைக் குவித்துநின் கழற்கீழ்
நிரந்த அன்பினால் இருத்திட நிறுத்துநா ளுளதோ
இரந்த அன்பருக் கெளியனுங் குளந்தைவா ழிறையே. ''

(குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி)

விற்றெலாம் மிக ஆள்வதற்குரியவன்:—

இறைவன் ஆண்டான்; உயிர் அடிமை உயிரினை ஆண்டானகிய இறைவன் விற்பதற்கும் ஒற்றிவைப்ப தற்கும் உரியவன்.

"விற்றுக் கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பி ஆட்பட்டேன்"

(சுந்தரர் தேவாரம்-திருஆரூர்)

"ஏன்று கொண்டாய் என்னை யெம் பெருமான்இனியல்லலம் என்னில்
சான்று கண்டாயிவ் வுலகமெல்லாம் தனியேன் என்று என்னை
ஊன்றி நின்றார் ஐவர்க்கு ஒற்றி வைத்தாய் பின்னை யொற்றி யெல்லாம்
சோன்று கொண்டாய் கச்சி ஏகம்பமேய சுடர் வண்ணனே!"

(திருநாவுக்கரசர் திருமுறை 4: கச்சியேகம்பம்)

35 அளவ றுப்பதற் கரியவ னிமையவர்க்
கடியவர்க் கெளியானங்
களவ றுத்துநின் றாண்டமை கருத்தினுட்
கசிந்துணர்ந் திருந்தேயு
முளக றுத்துனை நினைந்துளம் பெருங்களன்
செய்தது மிலைநெஞ்சே
பளக றுத்துடை யான் கழல் பணிந்திலை,
பரகதி புகுவானே.

பதப்பிரிவு:

அளவு அறுப்பதற்கு அரியவன் இமையவர்க்கு
அடியவர்க்கு எளியான்; நம்
களவு அறுத்து நின்று ஆண்டமை கருத்தினுள்
கசிந்து உணர்ந் திருந்தேயும்
உள கறுத்து உனை நினைந்து உளம் பெருங்களன்
செய்ததும் இலை நெஞ்சே
பளகு அறுத்து உடையான் கழல் பணிந்திலை,
பரகதி புகுவானே.

**பொழிப்புரை :**

உள்ளமே! தேவர்களால் மதித்து உணர்தற்கும் முடியாதவனும், ஆனால் தொண்டரால் எளிதிற்பெற்று நுகர்தற்கும் உரியவனும் ஆகிய இறைவன் நம் பொய்ம்மையை நீக்கி நிலைபெற்று அடிமைகொண்ட தன்மையை உள்ளத்திற் கொண்டு உருகித் தெளிந்திருந் தும் வீட்டு நிலையைப் பெறுதற் பொருட்டு(ப்புலன் துய்ப்புப் பொருள்களாக) உள்ளனவற்றை வெறுத்து உன்னை எண்ணி என் அகத்தை அவன் உறைதற் குரிய அகலிடமாக ஆக்கியதுமில்லை. இடையூறுகும் குற்றத்தை ஒழித்து ஆண்டவன் திருவடிகளை வணங் கவுமில்லை.

**விளக்கம் :**

தேவர் முதல்வனை அறியப் புகுவார். அதனால் அவர்க்கு அரியன். அடியார் அன்பால் வழிபடுவர்.

தேவர்களுக்கும் அரியவன்; அடிவர்க்கு எளியவன்; அவர்க்கு எளிதில் அருளுவன் இறைவன்; காண்டல், கருதல், உரை எனப்படும் அளவைகளுக்கு எட்டாதவன், மெய்யுணர்வின் பயனாகவுள்ள அன்பர்க்கே இன்புருவாய் நிற்பான்.

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர் விட்டுள னெங்கள் சோதி"

(திருப்பாசுரம்) தேவாரம்.

"அருமையில் எளிய அழகே போற்றி"

(போற்றித் திரு அகவல்)

உள — வினையாலணையும் பெயர், துய்ப்புப் பொருளா யுள்ளவை. பெருங்களன் — அகலிடம். உனை நினைந்து — நீ அழுக்காறு அவா வெகுளிக்கும் இடம், அன்பு, அறம், திருவருளுக்கும் இடம் என்பதை எண்ணி, அன்பும் அறனும் உடையாய் இறைவன் திருவருளை மறவாதிரு என்பதாம்.

பளகு — குற்றம், கறுத்தல் — வெறுத்தல்

புகுவான் — அடையும் பொருட்டு, வான் ஈற்று வினையெச்சம்.

"உளம் பெருங்களன் செய்ததுமிலை", என்றதனால் அகவழி பாடும், 'கழல் பணிந்திலை' யென்றதனால் புறவழி பாடும் பெற்றாம். "பரகதியாகிய வீடு பேற்றிற்கு அகவழி பாடும் புறவழி பாடும்" இன்றியாமையாதன என்பதாம்.

**36 புகுவ தாவதும் போதர வில்லதும்**
**பொன்னகர் புகப்போதற்**
**குகுவ தாவது மெந்தையெம் பிரா னென்னை**
**யாண்டவன் கழற்கன்பு**
**நெகுவ தாவது நித்தலு மமு தொடு**
**தேனொடு பால்கட்டி**
**மிகுவ தாவது மின்றெனின் மற்றிதற்**
**கென்செய்கேன் வினையேனே.**

பதப்பிரிவு:

புகுவது ஆவதும் போதரவு இல்லதும்
பொன் நகர் புகப் போதற்கு
உகுவது ஆவதும் எந்தை எம்பிரான் என்னை
ஆண்டவன் கழற்கு அன்பு
நெகுவது ஆவதும் நித்தலும் அமுதொடு
தேனொடு பால் கட்டி
மிகுவது ஆவதும் இன்று எனின், மற்று இதற்கு
என் செய்கேன் வினையேன், ஏ?

உரைநடை:

புகுவது ஆவதும் போதரவு இல்லதும் ஆகிய பொன்நகர் புகப் போதற்கு உகுவது ஆவதும் எம் தந்தையும் எம்பிரானும் என்னை ஆண்டவனும் ஆகிய இறைவன் கழற்கு அன்பு நெகுவது ஆவதும்

நித்தலும் அமுதொடும் தேனொடும் (கலந்த) பாலும் (கரும்புக்)கட்டியும் ஆகியவற்றின் சுவையின் மிகுவது ஆவதும் இன்று எனின் இதற்கு வினையேன் என் செய்கேன்?

**பொழிப்புரை :**

சென்றடையத் தக்கதும் திரும்பி வருதல் இல்லாததும் ஆகிய அருட் பேரொளி விளங்கும் சிவபுரத்தை அடைவதற்கு (உலகப்பற்றுச்) சிந்தி ஒழிவதாவதும், எங்கள் தந்தையும் எங்கள் தலைவனும் என்னை ஆட் கொண்டவனுமாகிய சிவபெருமானுடைய திருவடிகளில் அன்பு வைத்து உள்ளம் உருகுதலாவதும், நாள்தோறும் அமிழ்தமும் தேனும் கலந்த பாலும், தீங்கரும்பின் கட்டியும் ஆகியவற்றின் இனிமையினும் மேலான இனிமையைத் துய்த்தலாவதும் நிகழவில்லை என்றால், தீவினையேனாகிய நான் இதற்கு யாது செய்வேன் ?

**விளக்கம் :**

மீட்சியின்றி இறைவன் திருவடியில் ஒடுங்குதலே வீடு. அதனால் அதைப் "புகுவதாவதும் போதரவு இல்லதும்" என்றார். போதரவு—போதல்; போ—பகுதி, த்—எழுத்துப் பேறு, அரவு—தொழிற் பெயர் விகுதி. பொன் நகர்—அழகிய நகர், சிவபுரம்; வீட்டு நிலையை நகராக உருவகஞ் செய்தார். வீடடைதற்கு ஒழிய வேண்டுவதை உகுவதாவது என்றார்; விட வேண்டியவற்றையெல்லாம் தொகுத்து ஒரு தொகுதி யாக்கி உகுவதாவது என்றார். அஃது அகப்பற்று புறப்பற்றுக்களை அறவே விடுதல். புகப்போதல்— நுழையச் செல்லல்.

ஞான குரவனை நீங்கியிருப்பினும் அவன் தந்த அருள் காரணமாக உலகப் பற்று நீங்கி அன்பினால் இன்பம் ஆர்தலில்லையே. ஆர்தலின்மைக்குக் காரணம் என் முன்னை வினையே அன்றோ என எண்ணி இரங்கியதாம்.

37 வினையென் போலுடை யார்பிறராருடை
யானடி நாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்
பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்துநான்
முட்டிலேன் தலைகீறே
னினையன் பாவனை யிரும்புகன் மனஞ் செவி
யின்னதென் றறியேனே!

**பதப்பிரிவு**

வினை என்போல் உடையார் பிறர் ஆர்? உடை
யான் அடி நாயேனைத்
தினையின் பாகமும் பிரிவது திருக்குறிப்பு
அன்று; மற்று அதனாலே
முனைவன் பாதம் நல் மலர் பிரிந்து இருந்தும் நான்
முட்டிலேன்; தலை கீறேன்;
இனையன் பாவனை இரும்பு, கல் மனம் செவி
இன்னது என்று அறியேனே.

**உரை நடை:**

என் போல்(தீ)வினையுடையார் பிறர் ஆர் (உளர்)? அடி (மையாகிய) நாயேனைத் தினையின் பாகமும் பிரிவது (என்னை) உடையானது திருக்குறிப்பு அன்று; மற்று, அதனாலே முனைவனுடைய பாதங்களாகிய நல்ல மலர் களைப் பிரிந்திருந்தும் நான் முட்டிலேன்; தலைகீறேன்; இனையன் பாவனை இரும்பு (ஆகும்); மனம் கல் (ஆகும்) செவி இன்னது என்று (கூற) அறியேன் ஏ.

**பொழிப்புரை:**

என்னைப் போலத் தீவினை செய்தவர் மற்றவர் யார் இருக்கிறார்கள்? (யாரும் இல்லை). கீழான நாய் போலும் என்னைத் தினையின் பகுதி போன்ற மிகச் சிறுபொழுதும் விட்டு விலகி இருப்பது என் ஆண்டவனது திருஉள்ளக்

கருத்து ஆகாது. ஆதலின், முன்னவனும் இறைவ னுடைய திருவடிகளாகிய அழகிய பூக்களைச் சாராது விலகியிருந்தும் (அந் நிலைக்கு வருந்தி) நான் என் தலையைக் கல்லில் மோதிப் பிளந்துவிட வேண்டாமா? அது செய்யவில்லையே. இத்தகைய எனது எண்ணம் இரும்பு போன்று கடினமானதாகும். நெஞ்சம் கல்லைப் போன்றதாகும். (நல்லறிவுரை கேளாத) காது (மரமோ, மண்ணோ) இன்ன பொருள் என்று எனக்குத் தெரிய வில்லை.

விளக்கம் :

பிறர்ஆர்—ஒருவருமிலர் என்பதாம். ஆர்—யார் என் பதன் விகாரம். தினையின் பாகம்—தினையின் கூறு, சிறிதளவு காலப் பகுதியைக் குறித்தது. மற்று—அசை. சிறிது அளவு நேரம் கூட அடிகளைப் பிரிந்திருத்தல் இறைவனுடைய திருவுள்ளக் கருத்தன்று. சிவோகம் பாவனைக்குக் குழைவு வேண்டப்படுவதாகும்.

"கசிந்த தொண்டினெடும் உளத்தவன்தான் நின்ற கலப்பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன் வேறின்றி."

(சிவஞான சித்தியார்)

கசிவும் பணிவும் இன்மையின் சிவோகம் பாவனை கிட்டாதென்பார் பாவனை இரும்பு என்றார். மனம் உருகாமையின் கல்மனம் என்றார். இறைவன் திருப் புகழைக் கேளாத செவி தோட்கப்படாத காது. உலகத்துத் துளைக்கபடாத பொருளொன்று இன்மையின் வன் செவிக்கு உவமை காணாராய் செவி இன்னதென்றறி யேனே என்றார். ஏகாரம் தேற்றம்.

38 ஏனை யாவரு மெய்திட லுற்றுமற்
றின்னதென் றறியாத
தேனை யானெயைக் கரும்பினின் றேறலைச்
சிவனையென் சிவலோகக்
கோனை மானன நோக்கிதன் கூறனைக்
குறுகிலே னெடுங்கால
மூனை யானிருந் தோம்புகின் றேன்கெடு
வேனுயி ரோயாதே.

**பதப்பிரிவு :**

ஏனை யாவரும் எய்திடல் உற்றும் மற்று
இன்னது என்று அறியாத
தேனை ஆன் நெயை கரும்பின் இன் தேறலைச்
சிவனை என் சிவலோகக்
கோனை மான் அன நோக்கி தன் கூறனைக்
குறுகிலேன்; நெடும் காலம்
ஊனை யான் இருந்து ஓம்புகின்றேன்; கெடு
வேன் உயிர் ஓயாது ஏ.

**உரை நடை :**

ஏனை யாவரும் எய்திடல் உற்றும் இன்னது என்று அறியாத என் தேனை ஆன் நெய்யைக் கரும்பின் இனிய தேறலைச் சிவனைச் சிவலோகக் கோனை மான் அன்ன நோக்கி தன் கூறனை நெடுங் காலமாகக் குறுகிலேன்; கெடுவேன் யான் இருந்து ஊனை நெடுங் காலம் ஓம்புகின்றேன்; உயிர் ஓயாது ஏ.

**பொழிப்புரை :**

(தூய மெய்யன்பர் அல்லாத) எல்லோரும் சேர்தற்கு முற்பட்டு வந்தும் இன்ன இயல்பை உடையது சிவம் என்று உணரமாட்டாத எனது தேன் போலும் இனியானை, பசுவின் நெய்போலும் சிறந்தவனை, கருப்பஞ் சாற்றின் இனிய தெளிவு போலும் சுவையுடையவனைச் சிவபெரு

மானைக் கயிலை வேந்தனை மானின் கண்களைப் போலும் கண்களையுடைய மங்கை பங்கனை நீண்ட காலமாக நான் நெருங்கவில்லை; ஊன் உடலைப் பல நாட்களாகப் பேணி வருகின்றேன். அதனால் நான் கெட்டொழிவேன். உயிர் தானும் உடம்பினின்றும் பிரியாது.

**விளக்கம்**

ஏனையாவரும்—மெய்யன்பர் அல்லாத தேவர் மக்கள் எல்லோரும். அன்பரல்லாதார் சிவனை அடையப்புகினும் அவனுடைய இன்பந் துய்ப்பாரல்லர். மெய்யன்பு பேரின்பத்திற்கு ஒருதலையான் வேண்டப்படுவதாகும்.

" இன்பி லினிதென்றல் இன்றுண்டே லின்றுண்டாம்;
அன்பின் நிலையே யது."

(திருவருட்பயன்-80)

பேரின்ப வடிவினன் எனக்குறிப்பிக்க வேண்டி முதல்வனைச் சிவனை என்றார். தனது இன்பினை உயிர்களுக்குக் கொடுக்கும் பேரருளினின்றும் என்றும் பிரியாதவன் என்பார், மானன நோக்கிதன் கூறனை யென்றார், குறுகுதல்—அணைதல்.

" உடம்பைத் தொலைவித் துன்பாதந் தலைவைத்த உத்தமர்கள்"

(அப்பர் திருமுறை-4)

" மற்றுந் தொடர்ப் பாடெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பும் மிகை. "

(திருக்குறள்)

" ஊனைக் காவல் கைவிட்டுன்னை
உகப்பார் உணர்வாரே. "

உடற்பற்றொழிய வேண்டுமென்பார், ஊனை யானிருந்து ஓம்புகின்றேன் என்றார்.

ஒய்தல் —உடம்பின் வயப்படாது திருவருளைப் பற்றுதலும் ஆம். உயிர் ஒய்தலைப் பின்வரும் திருவருட்பயன் திருவாக்குகள் இனிது விளக்குவன :

"ஓராதே ஒன்றையும்உற் றுன்னுதே நீ முந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்" (58)

"களியே மிகுபுல னுக்கருதி ஞான
ஒளியே ஒளியா ஒளி" (59)

"ஓங்குணர்வின் உள்ளொடுங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு? சொல்." (91)

**39 ஓய்வி லாதன வுவமனி லிறந்தன**
**ஒண்மலர் தாடந்து**
**நாயி லாகிய குலத்தினுங் கடைப்படு**
**மென்னை நன்னெறிகாட்டித்**
**தாயி லாகிய வின்னருள் புரிந்தவென்**
**றலைவனை நனிகாணேன்**
**றீயில் வீழ்கிலேன் றிண்வரை யுருள்கிலேன்**
**செழுங்கடல் புகுவேனே.**

*பதப்பிரிவு :*

*"ஓய்வு இலாதன; உவமனில் இறந்தன*
*ஒள்மலர்த் தாள் தந்து*
*நாயில் ஆகிய குலத்தினும் கடைப்படும் என்னை*
*நல்நெறி காட்டித்*
*தாயில் ஆகிய இன் அருள் புரிந்த என்*
*தலைவனை நனிகாணேன்,*
*தீயில் வீழ்கிலேன் திண்வரை*
*உருள்கிலேன் செழும்கடல் புகுவேன்ஏ?"*

*உரைநடை :*

*ஓய்வு இலாதன, உவமனில் இறந்தன, ஒள் மலர் போன்ற தாளைத் தந்து நாயில் ஆகிய குலத்தினும் கடைப்படும் என்னை நல் நெறியைக் காட்டித் தாயில் ஆகிய இன் அருளினைப் புரிந்த எனது தலைவனை நனி காணேன். தீயில் வீழ்கிலேன்; திண்மையாகிய வரையினின்றும் உருள்கிலேன்; செழும் கடலினுள் புகுவேன் ஏ.*

பொழிப்புரை :

அழிவில்லாதனவும் ஒப்புமைகளைக் கடந்தனவும் ஆகிய அறிவொளி வீசும் செந்தாமரைப்பூப் போலும் திருவடிகளை இரக்கத்தோடு கொடுத்து நாய்ப்பிறப்பினும் கீழான பிறப்புள்ள எனக்கு வீட்டு நெறியாகிய ஞான நெறியைக் காட்டித் தாய் காட்டும் அன்பினும் சிறந்த அறக்கருணையை உவந்து அளித்த எனது ஆண்டவனைக் கண்ணாரக் காணவில்லை. (இதற்காக வருந்தி) நெருப்பினுள் விழுந்து எரிந்து ஒழியவில்லை. உறுதியான மலைமேல் நின்று புரண்டு விழவில்லை; நீர்வளம் மிகுந்த கடலினுள் விழுவேனோ? (விழமாட்டேனே!)

விளக்க உரை :

இறைவன் திருவடிகள் அழிவில்லாதன. தமக்கு ஒப்பில்லாதன.

"மன்னும் ஏதுக்களாலெனும் வாய்மை தான்
தன்னதொப்பு வேறின்மை யிற் சங்கரன்
இன்ன தன்மை யனென்றே து எடுத்துக் காட்டு
அன்னவற்றால் அளப்பிலன் என்பதாம்"

(திருத்தொண்டர் புராணம்)

நனி – உரிச்சொல், ஈண்டுக் காலமிகுதி நெடுநாளாக என்பது பொருள்.

இன் அருள் — அறக் கருணை.

கருணை அறக் கருணை, மறக் கருணை என இரு வகைப்படும்; ஞானப்பால் கொடுத்து ஆட்கொள்ளல், ஞானசிரியனாக வந்து ஆட்கொள்ளல் இவைகள் அறக் கருணையாகிய இன்னருள்.

சூலை கொடுத்து ஆளுதல் போன்றவை மறக் கருணை. இன்னருள்புரிந்த தலைவனை நனி காணாத பிரிவாற்றாமையால் உயிர் வாழாமை தக்கது என அடிகள்

கருதுகிறார்கள். உயிர் விடுவதற்குத் தீப்பாய்தல், மலையினின்றும் உருளுதல், கடலில் விழுதல் என்பவை போன்ற உயிர் துறக்குஞ் செயல்களைச் செய்யாது குருவடிவில் வந்தருளிய இறைவனைப் பிரிந்து வாழ்தலை அடிகள் பெரிதும் வெறுக்கின்றார்.

செங்கடல்—நீர்ப்பெருக்குள்ள கடல். செழுமை ஈண்டு நீர்வளத்தையே குறிக்கும் ஆழ்ந்து உயிர் நீத்தற்கு வெள்ளப் பெருக்கே ஏதுவா மாதலின்.

**40 வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடு**
**மதுதனை நினையாதே**
**மானி லாவிய நோக்கியர் படிறிடை**
**மத்திடு தயிராகித்**
**தேனி லாவிய திருவருள் புரிந்தவென்**
**சிவனகர் புகப்போகேன்**
**ஊனி லாவியை யோம்புதற் பொருட்டினு**
**முண்டுடுத் திருந்தேனே.**

**பதப்பிரிவு:**

வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடும்
அதுதனை நினையாதே
மான் நிலாவிய நோக்கியர் படிறு இடை
மத்து இடு தயிர் ஆகி
தேன் நிலாவிய திரு அருள் புரிந்த என்
சிவன் நகர் புகப் போகேன்
ஊனில் ஆவியை ஓம்புதல் பொருட்டு இனும்
உண்டு உடுத்து இருந்தேன் ஏ.

உரைநடை ;

தேன் நிலாவிய திரு அருள் புரிந்த எனது சிவபெருமானது நகரினுள் புகப்போகேன்; வேனிற் காலத் (தலைவணுகிய) வேளினுடைய கணை கிழித்திட மதிசுடும் அதுதனை நினையாது, மான் நிலாவிய நோக்கிய

—24.

ருடைய படிறு இடை மத்து இடு தயிர் ஆகி ஊனில் (நிறுத்தி) ஆவியை ஓம்புதல் பொருட்டு இன்னும் உண்டு உடுத்து இருந்தேன்.

பொழிப்புரை :

தேனின் தன்மை பொருந்திய திருவருளை உவந் தளித்த சிவபிரானது இடமாகிய இன்புறு நிலையை (அதீதநிலை) அடைதற்குரிய வழியில் நில்லா தவனாய் இளவேனிலைத் தன் செயலுக்குத் துணையாகக் கொள்ளும் மன்மதனுடைய மலராகிய அம்பு நெஞ்சைப் பிளக்க, அப்புண்ணில் திங்களின் கதிர் கனல்போலச் சுட, அதனை எண்ணாமல், மான் பார்வை போன்ற மருண்ட பார்வையுடைய மாதரின் வஞ்சகத்தினுட்பட்டு மத்தை வைத்துக் கடையப்படுகின்ற தயிர் போல் அறிவு கலங்கி என்னுடைய உடலில் உயிரை வைத்துப் போற்றுவதற்காக உணவருந்தியும் உடை உடுத்துமே இருந்தேனே. (என் செயல் இருந்தவாறு என்னே!)

**விளக்கம் :**

தேன் நிலாவிய இன்னருள் — தேனின் தன்மை விளங்கிய இனிய கருணை. தேன், ஆனெய், கரும்பின் தேறல் இவை மூன்றினும் தேன், மிகப் பொருந்திய உவமையாதலின் முன்னைய செய்யுளிற் கூறிய மூன்று உவமைகளிலிருந்து இதனை விதந்து எடுத்து அடிகள் கூறுகிறார். தேனை மலரிலிருந்து பிலிற்றல்போல் இறைவன் மலர்த்தாள்களிலிருந்து அருளாகிய தேன் துளிக்கின்றது. ஆனெய், கருப்பஞ்சாறு முதலியன போலக் காய்ச்சித் திரித்துக் கடைதலும் துணித்துப் பிழிந்து காய்ச்சலும் செய்ய வேண்டாது நேரே ஈக்களால் ஆக்கப்பெற்றுக் கிடைப்பது தேன். முதல்வன் இன்பக் கருணையும் அது போன்றது.

"மன்பெ ருந்திரு மாமறை வண்டுசூழ்ந்(து)
அன்பர் சிந்தை அலர்ந்த செந்தாமரை
நன்பெ ரும்பர மானந்த நன்மது
என்த ரத்தும் அளித்தெதிர் நின்றன."

(திருத்தொண்டர் புராணம்)

புரிதல் — விருப்பொடு செய்தல், எப்பொழுதும் செய்தல். சிவபிரான் தமக்கு அருளாசிரியத் தந்தையாம் உரிமை பற்றி 'என் சிவன்' என்றார்.

புகப்போகேன் இருந்தேன். போகேன் — முற்றெச்சம். வேள் இருவர் செவ்வேள் கருவேள் என. செவ்வேள் — முருகன். கருவேள் — மன்மதன். வேனில் வேள் — வேனிற் காலத்துக்கு உரிமையுள்ள மன்மதன். அறிவுத் திண்மையைப் பிளந்திடும் என்பார் 'வேள் கணை கிழித்திட' என்றார். வேளம்பு கிழித்துப் புண்ணுற உள்ளத்தைத் திங்கட் கதிர்த் தீப்போலச் சுடும் என்றார் காதல் நோயின் கடுமை பற்றி. பெண்களின் பிணை நோக்குக் கள்ள நோக்காய் ஆடவர் நெஞ்சத்தைக் கலக்கித் தத்தளிக்கச் செய்தலின், **நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகி** என்றார். தொழிலுவமும் பண்புவமும் ஆம். இத்துணைத் துன்பத்திலும் பேரின்ப நிலையிற் செல்லாது சிற்றின்பங் கருதி உண்டுடுத்தி ஊனோம்பி உயிர்வாழ்கின்றேன் என்பார் 'உண்டுடுத் திருந்தேனே என்றார்.

ஏகாரம் தனது அறியாமைக்கு இரங்குதலைக் காட்டலின், இரக்கப் பொருளில் வந்தது.

தயிராகி — தயிர் போன்று. ஆதல் போலுதல். 'ஆள்வாரின் மாடாவேனோ', என்பதிற் போல.

படிறிடை — படிற்றிடை, செய்யுளாகலின் றகர ஒற்று இரட்டித்திலது.

உ
திருச்சிற்றம்பலம்

# 5. கைம்மாறு கொடுத்தல்

தன்னைச் சிவனிடத்தே கொடுத்தல் (பழையவுரை)

"மாரி மாட் டென்னாற்றுங் கொல்லோ வுலகு?" என்பதற்கு இணங்க இறைவன் பேரருட் கருணை ஒரு தகுதியுமில்லாத தமக்குக் கிடைத்தமைக்கு யாதொரு நன்றியும் செய்ய இயலாதிருக்கின்ற நிலைமையை எண்ணி வருந்துதலை இப்பதிகத்தில் அடிகள் புலப்படுத்துகிறார். "தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னை" என அடிகள் (கோவில் திருப்.–10) கூறுவதினின்றும் இறைவன், ஆண்டவனும் தாம் அடிமையும் ஆகிவிட்டதை உணர்ந்திருந்தமை புலப்படும். எனவே, "உன்னைத் தந்த வுனக் கென்னையும் நான் தந்தேன்" எனக் கூறத்துணியாத நிலைமையிலிருந்து அடிகள் வருந்துகிறார். குருமூர்த்தியாய் வந்து ஆட்கொண்டு நின்று பிரிந்த இறைவனுக்கு விருப்பான செயல்களைச் செய்து தாம் செய்ந்நன்றி மறவாதவர் எனத் தாமே மனநிறைவு கொள்வதற்கும் ஏலாத தம் எளிமை கண்டு அடிகள் கலங்கும் தன்மை இப்பதிகத்தில் உணர்த்தப்படுகின்றது.

"அன்றே என்றன் ஆவியும் உடலும் உடமை யெல்லாமுங்
குன்றேயனையாய் என்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ"
(திருவாசகம்: குழைத்தபத்து 7)

குருவடிவில் வந்து ஆட்கொண்ட போதே உடல் பொருள் ஆவி மூன்றினையும் கொடுத்து விட்டார் அடிகள்.

கலி விருத்தம்.

42 இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெவ்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே.

**பதப்பிரிவு :**

இருகை யானையை ஒத்து இருந்து என் உளக்
கருவை யான் கண்டிலேன் கண்டது எவ்வமே
வருக என்று பணித்தனை வான் உளோர்க்கு
ஒருவனே கிற்றிலேன் கிற்பன் உண்ணவே.

**உரைநடை :**

வான் உளோர்க்கு ஒருவனே! யான் இருகை யானையை ஒத்து இருந்து என் உள்ளக் கருவைக் கண்டிலேன்; கண்டது எவ்வமே. (எனினும்) வருக என்று பணித்தனை. (அதற்கும்) கிற்றிலேன்; (ஆனால்) உண்ணவே கிற்பன்.

**பொழிப்புரை :**

விண்ணுலகில் உள்ள தேவர்கட்குத் தனித் தலைவனே! நான் இரண்டு கைகளையுடைய யானையைப் போல நன்றி மறந்தவனாய் வாழ்ந்து, என்னுடைய மனத்துள் யாவற்றுக்கும் மூல காரணனாய் விளங்கும் உன்னை உணர்ந்து தெளியவில்லை. நான் பெற்றது துன்பமே. எனினும் (எனக்குக்காட்சி அளித்து) வருக என்று கட்டளையிட்டருளினை. அதற்கிணங்க இவ்வுலக நுகர்வினை விட்டுச் சிவானுபவ நுகர்ச்சி தலைப்படும் ஆற்றல் எனக்கு இல்லை. என்னுடலினை வளர்க்கும் புலனுகர்ச்சியிலேயே ஆற்றல் மிக்கேன்.

**விளக்கம்:**

"அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி"

(சிவஞான போதம்)

"பெருந்துன்பத்துக்கு இலக்காகிய இவ்வுடம்பின் வைத்து ஆன்மாவையும் பரமான்மாவையும் ஆராய்ந்து" உடம்பின் வைத்து அதனை ஆக்கிய உள்ளிருந்து

இயக்குகின்ற இறைவனை நாடவேண்டும். இத்தகைய உடலைப் பேராற்றலுடையரானன்றிப் படைக்கமுடியுமா? இத்தகைய உடலை எவ்வுயிரேனும் படைக்கும் ஆற்றலுடையதா? உடலில் உயிரைப் புகுத்த வல்லதா? பிரிவதைத் தடுக்க வல்லதா? "இவைகள் யாவும் செய்கின்றவன் எல்லா உயிரினும் மேம்பட்ட பராபரன்" என்று இவ்வாறெல்லாம் நாடிக் காணின் கடவுளின் உண்மையும் பெருமையும் காணப்படும். உடலை வைத்து உயிரையும் இறைவனையும் நாடாது உயிர் படுகின்ற துயரினை மட்டுங் கண்டிருத்தல் அறியாமை யாகும் என்பார், 'இருகை யானையை ஒத்திருந்து என் உளக் கருவை யான் கண்டிலேன்; கண்டது எவ்வமே' என்றார். வானோர்க்கு ஒப்பற்ற தலைவனாக இருந்து அவர்கள் துய்க்கின்ற புண்ணியப் பயனாகிய இன்பத்தை ஊட்டுகிறான் இறைவன். ஆதலின் **விண்ணுளோர்க் கொருவனே** என்றார்.

இருகை யானை—இல் பொருளுவமம். என்னிரு கைகளால் உணவை ஈட்டியும் நுகர்ந்தும் உணர்வின் முதலைக் கண்டுணர முயலாது நிற்றலின் **இருகை யானையை ஒத்திருந்து** என்றார். உள்ளக்கரு—மனத் தகத்து விளங்கும் உயிருக்குயிராகிய முதற் பொருள். கடவுளை அகக்கண்ணாற் கண்டு இன்புறாது உலகப் பொருள்களை ஊனக்கண்ணாற் கண்டு அவற்றால் துன்புற்றேன் என்பதாம். உலகப் பொருள்கள் இன்பங் கொடுப்பனபோற் காட்டித் துன்பமே விளைக்கும். கைகூப்பி வணங்குதற்கு இறைவன் இருகைகள் கொடுத்திருந்தும் கடவுளைக் கைகூப்பித் தொழாது ஒரு கையுடைய யானைபோல உலகப் பொருள்களின் களிப்பால் மதம்பிடித் தலைந்தேன். யானை செய்ந்நன்றி மறந்து பாகனைக் கொல்லச் சூழ்வதுபோல நானும் எனக்கு உயிர்க்குயிராயிருந்து போகப் பொருள்களையெல்லாம் படைத்துத் தந்து உதவிபுரியும் என்னை இயக்குநனாகிய கடவுளை மறந்திருக்கிறேன் என்பதாம். யானை தனது

பேருடலுக்கு இரை தேடிக் காடெங்கும் திரிவதுபோல, நானும் பொருள்தேடி ஓடிக் காலோய்கிறேன் என்பதும் பொருந்தும். வாழ்முதலாகிய பொருளாதலின் கடவுள் **'உளக்கரு'** எனப்பட்டார்.

இப்படிப்பட்ட கடையனுகிய என்னையும் வருக என்று கட்டளையிட்டமை கருணையின் காரணமாக ஆகும்.

"வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப் பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்று அடிகள் திருக்கோத்தும்பியில் அருளியதும் காண்க.

கில் — பகுதி, கிற்றிலேன் = கில் + இல்+ஏன்; ற்—இறந்த கால இடைநிலை, இல் எதிர்மறை இடைநிலை; ஏன் தன்மை ஒருமை வினைமுற்று விகுதி. கில் ஆற்ற லுணர்த்தும் இடைச் சொல்.

கிற்பன்—ஆற்றலுடையேன், உடன்பாட்டு வினை முற்று.

கிற்றிலேன் — ஆற்றலிலேன், எதிர்மறை வினை முற்று.

உண்ணவே—ஏகாரம் பிரிநிலை.

எனக்கு உடம்பைப்பேணி வளர்த்தலே நோக்கமாக உள்ளது என்பார் **உண்ணவே கிற்பன்** என்றார்.

நின்னிடத்து வருக எனக் கட்டளையிட்டாய்; ஆனால் நான் வரமுடிய வில்லை; வருதற்கு வேண்டப்படும் ஒரு நெறிப்பட்ட உணர்வும், தன்னிழப்பும், உண்மையன்பும் எனக்கு நிகழவில்லையே என்றபடி.

ஞானசிரியனாக எழுந்தருளி வரும் இறைவனை இருகை யானை என்று சொல்வது மரபு. முதல்வனாகிய இறைவனே, மானுடச்சட்டை சாத்திக் குருமூர்த்தமாக அடிகளுக்கு முன் எழுந்தருளினான். அம் மூர்த்தத்தை இடைவிடாது நினைத்து நினைத்து அதனோடு இரண்டறக் கலந்து அதுவது தானாகப் பாவித்தமையின் இரு கை யானையை ஒத்து என்றார்.

இறைவன் அடிகளைத் தில்லைக்கு வா எனப் பணித்து மறைந்தனராதலின் இப்பாடலில் 'வருக என்று பணித்தனை' என்றும், அடுத்த பாடலில் 'கண்டுங் கண்டிலேன் என்ன கண்மாயமே', என்றும் அடிகள் திருவாய் மலர்ந்தருளுகிறார்.

இரு கைகளுடைய ஓர் அந்தணர் வடிவில் இறைவன் வந்தான் என்பது,

"அதிர்மறைக் கப்பாலார் ஓர் அந்தணவடிவங் கொண்டார்"

தெருளிரவுரவத்துள்ள சிவஞான போதந் தாங்கி
அருளிடக் கரங்கவித்து ஞானமுத் திரையமைந்த
பொருள்வலக் கைவிளங்கப் புன்னகை முகத்தரும்ப
மருளற வீற்றிருந்தார் மாலயன் தேடிக் காணார்"

(திருப்பெருந்துறைப் புராணம்,
உபதேசப்படலம்.)

42 உண்டொ ரொண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டி ராணலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலே னென்னகண் மாயமே.

பதப்பிரிவு :

உண்டு ஓர் ஒள் பொருள் என்று உணர்வார்க்கு எலாம்
பெண்டிர் ஆண் அலி என்று அறி ஒண்கிலை;
தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்;
கண்டும் கண்டிலேன்; என்ன கண்மாயமே.

உரைநடை :

ஓர் ஒண் பொருள் உண்டு என்று உணர்வார்க்கு எல்லாம் பெண்டிர், ஆண், அலி என்று அறிய ஒண்கிலை; தொண்டனுகிய எனக்கு உள்ளவாறு வந்து தோன்றினுய். ( அத்திருவுருவைக் ) கண்டும் கண்டிலேன் ஆனேன் ( இது ) என்ன கண்மாயமே?

பொழிப்புரை :

ஒப்பற்றதோர் ஒளிவடிவப் பொருள் என்றும் உள்ளது என உள்ளத்துக் கொள்வார் யாவர்க்கும், அப் பொருளாகிய நீ பெண் அல்லது ஆண், அல்லது அலி என உணர முடியாத தன்மையுடையை, அடிமையாகிய எனக்கு நீ உன் இயல்பு இருக்கின்ற முறையை வந்து காட்சியால் அளித்தாய். நான் அவ்வடிவைக் கண்டும் காணுதவனுயிருக்கிறேன். இஃது என்ன தோற்றத்தின் மயக்கமோ அறியேன்.

விளக்கம் :

ஒப்பற்ற அறிவொளிப் பொருள் ஒன்று உண்டு என்று பதி உண்மை கொள்ளல் ஒரு சிறந்த பேறு. கடவுள் உண்மை கொள்ளாதானை நாயனுர் பேய் என்றுர்.

" உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்."

" அண்டம் ஆரிருளூடு கடந்தும்பர்
உண்டு போலும் ஓர் ஒண்சுடர் அச்சுடர்
கண்டிங் காரறிவார் அறிவாரெலாம்
வெண்டிங்கட் கண்ணி வேதியன் என்பரே "

(திருக்குறுந்தொகை)

" தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
முனிவிலாததோர் பொருளது கருதலும் "

(திருவாசகம்: போற்றித் திருஅகவல்)

இறைவன் அருள் வடிவினனாதலின் பெண்மையன்; எல்லாம் வல்லனாதலின் ஆண்மையன். ஆண் தன்மையும் பெண் தன்மையும் திரிந்த உருவினனாதலின் அலிப் பெற்றியன்.

அலியினைத் 'தன்மை திரி பெயர்' என்பர் தொல்காப்பியர்.

"பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரி பெயர் உறுப்பின் கிளவி"

(தொல்காப்பியம்-சொல். 56)

"தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண் ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானும் கண்டேன் காண்க
சிவ னென யானும் தேறினன் காண்க"

(திருஅண்டப்பகுதி)

பெருந்துறைப் பெம்மான் தனது அருளாசிரிய வடிவங் காட்டி மறைத்துக் கோடலின் கண்டுங் கண்டி லேன் என்கிறார் அடிகள்.

உலகத்தை ஆக்கி நிறுத்தி அழிக்க ஓர் அறிவுடைப் பொருள் வேண்டப்படும் என்னும் ஆராய்ச்சியறிவிற் பதிப் பொருளுண்மை மாத்திரையே அறியப் பெறும். அதன் சிறப்பிலக்கணம் அநுபூதியிற் சிவஞானத்தால் அறியப்படுவது.

43 மேலை வானவ ரும்மறி யாததோர்
கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோங்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே.

**பதப்பிரிவு:**

மேலை வானவரும் அறியாதது ஓர்
கோலமே எனை ஆட்கொண்ட கூத்தனே
ஞாலமே விசும்பே இவை வந்து போம்
காலமே உனை என்று கொல் காண்பதே.

உரைநடை :

மேலை வானவரும் அறியாதது ஆகிய ஓர் கோலமே! எனை ஆட்கொண்ட கூத்தனே! ஞாலமே! விசும்பே! இவை வந்து போம் காலமே! உனை என்று காண்பது கொல்?

**பொழிப்புரை :**

தேவர்களிற் சிறந்த நிலையையுடைய அயன் மால் முதலியவர்களும் தெரிந்து கொள்ளாததாகிய ஒரு திரு உருவமே! என்னை அடிமையாகக்கொண்ட கூத்தாடும் பெருமானே! நிலமும் வானமும் ஆகிய இவை தோன்றி மறைதற்குத் துணையான காலவடிவினனே! உன்னைப் பார்ப்பது எந்த நாளிலோ? (அறியேன்.)

**விளக்கம்:**

புண்ணியஞ் செய்து அதிகார ஆற்றல் பெற்றவர் களாதலின் அயனும் மாலும் மேலை வானவர் எனப் பட்டனர். வானவரும் – உம்மை சிறப்புப்பொருளது. ஓர் கோலம்—ஒப்பற்ற அழகுரு, கூத்தன் திருவுருவம் ஐந்தொழில் புரிதலை விளக்கும் திருவுருவமாகும். கூத்தப் பெருமான் திருவுருவம் கோலந்திகழும் வடிவமாதலின் அழகிய கூத்தர் என்று நடன வேந்தர்க்குப் பெயருண்மை காண்க. இறைவனுடைய அழகுப்பண்பும் திருக்கூத்தும் மெய்யன்பர்களால் நியமமாக நினைக்கப்படும்.

"பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி ஆடலே நினைப்பதே நியமமே."

(மூன்றாந் திருமுறை)

ஞாலமே விசும்பே — ஏகாரம் எண்ணுப் பொருளில் வந்தது. இடைக்கண் நின்ற பூதங்களும், காலத்திற்குக் கீழ் உள்ள பிற தத்துவங்களும் உபலக்கணத்தாற்

கொள்ளப்படும். இத்தத்துவங்களிற் கலந்து நின்று செலுத்தி உயிர்க்கு அறிவு, இச்சை, செயல்களை விளக்குகிறுன் முதல்வன். படைத்தல், காத்தல், அழித்தல்களுக்குத் துணைக் காரணமாய் நிற்கும் காலமும் இறைவன் கலந்து நிற்கின்ற ஒரு தத்துவமாகும்.

"காரணன் விதியினுக்குக்
காலமும் கடவுளேவ லாற்றுணைக் காரணங்காண்"

(சிவஞான சித்தியார்)

**வந்து போம்:** வந்து நின்றுபோம் என நிற்றலையும் கூட்டிக் கொள்க.

குருவடிவில் தோன்றி இவ்வுண்மைகளை யெல்லாம் தெளிய வைத்து மறைந்த உன் அருட்கோலத்தை இனிக் காண்பது என்றோ என வருந்துகிறுர் அடிகள்.

கொல் – அசை.

44 **காண லாம்பர மேகட் கிறந்ததோர்**
**வாணி லாப்பொரு ளேயிங்கொர் பார்ப்பெனப்**
**பாண னேன்படிற் றுக்கையை விட்டுனைப்**
**பூணு மாறறி யேன்புலன் போற்றியே.**

பதப்பிரிவு:

காணல் ஆம் பரமே கட்கு இறந்தது ஓர்
வாள் நிலாப் பொருளே இங்கு ஓர் பார்ப்பு எனப்
பாணனேன் படிற்று ஆக்கையை விட்டு உனைப்
பூணும்ஆறு அறியேன் புலன் போற்றியே.

உரைநடை:

காணல் ஆம்பரமே கண்ணுக்கு இறந்ததாகிய ஓர் வாள் நிலாப் பொருளே! இங்கு ஓர் பார்ப்பு எனப் பாணனாகிய நான் புலன்களைப் போற்றிப் படிறு ஆகிய ஆக்கையை விட்டு உன்னைப் பூணுமாறு அறியேன்.

பொழிப்புரை :

உயிர்க்குப் பக்குவம் வந்த போது பதிஞானத்தால் காட்சி பெறத்தக்கதாகிய பரம்பொருளே! கண்பார்வைக்கு எட்டாது கடந்து நிற்கும் ஒப்பற்ற ஒளி விளங்குகின்ற பொருளே! இவ்வுலகில் ஒரு பறவைக் குஞ்சு முட்டையைத் தனியே தள்ளிவிட்டு அதினின்றும் பறந்து சேறல் போல பயனற்ற வீண் வாழ்க்கையேன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புல இன்பங்களைக் காத்து நீக்கிப் பொய்த் தன்மைத்தாய் நிலைபேறில்லாத இவ்வுடலை ஒழித்துவிட்டு வெளிப்பட்டு மெய்யாகிய உன்னைப் பொருந்தி உன் திருவடிகளைத் தலைமேற் சூடும் நெறியைத் தெரிந்திலேன்.

விளக்கம் :

பரம்பொருள் கட்புலனுக்குப் புலப்படுவான் அல்லன்; பதிஞானத்தால் அன்பு நிறைந்த உணர்வில் நேர்பெற வருபவன்.

''பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப்
பதிஞானத்தாலே நேசமொடும் உள்ளத்தே நாடி''

(சிவஞானசித்தியார்)

நூலறிவு பாசஞானம். நான் பிரமம் என்னும் செருக்குணர்வு பசுஞானம். பதிஞானம் அருட்கண்ணாற் காண்டல்.

வாள் நிலாப்பொருள் – குளிர்ந்த ஒளிப்பொருள்.

''ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழ லாம்பதிவிதி யெண்ணும்அஞ் செழுத்தே''

பதிஞானம் பிறவி வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாகும். குளிர்ச்சியைக் குறிக்க நிலாப்பொருள் என்றார். பறவைக்குஞ்சு முட்டையை விட்டு எங்கும் பறந்து செல்வது போல, அடிகளும் ஊனுார் உடலை விட்டு இறைவன் அருள் நிறைவில் 'கலங்கும் நெறி தெரிந்திலேன்' எனக் கவல்கின்றார். படிறு – வஞ்சம், பொய். பாழ் நன் – பாணன். பூணுதல் — இறைவன் திருவடிகளைத் தலைக்கு அணியாக அணிதல். ஐம்புல இன்பங்களையே பேணி நுகர்தலால், ஒரு பறவைக்குஞ்சு முட்டையை விடுதல் போல இப்பொய்யுடலை விட்டு உன்னை அடைந்து உன் திருவடிகளை அணையும் அறிவு பெற்றிலேன் எனவும் கொள்ளலாம்.

புலன் போற்றி என்பதற்குப் பாதுகாவலுடன் புலன்களை நீக்கி எனப் பொருள் கொள்க.

**45 போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்து நின்**
**றாற்றன் மிக்கவன் பாலழைக் கின்றிலே**
**னேற்று வந்தெதிர் தாமரைத் தாளுறும்**
**கூற்ற மன்னதோர் கொள்கையென் கொள்கையே.**

**பதப்பிரிவு**

போற்றி என்றும் புரண்டும் புகழ்ந்தும் நின்று
ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன்
ஏற்று வந்து எதிர் தாமரைத் தாள் உறும்
கூற்றம் அன்னது ஓர் கொள்கை என் கொள்கையே.

உரை நடை:

மனத்தால் போற்றி என்றும் உடலால் புரண்டும் நாவினால் புகழ்ந்தும் அன்பு நெறியில் நின்று ஆற்றல் மிக்க அன்பால் அழைக்கின்றிலேன் (இத்தகைய) என் கொள்கை எதிர் ஏற்று வந்து உன்னுடைய தாமரைத் தாளில் உறும் கூற்றம் அன்னது ஓர் கொள்கையாம்.

பொழிப்புரை :

எனது உள்ளத்தால் காத்தருள்க எனக் கருதியும், யாக்கையால் உருண்டு வலம் வந்தும், வாயால் வாழ்த்தியும் இவ்வாறு மனம், மெய், மொழிகளாற் செய்யப்படும் வழிபாட்டில் உறைத்து நின்று, உறுதியான மெய்யன்பால் நின்னை என்னிடை வந்து அருள்க எனக் கூப்பிட்டு அழையாமலிருக்கிறேன். அருளென அழைத்தல் நின் திருவடிப் பேற்றிற்கு உரிய நேரான முறை. இதனைக் கடைப்பிடியாத நான் மற்றொரு கொள்கையைக் கருதுகிறேன். அஃதென்னையெனின் இயமன் உன்னுடைய ஆணையை நிறைவேற்றுவதில் உன்னுடைய திருவுள்ளக் குறிப்பிற்கு மாறாக எதிர்த்து வந்தான்; அதனால் உன்னுடைய தாமரை மலர்போன்ற திருவடியால் உதைக்கப்பட்டுத் திருத்த முற்றான். இயமனது கொள்கையை ஒத்த ஒரு கொள்கையே எனது கோட்பாடாகும்.

விளக்கம் :

இறைவன் அவரவர் தகுதிக்கேற்ப அறக் கருணையும் மறக்கருணையும் புரிதலைப் பின்வரும் தேவாரம் உணர்த்தும்.

சாட எடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை
வீட எடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட எடுத்தது தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன்றே நம்மை ஆட்கொண்டதே.

(திருநாவுக்கரசர்)

இயம தூதர்க்கு இறைவன் ஆணையை அப்பர் தெரிவிக்கிறார் :—

"படையும் பாசமும் பற்றிய கையினீர்
அடையன் மின்நம தீசன் அடியரை
விடைகொள் ஊர்தியி னன்அடி யார்குழாம்
புடைபு காதுநீர் போற்றியே போமினே."

இவ்வாணைக்கு மாறாக மார்க்கண்டேயராகிய சிவனடியார் மேல் இயமன் சென்றதனால் சிவபெருமானுடைய காலால் உதைக்கப்பட்டான். அறக் கருணையால் ஆட்கொள்ளல் இல்லையாயின், மறக்கருணையால் தம்மைத் திருத்தியாவது ஆட் கொள்ளவேண்டும் என்கிறார் மணிவாசகர்.

**46 கொள்ளும் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி**
**கள்ளும் வண்டு மறுமலர்க் கொன்றையா**
**னள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளு**
**மெள்ளு மெண்ணெயும்போ னின்ற வெந்தையே..**

பதப்பிரிவு :

கொள்ளும் கில்எனை அன்பரின் கூய்ப்பணி
கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான்
நள்ளும் கீழ்உளும் மேல்உளும் யாஉளும்
எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தையே

உரை நடை :

யாவுளும் நள்ளும் கீழ்உளும் மேல் உளும் எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தை, கள்ளும் வண்டும் அறு(த) மலர்க் கொன்றையான் என்னை அன்பரின் கூய்ப் பணி கொள்ளும்.

**பொழிப்புரை:**

எல்லாப் பொருள்களிடத்தும் நடுவிலும் கீழும் மேலுமாக எள்ளும் அதன்கண் பரவி நிறைந்துள்ள எண்ணெயும் போல நிறைந்து இரண்டறக் கலந்து நிலை பெற்ற என் தந்தையாகிய சிவபெருமான் தேனும் அதனை உண்ணும் வண்டும் நீங்காத கொன்றைப் பூமாலையை அணிந்தவன். அவன் யாதொரு வன்மையும் இல்லாத என்னைத் தன் தொண்டர்களை ஆட்கொள்ளுதல் போலக் கூவி அழைத்து ஆட்கொள்ளுவானா?

விளக்கம் :

**யாவுளும்** – இயங்குதிணைப் பொருள்களும் நிலைத் திணைப் பொருள்களுமாகிய எல்லாப் பொருள்களிலும் வியாபகம் இரு வகைப்படும். அவை உடனிலை நிறைவு, பற்று நிலை நிறைவு.

இவ்விரண்டினில் இறைவனுக்கு உள்ளது உடனிலை நிறைவு என்பது தோன்ற எள்ளும் எண்ணெயும் போல் என்றருளினர். சார்ந்ததன் வண்ணமாம் பற்று நிலை நிறைவு உயிர்க்குள்ளது. நடுவுளும் கீழுளும் மேலுளும் என்றது கண்டப் பொருள்களிற் கலந்திருத்தலை. யாவுளும் என்றதனுல், கண்டப் பொருள்களில் மட்டும் அன்றி எல்லாப் பொருள்களிலும் கலந்து நிறைந்தவன் என்பதாம். இறுத்தல் – எங்குந்தங்குதல்; எங்குந் தங்குபவன் இறைவன். சிவன் ஒருவனே எங்குந்தங்கும் இறைவனுவான். எங்கும் வியாபகமாயிருத்தலின் அவன் அருள் வடிவான சத்தியோடு நீக்கமின்றி நிற்பவன் என்பது கருதியுணரப்படும்.

அருளோடு தாதான்மியமாய் நில்லாதவன் எங்கும் நிறைந்த இறைவனுதல் இயலாது என்பதைப் பின்வரும் சிவஞானபோத உதாரண வெண்பா தெரிவிக்கிறது:

'' எங்கும் உளன் என்றளவை ஒன்றன் றிரண்டென்னில்
எங்கும் உளன் அன்று; எவற்றெவனும்–அங்கண்
அவை யவ னன்றில்லைப் பொன்னொளி போ லீசன்
அவையுடைமை யாளாம்நாம் அங்கு ''

(சிவஞானபோதம்)

**நள்ளும்** – நடு இடத்திலும், **கீழ் உள் உம், மேல் உள் உம்** – கீழிடத்திலும் மேல் இடத்திலும், உள் இடப்பொருளில் வந்தது. உம்மை எண்ணும்மை. **யாவுளும்** – உம்மை முற்றுப்பொருளில் வந்தது.

எந்தையாகிய சிவபெருமான் எனக்கூட்டுக.

கில்லேனே — கில்லெனே எனக் குறுகி நின்றது.

அன்பரின் அன்பரைப் போல ஐந்தனுருபு ஒப்புப் பொருளில் வந்தது. கொன்றை பரமசிவனுக்கே உரிய திருவடையாளமாலே. கொன்றையில் தேன் நிறைந் தமை சிவபெருமான் இன்பம் நிறைந்தவன் என்பதைக் குறிப்பாற் புலப்படுத்தும். வண்டுகள் நீங்காமை அன்பர்கள் இறை இன்பத்தைத் துய்த்துக் கொண்டே இருப்பார்கள் என்பதைக் குறிப்பாற் புலப்படுத்தும். அன்பால் இறைவனே அழைக்கும் ஆற்றலில்லாத என்னைச் சிவன் எல்லார்க்கும் இன்பங் கொடுத்தற்கு அடையாளமாக வண்டும் தேனும் குறையாக் கொன்றை மாலே அணிந்திருத்தலின் என்னையும் தானே கூவி அழைத்துப் பணி கொள்வானே என்பதாம். கொள்ளும் என்ற சொல் உச்சரிக்கும் ஓசை வேறுபாடு பற்றி ஐயப் பொருளில் வந்தது.

கொள்ளும் கில் — கொள்ள வல்லனே என உரைத் தலும் ஒன்று. கூவிப்பணி கொள்ள வல்லனுயினும் என் அன்பின்மை கண்டு கொள்ளாதிருத்தல் கூடுமன்றே என ஏக்கற்று நின்றபடி.

**47 எந்தை யாயெம்பி ரான்மற்று மியாவர்க்கும்**
**தந்தை தாய்தம்பி ரான்றனக் கஃதிலான்**
**முந்தி யென்னுட் புகுந்தனன் யாவருஞ்**
**சிந்தை யாலு மறிவருஞ் செல்வனே.**

பதப்பிரிவு :

**எந்தை யாய் எம்பிரான் மற்றும் யாவர்க்கும்**
**தந்தை தாய் தம்பிரான் தனக்கு அஃது இலான்**
**முந்தி என் உள் புகுந்தனன் யாவரும்**
**சிந்தையாலும் அறிவு அரும் செல்வனே.**

உரை நடை :

எந்தையும் ஆயும் எம்பிரானும் ஆகியவன் மற்றும் யாவர்க்கும் தந்தையும் தாயும் தம்பிரானும் ஆகியவன் ஆனால் அவன் தனக்கு அஃது இலான் யாவருஞ் சிந்தையாலும் அறிவு அரும் செல்வனைச் சிந்தையில் இருத்துந் தன்மை உண்டாவதற்கு முந்தி என்னுட் புகுந்தனன்.

பொழிப்புரை :

எனக்குத் தந்தையும் தாயும் தலைவனும் ஆகி வேறு தேவர் முதலிய எல்லோர்க்கும் தந்தையும் தாயும் தலைவனும் ஆயினான். ஆயினும் தனக்குத் தாய், தந்தை, தலைவன் என்னும் முறையில்லாதவன். எவரும் மனத்தாலும் தெரிந்துகொள்ள முடியாத அறிவானந்தப் பொருளாளன். அத்தகு பெரியோன், தன்னை யான் நினைப்பதற்குமுன் என் உள்ளத்தில் நுழைந்து ஆண்டனன்.

விளக்கம் :

யாய் — தாய். மக்களுடற்குத் தாய்தந்தையார் பிறவிதோறும் வேறு வேறாவர். ஆனால் உயிர்க்குத் தாயும் தந்தையும் இறைவனே. எல்லா உயிர்களுக்கும் அம்மையப்பரே அம்மையப்பராவர். எல்லா உயிர்களுக்கும் தலைவனும் இறைவன் ஒருவனே.

"தமக்குத் 'தந்தையர் தாயிலர்' என்பதும்
அமைத்திங் கியாவையும் ஆங்கவை வீந்தபோ
திமைத்த சோதி அடக்கிப்பின் ஈதலால்
எமக்கு நாதர் பிறப்பிலர் என்றதாம்"

(திருத்தொண்டர் புராணம்)

முந்தி—என் உள்ளத்தில் இறைவனை வைத்துச் சிந்திக்கும் ஆற்றலை நான் பெறுமுன். திருக்கோவையாரில் "என்னை முன் ஆள் ஊழுடையான்" என்பதற்குப் பேராசிரியர் "எனக்கு ஆட்படுந்தன்மை

யுண்டாவதற்கு முன்னே என்னை ஆள்வதொரு புதிதாகிய முறைமையையுடையான்" எனப் பொருள் கூறியது போல ஈண்டும் எனக்குச் சிந்தையில் இருத்திச் சிந்திக்குந் தன்மை வருமுன்னம் என் மனத்துட்புகுந்து தன்னை என் உளத்து வைத்தான் எனப் பொருள் கூறுக. சிந்தையாலும்—இறந்தது தழீஇயஎச்ச உம்மை காயம் வாக்குகளானன்றி என்பதைத் தழுவி நிற்றலின்.

48 செல்வ நல்குர வின்றிவிண் ணோர்புழுப்
புல்வ ரம்பின்றி யார்க்கு மரும்பொரு
ளெல்லை யில்கழற் கண்டும் பிரிந்தனன்
கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே.

**பதப்பிரிவு :**

செல்வம் நல்குரவு இன்றி விண்ணோர் புழுப்
புல் வரம்பு இன்றி யார்க்கும் அரும் பொருள்
எல்லை இல் கழல் கண்டும் பிரிந்தனன்
கல் வகை மனத்தேன் பட்ட கட்டமே.

*உரைநடை :*

(நல்வினைப் பயனாகிய) செல்வம் (தீவினைப் பயனாகிய) நல் குரவு (இவற்றால் வரும் ஏற்றத்தாழ்வு) இன்றியும் (நல்வினைப் பயனே நுகரும்) விண்ணோர் (தீவினைப் பயனும் நுகரும்) புழு, புல் என்னும் வரம்பு இன்றியும் (அசையும் பொருள் அசையாப்பொருள் என நின்ற) யார்க்கும் (அடைதற்கு) அரும் பொருளினுடைய (அளவு) எல்லையில்லாத கழல்களைக்கண்டும் பிரிந்தனன் (இப்பிரிவு) கல்வகை மனத்தினனாகிய நான்பட்ட கட்டமே.

**பொழிப்புரை :**

(நல்வினைப் பயனாகிய) பொருள் உடையார் (தீவினைப் பயனாகிய) வறுமையுடையார் (என்ற வகையான உயர்வு தாழ்வு) இல்லாமல், (நல்வினைப் பயனையே நுகரும்) தேவர்கள் (தீவினைப் பயனையும் நுகரும்) புழுக்கள்,

புற்கள் என்ற வேறுபாடான வரையறை யாதொன்றும் இல்லாமல் எவராலும் (எதனாலும்) உணர்ந்து அடைதற்கு அரிய மெய்ப்பொருளாகிய இறைவனுடைய அளவில் அடங்காத திருவடிகளைப் பார்க்கப் பெற்றும் விட்டு நீங்கினேன். (இப்பிரிவு) கல்லின் வகைகளுள் ஒன்ருன நெஞ்சையுடைய நான் அடைந்த துன்பமே ஆகும்.

விளக்கம் :

உலக மக்களிற் பொருளுடையராலும் காண முடியாதவன், வறியவராலும் காணமுடியாதவன். உலக மக்களேயன்றித் தேவர்களாலும் காண்டற்கரியன். அஃறிணைப் பொருள்களிற் புழுவாலும் காண முடியாதவன்; புல்லாலும் காண முடியாதவன். திருவருட் பேற்றிற்கு உரிய தவமுடையார் காண முடியுமேயன்றி ஏனை எவராலும் காண முடியாதவன். அத்தகைய அறிவரிய சிவபிரான் மாணிக்கவாசகருக்குத் தன் திருவடிகளைக் காட்டித் திருவடி ஞானத்தால் தன் உண்மை இயல்பைக் காணச் செய்தான். அவ்வாறு அடிகள் காணுதற்கரிய கடவுளைக் கண்டும் உடன் செல்லாது பிரிந்திருந்தார், அதற்குக் காரணம் தமது கரையாத கன் மனம் என்கிருர். பிரிந்தமைக்குப் பெரிதும் இரங்குவார், "பட்ட கட்டமே" என்கிருர்.

எல்லையில் கழல் என்ருர் ஏக தேசத் தன்மையின்றி வியாபகமாய் நிற்றலின்.

**49 கட்ட றுத்தெனை யாண்டுகண் ணார நீ**
**றிட்ட வன்பரொ டியாவருங் காணவே**
**பட்டி மண்டப மேற்றினை யேற்றினை**
**எட்டி னோடிரண் டும்மறி யேனையே.**

பதப்பிரிவு :

கட்டு அறுத்து என்னை ஆண்டு கண் ஆர நீறு
இட்ட அன்பரொடு யாவரும் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை; ஏற்றினை
எட்டினோடு இரண்டும் அறியேனை ஏ.

உரை நடை :

(ஊர்தியாகிய) ஏற்றினை! எட்டினோடு இரண்டும் அறியேனை என்னைக் கட்டு அறுத்து ஆண்டு திருநீறு இட்ட அன்பரோடு யாவரும் கண்ணுரைக் காணப் பட்டி மண்டபம் ஏற்றினை (இதற்கு யான் செய்யத் தக்க கைம்மாறு யாது?)

**பொழிப்புரை :**

ஊர்தியாகிய காளையினையுடையாய், எட்டும் இரண்டும் சேர்ந்து பத்து என்று கணக்கிட்டுச் சொல்லவும் அறியாதவனுகிய எளியனேனைப் பாசப்பிணிப்பை அகற்றி அடிமையாகக் கொண்டு கண்டார்கள் கண் நிறையும்படி திருவெண்ணீறு பூசிய மெய்த் தொண்டரோடு மற்று யாவரும் கண்கூடாக நேரிற் கண்டு வியக்கும்படி (சமையவாதம் புரிவதற்குரிய) அம்பலத்தில் ஏறி அமர்ந்திருக்கச் செய்தாய். (இதற்கு நான் என்ன கைம்மாறு புரிவேன்!)

விளக்கம் :

எட்டு, தமிழில்—அ—என எழுதப்படும். அப்படியே இரண்டு-உ-என எழுதப்படும். எட்டினோடு இரண்டும் அ+உ+ம்=ஓம் எனக் கொண்டு எட்டினோடிரண்டும் அறியேனை என்பதற்குப் பிரணவப் பொருள் தெரியாத என்னை எனவும் பொருள் கூறலாம். எட்டும் இரண்டு மாகிய பத்து தமிழில் "ய" என எழுதப் பெறும். திருஐந்தெழுத்தில் "ய" உயிரைக் குறிக்கும். அங்ஙனங் கொண்டு உயிரின் இலக்கண மறியாத எனவும் கூறலாம். பட்டிமண்டபம்—சமைய உண்மைகளைத் தடை விடைகளின் வைத்து ஆராய்தற்குரிய வித்தியா மண்டபம்.

இனிப்பிறவாறுங் கூறுவர் :—

பத்துக் காரியங்கள் தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம்,ஆன்மசுத்தி,

சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம். இப் பதின் ஆக்கங்களில் ஒன்றும் தெரியாத என்னை எனவும் கூறுவர். எட்டும் இரண்டும் பத்து எனப் பொருள் கொண்டு அகக்கருவிகளைச் செலுத்துகின்ற சூக்கும ஐந்தெழுத்தையும், முத்திஐந்தெழுத்தாகிய 'சிவயநம' என்ற திரு ஐந்தெழுத்தின் பொருளையும் ஆகப் பத்தினையும் தெரியாத எனவும் பொருள் கொள்ளலாம். சூக்கும ஐந்தெழுத்து அகாரம், உகாரம், மகாரம், விந்து, நாதம். அகாரம், அகங்காரத்தைச் செலுத்தும்; உகாரம் புத்தியைச் செலுத்தும், மகாரம் மனத்தைச் செலுத்தும்; விந்து சித்தத்தை இயக்கும், நாதம் உள வடிவாகும்.

*சூக்கும பஞ்சாக்கரம்*

" அகாரம் உகாரம் அகங்காரம் புத்தி
மகாரம் மனஞ்சித்தம் விந்துப்–பகாதிவற்றை
நாதமுள வடிவா நாடிற் பிரணவமாம்
போதம் கடற்றிரையே போன்று "

(சிவஞானபோதம்)

*முத்தி பஞ்சாக்கரம்*

" சிவன் அருள் ஆவிதிரோதம் மலம் ஐந்தும்
அவனெழுத் தைந்தினடை வாம் "

(திருவருட்பயன்)

" கூடிய எட்டும் இரண்டும் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துள் ளேவைத்து
ஆடிய ஐவரும் அங்குறவாவர்கள்
தேடி யதனைத் தெளிந்தறியீரே "

" எட்டும் இரண்டும் இனிதறிகின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே "

(திருமந்திரம்)

பட்டி மண்டபம் ஏறிச் சமையவாதம் புரிபவர்க்கு வேண்டப்படும் ஐந்தெழுத்து, உயிரிலக்கணம், பதினுக்கம் இவற்றின் அறிவெல்லாம் நினது அருளுரையால் எனக்குப் பாசநீக்கம் உண்டாயபோது நான் பெற்றேன். ஆதலின் என்னைத் திருநீறிட்ட சிவனடியாரோடு பல சமயக் கருத்துணர்ந்த அறிஞர் எல்லோரும் காணும்படி பட்டி மண்டபம் ஏற்றிப் பேரறிஞனுக்கிப் பெருமைப்படுத்தினை என்பதாம். சிவ வேடத்தோடு சிந்தை இடையரு அன்புடையார் மிக உயர்ந்தோராதலின் அவரை 'நீறிட்ட அன்பரொடு' என ஒடுக் கொடுத்து வேறு பிரித்தார். பலவகைச் சமையவாதிகளையும் 'யாவரும்' என்று பொதுப்படக் கூறினர்.

கண்ணுர நீறிடும் பயனே

"காண இனியது நீறு — கவினைத் தருவது நீறு" என்ற திருநீற்றுப்பதிக அடி இனிது விளக்கும். நீறிட்ட அன்பர் என்னும் தொடர், புறமும் அகமும் தூயர் என்பதைக் குறிப்பால் உணர்த்தும்.

50 அறிவ னேயமு தேயடி நாயினே
னறிவ னுகக்கொண் டோவெனை யாண்டது
தறிவி லாமையன் றேகண்ட தாண்டநா
னறிவ னேவல்ல னேவரு ளீசனே.

**பதப்பிரிவு :**

அறிவனே அமுதே அடி நாயினேன்
அறிவன் ஆகக் கொண்டோ எனை ஆண்டது?
அறிவு இலாமை அன்றே கண்டது? ஆண்ட நான்
அறிவனே அல்லனே அருள் ஈசனே.

உரைநடை :

அறிவனே ! அமுதே! அடிமையாகிய நாய் போன்ற எனை அறிவனாகக் கொண்டோ ஆண்டது? ஆண்ட நான் கண்டது அறிவு இலாமை அன்றோ? அறிவனோ, அல்லனோ, ஈசனே அருள் (செய்வாய்).

பொழிப்புரை :

மெய்ஞ்ஞான வடிவாயிருப்பவனே! அமுதம் போலும் இனிமையும் நன்மையும் அருள்பவனே! உன் திருவடிக் கீழ் நாய் போன்றவனாகிய என்னை மெய்யுணர்வுடையவன் எனக் கருதியோ ஆட்கொண்டது? அடிமையாகக் கொண்ட அன்று என்பால் வெளிப்பட்டது பேதைமையன்றோ? செல்வம் எல்லாம் நிறைந்த ஆண்டவனே! இப்பொழுது நான் மெய்யுணர்வு உடையனோ அல்லனோ திருவருள் புரிவாயாக.

விளக்கம் :

சிவன், அறிவே தனது வடிவமாகக் கொண்டவன்:

"ஞானத் திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார் மேல்
ஊனத் திரளை நீக்கு மதுவும் உண்மைப் பொருள் போலும்"

(திருஞானசம்பந்தர், தேவாரம்)

இன்பங் கொடுத்தலில் அமுதமயமானவன்.

## 6. அநுபோக சுத்தி

சிவானுபவத்தின் பொருட்டு உயிர் தூய்மை பெறுதல். சிவக்காட்சியின் நிகழ்வது உயிர்த் தூய்மை; சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்ம சுத்தி. (சிவஞான போத உரை)

— " தான் என்னைப்
பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லாம்
நீத்தான் நினைவு வேறுக்கினுன் — ஏத்தரிய
தொண்ணூற் றறுவர் பயில் தொக்கில் துவக்கறுத்தான் "

(நெஞ்சுவிடு தூது 88–91)

உயிர் தன்முனைப் பற்று இறைவன் அருளில் அடங்கவே ஆன்ம சுத்தியாகும்.

அழுக்கு நீங்குதலே அறுவைக்குச் சுத்தியாமாறு போலப் பாசநீக்கமே ஆன்மாவுக்குச் சுத்தியாம்.

சிவனைச் சிந்திக்கவே உயிர் சுத்தி பெறும்.

" அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா அறைந்திடுவர்
அதுதானும் ஆன்மசுத்தி யாகும்.
கந்த மலர் புகையொளிமஞ் சனம்அமுது முதலாக்
கண்டன வெலாம் மனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனில் அர்ச்சிக்கச் சிவனை ஞானத்தாற் சிந்திக்கச்
சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோல மருவியரன் உளத்தே வரவரவந்
திடுவன்பின் மலமான தறுமே."

(சிவஞான சித்தியார்
சூத். 9, ஆதி. 3)

## ஆறுசீர் ஆசிரிய விருத்தம்

51 ஈச னேயென் னெம்மானே
யெந்தை பெருமா னென்பிறவி
நாச னேநான் யாதுமொன்
றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு
நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேயம் பலவனே
செய்வ தொன்று மறியேனே.

**பதப்பிரிவு** :

*ஈசனே என் எம்மானே*
*எந்தை பெருமான் என் பிறவி*
*நாசனே நான் யாதும் ஒன்று*
*அல்லாப் பொல்லா நாய் ஆன*
*நீசனேனை ஆண்டாய்க்கு*
*நினைக்க மாட்டேன் கண்டாயே*
*தேசனே அம்பலவனே*
*செய்வது ஒன்றும் அறியேனே.*

உரைநடை :

ஈசனே ! என் எம்மானே ! எந்தை ! பெருமான் ! என் பிறவி நாசனே ! தேசனே ! அம்பலவனே ! யாதும் ஒன்று அல்லாப் பொல்லா நாயான நீசனேனை ஆண்ட உனக்கு நான் நினைக்க மாட்டேன். செய்வது ஒன்றும் அறியேன்.

**பொழிப்புரை** :

அளவிடப்படாத அருட் செல்வம் உடையவனே ! எனக்கும் உரிய எங்கள் தலைவனே ! என்னுடைய தந்தையாகிய பெருமானே ! என் பிறவியை அழிப்பவனே ! ஒளி வடிவில் விளங்குபவனே ! ஞானவெளி

யாம் பொதுவினில் நடம்புரிபவனே! பயன்படும் பொருள் ஒன்றினும் சேர்த்து எண்ணத்தகாத தீவினை யுடைய நாய் போன்ற கடையனாகிய என்னை ஆட் கொண்டு அருளிய உன்னை நான் மனத்திற் கருத மாட்டேன்; இனிச் செய்யத்தக்கது யாதொன்றும் தெரியாதவனாயிருக்கின்றேன்.

**விளக்கம்.**

உயிர்ச் சுத்தியின் பொருட்டு அதற்கு இன்றியமையாத சாதனமாகச் சிவனை நினைக்க வேண்டுமென்பார், அது செய்யாவிடத்து நொந்து கொள்வாராய் "நினைக்க மாட்டேன் கண்டாயே" என்றார். உபகாரம் செய்தவனைப் பின்னை மறத்தல் பிழையாதலின் "எனை ஆண்டாய்க்கு நினைக்க மாட்டேன் கண்டாயே" என்றார். நின்னை மறவாதிருக்கும்படி அருள் புரிய வேண்டும் என்பது கருத்து. ஈசன்—ஐசுவரியம் உடையவன். எல்லா உயிர்களுக்கும் பொதுவாகத் தலைவனான சிவபெருமான் தம்மை ஆண்டமையின் தமக்குச் சிறப்பாகத் தலைவன் என்பார் "என் எம்மான்" என்றார்.

பொது உரிமை சிறப்புரிமைகளை "எங்கள் நாயகனே, என்னுயிர்த் தலைவா" என்ற இடத்தும் காண்க. அக் குணங்களெல்லாம் முழு நிறைவுடைமையனாதலின் பெருமானே என்றார். மீட்டும் இங்கு வந்து பிறத்தற் கேதுவாகிய வினைகளைக் களைதலின் "பிறவி நாசனே" என்றார். மெய்யறிவொளி விளக்கும் அருளாசிரியனாக வந்தமையின் "தேசனே" என்றார். தேசு — ஒளி.

**52 செய்வ தறியாச் சிறு நாயேன்**
**செம்பொற் பாத மலர்காணாப்**
**பொய்யர் பெறும்பே றத்தனையும்**
**பெறுதற் குரியேன் பொய்யிலா**
**மெய்யர் வெறியார் மலர்ப்பாத**
**மேவக் கண்டுங் கேட்டிருந்தும்**
**பொய்ய னேனா னுண்டுடுத்திங்**
**கிருப்ப தானேன் போரேறே.**

**பதப்பிரிவு :**

செய்வது அறியாச் சிறு நாயேன்
செம் பொன் பாதம் மலர் காணாப்
பொய்யர் பெறும் பேறு அத்தனையும்
பெறுதற்கு உரியேன் பொய் இலா
மெய்யர் வெறி ஆர் மலர்ப் பாதம்
மேவக் கண்டும் கேட்டிருந்தும்
பொய்யனேன் நான் உண்டு உடுத்து இங்கு
இருப்பது ஆனேன் போர் ஏறே.

**உரை நடை :**

போர் ஏறே! செய்வது அறியாச் சிறு நாயேன் செம்மை (யாகிய) பொன் (போன்ற) பாதமாகிய மலரைக் காணாப் பொய்யர் பெறும் பேறு அத்தனையும் பெறுதற்கு உரியேன். பொய்யனேன் நான் பொய் இலா மெய்யர் வெறி ஆர்ந்த மலர் போலும் பாதத்தை மேவக் கண்டு (இருந்தும்),(அறிவுறுத்தக்) கேட்டு இருந்தும், உண்டும், உடுத்தும் இங்கு இருப்பது ஆனேன்.

**பொழிப்புரை :**

பகையை எதிர்த்து வெல்லுதலில் ஆண்சிங்கம் போன்றவனே!புரிவதற்குத் தக்கது இது என்று தெரிந்து கொள்ளாத கீழான நாய் போன்றேனும் செவ்விய பொன் போலும் உயர்ந்த திருவடித்தாமரைகளைப் பார்ப்பதற் குரிய பேறு பெறாத பொய்ந்நெறி ஒழுகுவார் அடைதற் குரிய பேறுகள் அத்தனையும் அடைதற்கு உரியேனும் ஆகிய பொய்ம்மையை உடைய யான் கள்ளம் கலவாத மெய்யன்பர்கள் மணம் நிறைந்த செந்தாமரைப் பூப்போன்ற திருவடிகளை அடைய நேரில் பார்த்திருந்தும் (அறிந்தார் வாய்க்) கேள்விப்பட்டிருந்தும், உண்டும், உடுத்தும் இவ்வுலகில் வாழ்ந்திருக்கலானேன்.

**விளக்கம்**

உயிர்களுக்குப் பகையாகவுள்ள ஆணவமல மென்னும் யானையின் வலியைக் கெடுத்தலின் சிங்கஏறு போல்வன் இறைவன். ஆதலின் 'போரேறே' என்றனர்.

பொய்யர் — மெய்ப்பொருளில் நாட்டமில்லாது நிலையற்ற பொய்ப்பொருளிலே விருப்பமுடையவர். பொய்யில்லா மெய்யர் – பொய்ப்புலனைத் தம்மின் வேருக உணர்ந்து மெய்ப்பொருளைத் தம் உணர்விற் கண்ட வர்கள்.

"பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து – பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப் பொருட்குத் தைவமாம் வேறு."

(சிவஞானபோதம்)

பொய்யர் பெறும் பேறு — பிறவித் துன்பங்கள். முதல்வன் பாதம் மறைகளாகிய வண்டுகள் சூழ்ந்து சிவமணங் கமழ்ந்து, அன்பர் சிந்தையில் மலர்ந்து பேரின்பத் தேனைச் சொரிவன. ஆதலின், '**வெறியார் மலர்ப் பாதம்**' என்றனர். வெறி — மணம்.

ஞானசிரியனேடு உடனிருந்த அன்பர்கள் அவன் மறைந்தபோது உடன் சென்றதைக் கண்டும் சண்டீசர், கண்ணப்பர் முதலியவர் அடி சேர்ந்த வண்ணத்தை அறிந்தார் சொலக் கேட்டும் இருந்தார் அடிகள். ஆதலால், '**பாதம் மேவக் கண்டும் கேட்டிருந்தும்**' என்றருளினர்.

"ஊனைக்காவல் கைவிட்டுன்னை உகப்பார் உணர் வாரே" (சுந்தரர்) என்னும் முடிவு அடிகளுக்கும் இருந்த தாகலின் "**நான் உண்டுடுத் திங்கிருப்ப தானேன்**" என்று வருந்துகின்றார்.

**53 போரே றேநின் பொன்னகர்வாய்**
**நீபோந் தருளி யிருணீக்கி**
**வாரே றிளமென் முலையாளோ**
**டுடன்வந் தருள வருள்பெற்ற**
**சீரே றடியார் நின்பாதஞ்**
**சேரக்கண்டுங் கண்கெட்ட**
**ஊரே றாயிங் குழல்வேனைக்**
**கொடியே னுயிர்தா னுலவாதே.**

*பதப்பிரிவு:*

*போர் ஏறே! நின் பொன் நகர்வாய்*
*நீ போந்தருளி, இருள் நீக்கி*
*வார் ஏறு இள மென் முலையாளோடு*
*உடன் வந்து அருள, அருள் பெற்ற*
*சீர் ஏறு அடியார் நின் பாதம்*
*சேரக் கண்டும் கண் கெட்ட*
*ஊர் ஏறுஆய் இங்கு உழல்வேனைக்*
*கொடியேன் உயிர் தான் உலவாதே.*

*உரைநடை:*

*போர் ஏறே! நின் பொன் நகர்வாய் நீ போந்து அருளி, வார் ஏறு இளமென் முலையாளோடு உடன் வந்து இருள் நீக்கி அருள அருள் பெற்ற சீர் ஏறு அடியார் நின் பாதங்களைச் சேரக் கண்டும் கொடியேன் உயிர் உலவாது கண் கெட்ட ஊர் ஏறாய் இங்கு உழல்வேனை.*

*வந்து இருள் நீக்கி அருளி அருள் பெற்ற அடியார் எனக் கூட்டுக.*

*பொழிப்புரை:*

*(ஆணவமாகிய பகையை) எதிர்த்து ஒழித்தலில் ஆண் சிங்கம் போன்றவனே! உனது சிவபுரத் திருக் கோயில் வாசலினின்று புறப்பட்டு, கச்சுக் கட்டிய*

இளமையும் மென்மையும் கொண்ட மார்பினளாகிய உமையம்மையுடன் ஒருங்கு வந்தருளி மல இருளை மாய்த்துச் சிவப்பேறு அருள் புரிய அத்திருவருளைப் பெற்ற சிறப்பு மிகுந்த தொண்டர்கள் உன் திருவடிகளை வந்தணைதலைப் பார்த்தும் கண்பார்வையற்ற ஊர்க் காளை போல் இவ்வுலகில் அலைந்து திரிவேனோ? பொல்லாத என் உயிர்ஆயுள் முடிந்து நீங்க வில்லையே.

விளக்கம் :

வாய்—வாசல்; வாய் போந்தருளி—வாசலினின்றும் எழுந்தருளி வந்து, ஐந்தன் தொகை. அன்பர்க் கருளுவதற்கு அம்மையப்பராய்க் காட்சியளிப்பான் என்பார், "மென் முலையாளோடு உடன் வந்தருள" என்றார். அம்மையின் கடைக் கண்ணோக்கால் இருள் நீங்கும்.

"கடைக்கண்ணால் மங்கை உமை நோக்கா என் மேல்
ஊனமது எல்லாம் ஒழித்தான் தன்னை"—

(திருத்தாண்டகம், திருஆலவாய்.)

'இருள் நீக்கியருளல்' பாசநீக்கம். அருள்பெறுதல் சிவப்பேறு.

பாசநீக்கமும் சிவப்பேறும் பெற்றவர் சீர் ஏறு அடியாராவார்; ஞானகுரவனிடம் கேட்கப்பெற்ற அருளுரை, சிந்தித்தல், தெளிதல், நிட்டை முதலிய ஞான பூசையால் படிப்படியாக உயரப்பெற்ற அடியார். 'ஊர் ஏறு'— ஊர்க்குப் பொதுவான காளை. இது குருடாதலின், வண்டி இழுத்தல், உழுதல் முதலிய ஒன்றற்கும் பயன் படாது ஊரைச் சுற்றித் திரியும். அவ்வாறு திரியுங்கால் குருடாதலின் வழி தவறும், முறை பிறழும். அதுபோல மேலைப் பாட்டில் உண்டு உடுத்து உடலோம்பல் மட்டும் குறித்த ஆசிரியர் ஈண்டு நெறி தவறுதலையும் குறிக்கிறார். 'ஊர் ஏறாய்' என்றதில் ஆய் — உவம உருபு.

54 உலவாக் காலந் தவமெய்தி
யுறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்
பலமா முனிவர் நனிவாடப்
பாவி யேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை யிதுமாய்க்க
மாட்டேன் மணியே யுனைக்காண்பா
னலவா நிற்கு மன்பிலே
னென்கொண் டெழுகே னெம்மானே.

*பதப்பிரிவு:*

உலவாக் காலம் தவம் எய்தி
உறுப்பும் வெறுத்து இங்கு உனைக் காண்பான்
பல மா முனிவர் நனி வாடப்
பாவியேனைப் பணி கொண்டாய்
மலம் மாக் குரம்பை இது மாய்க்க
மாட்டேன் மணியே உனைக் காண்பான்
அலவா நிற்கும் அன்பு இலேன்:
என் கொண்டு எழுகேன் எம்மானே.

*உரைநடை :*

மணியே! எம்மானே! இங்குப் பல மா முனிவர் உனைக் காண்பான் உலவாக் காலம் தவம் எய்தி உறுப்பும் வெறுத்து நனிவாடப் பாவியேனைப் பணிகொண்டாய். (உன்னைக் காண்பான்) மலம் மாக் குரம்பை இது மாய்க்க மாட்டேன் உனைக் காண்பான் அலவா நிற்கும் அன்பு இலேன், என் கொண்டு எழுகேன்?

*பொழிப்புரை :*

மாணிக்கமணி போன்றவனே! எங்கள் தலைவனே! இவ்வுலகிற் பல சிறந்த துறவிகள் உன்னைப் பார்ப்பதற்காக எல்லையில்லாக் காலமாகத் தவம் புரிந்து உடலையும் பேணாது மிகவும் மெலிந்து போகத் தீவினையேனாகிய என்னை அடிமையாக ஏற்றுக் கொண்டாய்;

(எனினும் நான் உன்னைக் காணுதற் பொருட்டு) அழுக்கு நிறைந்த பெரிய கூடுபோன்ற உடலாகிய இதனை ஒழிக்க ஏலாதவனாயிருக்கின்றேன்; உன்னைப் பார்ப்பதற்கெனத் துன்புற்று நிற்கும் விருப்பம் இல்லாதிருக்கின்றேன். எதனைப் பற்றுக் கோடாகக் கொண்டு இவ்விழிநிலை யினின்று எழுந்து நிலைபெறுவேன்?

விளக்கம்:

முனிவர், முனிதல் — வெறுத்தல்; முனிவர்—நிலையில்லாத பொருள்களில் வெறுப்பு மிக்கவர். "முதல்வனைக் காண விரும்பி முனிவர்கள் தவத்தால் உடம்பை வாட்டி மெலிந்தார்கள். யானோ அத்தகைய துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதற்கு ஏதுவாகிய அன்பில்லாதிருக்கின்றேன். எவ்வாறு உய்வேன்?" என்பதாம்.

உறுப்பு வெறுத்தல் — விரதங்கள் முதலியவற்றால் என்பெழுந்தியங்கும் யாக்கையராதல்.

உறுப்பும் — உம்மை உயர்வு சிறப்பு. ஏனைய உடைமைப் பொருள்களை வெறுத்தலேயன்றித் தன்னையும் வெறுத்தலால் எனப் பொருள்படுதலின் இறந்தது தழீஇய எச்சஉம்மையும் ஆகும்.

அலவுதல் — துன்புறுதல்; உறுப்பு — உடம்பு, ஆகுபெயர்.

**55 மானேர் நோக்கி யுமையாள்**
**பங்கா வந்திங் காட்கொண்ட**
**தேனே யமுதே கரும்பின்**
**றெளிவே சிவனே தென்றில்லைக்**
**கோனே யுன்றன் றிருக்குறிப்புக்**
**கூடு வார்நின் கழல்கூட**
**ஊனர் புழுக்கூ டிதுகாத்திங்**
**கிருப்ப தானே னுடையானே.**

பதப்பிரிவு:

மான் நேர் நோக்கி உமையாள்
பங்கா, வந்து இங்கு ஆட்கொண்ட
தேனே அமுதே கரும்பின்
தெளிவே சிவனே தென் தில்லைக்
கோனே, உன்தன் திருக்குறிப்புக்
கூடுவார் நின் கழல் கூட
ஊன் ஆர் புழுக் கூடு இது காத்து இங்கு
இருப்பது ஆனேன் உடையானே.

உரைநடை:

மான் நேர் நோக்கியாகிய உமையாள் பங்கா! இங்கு வந்து ஆட்கொண்ட தேனே! அமுதே! கரும்பின் தெளிவே! சிவனே! தென்தில்லைக் கோனே! உடையானே! உன் தனது திருக்குறிப்புக் கூடுவார் நின்னுடைய கழல்களைக் கூட, ஊன் ஆர்ந்த புழுக் கூடாகிய இதனைக் காத்து இங்கு இருப்பது ஆனேன்.

**பொழிப்புரை :**

மான்பார்வை போலும் பார்வை யுடையாளாகிய உமையம்மையை ஒரு பாகத்திலுடையவனே! இவ்வுலகில் எழுந்தருளி வந்து என்னை அடிமையாகக்கொண்டருளிய தேனே! அமுதே! கருப்பஞ்சாற்றின் தெளிவே! மங்கலமான பொருளே! அழகிய தில்லைப்பதிக்கு அரசனே! என்னை அடிமையாகவும் யாவற்றையும் உடைமையாகவும் கொண்டவனே! உன்னுடைய திருவுள்ளக்கருத்தின்படி ஒழுகிய மெய்யன்பர்கள் உன்னுடைய திருவடிகளை வந்தடையவும், நான் புலால் நிறைந்த புழுக்கூடாகிய இவ்வுடலைப் பேணிக்கொண்டு இவ்வுலகில் வாழ்வதாயினேன்.

விளக்கம் :

முதல்வன் திருக்குறிப்பைக் கூடுதலாவது அவன் அருளாலல்லது ஒன்றனையும்செய்யாமை; இஃது இறை பணிநிற்றல் எனப்படும். இதனால் 'மலமாயை தன்னொடு வல்வினை இன்றுதலாகிய' ஆன்ம சுத்தி உளதாகும்.

"குதுகுதுப்பின்றி நின்று என் குறிப்பே செய்து நின் குறிப்பில் விதுவிதுப்பேனை விடுதி கண்டாய்" என அடிகள் நீத்தல் விண்ணப்பத்தில் அருளிச்செய்தல் இதனோடு ஒப்பு நோக்கத்தக்கது.

56 உடையா னேநின் றனையுள்கி
யுள்ள முருகும் பெருங்காத
லுடையா ருடையாய் நின்பாதஞ்
சேரக் கண்டிங் கூர்நாயிற்
கடையா னேனெஞ் சுருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தாக முடித்தாயே.

பதப்பிரிவு :

உடையானே! நின் தனை உள்கி
உள்ளம் உருகும் பெருங் காதல்
உடையார் உடையாய் நின் பாதம்
சேரக் கண்டு இங்கு ஊர் நாயின்
கடை ஆனேன் நெஞ்சு உருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடை ஆர் புழுக் கூடு இது காத்து
இங்கு இருப்பது ஆக முடித்தாயே.

உரை நடை :

உடையானே! நின் தனை உள்கி உள்ளம் உருகும் பெருங்காதல் உடையார் (தம்மை) உடையாயாகிய நின் பாதங்களைச் சேரக் கண்டும் நெஞ்சு உருகாதேனும்

கல்லாமனத்தேனும் கசியாதேனும் ஆகிய நான் இங்கு ஊர் நாயின் கடையானேன்; முடை ஆர்ந்த புழுக் கூடாகிய இதனைக் காத்து இங்கு இருப்பது ஆக முடித்தாயே.

**பொழிப்புரை :**

ஆண்டவனே! உன்னை நினைந்து மனம் இளகிக் கசியும் பேரன்பு கொண்டவராகிய தொண்டர் தம்மை அடிமையாகக் கொண்டவனாகிய உன்னுடைய திருவடிகளை அணைந்ததைப் பார்த்தும், உள்ளம் இளகாதவனும், கற்கத்தக்க நூல்களைக் கல்லாத உள்ளம் உடையவனும், கனியாதவனும் ஆகிய நான் இவ்வுலகில் (பேணுவார் இல்லாமல்) ஊரில் திரியும் நாயிற் கீழாயினேன். நான் புலால் நாற்றம் நிறைந்த புழுக்கள் வாழ்கின்ற கூடாகிய இவ்வுடலைப் பேணிக் கொண்டு இவ்வுலகில் வாழ்ந்திருக்கும்படி முடிவு கட்டினையோ?

விளக்கம் :

இறைவன் எல்லோரையும் பொதுவாக அடிமையாக உடையவன் எனினும் பேரன்பர்களே மெய்யடியராய் மெய்த்தொண்டினுற் பெறும் இன்பம் பெறுவர் என்பார், " உடையானே, உள்ளம் உருகும் காதலுடையார் உடையாய் " என்றார்.

இறைவனுடைய பெருங் கருணையை நினைந்து உருகும் உள்ளம் உடையாரை இறைவன் அடிமையாக உடையான். அவர்களைத் தன் திருவடி சேர்ப்பன். அவர்களுக்கே திருவடி இன்பம் அளிப்பன். ஒருவரால் வளர்க்கப் படுகின்ற நாய் அவர் கொடுக்கும் நல்ல உணவையுண்டு உயிர் வாழும்; ஊர் நாய் எச்சில் உணவின் பொருட்டு எங்கும் அலையும். முதல்வன் தம்மை ஆண்டும், அவன் பின் சென்று கலவாது பிரிந்து உலகில் தங்க நேர்ந்த

மையின், "ஊர் நாயிற் கடையனாயினேன்" என்றார். சிவபோகத்தின் நிலையான இன்பத்தையும் ஆண்டான் அடிமைத் தொடர்பின் நன்மையையும் அறியாத மனம் என்பார், "கல்லா மனத்தேன்" என்றார். யாக்கைப் பயனாகிய அரன் பணியைக் கைவிட்டு உடல் வளர்த்தலையே நோக்கமாகக் கொண்டுள்ளமை குறித்து "முடையார் புழுக்கூடிது காத்திங்கிருப்பதாக முடித்தாயே" என்றார்; முடித்தாயே—ஏகாரம் வினாப் பொருளில் வந்தது.

57 **முடித்தவாறு மென்றனக்கே**
**தக்க தேமுன் னடியாரைப்**
**பிடித்தவாறுஞ் சோராமற்**
**சோர னேனிங் கொருத்திவாய்**
**துடித்தவாறுந் துகிலிறையே**
**சோர்ந்தவாறு முகங்குறுவேர்**
**பொடித்தவாறு மிவையுணர்ந்து**
**கேடென் றனக்கே சூழ்ந்தேனே.**

**பதப்பிரிவு :**

முடித்த ஆறும் என் தனக்கே
தக்கதே முன் அடியாரைப்
பிடித்த ஆறும் சோராமல்
சோரனேன் இங்கு ஒருத்தி வாய்
துடித்த ஆறும் துகில் இறையே
சோர்ந்த ஆறும் முகம் குறுவேர்
பொடித்த ஆறும் இவை உணர்ந்து
கேடு என் தனக்கே சூழ்ந்தேனே.

**பொழிப்புரை :**

என்னை இங்கு இருப்பதாக முடிவு செய்த விதமும் ஏற்றதே; முன்பு தொண்டர்களைத் தளரவிடாமல் தாங்கிய விதமும் ஏற்றதே. கள்வனாகிய நான், இவ்விடத்திலுள்ள ஒரு பெண்ணின் வாயிதழ்கள் (தான்

தன் உள்ளத்திலுள்ள விருப்பத்தைக்கூற இயலாத நிலையில்) பதைத்த விதமும், ஆடை சிறிது நழுவிய விதமும், முகத்திற் சிறிய வேர்வைத் துளிகள் தோன்றிய விதமும் ஆகிய இந்நிகழ்ச்சிகள் (தீயன எனக் கடிந்து விலக்காது) காதற் குறிப்பால் நிகழ்ந்தன எனக் கருதி எனக்கே தீமையை ஆக்கிக் கொண்டேன்.

**விளக்கம்**:

உலகத்தார்க்கு முதல்வன் உண்மையினையும் இயல்பினையும் உணர்த்துதற் பொருட்டுத் தம்மை இங்கு இருப்பதாக முடித்தனன் ஆதலால் "முடித்தவாறும் தக்கதே" என்றார். சீவன் முத்தர்கள் முதல்வனை மறவாமல் நினைத்துக் கொண்டிருக்கும்வரை மலவாதனை அவர்களைத் தாக்காது; மறந்தால் விளக்கற்றம் பார்க்கும் இருளே போல் வந்து தாக்கும்.

"இருந்திடிற் பஞ்சாக்கரவன் பதத்திடையான், மலமும்
இருந்திடும்; சற்றெழின், ஆங்கே எழுந்தினி, நீ எனக்கு
விருந்தென வாய்ப்பெயும்; மீட்டும் இராமை விடுப்பின் அந்தோ
பொருந்திடும் எல்லாம் அவன் பெயர் பொள்ளென ஓதுவதே."

(பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி)

ஆதலின், 'இவை உணர்ந்து கேடு என்றனக்கே சூழ்ந்தேனே" என்றார்.

அடிகள் இங்ஙனம் கூறியது உலகர்க்கு நிகழும் நிகழ்ச்சிகளை அவர் உண்மை உணர்ந்து உய்தற் பொருட்டுத் தம்மேல் ஏற்றி உரைக்கும் **ஏற்றுரை** ஆம். இக்கருத்துப்பற்றியே சிவஞான முனிவரர் இப்பாட்டின் பொருளை உட்கொண்டு பின்வருமாறு அருளிச் செய்துள்ளார்:

"சுரிகுழல் மடவார் இளமுலைப் பணைப்புந்
துகிலிறை சோர்வதும் நகையும்
வரிவிழித் தொழிலும் சேயிதழ்த் துடிப்பும்
மனத்திடை எழுதிவைத்(து) அழிவேன்
தெரிதமிழ்க் கலைசைச் சிவபிரான் வடிவும்
செய்கையும் தன்னடி யார்க்குப்
பரிவுகூர் அருளும் மனத்தகத்(து) எழுதாப்
பாவியேற்(கு) இனிப்புகல் என்னே"

(கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி-72)

அடிகள் போன்ற செம்புலச் செல்வரை மாயை வாதியாது என்பதைத் திருநாவுக்கரசர்க்கு நிகழ்ந்தமை கொண்டு தெளியலாம்.

இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமுஞ் செயல்புரிய
அத்தனர் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும்
மெய்த்தன்மை உணர்வுடைய விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்றார்"

(திருத்தொண்டர் புராணம்)

**தக்கதே** என்பது நடுநிலை விளக்காக நின்று முன்னும் பின்னும் இயைந்தது. "முடித்தவாறு தக்கதே" என முடித்து, சோராமல் எனப் பாடங்கொண்டு, பிடித்தவாறும் சோராமல் சோரனேன் கேடு சூழ்ந்தேன் என முடித்தலும் உண்டு.

58 தேனைப் பாலைக் கன்னலின்
தெளியை யொளியைத் தெளிந்தார்த
மூனை யுருக்கு முடையானை
யும்ப ரானை வம்பனே
னுனின் னடியே னீயென்னை
யாண்டா யென்ற லடியேற்குத்
தானுஞ்சிரித்தே யருளலாந்
தன்மை யாமென் றன்மையே.

**பதப்பிரிவு:**

தேனைப் பாலைக் கன்னல் இன்
 தெளியை ஒளியைத் தெளிந்தார் தம்
ஊனை உருக்கும் உடையானை
 உம்பரானை வம்பனேன்
நான் நின் அடியேன் நீ என்னை
 ஆண்டாய் என்றால் அடியேற்குத்
தானும் சிரித்தே அருளலாம்
 தன்மை ஆம் என் தன்மையே.

**பொழிப்புரை:**

கேட்டல் சிந்தித்தல்களால் ஐயம் நீங்கித் தெளிவுணர்வுடையார்க்குத் தேன்போலும் சுவை அளிப்பவனை, பால் போலும் இனிமை தருபவனை, கருப்பஞ் சாற்றின் இனிய தெளிவு போலும் இன்பம் அருளுபவனை, சுடர்வடிவாய் விளங்குபவனை, தெளிந்த உணர்வுடையவருடைய உடலை இளகச் செய்யும் ஆண்டவனை, மேலுலகத்தவனை (நோக்கி) வீணாகிய யான் "நான் உனக்கு அடிமை யானேன், நீ என்னை ஆட்கொண்டவன்" என்று மொழிந்தால், தொண்டனாகிய எனக்கு அப்பெருமானும் எள்ளல் நகைகொண்டு தண்ணளி செய்யலாம் பான்மையது ஆகும் என் இயல்பு.

**விளக்கம்**

"இருள் நீங்கி இன்பம் பயக்கும் மருள் நீங்கி, மாசறு காட்சி யவர்க்கு" ஆதலின், தெளிந்தார்தம் இருள் நீக்கலில் ஒளியும், இன்பம் பயத்தலில் தேன், பால், கன்னலின் தெளிவும் போல்வான் இறைவன். தெளிந்தார்தம் என்பதை இடைநிலை விளக்காக வைத்துப் பொருள் கூறுக.

தெளிவுணர்வு உள்ளம் உருகுதற்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகும்.

"ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து"

(திருவாசகம்-பிடித்தபத்து-9)

இறைபணியன்றி நிலையிலா வீண் செயல் புரிதலின் வம்பனேனை என்றார். என் செயல் எல்லோராலும் நின்னாலும் எள்ளி நகையாடுதற் குரித்தாம்; ஆயினும் உன்னுடைய சிரிப்பு, 'சிரித்தெரித்தனை முப்புரத்தினை' என்றபடி, என்னுடைய மும்மலங்களும் எரிந்தொழிதற்குக் காரணமாகும் என்பது ஒரு நயம்.

"ஓடிய் தாணவம் உற்றது பாசகன் மங்கள் ஒத்த;
வாடின பல்வகைத் தோற்றமும்; மலர் அயன் மால் முதலோர்
வீடினர் செய்கை; விளைந்தது போகம்; வியன் துறைசை
நீடிய பஞ்சாக் கரவன் முகிழ்த்த நிலா நகைக்கே."

(பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி)

யாவர்க்கும் மேலானவனாகிய உம்பரான் வம்பனேனாகிய என்னை ஆளுதல் நகுதற்கேதுவாகும் என்பதாம். சிரித்தே ஏகாரம் தேற்றப் பொருள்.

59 தன்மை பிறரா லறியாத
தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை யாண்டையா
புறமே போக விடுவாயோ
வென்னை நோக்கு வாரி யாரே
யென்னான் செய்கே னெம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி
யெந்தா யெங்குப் புகுவேனே.

**பதப்பிரிவு:**

தன்மை பிறரால் அறியாத
தலைவா பொல்லா நாய் ஆன
புன்மையேனை ஆண்டு ஐயா
புறமே போக விடுவாயோ
என்னை நோக்குவார் யாரே
என் நான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழும் திருமேனி
எந்தாய் எங்குப் புகுவேனே.

**உரை நடை :**

தன்மை பிறரான் அறியாத தலைவா! பொல்லா நாய் ஆன புன்மையேனை ஆண்டு (அருளி) ஐயா! புறம் போக விடுவாயோ? (விட்டால்) என்னை நோக்குவார் யாரே? எம்பெருமான்! நான் என் செய்கேன்? பொன்திகழும் திருமேனி எந்தாய்! எங்குப் புகுவேன்?

**பொழிப்புரை :**

தன் இயல்பு, அருள் பெருத ஏனை உயிர்களால் தெளியப்படாத முதல்வனே! கீழான நாய் போன்ற சிறுமையுடைய என்னை ஆட்கொண்டு, தலைவனே! உன் அருள் நிறைவின் வெளிச்செல்ல விடுவாயோ? (புறம் போக விட்டால்) என்னைக் கடைக்கணிப்பார் யாரும் இல்லையே. எங்கள் பெருமானே! நான் என்ன செய்வேன்? பொன் வண்ணம் இலங்கும் திருவுருவுடைய என் தந்தையே! எவ்விடத்தைத் தஞ்சம் அடைவேன்?

விளக்கம்:

சிவபெருமானுடைய சிறப்பிலக்கணம் பிறரால் அறிய முடியாதது. தனக்குரிய நன்றியறிதலாகிய பண்பில்லாத நாய் போன்றவன் என்பார், **பொல்லா நாயான** என்ருர். “நாய் வயின் உள்ள குணமும் இல்லேனை நற்றெண்டு கொண்ட, தீவயின் மேனியன்” எனத் திருக்கோவையினும் அடிகள் அருளிச் செய்கின்ருர். புறமே—நின் திருவருள் நிறைவுக்கு வெளியே. தன்னை ஆட் கொண்ட பிறகு வெளியே போகவிடுதல் இறைவன் பெருங்கருணைக்கு மாருகுமாதலின் வெளியே போகவிடார் என்னுங் கருத்துக் கொண்டு **புறமே போக விடுவாயோ** என்ருர். அடியேனைப் பாதுகாப்பவர் யாவர் எனப்பரிந்து கேட்பாராய், **நோக்குவார் யாரே** என்ருர். என்னல் யாதுஞ் செய்ய இயலாது என்பார், **நான் என் செய்கேன்** என்ருர். எனக்கு வேறு புகலில்லை என்று

கூறுவார் எங்குப் புகுவேன் என்றார். தலைவா, ஐயா, எம்பெருமான், எந்தாய் என்று இறைவனை உரிமை பாராட்டி அழைக்கும் பதங்களின் நயம் காண்க. தம்மையாண்ட ஞானசிரியத் திருவுரு, தம் உள்ளத்தில் நிலைகொண்டமையின் "பொன்னே திகழுந் திருமேனி எந்தாய்" என்றார். நீயே என்னை வைத்துக் காப்பாற்ற வேண்டும் என்பது குறிப்பு.

60 புகுவே னெனதே நின்பாதம்
போற்று மடியா ருண்ணின்று
நகுவேன் பண்டு தோணோக்கி
நாண மில்லா நாயினே
னெகுமன் பில்லை நினைக்காண
நீயாண் டருள வடியேனுந்
தகுவ னேயென் றன்மையே
யெந்தா யந்தோ தரியேனே.

**பதப்பிரிவு :**

புகுவேன் எனதே நின் பாதம்
போற்றும் அடியாருள் நின்று
நகுவேன் பண்டு தோள் நோக்கி
நாணம் இல்லா நாயினேன்
நெகும் அன்பு இல்லை நினைக் காண
நீ ஆண்டு அருள அடியேனும்
தகுவனே என் தன்மையே
எந்தாய் அந்தோ தரியேனே.

**உரைநடை :**

நாணம் இல்லா நாயினேன் பண்டு போற்றும் அடியாருள் நின்று எனது தோள் நோக்கி நகுவேன்; நினைக் காண நெகும் அன்பு இல்லை; நீ ஆண்டு அருள அடியேனும் தகுவனே ? எந்தாய்! தன்மை என் ? அந்தோ! தரியேன்; எனது (உரிமையாகிய) நின் பாதமே புகுவேன்.

**பொழிப்புரை :**

பழிபாவங்களை நாணாத நாய் போன்ற நான், முன்பு, உன்னை வழிபடும் தொண்டர் நடுவே கூடி நின்று (பூரித்த) என் தோள்களைக் கண்டு தருக்கி மகிழ்வேன். உன்னைப் பார்ப்பதற்குக் குழைந்த அன்பு இல்லை. ஆதலின், நீ ஆட்கொண்டு திருவருள் புரிதற்குத் தொண்டனாகிய நானும் தக்கவன் ஆவேனோ? என் தந்தையே! என் இயல்பு எத்தகையது? ஐயோ! (இவ் வாழ்வைத் தாங்கிக் கொண்டிருக்கமாட்டேன். எனது உரிமையேயாகிய உன் திருவடிகளையே தஞ்சமாக அடைவேன்.

**விளக்கம் :**

"புகுவேன் எனதே நின்பாதம்" என்பதை எனது நின்பாதமே புகுவேன் என ஈற்றில் வைத்து உரைக்க.

நீ புறம் போகவிட்டால் எந்தாய் எங்குப் புகுவேன் என்று அலமந்து அடிகள் நின் பாதமே மீட்டும் புகுவேன் என்று துணிகிறார். அங்குப் புகுந்து அடங்கியதும், எல்லா உயிர்க்கும் போகமாம் கழலடிகள் கொடுக்கும் இன்பத்தை எனக்கே உரிமையாகக் கொண்டு நுகர்வேன். என் தந்தையே, உன் திருவடி இன்பத்தைத் துய்க்கும் உரிமை எனக்கே உண்டு என்பார், '**எனதே நின் பாதம்**' என்றார். பண்டு போற்றும் அடியார் ஞானாசிரியன் உடனிருந்த பழவடியார். அடியார் கூட்டத்துள் நிற்றலைச் சிறந்த பேறாக அடிகள் கருதி மனங்களிக்கிறார்; களிப்பால், தோள்கள் விம்முகின்றன; தோள்களின் பணைப்பைக் கண்டு மகிழ்கூர்கிறார். அன்பால் உளங்குழைந்தால் சித்தத்தினுள்ளே சிவனைக் காணலாம்; சிவனைக் காண்பதற்கேற்ற அன்பு இன்மைக்கு இரங்குவார், "நினைக் காண நெகும் அன்பில்லை" என்றார்.

இறைவனால் ஆட்கொள்ளப் பெறுதற்குரிய தகுதியின்மைக்கு இரங்குவார், 'ஆண்டருள அடியேனுந் தகுவனே' என்றார். ஏகாரம் எதிர்மறை.

# 7 காருணியத் திரங்கல்

இத்தலைப்பின் பொருள் இறைவனது காருணியத்தை வேண்டி இரங்குதல் என்பதாம். காருணியம்-திருவருள். பாச நீக்கத்தில் உறுதிபெறுதற்கும் சிவப்பேறு அடைதற்கும் வேண்டியதாகிய திருவருளைப் பெறுதற்கு விரும்பிப் "போற்றி" என்னும் அன்பொடு வணக்கங் கலந்த மொழியைக் கூறி அடிகள் இரங்குதல் இப்பதிகப் பொருளாகும்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

**61 தரிக்கிலேன் காய வாழ்க்கை**
**சங்கரா போற்றி வான**
**விருத்தனே போற்றி யெங்கள்**
**விடலையே போற்றி யொப்பி**
**லொருத்தனே போற்றி யும்பர்**
**தம்பிரான் போற்றி தில்லை**
**நிருத்தனே போற்றி யெங்க**
**ணின்மலா போற்றி போற்றி.**

**பதப்பிரிவு.**

தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி எங்கள்
விடலையே போற்றி ஒப்பு இல்
ஒருத்தனே போற்றி உம்பர்
தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள்
நின்மலா போற்றி போற்றி.

பொழிப்புரை :

உடலோடு உயிர் வாழ்ந்திருத்தலைத் தாங்க மாட்டேன். இன்பஞ் செய்பவனே! எம்மைக் காத்தருள்க. ஞான வெளியில் விளங்கும் பழையோனே! எம்மைக் காத்தருள்க. எங்கள் நல்லிளைஞனே! எம்மைக் காத்தருள்க. இணையற்ற தனி முதல்வனே! எம்மைக் காத்தருள்க. விண்ணவர் அண்ணலே! எம்மைக் காத்தருள்க. திருத்தில்லை நகரில் திருக்கூத்துப் புரிபவனே! எம்மைக் காத்தருள்க. எங்களுடைய தூயனே! எம்மைக் காத்தருள்க. வணக்கம், வணக்கம்.

விளக்கம்:

சங்கரன்-சம்-இன்பம்; கரன் செய்பவன்; இன்பஞ் செய்பவன். காய வாழ்க்கை-மூன்றன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. வானம் - அறிவுப்பரவெளி (சிதாகாயம்).விருத்தன்-பழையோன்.போற்றி என்பதற்கு வணக்கம் எனவும் காத்தருள் எனவும் பொருள் கொள்க. இறைவன் அறிவில் முதியோன், ஆற்றலில் விடலை. சிவன் அநாதி நின்மலன்-எக்காலத்தும் அழுக்கற்றவன்; உயிர் முத்திக் காலத்து மட்டும் அழுக்கற்றது. ஒப்பில் ஒருத்தன்—தனக்கு உவமையில்லாத தனி முதல்வன்.

தனது மாசற்ற ஒளித் தன்மையைத் தன்னையடைந்த உயிர்களிடத்து விளங்கச் செய்தலின் 'எங்கள் நின்மலா' என்றார்.எட்டு முறை போற்றி என வணக்கம் கூறுகிறார்; காத்தருள்க எனவும் வேண்டுகிறார்.

62 போற்றியோ நமச்சி வாய
புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய
புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய
புறமெனப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய
சயசய போற்றி போற்றி.

பதப்பிரிவு:

போற்றி ஓம் நமச்சிவாய
புயங்கனே மயங்குகின்றேன்
போற்றி ஓம் நமச்சிவாய
புகல் இடம் பிறிது ஒன்று இல்லை
போற்றி ஓம் நமச் சிவாய
புறம் எனைப் போக்கல் கண்டாய்
போற்றி ஓம் நமச் சிவாய
சயசய போற்றி போற்றி.

உரைநடை:

போற்றி ஓம் நமச்சிவாய! புயங்கனே! மயங்குகின்றேன். போற்றி ஓம் நமச்சிவாய புகலிடம் பிறிது ஒன்று இல்லை. போற்றி ஓம் நமச்சிவாய எனைப் புறம் போக்கல், கண்டாய். போற்றி ஓம் நமச்சிவாய! போற்றி சய,சய, போற்றி, போற்றி.

பொழிப்புரை:

வணக்கம் ஓம் நமச்சிவாய எனும் நாமமுடையவனே! பாம்பை அணிந்தவனே! தெளிவின்றிக் கலங்குகின்றேன்; காத்தருள்க; ஓம் நமச்சிவாய அடைக்கலம் புகும் இடம் வேறு யாதும் எனக்கு இல்லை. காத்தருள்க. ஓம் நமச்சிவாய என்னை நின் அருள் நிறைவுக்கு வெளியே தள்ளாதிருப்பாயாக. (கண்டாய்-முன்னிலையசை) காத்தருள்க. ஓம் நமச்சிவாய! வெல்க, வெல்க, வணக்கம், வணக்கம்.

**விளக்கம்:**

நமச்சிவாய என்னும் நாமத்தையுடைய நாதனாகிய சிவபெருமானை அத்திரு நாமத்தையே கூறி வணங்குகிறார். சிவபெருமான் ஆயிரந் திருநாமங்களுடையவனாயினும் நான்மறை மெய்ப்பொருளாய் விளங்குவதும்,

உயிர்களைப் பிறவிக் கடலினின்றுங் கரையேற்றும் துணையாக விளங்குவதும் இத்திருப்பெயரே யாதலின், இதனைப் பிரணவத்தோடு சேர்த்துப் பன்முறை கூறி வணங்குகின்றார். 'சிவாயநம' என்னும் முத்தித் திருவைந்தெழுத்தை "நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம" எனப் பின் அருளிச் செய்கின்றார். முத்தித் திரு ஐந்தெழுத்தை ஓதும் பேறு தவமுடையார்க்கே கிட்டும் என அதன் பெருமையைக் கூறுகிறார். திருவருட்பேறு ஒன்றனையே குறித்து ஞானதீக்கைப் பேறுடையாரால் ஓதப்பெறும்: சமைய தீக்கைப் பேறுடையார் ஓதுகின்ற 'நமச்சிவாய' என்ற முதன்மையான பெயரை இந்நூலின் தொடக்கத்தில் முதலடியிலும் ஆறெழுத்தை இத் திருப்பாடல் நான்கு அடிகளிலும் மீளவும் திருவைந்தெழுத்தை 'நமச்சிவாய என் றுன்னடிபணியாப் பேயனுகிலும் பெருநெறி காட்டாய்' எனச் செத்திலாப்பத்து ஏழாந்திருப்பாட்டிலும் அமைத்தருளினார். எட்டாந் திருமுறை "நமச்சிவாய" எனத் தொடங்கி "யாவர்க்கும் ஊதியமே" என முடிதற் சிறப்பு நோக்குக. "நமச்சிவாய" என்னும் பெயர் ஆறத்துவாக்களுக்குட் பட்ட பதமுத்திப் பேறுகளை அளிக்கும்.

"சிவாயநம" என்ற நாமம் திருவருளைக் காட்டித் தத்துவாதீதனுகிய சிவபெருமான் திருவடிப் பேறளிக்கும்.

"—இவனின்று
நம்முதலா ஓதில் அருள் நாடாது; நாடும் அருள்
சிம்முதலா ஓதுநீ சென்று"

(உண்மை விளக்கம்)

நமச்சிவாய என்ற திருநாமம் மயக்கந் தீர்க்குமாகலின் 'மயங்குகின்றேன்' என்றும்; அதுவே யாவர்க்கும் அடைக்கலமாதலின் "புகலிடம் பிறிது ஒன்றில்லை" என்றும் கூறினார். திருவைந்தெழுத்தில் ஆன்மாவை அரனுடைய பரிசாகிய ஆண்டான் அடிமைத் தொடர்பை உணர வேண்டுமென்பார் "புறம் எனைப் போக்கல் கண்டாய்" என்றார்.

"அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு"

(சிவஞான போதம்)

"அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும்
அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு"

(சிவஞான சித்தியார்)

அரன் நாமமேயன்றி அரனுருவும் அஞ்செழுத்தாதலின் ஐந்தெழுத்தை வைத்தே அரனுக்கு வணக்கங் கூறுகிறார். ஐந்தெழுத்தால் பாசப் பகையை அறுத்து ஞானவெற்றி பெறலாம் என்பார், "சயசய போற்றி, போற்றி" என்று முடித்தார்.

"பஞ்சாக்கரத்தை என்பது முத்திப் பஞ்சாக்கரத்தை என்றவாறு. விதிப்படி உச்சரிக்க என்பது ஆன்மா பாசம் ஒருவி ஞானக் கண்ணினிற் பதியைச் சிந்தை நாடுக என ஈண்டு விதித்த விதியின்படியே ஓதுக என்றவாறு."

(சிவஞான மாபாடியம்)

63 போற்றியென் போலும் பொய்யர்
தம்மையாட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி
நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப்
புதுமதுப் புவன நீர்தீக்
காற்றிய மானன் வான
மிருசுடர்க் கடவு ளானே.

**பதப்பிரிவு :**

போற்றி என் போலும் பொய்யர்
தம்மை ஆட்கொள்ளும் வள்ளல்
போற்றி நின் பாதம் போற்றி
நாதனே போற்றி போற்றி
போற்றி நின் கருணை வெள்ளம்
புது மதுப் புவனம் நீர் தீக்
காற்று இயமானன் வானம்
இருசுடர்க் கடவுளானே.

**பொழிப்புரை :**

என்னை ஒத்த பொய்ப்பொருட் பற்றுடையாரையும் அடிமை கொள்ளும் அருட்கொடையாளனே! காத்தருள்க. உன்னுடைய திருவடிகட்கு வணக்கம், வணக்கம். தலைவனே! காத்தருள்க, காத்தருள்க. நிலம், புனல், நெருப்பு, வளி, விண், ஞாயிறுந்திங்களும் ஆய இரு சுடர், உயிர் என்னும் எண் பொருள்களையும் திருமேனியாகக் கொண்ட கடவுளே! உனது திருவருளாகிய புதிய தேன் பெருக்கு என்னைக் காத்தருள்க.

**விளக்கம் :**

மெய்யரையே யன்றிப் பொய்யரையும் அடிமை கொள்ளலின் வள்ளல் என்றார். மண், நீர், தீ, காற்று, வானம், கதிரவன், திங்கள், உயிர் ஆகிய இவ்வெட்டினையுங் கலந்து நின்று சிவபிரான் தனக்கு வடிவாகக் கொள்கின்றான் என்பது மறையாகமங்களின் துணிபு.

இயமானன் — உயிர்.

'' மண்ணும் புனல் உயிரும் வருகாற்றுஞ் சுடர் மூன்றும்
விண்ணும் முழுதானான் இடம்வீழிம் மிழலையே. ''

(திருஞானசம்பந்தர்)

'' பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபார்
எற்று நீர் தீக்காலு மேலைவிண் இயமான னோடு
மற்றும் மாதோர் பல்உயிராய் மால்அயனும் மறைகள்
முற்றுமாகி வேறுமானான் மேயது முதுகுன்றே. ''

(திருஞான சம்பந்தர்)

'' இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவும் தம்முருவும் தாமேயாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே. ''

(திருநாவுக்கரசு நாயனார்)

இறைவன் கருணைப் பெருக்குத் தேன் போன்றினிமை யானது. எந்நாளும் புதிய தேன் போன்று இனிக்கும் என்பார் 'கருணை வெள்ளப் புது மது' என்றார்.

**64 கடவுளே போற்றி யென்னைக்**
**கண்டுகொண் டருளு போற்றி**
**விடவுளே யுருக்கி யென்னை**
**யாண்டிட வேண்டும் போற்றி**
**யுடலிது களைந்திட் டொல்லை**
**யும்பர்தந் தருளு போற்றி**
**சடையுளே கங்கை வைத்த**
**சங்கரா போற்றி போற்றி.**

**பதப்பிரிவு :**

கடவுளே போற்றி என்னைக்
கண்டு கொண்டு அருளு போற்றி
விட உள்ர உருக்கி என்னை
ஆண்டிட வேண்டும் போற்றி
உடல் இது களைந்திட்டு ஒல்லை
உம்பர் தந்துஅருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த
சங்கரா போற்றி போற்றி.

உரை நடை :

'எவற்றுக்கும் எட்டாத' கடவுளே! போற்றி. அடியேனைக் கண்டு (அடிமையாக) ஏற்றுக் கொண்டு அருளு, போற்றி. (பற்றை) நீக்குதற்கு உள்ளத்தை உருக்கி அடியேனை ஆண்டிட வேண்டும், போற்றி. உடலாகிய இதனைக் களைந்திட்டு ஒல்லையில் உம்பரைத் தந்து அருளு, போற்றி. சடையுளே கங்கையை வைத்த சங்கரா போற்றி, போற்றி.

**பொழிப்புரை :**

மனமொழி மெய்களைக் கடந்த பொருளே! வணக்கம். என்னை உனது அருட்கண்ணால் நோக்கி ஆட்கொண்டு ஏற்று அருள்செய்க, வணக்கம். புறப்பற்றை விட்டு ஒழிக்குமாறு என் நெஞ்சகத்தை இளகச்செய்து அடியேனை உறுதியாக அடிமை கொள்ள வேண்டும்; வணக்கம். உடலாகிய இந்த அகப்பற்றையும் விட்டொழித்து விரைவில் வீட்டுலகினைக் கொடுத்தருள்புரிக; வணக்கம். சடையினுள் கங்கை ஆற்றை அடக்கி வைத்த, இன்பஞ் செய்பவனே, காத்தருள்க; வணக்கம்.

**விளக்கம் :**

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

(திருக்குறள்-350)

என்ற கருத்தின்படி பற்று ஒழிதற்பொருட்டு உண்ணின்றுருக்கி ஆட்கொள்ளவேண்டும் என்பார் "விட, உளே உருக்கி எனை ஆண்டிடவேண்டும்" என்றார். விட– (பற்றை) விடும்படி. உளே–உள்ளே என்பதன்தொகுத்தல். திருவருள் நோக்கத்தால் உயிரின் ஊனம் நீங்கி இறைவனுக்கு அடிமையாதற்றகுதி உண்டாகும். ஆதலின் கண்டு, கொண்டு, அருளு என்றார். உறுதியாக ஆட்கொள்ள வேண்டுமென வலியுறுத்தவேண்டுவார் ஆண்டிடவேண்டும் என்றார். இழிவான இவ்வுடல் என்பார் உடலிது என்றார். உம்பர்– மேலிடம், இங்கு மேலான வீட்டுலகம். திருவள்ளுவரும் வீட்டுலகினை வரன் என்றார்.

"உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து"

(திருக்குறள்-24)

வீட்டின்பத்தை விரைவில் தந்தருளவேண்டுவார் ஒல்லை தந்தருளு என்றார்.

அருளு—அருள் உகரச்சாரியைபெற்று நின்றது.

உடல் இது — உடலாகிய சுட்டியறியப்படும் பொருள். அதன் அணுக்கமும் நில்லாமையும் உணர்த்து வார் உடல் இது எனச் சுட்டிக் கூறினர்.

**65 சங்கரா போற்றி மற்றோர்**
**சரணிலேன் போற்றி கோலப்**
**பொங்கரா வல்குற் செவ்வாய்**
**வெண்ணகைக் கரிய வாட்கண்**
**மங்கையோர் பங்க போற்றி**
**மால்விடை யூர்தி போற்றி**
**யிங்கிவாழ் வாற்ற கில்லே**
**னெம்பிரா னிழித்திட் டேனே.**

பதப்பிரிவு :

சங்கரா போற்றி மற்று ஓர்
சரண் இலேன் போற்றி கோலம்
பொங்கு அரா அல்குல் செவ்வாய்
வெள் நகைக் கரிய வாள் கண்
மங்கை ஓர் பங்க போற்றி
மால் விடை ஊர்தி போற்றி
இங்கு இ வாழ்வு ஆற்ற கில்லேன்
எம்பிரான் இழித்திட் டேன் ஏ.

உரை நடை :

சங்கரா! போற்றி மற்று ஓர் சரண் இலேன் போற்றி. (சினம்) பொங்குகின்ற அராப்போலும் கோல அல்குலையும் செம்மையாகிய வாயையும் வெண்மையாகிய நகையையும் கரிய வாள் பொருந்திய கண்ணையும் உடைய மங்கையை ஓர் பங்க! போற்றி. மாலாகிய விடையை ஊர்தி! போற்றி. எம்பிரானே! இங்கு இவ் வாழ்வினை ஆற்ற கில்லேன்; இழித்திட்டேன்.

**பொழிப்புரை :**

இன்பம் விளைப்பவனே! காத்தருள்க. வேறு ஓர் புகலிடம் இல்லாதிருக்கின்றேன்; காத்தருள்க. சினம் மிகுகின்ற பாம்பின் படம்போலும் அரையினையும், சிவந்த வாயினையும், வெண்ணிறப் பற்களையும் கரு நிறமுடைய ஒளி பொருந்திய கண்களையும் கொண்ட இளம் பெண்ணாகிய உமையம்மையைத் திருமேனியில் ஒரு பாகத்தில் உடையவனே! காத்தருள்க. திருமாலாகிய காளையை வாகனமாக உடையவனே! காத்தருள்க. எங்கள் தலைவனே! இம் மண்ணுலகில் இவ்விழிவான வாழ்க்கையைப் பொறுக்கக்கூடாதிருக்கிறேன்; இகழ்ந்து வெறுத்து விட்டேன்.

விளக்கம்:

இன்பம் விளைப்பவன் சிவபிரான் ஒருவனே ஆதலின் சங்கரா என்றார். வெண்ணகைக் கரிய வாட்கண்—முரண் தொடை.

உயிர்களுக்கு அருள் புரியும் பண்பு நீங்காது இறைவனிடத்திருத்தலின் அருள்வடிவான "மங்கையோர் பங்க" என்றார். திருமால் இடபமாய்ச் சிவனைத் தாங்கினான் ஆதலின் **மால்விடையூர்தி** என்றார்.

> "கடகரியும் பரிமாவும் தேருமுகந் தேறாதே
> இடபமுகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
> தடமதில்கள் அவை மூன்றுந் தழலெரித்த அந்நாளில்
> இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ."

(திருவாசகம்-**திருச்சாழல்**)

இவ்வாழ்க்கை அல்லலும் துன்பமும் மிக்கதாகலின் ஆற்றகில்லேன் என்றார்.

"அல்லல் மிக்க வாழ்க்கையை ஆதரித் திராதுநீர்
நல்லதோர் நெறியினை நாடுதும் நடம்மினோ."
"துக்கமிக்க வாழ்க்கையின் சோர்வினைத் துறந்துநீர்
தக்கதோர் நெறியினைச் சார்தல் செய்யப் போதுமின்."

(திருஞானசம்பந்தர்)

அரா—அரவின் படம்; முதற்பெயர் சினைக்காயது.

66 இழித்தன னென்னை யானே
யெம்பிரான் போற்றி போற்றி
பழித்திலே னுன்னை யென்னை
யாளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை யெல்லாம்
பெரியவர் கடமை போற்றி
யொழித்திடிவ் வாழ்வு போற்றி
யும்பர்நாட் டெம்பி ரானே.

**பதப்பிரிவு :**

இழித்தனன் என்னை யானே
எம்பிரான் போற்றி போற்றி
பழித்திலேன் உன்னை என்னை
ஆளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை எல்லாம்
பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடு இவ் வாழ்வு போற்றி
உம்பர் நாட்டு எம்பிரானே.

உரைநடை :

எம்பிரானே போற்றி, போற்றி; யானே என்னை இழித்தனன், உன்னைப் பழித்திலேன். என்னை ஆளுடைப் பாதம் போற்றி. பிழைந்தவை எல்லாம் பொறுக்கை பெரியவர் கடமை போற்றி. உம்பர் நாட்டு எம்பிரானே! இவ்வாழ்வு ஒழித்திடு : போற்றி.

**பொழிப்புரை :**

எங்கள் தலைவனே! வணக்கம், வணக்கம். நானே என் அன்பின் குறைவால் என்னைத் தாழ்த்தினேன். என்னைப்பிரிந்து சென்றமைக்கு உன்னை இகழ்ந்திலேன்; என்னைத் தொண்டனாக ஏற்றருளிய திருவடிகட்கு வணக்கம். குற்றங்கள் யாவற்றையும் மன்னித்தருளுதல் உயர்ந்தோர் கடமையாகும்; வணக்கம். வீட்டுலகத்து எம் தலைவனே ! இவ்வுடலோடு கூடிநிற்கும் வாழ்க்கையைப் போக்கியருள்வாயாக.

**விளக்கம் :**

தம்மையும் ஓர் பொருட்படுத்து இறைவன் ஆட்கொண்டமை பற்றி ஏனையோர் தம்மை மேன்மைப்படுத்தினும் அடிகள் அடிமையாதற்குத் தமது தகுதியின்மை குறித்துத் தம்மைத் தாழ்த்திக் கூறுவார், "**இழித்தனன் என்னை யானே**" என்றார். இறைவனுடைய திருவடிகளே உயிர்களை ஆட்கொண்டு இன்பம் அளிப்பன வாதலின் "**என்னை ஆளுடைப் பாதம் போற்றி**" என்றார். "போற்றியா முய்யஆட் கொண்டருளும் பொன் மலர்கள்".

(திருவெம்பாவை)

உம்பர் நாட்டு எம்பிரானே! மக்கள் இறைவனை வழிபடும் போது தங்கள் உணர்வை மாசு நீக்கிச் சுத்த வித்தியாதத்துவத்துக்கு உயர்த்துக் கொள்ள வேண்டும் என்பார்; "**உம்பர் நாட்டு எம்பிரானே**' என்றார். முதல்வனது சிறப்பியல்பு மெய்யுணர்வுக்கே விளங்கி நிற்கும் என்பதாம்.

காயமே கோயிலாக் கொண்டு இதயகமலத்தில் வித்தையும் சுத்த வித்தையும் ஆகிய எட்டிதழ்களின்மேல் இறைவன் வீற்றிருக்கிறான்.

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமையஆட்டிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே."

(திருநாவுக்கரசர் தனித்திருநேரிசை)

"மண்முதல் நாளம் மலர்வித்தை கலாருபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும்—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணும்
நிலையதிலாம் அச்சிவன்தாள் நேர்."

(சிவஞான போதம்)

"வித்தியாதத்துவம் ஏழும் சுத்தவித்தையுமாகிய எட்டும்
எட்டிதழ் வடிவம்"

(சிவஞான பாடியம்)

67 எம்பிரான் போற்றி வானத்
தவரவ ரேறு போற்றி
கொம்பரார் மருங்குன் மங்கை
கூறவெண்ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத்
திருச்சிற்றம் பலவ போற்றி
யும்பரா போற்றி யென்னை
யாளுடை யொருவ போற்றி.

பதப்பிரிவு :

எம்பிரான் போற்றி வானத்து
அவர் அவர் ஏறு போற்றி
கொம்பர் ஆர் மருங்குல் மங்கை
கூற வெண் நீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத்
திருச் சிற்றம்பலவ போற்றி
உம்பரா போற்றி என்னை
ஆளுடை ஒருவ போற்றி.

**உரை நடை :**

எம்பிரானே! போற்றி. வானத்துள்ள அவர் அவர் ஏறு போன்றவனே! போற்றி. கொம்பர் ஆர் மருங் குலையுடைய மங்கை கூறனே! வெண்மையாகிய நீறனே! போற்றி. செம்பிரான் போற்றி. தில்லையிலுள்ள திருச்சிற்றம்பலவனே! போற்றி. உம்பரானே! போற்றி. என்னை ஆளுடைய ஒருவனே! போற்றி.

**பொழிப்புரை :**

எங்கள் தலைவனே! காத்தருள்க. விண்ணுலகப் பதங்களிலுள்ள அவ்வத் தேவர்களுக்குத் தனித்தனியே தலைவனே! காத்தருள்க. பூங்கொம்பு போலும் இடையையுடைய உமையம்மை பாகனே! திருவெண்ணீறு அணிந்தவனே! காத்தருள்க. செந்நிறமேனிப் பெருமானே! காத்தருள்க. தில்லை நகரிலுள்ள திருச் சிற்றம்பலக் கூத்தனே! காத்தருள்க. உயர்ந்த சிவலோகத்தலைவனே! காத்தருள்க. என்னை அடிமை கொண்ட தனி முதல்வனே! காத்தருள்க.

**விளக்கம் :**

திருச்சிற்றம்பலம் மெய்ஞ்ஞானம். திருச்சிற்றம்பல வன் – ஞானத்தெழுகின்ற ஆனந்தக்கூத்தன். "அண்ண லார் தமக்களித்த மெய்ஞ்ஞானமே ஆன அம்பலமும் தம், உண்ணிறைந்த ஞானத்தெழும் ஆனந்த ஒரு பெருந் தனிக் கூத்தும்"

ஒருவன் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். வானத்து அவர் அவர் ஏறு – விண்ணுலகத்தில் பதவிகளிலுள்ள எல்லோர்க்கும் தலைவன். ஏறு – உபசார வழக்கு. சிவ பெருமான் ஒருவனே யாவர்க்கும் அருள்புரிவன் ஏனை அயன் மால் முதலியோர் தங்களை வணங்குபவர்க்கு அருள் புரிதலும் சிவனருள்கொண்டே என்பது தோன்ற **அருள் வடிவான மங்கை கூற** என்றார். கொம்பர்– குற்றியலுகரஈற்றுப்போலி. ஆர் – போன்ற, உவம உருபு.

68 ஒருவனே போற்றி யொப்பி
லப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி யெங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருக நின் பாதம் போற்றி
தமியனேன் றனிமை தீர்த்தே.

**பதப்பிரிவு :**

ஒருவனே போற்றி ஒப்பு இல்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருக என்று என்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருக நின் பாதம் போற்றி
தமியனேன் தனிமை தீர்த்தே.

உரை நடை :

ஒருவனே! போற்றி. ஒப்பு இல் அப்பனே! போற்றி. வானோர் குருவனே! போற்றி. எங்கள் கோமளக் கொழுந்தே! போற்றி. என்னை நின்பால் வருக என்று வாங்கிடவேண்டும் போற்றி. தமியனேன் தனிமை தீர்த்து நின் பாதங்களைத் தருக; போற்றி.

**பொழிப்புரை :**

தனி முதல்வனே! வணக்கம். நிகரற்ற தந்தையே! வணக்கம். தேவர்களுக்கும் ஞானாசிரியனே! வணக்கம். எங்களுடைய மேன்மையான இளந்தளிர் போன்றவனே! வணக்கம். என்னை உன்னிடம் வருக என அழைத்து என் உடல் பொருள் ஆவியை ஏற்றுக்கொள்ளவேண்டும்;

வணக்கம். துணையின்றித் தனித்தவனாகிய எனது தனிமையைப் போக்கி உனது திருவடித்துணை தந்தருள்க; வணக்கம்.

விளக்கம்:

ஒருவன் — ஒப்பற்றவன்; அநேகேசுவரவாதிகள் கொள்கையை மறுத்து ஒருவனே என்றார். இவ்வுலகினை ஆக்குதற்கு அநேக கடவுளர் வேண்டப்படுவர் என்பது அநேகேசுரவாதிகள் கொள்கை. கடவுளர் பலர் எனக் கொள்ளின் "தனக்கு உவமையில்லாதான்" என்ற கடவுளிலக்கணத்திற்கு மாறுபடும் உவமையில்லாதவன் ஒருவனே அமையும்: இலக்கணத்தால் வேறு பாடில் வழி இலக்கியம் பலவாதல் செல்லாது" என்பது விதியாதலின்.

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றேபதி"

(சிவஞானபோதம்)

உலகத் தந்தை தனது நிலையற்ற செல்வத்தை மகனுக்கு உரியதாக்குவான். இறைவனோ என்றும் நிலையாயுள்ள பேரின்பச் செல்வத்தைத் தன் பிள்ளைகளாகிய உயிர்களுக்கு உதவலின் '**ஒப்பில் அப்பன்**' என்றார். மக்களுக்கேயன்றித் தேவர்களுக்கும் சிவபெருமானே முதற்குரவனாய் வருதலின், '**வானோர் குருவனே**' என்றார். இறைவன் திருவுரு இளமைச் செவ்வியுடைத்தாய் உள்ளங் கவர்ந்து குழைவித்தலின், **கோமளக் கொழுந்து** என்றார். இறைவன் தம்மை வருக என்று வலிய இழுத்து வளைத்து அணைத்துக்கொள்ள வேண்டும் என்பார், 'வருக என்று நின்பால் வாங்கிட வேண்டும்' என்றார்;

உடல் பொருள் ஆவியைக் கொள்க என்பதுங் கருத்து. உடல் பொருள் ஆவி என்னும் செயப்படு பொருள் அவாய் நிலையாற் பெறப்படும். முதல்வன் மெய்யன்பர்களுடைய உடல் பொருள் (வினை) ஆவி

மூன்றனையும் வாங்கிக் கொள்ளுதலைப் பின்வரும் தேவாரம் உணர்த்தும் :

"சடையானைத் தலைகை யேந்திப் பலிதருவார்தம்
கடையே போய் மூன்றுங் கொண்டான் கலிக்கச்சியுள்
புடையே பொன் மலருங் கம்பைக்கரையே கம்பம்
உடையானை யல்லதுள் காது எனது உள்ளமே"

(திருஞானசம்பந்த மூர்த்திகள் தேவாரம்)

தனிமை தீர்த்துத் துணையாவன இறைவன் திருவடிகளே.

"உற்றாரிலாதார்க்கு உறுதுணையாவன .....
... ... ... ...
.. — — —
அற்றார்க்கு அரும் பொருள் காண்க ஐயாறன் அடித்தலமே"

(திருநாவுக்கரசர் தேவாரம்: நான்காந் திருமுறை)

**69 தீர்ந்தவன் பாய வன்பர்க்**
**கவரினு மன்ப போற்றி**
**பேர்ந்துமென் பொய்ம்மை யாட்கொண்**
**டருளிடும் பெருமை போற்றி**
**வார்ந்தநஞ் சயின்று வானோர்க்**
**கமுதமீ வள்ளல் போற்றி**
**யார்ந்த நின் பாத நாயேற்**
**கருளிட வேண்டும் போற்றி.**

**பதப்பிரிவு :**

தீர்ந்த அன்பு ஆய அன்பர்க்கு
அவரினும் அன்ப போற்றி
பேர்ந்தும் என் பொய்ம்மை ஆட்கொண்டு
அருளிடும் பெருமை போற்றி
வார்ந்த நஞ்சு அயின்று வானோர்க்கு
அமுதம் ஈ வள்ளல் போற்றி
ஆர்ந்த நின் பாதம் நாயேற்கு
அருளிட வேண்டும் போற்றி,

**பொழிப்புரை :**

நிறைந்த அன்பு வடிவமான மெய்யன்பராகிய அடியார்க்கு அவரன்பைக் காட்டினும் மிகுதியான அன்புடையவனே! வணக்கம். என் பொய்ம்மையை ஒழித்தும் அடிமை கொண்டு திருவருள் புரிந்திடும் பெருமைக் குணம் உடையோனே! வணக்கம். திருப் பாற்கடலினின்று எழுந்த ஆலால நஞ்சினை உண்டு தேவர்கட்கு அமுதத்தை அளித்த கொடையாளனே! வணக்கம். பேரின்பம் நிறைந்த உன் திருவடிகளை நாய் போன்ற எனக்குத் தந்தருள வேண்டும். வணக்கம்.

**விளக்கம்**

தீர்ந்த அன்பு—குறைவற்ற நிறைந்த அன்பு. அன்பு ஆய – அன்பே உருவமாகிய. அன்பாய அன்பர்—திருக் கண்ணப்பர் போல்வார்.

என் பொய்ம்மை (யை) பேர்த்தும் ஆட்கொண்டு அருளிடும் பெருமை — என முடிக்க.

பேர்த்தல் — ஒழித்தல்; அஃது எதுகை நோக்கிப் **பேர்ந்தும்** என மெலிந்து நின்றது.

வார்ந்த — ஒழுகிப்பரந்த.

வானோரை நலிய வந்தவிடம் உண்டது மட்டுமன்றி அவர்களை நீடு வாழச் செய்யும் அமுதமும் ஈந்ததனால் அமுதம் ஈ வள்ளல் என்றார்.

ஆர்ந்த பாதம்—இன்பம் நிறைந்த திருவடிகள். வலியுறுத்தி வேண்டுவார் **"அருளிடவேண்டும்" என்றார்.**

**70 போற்றியிப் புவன நீர்தீக்**
**காலொடு வான மானாய்**
**போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற**
**மாகி நீ தோற்ற மில்லாய்**
**போற்றி யெல்லா வுயிர்க்கு**
**மீறாயீ றின்மை யானாய்**
**போற்றியைம் புலன்க ளின்னைப்**
**புணர்கிலாப் புணர்க்கை யானே.**

பதப்பிரிவு:

போற்றி இப் புவனம் நீர் தீ
காலொடு வானம் ஆனாய்
போற்றி எ உயிர்க்கும் தோற்றம்
ஆகி நீ தோற்றம் இல்லாய்
போற்றி எல்லா உயிர்க்கும்
ஈறு ஆய் ஈறு இன்மை ஆனாய்
போற்றி ஐம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கையானே.

உரை நடை:

இப்புவனம், நீர், தீ, காலொடு, வானம் ஆனாய் போற்றி. எ உயிர்க்கும் தோற்றம் ஆகி நீ தோற்றம் இல்லாய்; போற்றி. எல்லா உயிர்க்கும் ஈறுஆய் நீ ஈறு இன்மை ஆனாய்; போற்றி. ஐம்புலன்களும் நின்னைப்புணர் கிலாப் புணர்க்கையானே! போற்றி.

பொழிப்புரை:

இந்த நிலமும், புனலும், நெருப்பும், காற்றும், விசும்பும், கலந்து நிற்கும் தன்மையில் அவையேயானவனே! வணக்கம். எவ்வகை உயிர்க்கும் தோன்றுதற்குக் காரணமாகி நீ பிறப்பற்றவனானாய் உனக்கு வணக்கம். உயிர்கள் யாவற்றுக்கும் ஒடுங்கும் இடம் ஆகி, நீ முடிவு இல்லாத தன்மையனாய் அமைந்தாய், வணக்கம். (மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற) பொறிகளின் அறிவு ஐந்தும் உன்னைச்சார்ந்து அறியாதன. ஆனால் உயிர் களின் பொருட்டு அவற்றையும் சார்ந்து நிற்குந் தன்மையனே, வணக்கம்.

**விளக்கம் :**

சிவன் ஐம்பூதங்களோடு கலந்து ஒன்றாயும் வேறா யும் உடனாயும் இருத்தலைப் பின்வரும் திருமுறைப் பாட்டு உணர்த்தும் :—

" ஈறாய்முதல் ஒன்றாய்இரு பெண்ஆண்குண மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்அவை ஐந்தாய்
ஆறார்சுவை யேழோசையோ டெட்டுத்திசை தானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழ லையே "

(திருஞானசம்பந்த மூர்த்தி
நாயனார் தேவாரம்)

இறைவன் ஐம்புலன்களாற் பொருந்தி அறியப் படுபவன் அல்லன். ஆதலின் ஐம்புலன்கள் நின்னைப் புணர்கிலா என்றார்.

" சிவனை
ஐம்பொறியை விட் (டு) அங் (கு) அணை சகலன்

(சிவஞானபோதம் சூத்திரம் 8
உதாரண வெண்பா)

ஆயினும், உயிர்களுக்கு ஏகதேச அறிவை விளக்கு தற் பொருட்டு இறைவன் புலன்களோடு புணர்ந்திருக் கிறான்.

" தெரிந்து கொண்டு ஒரோ ஒன்றாகச் சென்றைந்து புலனும் பற்றிப்
புரிந்திடும் உணர்வினோடும் போகமும் கொடுத்து யோனி
திரிந்திடும் அதுவுஞ்செய்து செய்திகண்(டு) உயிர்கட் கெல்லாம்
விரிந்திடும் அறிவுங் காட்டி வீட்டையும் அளிப்பன் மேலோன். "

(சிவஞான சித்தியார்)

இங்ஙனம் புலன்களாற் பற்றப் படாது நின்றே முதல்வன் அவற்றைச் செலுத்தி உதவுதல்பற்றி " ஐம் புலன்கள் நின்னைப் புணர்கிலாப் புணர்க்கையானே " என்றருளினார்.

—28.

# 8 ஆனந்தத் தழுந்தல்

சிவபோகம் என்னும் பேரின்ப நுகர்ச்சியில் அழுந்தி நிற்றல்.

**ஆனந்தம்** என்பது காருணியத்திரங்கி நின்று திருவருள் பெற்ற உயிர் மெய்யுணர்வால் இறையருளைப் பற்றி நின்று நுகரும் பேரின்பம் ஆகும். பயிற்சி வயத்தால் ஒரோவழித் தம் உணர்வில் உலகியல் தலைப் படின் தம் உணர்வை அதனினின்று முதல்வன் திருவடிக்கே உய்க்குமாறு ஆண்டவனை வேண்டுதல் இப்பதிகம் நுதலிய பொருளாம். ஒரு பொருளையே ஒரு காலத்து அறிந்து அதன் குணங்களில் அழுந்துகின்ற இயல்பு உயிரியல்பாகும். இறைவன் யாவற்றையும் ஒரு சேரப் பரந்த அறிவுக்கண் கொண்டு காண்பான்.

" ஐந்திணையும்
ஒன்றென்றுப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகும்
ஒன்றென்றுப் பார்க்கும் உணர்ந்து."

(சிவஞானபோதம் சூத்திரம் 11-வெண்பா)

அறிந்ததில் அழுந்துதல் உயிரின் குணம். இறைவன் ஒருசேரப் பொருள்களை அறிதலும் உயிர் களின் பொருட்டேயாம். சிவானந்தத்தையும், உயிரின் பொருட்டு அறிவானேயன்றித் தன் ஆனந்தத்தைத் தான் அனுபவியான். ஆதலின் ஆனந்தத் தழுந்தல் உயிரின் செயலேயாகும். உயிர் ஒரு பொருளை அனுபவிக்குங்கால் சிவன் உடனிருந்து காட்டுவான், கூடவே சென்று காண்பான், ஆனால் அதில் அழுந்த மாட்டான்.

71 புணர்ப்ப தொக்க வெந்தை யென்னை
யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது
நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக வன்றி தாக
வன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக வங்க ணாள
புங்க மான போகமே.

பதப்பிரிவு:

புணர்ப்பது ஒக்க எந்தை என்னை
ஆண்டு பூண நோக்கினாய்
புணர்ப்பது அன்று இது என்ற போது
நின்னொடு என்னொடு என் இது ஆம்
புணர்ப்பது ஆக அன்று இது ஆக
அன்பு நின் கழல்கணே
புணர்ப்பது ஆக அம் கணாள
புங்கம் ஆன போகமே.

**உரைநடை :**

எந்தை! (உனது திருவருட் பேற்றில் என்னைப்) புணர்ப்பது ஒக்க, என்னை ஆண்டு பூண நோக்கினாய், (பின்னர்) நின்னொடு என்னொடு இது, புணர்ப்பது அன்று என்றபோது இது என் ஆம்? அம் கணாள இது புணர்ப்பது ஆக, அன்று ஆக நின்னுடைய கழற்கண் உள்ள அன்பே புங்கம் ஆன போகம் புணர்ப்பதாக.

**பொழிப்புரை :**

என் அப்பனே! என்னை உன் திருவடிக்கண் சேர்த்துக் கொள்வது போன்று என்னை ஆட்கொண்டு உன்னுடைய திருவருளில் என் உணர்வு அடங்கி நிற்குமாறு அருள் நோக்கஞ்செய்தாய் பின் என்னைத் திருவடியிற் சேர்த்துக் கொள்ளுங்காலம் இஃதன்று என்று கூறியருளி அகன்ற போது உன்னோடு எனக்கு உண்டான சிறப்புத் தொடர்பு எப்பயன் தருவதாகும்? இக்காலம் உன்னோடு என்னைக் கூட்டுவதாகட்டும் அல்லது, அல்லாததாகட்டும்; அழகிய கண்ணோட்டமுடையவனே! உனது திருவடிகளில் நான் கொண்டுள்ள மெய்யன்பே சிறந்ததாகிய சிவானந்தானுபவத்தைக் கூட்டி வைப்பதாக.

விளக்கம் :

புணர்ப்பது ஒக்க—உயிர் முதல்வனைக் கூடுவதற்கு ஏதுவாயுள்ள இருவினையொப்பு என்னும் சமநிலை உண்டாக எனினும் ஒக்கும்.

இருவினையொப்பாவது நல்வினையும் தீவினையும் அவற்றின் பயன்களும் பிறவிக்கே ஏதுவாவன என ஒருவன் உணர்வில் அவ்விரண்டிலும் ஒப்ப உவர்ப்புத் தோன்றுதல்.

பூண—அடிமைத் தொழிலை மேற்கொள்ள எனினும் பொருந்தும். நோக்கினாய் — அருட்பார்வையளித்தாய். புணர்ப்பது அன்று இது என்றபோது — நீ என்னைத் தில்லைக்கு வா' இது புணர்க்கும் காலம் அன்று' என்று கூறியபோது. புணர்ப்பது — சேர்க்குங்காலம், ஆகுபெயர்.

இது — இந்நோக்கம் எனக்கொண்டால் நின்னோடு என்னோடு என்னிதாம் — நீ நோக்கிய அருட்பார்வை என்னை உன்னுடன் சேர்த்து உனக்கும் எனக்குமுள்ள அத்துவித சம்பந்தமாகிய இரண்டற்ற தொடர்பினால் அழுந்தியறியும் சிவானந்தானுபவம் அருளாதாயின் யாது பயனுடைத்தாம் என்பதாம். அன்புடன் கூடிய வணக்கம் ஒன்றே சிவானந்தத் தழுத்து மாகலின் அன்புநின் கழற்கணே புணர்ப்பதாக என அடிகள் வேண்டுகிறார்.

"கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

(திருத்தொண்டர் புராணம்)

72 போகம் வேண்டி வேண்டி லேன்பு
ரந்த ராதி யின்பமு
மேக நின்க ழலி ணைய
லாதி லேனெ னெம்பிரா
னாகம் விண்டு கம்பம் வந்து
குஞ்சி யஞ்ச லிக்கணே
யாக வென்கை கண்க டாரை
யாற தாக வையனே.

பதப்பிரிவு :

போகம் வேண்டி வேண்டிலேன்
புரந்தர ஆதி இன்பமும்
ஏக நின் கழல் இணை
அலாது இலேன்; என் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து
குஞ்சி அஞ்சலிக் கணே
ஆக என்கை, கண்கள் தாரை
ஆறு அது ஆக ஐயனே.

உரைநடை:

ஏகனே! எம்பிரான்! ஐயனே! போகத்தை வேண்டி, புரந்தர ஆதி இன்பமும் வேண்டிலேன். நின் கழலிணை அலாது இலேன். ஆகம் விண்டு கம்பம் வந்து, என் கை குஞ்சி அஞ்சலிக் கண்ணே ஆக, என் கண்கள் தாரை ஆறு அது ஆக.

பொழிப்புரை:

இணையற்ற ஒருவனே! என் தலைவனே! ஞானாசிரியப் பெரியோனே! நான் சிவபோகத்தை நாடி, இந்திரபோகம் முதலியவற்றையும் விரும்பவில்லை. உன்னுடைய திருவடிகள் இரண்டும் அல்லாமல் வேறு துணை இல்லேன். என் உடல் நெகிழ்ந்து வேறாகி நடுக்கம் தோன்றி என்

கைகள் உச்சிமேற் கூப்பித் தொழுஞ் செயலிற் படுவன வாக; என் கண்களினின்று வரும் நீரொழுக்குப் பெருகி ஆறுவதாக.

**விளக்கம் :**

வேதம் கடவுளை ஏகம் என்ற சொல்லாற் குறிக்கும்; அப்பொருள் சிவபிரானே என்பார் ஏக! என்று அழைத் தருளினர்.

"ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றே பதி."

(சிவஞான போதம்)

வேதத்துள் ஏகம் என்ற சொல் வேறு பொருள் படாதென்பார், "ஒன்றென்ற தொன்றே" என்றும் அதற்கு விளக்கங் கூறுவார், "விண்ணும் மண்ணும் தோற்றுவிக்கும் தேவன் ஒருவனே" என்றும் "ஒருவனே உருத்திரன் இரண்டாம் முதற் கடவுளில்லை" என்றும், "பிரமப் பொருள் ஒன்றே" என்றும் ஓதுகின்ற அச்சுருதிப் பொருளே பற்றி, "ஒன்றே பதி" என்றும் கூறினர்.

(சிவஞான பாடியம்)

குஞ்சி அஞ்சலிக் கண்ணேயாக என்கை

"உச்சிக் கூப்பிய கையினர்"

(திருமுருகாற்றுப்படை)

புரந்தராதிபோகம் — சிவபோகம் ஒழிந்த இந்திரன், அயன், மால் முதலியோர் போகங்கள்.

சிவபோகம் விரும்புவார்க்கு மால், அயன், இந்திரன் முதலியோருடைய போகங்கள் கொள்ளத்தக்கன அல்ல, விள்ளத்தக்கனவே. "கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு." இவர்கள் வாழ்வையெல்லாம் சேர்த்துச் சொர்க்காதி போகங்கள் என்பர் திருஞான சம்பந்தர்.

"மங்குல்தோய் மணிமாட மதிதவழும் நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டின் இசைபாடு மலர்க் கொன்றைத்
தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே."

(திருஞானசம்பந்தமூர்த்தி
நாயனார்-தேவாரம்)

சிவபோகம் நுகர்வார்க்குச் சிவன் திருவடியன்றி வேறு துணையில்லை; திருவடிஞானமன்றி வேறு ஞானமில்லை.

"ஆம்பலம் பூம்பொய்கை ஆமாத்தூர் அம்மான்தன்
சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே."

(திருஞானசம்பந்தர் தேவாரம்)

விண்டு—வேருகி; விள்—பகுதி; அஃதாவது புளியம் பழமும் அதன் தோடும் போலப் பற்றின்றி வேறு படுதல். கம்பம்—நடுக்கம். கைகள் தாமாகவே தலைமேற் குவிய வேண்டும் என்பார் குஞ்சி அஞ்சலிக்கணே என் கை ஆக என்ருர்.

அழுதால் இறைவனைப் பெறலாம் என்னும் கொள்கையினர் ஆதலின் கண்களில் அன்புக் கண்ணீர் ஆருகப் பெருகுதலை வேண்டுகிருர்.

இறைவன் கழலடி துணையாகக் கொண்ட அடிகள் அக்கழலிணை மறவாது மனத்துக் கொண்டு மெய்யன்பு செலுத்த வேண்டுவார் அவ்வன்பினை வெளிப்படுத்தும் இம் மெய்ப்பாடுகளை இறைவனிடம் வேண்டுகிருர். அகத்தே அன்பு நிகழின் அவ்வன்பினை மறைக்க முடியாது. அன்பின் பெருக்கால் புறத்தே இவைகள் நிகழும் என்பதாம்.

73 ஐய நின்ன தல்ல தில்லை
மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை
பொய்ம்மை யேனெ னெம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க
வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த வன்ப ரன்பெ
னக்கு மாக வேண்டுமே.

**பதப்பிரிவு :**

ஐய நின்னது அல்லது இல்லை
மற்று ஓர் பற்று வஞ்சனேன்
பொய் கலந்தது அல்லது இல்லை
பொய்ம்மையேன் என் எம்பிரான்
மை கலந்த கண்ணி பங்க
வந்து நின் கழல் கணே
மெய் கலந்த அன்பர் அன்பு
எனக்கும் ஆக வேண்டுமே.

**உரை நடை :**

ஐய! என் எம்பிரான்! மை கலந்த கண்ணி பங்க! வஞ்சனேன் நின்னது அல்லது மற்று ஓர் பற்று இல்லை; பொய்ம்மையேன் கலந்தது பொய் அல்லது இல்லை. நின் கழல்கண் வந்து கலந்த மெய் அன்பர் அன்பே எனக்கும் ஆகவேண்டும்.

**பொழிப்புரை:**

மேலோனே! என் தலைவனே! மைதீட்டப்பெற்ற கண்களையுடைய உமையம்மையை ஒரு பாகத்திலுடையவனே! கள்ள உள்ளம் உடைய எனக்கு உன்னை அல்லாமல் வேறு ஒன்றுமே சார்துணையில்லை. வஞ்சனேனாகிய எனக்குப் பொய்யன்பன்றி உண்மையன்பு

இல்லை. ஆதலின் உனது திருவடிகளிடத்துச் சேர்ந் துள்ள உண்மைத் தொண்டர்கள் கொண்ட மெய் யன்பே அடியேனுக்கும் உளதாக வேண்டும்.

**விளக்கம்.**

ஏ — ஈற்றசை.

சிறப்புரிமை தோன்ற என் **எம்பிரான்** என்றார்.

அம்மையின் அருள் நோக்கால் தம் அன்பு மெய் ஆக விரும்புவார், **மைகலந்த கண்ணி பங்க** என அழைத் தார். நின் கழற்கண் வந்து கலந்த மெய்யன்பர் அன்பு எனக் கூட்டுக. வந்து என்னும் செய்தெனச்சம் கலந்த என்னும் பெயரெச்சம் கொண்டது. கழற்கணே என்பதி லுள்ள ஏகாரத்தைப் பிரித்து அன்பே எனக் கூட்டுக. மெய்யன்பினை அளித்தற்கு நீ ஒருவனே உறுதுணையா யிருக்கின்றாய் என்பதாம்.

**74 வேண்டு நின்க ழற்க ணன்பு**
**பொய்ம்மை தீர்த்து மெய்ம்மையே**
**யாண்டு கொண்டு நாயி னேனை**
**யாவ வென்ற ருளுநீ**
**பூண்டுகொண் டடிய னேனும் போற்றி**
**போற்றி யென்று மென்று**
**மாண்டு மாண்டு வந்துவந்து**
**மன்ன நின்வ ணங்கவே.**

**பதப்பிரிவு:**

வேண்டும் நின் கழற்கண் அன்பு
பொய்ம்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயினேனை
ஆவ என்று அருளு நீ
பூண்டு கொண்டு அடியனேனும் போற்றி
போற்றி என்றும் என்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து
மன்ன நின் வணங்கவே.

**உரைநடை :**

மன்ன! நீ நாயினேனைப் பொய்ம்மை தீர்த்து ஆண்டு கொண்டு ஆவ என்று அருளு. அடியனேனும் பூண்டு கொண்டும் மாண்டு மாண்டு வந்து வந்தும் போற்றி போற்றி என்றும், என்றும் வணங்க நின் கழற்கண் மெய்ம்மை அன்பே வேண்டும்.

**பொழிப்புரை :**

அருள் அரசே! உன்னுடைய திருவடியன்பே எனக்கு வேண்டப்படுவதாகும். நிலையில்லாத உலகிற் செல்கின்ற எனது பொய்த் தன்மையை ஒழித்து உண்மைத் தன்மையையே அளித்து என்னை அடிமை கொண்டு, நாயிற் கடைப்பட்ட அடியேனுக்கு இரக்க மொழி கூறி அருள்புரிவாயாக. அடிமையாகிய நானும், அவ்வடிமைத் தன்மையை விடாது மேற்கொண்டு, காப்பாற்றுவாயாக. வணக்கம். என்று கூறி, எந்நாளும் தன் முனைப்பு முற்றுங்கெட்டு உன்னை மேன்மேலும் அணைந்து, வணங்கவும் நீ அருள்புரிவாயாக.

விளக்கம் :

அருளு நீ என்பதனை ஈற்றிலும் கூட்டுக.

மாளுதல் — சாதல், தன்முனைப்புக்கெடுதல்.

"உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்தெவரும்
தத்த மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே."

என்றதில் சாவது என்பதும் இப்பொருளுடையது.

"அறிவு மாயுந்தொறுந் தொறும் இன்பந்தரும் வள்ளல் வார்கழல்கள்"
(தணிகைப்புராணம்)

"இனிப் பத்தியினுன் மறவாதேத்த அவனது திருப்பாதத்தை அணையுமென்றது." (சிவஞானபோதம்) ஆதலின் வந்து வந்து வணங்க என்றார்.

ஆவ — இரக்கக் குறிப்பிடைச் சொல். பொய்ம்மை நீக்கி மெய்ம்மை மேற்கொள்வதில் தாம் படும் பாட்டிற்கு இறைவன் இரங்கவேண்டும் என்பார், **ஆவ என்றருளி** என்றார். **பூணுதல்** — மேற்கொள்ளுதல், அடிமைத் தன்மையை மேற்கொள்ளுதல். பொய்ம்மை நீக்கி மெய்ம்மை காண்டலே சிவனுக்கு அடிமையாதற்கு இன்றியமையாது வேண்டப்பெறுவது.

பொய் நிலையில்லாதது; மெய் நிலை பெற்றது. இக் கருத்தினைப் "பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டான் மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு" என்ற சிவஞானபோத அடிகள் விளக்குதல் காண்க. தைவம் – தேவனது உடைமை.

"பொய்யாகிய இந்திரியங்களைத் தனக்கு வேருகக் கண்டு அவற்றுடைய பொதுஇயல்பு பொதுஇயல்பே யாய் ஒழியுமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானு யின் அவன் பரம் பொருளாகிய சிவத்துக் கடிமையாம்."

(சிவஞானபாடியம்)

இவ்வாறு அடிமை பூணுதற்பயனை

"அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொண்டன்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோர் அடிமைபூண் டேனுக்கே"

என்னும் தேவாரத் திருக்குறுந்தொகையிற் காண்க.

'**மன்ன நின் வணங்கவே**' என்பதற்கு நிலை பெறுமாறு உன்னை வழிபடவே எனவும் பொருள் கூறலாம்.

75 வணங்கு நின்னை மண்ணும் விண்ணும்
வேத நான்கு மோலமிட்
டுணங்கி நின்னை யெய்த லுற்று
மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன
வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க
வென்கொ லோநி னைப்பதே.

**பதப்பிரிவு.**

வணங்கும் நின்னை மண்ணும் விண்ணும்
வேதம் நான்கும் ஓலம் இட்டு
உணங்கும் நின்னை எய்தல் உற்று
மற்று ஓர் உண்மை இன்மையின்
வணங்கி யாம் விடேங்கள் என்ன
வந்து நின்று அருளுதற்கு
இணங்கு கொங்கை மங்கை பங்க
என் கொல் ஓ நினைப்பதே.

**பொழிப்புரை:**

பொருத்தமாக நெருங்கின தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகத்தில் உடையவனே! (உன்னையன்றி) வேறானதொரு மெய்ப்பொருள் இல்லையாதலின், உன்னை நிலவுலகத்தவரும் வானுலகத்தவரும் தொழுவர்; நான்மறைகளும் உன்னை அடைய முயன்று அது முடியாமையால் அபயம் கூறி நின்று வாடும். நாங்கள் உன்னை அடைந்து "தொழுவோம், விடமாட்டோம்." என்று வேண்ட, நீ தோன்றி முன்னின்று திருவருள்புரிவதற்குத் தடையாகத் திருவுள்ளம் பற்றுவது என்ன? ஓ — அசை.

விளக்கம்:

மண் — மண்ணுலக மக்கள் (ஆகுபெயர்); விண் — வானுலகத் தேவர் (ஆகுபெயர்). மண்ணுலகத்தவர் அல்லல் மிக்க வாழ்க்கையுடையவர். துன்ப நீக்கத்தின் பொருட்டு இன்பமே பெரும்பாலும் நுகரும் விண்ணுலகத் தவரினும் முந்துவராதலின் முற்கூறப்பட்டார். உம்மை எண்ணும்மை. நான்கு வேதமும் ஓலமிட்டு அலறியும் சிவனைக் காணப்பெறு; ஆதலின் உணங்கும் என்ருர்.

"மறையினுல் அயனுல் மாலால் மனத்தினுல் வாக்கால் மற்றும்
குறைவிலா அளவி ஞலும் கூஞெ தாகி நின்ற
இறைவனுர் கமல பாதம்"

(சிவஞான சித்தியார்)

ஆனல் உலக மக்களில் மெய்யன்பர்கள் அன்பினுல் வணங்குவார்கள்; இறைவனை விடாது பற்றிப் பிடிப்பார் கள்; ஆதலின் இறைவன் அருளுதற்குத் தடையொன்று மில்லை. சிவபெருமான் அருள்புரிதலில் தடையின்மைக்கு ஏதுக் கூறுவார் அவன் அருளேயாகிய அம்மையை ஒரு பக்கத்திலுடைமை கூறினுர்.

76 நினைப்ப தாகச் சிந்தை செல்லு
மெல்லை யேய வாக்கினுற்
றினைத்த னையு மாவ தில்லை
சொல்ல லாவ கேட்பவே
யனைத் துலகு மாய நின்னை
யைம்பு லன்கள் காண்கிலா
வெனைத்தெ னைத்த தெப்பு றத்த
தெந்தை பாத மெய்தவே.

பதப்பிரிவு:

நினைப்பது ஆகச் சிந்தை செல்லும்
எல்லை ஏய வாக்கினுல்
தினைத் தனையும் ஆவது இல்லை
சொல்லல் ஆவ கேட்பவே
அனைத்து உலகும் ஆய நின்னை
ஐம் புலன்கள் காண்கிலா
எனைத்து எனைத்தது எப்புறத்தது
எந்தை பாதம் எய்தவே.

உரைநடை:

எந்தையே! சிந்தை செல்லும் எல்லை நினைப்பது ஆக. சொல்லல் ஆவ (எல்லாம்) கேட்பவே. (ஆதலின்) ஏய வாக்கினால் தினைத் தனையும் ஆவது இல்லை. அனைத்து உலகும் ஆய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா. பாதம் எய்த அது எனைத்து எனைத்து எப்புறத்தது? (அறிந்திலேன்)

**பொழிப்புரை :**

மனமானது தனது நினைவாற்றலால் இறைவனை எண்ணுவதாகப் போகும். வாயானது ஈசனைப் பேசுவதாகப் போகும். ஆனால் அவனுடைய அருள் எல்லையைப் பொருந்த எண்ணுதல் மனத்தினால் இயலாது;சொல்லுதல் வாக்கினால் இயலாது. இறைவன் மனம் வாக்குக் கெட்டாதவன். இவ்விரண்டினாலும் தினையளவு கூட எட்ட முடியாது. சொல்லுதற்கு இயன்றனவே கேட்கப்படுவன; ஆதலின் கேள்வியினாலும் அவனை முற்றிலும் கேட்டறிய முடியாது. கலப்பினால் எல்லா உலகங்களும் அவையே யாகிய உன்னை ஐம்பொறிகளாலும் காணமுடியாது. உன்னுடைய திருவடி அடைதற்கு அஃது எத்துணை எத்துணை அளவினதோ எவ்விடத்ததோ அறிந்திலேன்.

**விளக்கம் :**

இறைவன் திருவடிகள் சிந்திப்பதற்கரியன; ஆயினும் அருளினால் சிந்திப்பவர்க்குச் செந்தேன் பொழிவன. அவனருளாலே வாக்கினால் சொல்லப்படுபவன. அருளின் துணை கொண்டு அவன் பெருமை கேட்கப் படுவதாகும். ஐம்புலன்கள் ஈண்டு அவற்றிற்கு வாயிலான ஐம் பொறிகளைக்குறிக்கும். அவை முதல்வனைப்பற்ற மாட்டா. ஆயினும் முதல்வன் தன் பேரின்பத்தை ஐம்பொறி அளவினும் மெய்யன்பர்க்கு நுகரக் கொடுப்பான்.

"உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி
உருவின்கண்
அணையும் ஐம்பொறி யளவினும் எளிவர அருளினை எனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே ஏத்திமுன் எடுத்த சொற்
பதிகத்திற்
புணரும் இன்னிசை பாடினர் ஆடினர் பொழிந்தனர் விழிமாரி."

"மறையினான் அயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்
குறைவிலா அளவினாலுங் கூறொணா தாகிநின்ற
இறைவனார் கமலபாதம்"

என்னும் சிவஞானசித்தியார் அவையடக்கச் செய்யுள் அருளால் அன்றி முதல்வன் அறியப் படாமையைத் தெரிவிக்கின்றது. பின் வரும்

"அருளினால் ஆகமத்தே அறியலாம் அளவினாலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே
மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம் பிறவிமாயா
இருளெலாம் இரிக்கலாகும் அடியரோ டிருக்கலாமே,"

என்னும் சிவஞானசித்தியார்ச் செய்யுள் குருவருளால் முதல்வன் இயல்பைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டையின் நின்று அநுபவிக்கலாம் எனக் கூறு கின்றது.

77 எய்த லாவ தென்று நின்னை
யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்க ணன்றி
மற்றொ ருண்மை யின்மையிற்
பைத லாவ தென்று பாது
காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்க ணொன்றும்
வண்ண மில்லை யீசனே.

**பதப்பிரிவு :**

எய்தல் ஆவது என்று நின்னை
எம்பிரான் இவ் வஞ்சனேற்கு
உய்தல் ஆவது உன்கண் அன்றி
மற்று ஓர் உண்மை இன்மையின்
பைதல் ஆவது என்று பாதுகாத்து
இரங்கு பாவியேற்கு
ஈது அலாது நின்கண் ஒன்றும்
வண்ணம் இல்லை ஈசனே.

**பொழிப்புரை :**

எங்கள் பெருமானே! உன்னை அடைந்து இன்புறுதல் எனக்குக் கைகூடுவது எப்பொழுது? இப் பொய்யனுகிய எனக்கு ஈடேற்றமாவது உனது பற்றுக்கோடேயல்லாது வேறொரு மெய்ச் சார்பு இல்லாமையின் உன்னைக் கைவிடின் பாவியாகிய எனக்குத் துன்பம் நேரும் என்று இரங்கிக் காப்பாற்று வாயாக. அருட் செல்வனே! நீ இவ்வாறு கருணை கூர்ந்து பாதுகாத்தலன்றி உன்னிடம் பொருந்தி அணையும் முறை வேறு இல்லையாகும்.

**விளக்கம் :**

எய்தல் — எய்து பகுதி, அல் தொழிற்பெயர் விகுதி. ஆவது — உளதாதல். இறைவன் அருளாசிரிய உருவில் வந்து உணர்த்திப் பின் " தில்லையில் முத்தியருள்வாம் " என்று சொல்லி மறைந்தமையின், "அடைந்து இன்புறுத லாகிய செயல் உண்டாவது எந்நாள் என்றுர். காரணமாகிய குருவின் அருளுரை வாய்த்தும், ஆக்கமாகிய எய்தல் வாய்க்காமையின், " என்று வாய்க்கும்? " என்று இரங்குகிறுர். கண் – பற்றுக்கோடு, சார்பு. வேறு மெய்ச்சார்பு இல்லையென்பார், 'மற்றோ ருண்மை யின்மையின்' என்றுர்.

மெய்ச்சார்பினைக் கைவிடின் துன்பம் உளதாகும் என்பார் பைதலாவது என்றார்; பைதல் — துன்பம். நீ கைவிட்டுவிட்டால் அடியேனுக்குத் துன்பம் வருமே என்று இரங்கிப் பாதுகாக்க வேண்டுகிறார். ஈசன் — ஐசுவரியம் உடையவன், அருட் செல்வம் உடையவன். ஒன்றுதல் — இரண்டறக் கலத்தல்.

78 **ஈச னேநீ யல்ல தில்லை**
**யிங்கு மங்கு மென்பதும்**
**பேசி னேனொர் பேத மின்மை**
**பேதை யேனெ னெம்பிரா**
**னீச னேனை யாண்டு கொண்ட**
**நின்ம லாவொர் நின்னலாற்**
**றேச னேயொர் தேவ ருண்மை**
**சிந்தி யாது சிந்தையே.**

பதப்பிரிவு:

ஈசனே நீ அல்லது இல்லை
இங்கும் அங்கும் என்பதும்
பேசினேன் ஓர் பேதம் இன்மை
பேதையேன் என் எம்பிரான்
நீசனேனை ஆண்டு கொண்ட
நின்மலா ஓர் நின் அலால்
தேசனே ஓர் தேவர் உண்மை
சிந்தியாது சிந்தையே.

உரை நடை :

ஈசனே! இங்கும் அங்கும் நீ அல்லது இல்லை என்பதும், பேதம் இன்மை ஓர் பேதையேன் பேசினேன், என் எம்பிரான்! நீசனேனை ஆண்டுகொண்ட நின்மலா! தேசனே! ஓர் நின் அலால் ஓர் தேவர் உண்மை சிந்தை சிந்தியாது.

**பொழிப்புரை:**

செல்வனே! இந்தக் கட்டுநிலையினும் மேலை முத்தி நிலையினும் உன்னையல்லாமல் உயிர்க்கு ஒன்றும் இயலாது. இவ்வகையில் பெத்த முத்திகள் இரண்டிற்கும் வேறுபாடின்மையை அறிவிலியாகிய அடியேன் பாராட்டினேன். எனக்குரிய எங்கள் பெருமானே! இழிந்தவனாகிய என்னைத் தொண்டனாக ஏற்றுக்கொண்ட தூயோனே! ஒளி வடிவினனே! ஒப்பற்றவனாய உன்னையல்லாமல் வேறு ஒரு தெய்வம் உண்டு என்பதை என் உள்ளம் நினையாது.

**விளக்கம் :**

ஈசனே என்பதை விளியாக்கி, கட்டு நிலையினும் முத்தி நிலையினும் உன்னையன்றி உயிர்க்கும் ஒன்றும் செயலில்லை; ஆதலால் இவ்வகையில் பெத்த முத்திகளுக்கு வேறுபாடில்லை எனப் பேசினேன் என்பதாம்.

"எவ்விடத்தும் இறையடியை யின்றியமைந்து ஒன்றை
அறிந்தியற்றி யிடாஉயிர்கள் ஈசன்தானும்
செவ்விதினில் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்ற
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆதலான் நாம்
அரனடியை யகன்று நிற்ப தெங்கே யாமே?"

இங்கு பெத்தநிலை— அங்கு முத்திநிலை.

"பல
வாறே தொழும்பாகும் அங்கு"

(சிவஞான போதம்)

"பலவாற்றானும் சங்காரக் கடவுளுக்கு அடிமையேயாம் முத்தியின் கண்ணும்"

(சிவஞான முனிவர்)

பேசினேன் ஓர் பேதமின்மை—" முத்தியும் பெத்தமும் ஒன்றாகக் காணப்படுமாறும், அடிமை என்றும் அடிமையே என்றும் திருவருள் கண்ணாக அநுபூதியிற் கண்டு சிறப்பிலக்கணம் உணர்தல் பெரும் பெயர்க் கடவுளிற் காண்டலாம்."

(சிவஞான பாடியம்-
சிறப்புப்பாயிரம்)

"அற்புதப் புத்திமுததி யளித்தரு ளாலே மேலாந்
தற்பரன் நடாத்துமாறும் உணர்ந்தனர் சைவநூலில்."

(திருவாத வூரடிகள் புராணம்-
மந்திரிச் சருக்கம்)

"ஓர் நின்னலால் — ஒப்பற்ற உன்னையல்லாமல்; ஓர் தேவருண்மை — வேறு தெய்வம் உண்டு என்பது.

சிவனொடொக் குந்தெய்வம் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுஞ்
தவளச் சடைமுடித் தாமரை யானே "

(திருமந்திரம்)

" திருப்பெருந்துறையுறை சிவனே! தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர் துணையென நினை வனோ?" என அடிகள் வலியுறுத்துக் கூறியதுங் காண்க.

**79 சிந்தை செய்கை கேள்வி வாக்குச்**
**சீரி லைம்பு லன்களான்**
**முந்தை யான கால நின்னை**
**யெய்தி டாத மூர்க்கனேன்**
**வெந்தை யாவி ழுந்தி லேனென்**
**னுள்ளம் வெள்கி விண்டிலே**
**னெந்தை யாய நின்னை யின்ன**
**மெய்த லுற்றி ருப்பனே.**

**பதப்பிரிவு**

சிந்தை செய்கை கேள்வி வாக்குச்
சீர் இல் ஐம் புலன்களால்
முந்தை ஆன காலம் நின்னை
எய்திடாத மூர்க்கனேன்
வெந்து ஐயா விழுந்திலேன்; என்
உள்ளம் வெள்கி விண்டிலேன்;
எந்தை ஆய நின்னை இன்னம்
எய்தல் உற்று இருப்பனே.

**உரைநடை :**

ஐயா! சிந்தை, செய்கை, கேள்வி, வாக்கு (என்னும் இவற்றாலும்) சீர் இல்லாத ஐம்புலன்களாலும் முந்தை ஆன காலத்தில் நின்னை எய்திடாத மூர்க்கனேன் (தீயில்) விழுந்து வெந்திலேன், என் உள்ளம் வெள்கி விண்டிலேன். எந்தை ஆய நின்னை இன்னம் எய்தல் உற்று (இவ்வுலகில்) இருப்பனே.

**பொழிப்புரை :**

தந்தையே! நினைத்தலானும், பணியாற்றலானும், அருளுரை கேட்டலானும், வழுத்தலானும் மனமும் புலன்களும் சிறப்புறும். இவைகள் செய்யாது சிறப்பற்ற ஐந்து புலன்களாலும் இதற்கு முந்தின இளம்பருவத்திலேயே உன்னை அடையப்பெறாத அறிவுக் கேடனாகிய நான் தீயில் விழுந்து எரிந்திலேன்; என் மனத்தில் நாணம் மிகக்கொண்டு நெஞ்சு உடைந்து போகாதிருக்கின்றேன். என் அப்பனாகிய உன்னை இன்னமும் அடைதலைக் குறித்து வாழ்கின்றேன்.

**விளக்கம் :**

மனம் எண்ணியவாறே ஐம்பொறிகளும் தொழிலாற்றும். ஆதலின் சிந்தையை முதற்கண் கூறினார். ஐம்பொறி முதலியன சிறப்புறுதல் திருநாவுக்கரசு நாயனார்

திருஅங்கமாலையிற் காண்க. வெந்து விழுந்திலேன் என்பதை விழுந்து வெந்திலேன் எனமாறுக. இறைவனை வழிபடாத ஐம்பொறிகளையும் எரிக்க வேண்டும்; உள்ளம் நாணத்தால் உடைய வேண்டும் என்று அடிகள் கூறுகிறார்.

எளிதாக அடைதற்குரிய தந்தையை ஒரு குழந்தை அடையா திருக்குமாயின் அக்குழந்தை தந்தையைக்காண எவ்வளவு விரும்புமோ அவ்வளவு தானும் இறைவனை அடைய விரும்புவதாகவும் ஆனால் அடைதற்கு வேண்டியன செய்யாது உள்ளமும் ஐம்பொறிகளும் உலகிலேயே ஈடுபட்டிருப்பனவாகவும் அடிகளார் வருந்திக் கூறுகிறார்.

**80 இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை**
**யாண்டு கொண்ட நின்னதாட்**
**கருப்பு மட்டு வாய்ம டுத்தெ**
**னைக்க லந்து போகவு**
**நெருப்பு முண்டி யானு முண்டி**
**ருந்த துண்ட தாயினும்**
**விருப்பு முண்டு நின்க ணென்க**
**ணென்ப தென்ன விச்சையே.**

பதப்பிரிவு:

இருப்பு நெஞ்சம் வஞ்சனேனை
ஆண்டு கொண்ட நின்ன தாள்
கருப்பு மட்டு வாய் மடுத்து
எனைக் கலந்து போகவும்
நெருப்பும் உண்டு யானும் உண்டு
இருந்தது உண்டது ஆயினும்
விருப்பும் உண்டு நின்கண் என்கண்
என்பது என்ன விச்சையே.

**உரை நடை :**

இரும்பு போன்ற நெஞ்சம் உடைய வஞ்சனேனை ஆண்டு கொண்ட நின்ன தாள்கள் கரும்பு மட்டு (ஆகிய திருவருளை) வாய் மடுத்து எனைக் கலந்து (பின் பிரிந்து) போகவும், நெருப்பும் உண்டு யானும் (வயிறார) உண்டு இருந்தது (உண்டு) ஆயினும் நின் கண் என்கண் விருப்பும் உண்டு என்பது என்ன விச்சை!

**பொழிப்புரை :**

இரும்பு போலக் கடிய உள்ளமுடைய பொய்யனாகிய என்னை அடிமை கொண்ட உன்னுடைய திருவடிகள், கரும்பின் சாறு போன்ற திருவருளை நான் நுகருமாறு செய்து என்னைக் கூடிப்பிரிந்து செல்லவும், (உடனே என்னை எரித்தழிப்பதற்கு) தீயும் இருந்தது; நானும் நன்றாக உண்டு உயிர் வாழ்ந்துளேன். (அன்றியும் வயிறார) உண்டதும் உண்டு; அவ்வாறிருந்தாலும் உன்னிடத்து எனக்குப் பற்றும் உளது என்று கூறுதல் எத்தகைய மாய வித்தையோ!

**விளக்கம்:**

இரும்புபோன்ற கன்மனம் குழைதல் இன்மையின் இறைவன் கருணையை எண்ணுவதற்கு ஏற்றதாகாது. மேலும் கொடுமை செய்வதற்கும் தூண்டுமாதலின் இரும்பு நெஞ்சினேனை என்று அமையாது '**இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை**' என்றார். இத்தகைய கொடிய னேனை ஆட்கொள்ளல் இறைவன் திருவடிப் பெருமையாகும். அத்திருவடி சிந்திப்பவர்க்குச் செந்தேன் முந்திப் பொழிவன ஆகலான் அருளின்பமாகிய கருப்பஞ் சாற்றை ஊட்டும் என்பார் 'கருப்பு மட்டு வாய் மடுத்து' என்றார்.

கருப்பு மட்டு — கரும்பினது சாறு போன்று இனிமையான பேரின்பம்; ஆறன் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. அருளின்பம் பயத்தலின் திருவடிகளையே திருவருள் என மெய்கண்ட நூல் கூறும். நிறைய ஊட்டும் என்பார் வாய் மடுத்து என்றார். மடுத்து – மடுப்பித்து, உண்பித்து.

" அறிவறியா மெய்சிவன்தா ளாம் "
(சிவஞான போதம் சூ. 6. அதி. 2. வெண்பா)

" அநுபவ மாத்திரையிற் கோசரிப்பதென்றோதப்படும் சிவனருளாம் "
(சிவஞான முனிவர்பிரான் உரை)

அநுபவத்தாற் சிவனருளாரமுதம் உண்ணல் இறைவனோடு ஒற்றித்து நின்றாலன்றி அமையாமை யின் **கலந்து** என்றார். இவ்வாறு அருளின்பம் அளித்து அகன்றபின் பிரிவாற்றாமையால் தீயில் வீழ்கிலேன் என்பார் **நெருப்பும்** உண்டு என்றார். சாவாது உயிருடன் இருந்தது மட்டுமன்றி உணவருந்தாதிருந்து உலராது, வயிறார உண்டதுமுண்டு என்கிறார். இவ்வாறு பிரிந்துபோன உன்னைக் காணவேண்டுமே என்ற தாபத்தால் மெலியாது உன்னிடத்து எனக்கு விருப்ப முண்டு என்று சொல்வது சொல்லளவே என்பார் என்ன விச்சையே! என்றார்.

நின்கண் — உன்னிடத்து.

என்கண் — எனக்கு (உருபு மயக்கம்).

# 9. ஆனந்தபரவசம்

தன் வசம் இழந்து சிவப்பேரின்பத்தில் தோய்தல்; ஆனந்தம்—இறையருளைப் பற்றி நின்று பக்குவமுதிர்ந்த உயிர் நுகரும் பேரின்பம்.

"ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல்."

(திருவருட் பயன்-91)

என்றபடி, உயிரானது கருவிகரணங்களின் சார்பின்றித் திருவருளில் தோய்ந்து தன்வசம் இழந்து நிற்றல் வேண்டும் என்பதும், எக்காரணத்தாலும் அந்நிலையினின்றும் நழுவுதல் கூடாது என்பதும் இப்பதிகம் நுதலிய பொருளாகும். பேரின்பத்தில் நமது அறிவு தோய்ந்து அதன் வயப்பட்டு நிற்கும்.

இந்நிலையை

"நானவனென் றெண்ணினர்க்கும் நாடுமுள முண்டாதல்
தானெனஒன் றின்றியே தானதுவாய் — நானெனவொன்
றில்லென்று தானே யெனும்அவரைத் தன்னடிவைத்
தில்லென்று தாணும் இறை."

என்னும் சிவஞானபோத உதாரண
வெண்பா. (சூ-10, அதி-1)

## கலிநிலைத்துறை

81 விச்சுக்கேடு பொய்க்காகா
தென்றிங் கெனை வைத்தா
யிச்சைக் கானா ரெல்லாரும்
வந்துன் றாள் சேர்ந்தா
ரச்சத் தாலே யாழ்ந்திடு
கின்றே னாருரெம்
பிச்சைத் தேவா வென்னான்
செய்கேன் பேசாயே.

**பதப்பிரிவு :**

விச்சுக் கேடு பொய்க்கு ஆகாது
என்று இங்கு எனை வைத்தாய்
இச்சைக்கு ஆனார் எல்லாரும்
வந்து உன் தாள் சேர்ந்தார்
அச்சத்தாலே ஆழ்ந்திடு கின்றேன்
ஆரூர் எம்
பிச்சைத் தேவா என் நான்
செய்கேன், பேசாயே.

உரை நடை :

ஆரூர் எம் பிச்சை (ஏற்கும் திருவுருக்கொண்ட) தேவா! பொய்ம்மைக்கு விச்சுக் கேடு ஆகாது என்று இங்கு எனை வைத்தாய். இச்சைக்கு ஆனார் எல்லாரும் வந்து உன் தாள் சேர்ந்தார். அச்சத்தாலே ஆழ்ந்திடு கின்றேன்; நான் என் செய்கேன்; பேசாய்.

**பொழிப்புரை :**

திருவாரூரில், வள்ளலின் திருவுருவோடு பிச்சைக் கோலமுங்கொண்ட எங்கள் தெய்வமே! பொய்ம்மையாகிய பயிர் செழிப்பதற்கு வித்து அழிதலாகாது எனக் கருதி இவ்வுலகில் என்னை வாழச் செய்தாய். நின் திருத் தொண்டில் விருப்புடையார் யாவரும் சென்று உன் திருவடிகளை அடைந்தனர். பிறவியச்சத்தால் கலக்கத் தில் மூழ்கி வருந்துகின்றேன். நான் யாது செய்யவல் லேன்? நீ எனக்கு வழி வகுத்துக் கூறியருள்புரிவாயாக.

விளக்கம் :

திருவாரூரில் எழுந்தருளிய மூர்த்தி தியாகராசர் (வள்ளல் அரசு); அவரைப் பிச்சைத் தேவா என்றார் தம்மை வழிபடுகின்றவர்களுடைய வினைகளை ஏற்றுக் கோடலின். பொய்க்கு வித்தில்லையாயின் உலகிற்

பொய்யென்பதே இல்லையாகிவிடும் எனக் கருதித் தம்மை உலகில் இருத்தினதாக அடிகள் கூறுகிறார்; தம்மைப் பொய்க்கு வித்து என்கிறார்.

இச்சைக்கு ஆனார்—இறைவிருப்பிற்கு ஆளானவர். சிவஅராகம் உடையவர்கள்.

"வாதனாரூபமாய் நிற்கும் அராகதத்துவம் முத்திக் காலத்திற் பற்றறக் கழியும். கழியவே, விடயங்களிற் பொதுமையான் நிகழும் விருப்பமும் நிகழாமையின், ஆண்டுச் **சிவஅராகம்** வெளிப்பட்டு ஆன்மாவின் இச்சா சத்தியை முத்திக்கேதுவாகிய சாதகங்களிற் கோசரிப் பிக்கும்"

(சிவஞானபாடியம் சூத்திரம் 2. அதிகரணம் 2. அராக தத்துவம்.)

"ஒருவிய இச்சையாதி உதயமா யொடுங்க என்பால்
மருவிய கலாதியிச்சை மறைந்திட ஈசன்றன்பால்
விரவிய இச்சையாதி விளங்கியாங் கொடுங்கவேண்டித்
திருவருள் வாரணத்தின் திருவடி சென்னி வைப்பாம்."

(பண்டாரசாத்திரம்)

பிறவிக்கு அஞ்சுவார், இறைவன் அடைக்கலம் கொடுப்பானோ, அதற்கு வேண்டிய விருப்பம் தம்மிடத் தில்லையே என்று அஞ்சுகிறார், அச்சம் நீக்கவழியறி யாமையின் "அச்சத்தாலே ஆழ்ந்திடுகின்றேன்" என்றார்.

திருத்தாள் சேர்வதற்கு வேண்டிய சாதனம் செய்வகை அறியேன் என்பார் "நான் என் செய்கேன்" என்றார். நீயே அருளுரை பகர்வாயாக என்று வேண்டு வார் "பேசாயே" என்றார்.

82 பேசப் பட்டே னின்னடி
யாரிற் றிருநீறே
பூசப் பட்டேன் பூதல
ராலுன் னடியானென்
றேசப் பட்டே னினிப்படு
கின்ற தமையாதா
லாசைப் பட்டே னாட்பட்
டேனுன் னடியேனே.

**பதப்பிரிவு :**

பேசப்பட்டேன் நின் அடியாரில்
திருநீறே
பூசப்பட்டேன் பூதலரால்
உன்அடியான் என்று
ஏசப்பட்டேன் இனிப்படுகின்றது
அமையா தால்
ஆசைப்பட்டேன் ஆட்பட்டேன்
உன் அடியேனே.

**உரைநடை :**

நின் அடியாரில் (ஒருவனாகப்) பேசப்பட்டேன். (நின்னால்) திருநீறுபூசப்பட்டேன். உன் அடியான் என்று பூதலரால் ஏசப்பட்டேன். இனிப்படுகின்றது அமையாது. (வீடு பேறு குறித்து) ஆசைப்பட்டேன். உன் அடியேன் ஆட்பட்டேன்.

பொழிப்புரை :

உன்னுடைய தொண்டருள் ஒருவனாய் மதித்துப் பாராட்டப் பெற்றேன். ஞானாசிரியனாகிய உன்னால் திருவெண்ணீறு பூசியருளப் பெற்றேன். உலகத்தவ ரால் உனது தொண்டன் என இகழ்ந்துரைக்கப்பட்டேன். இனிமேல் துன்புறுதல் பொருந்தாது; வீட்டின்பத்தை விரும்பினேன். உன் அடிமையாகிய நான் உனது தொண்டனாக அமைந்து விட்டேன் (வேறு அலேன்).

**விளக்கம் :**

"நாடவர் பழித்துரை பூணதுவாக" (போற்றி–69) "வேண்டேன் புகழ்" என்று உலகப் புகழை விரும்பாத அடிகள் சிவனடியாரில் ஒருவராக வைத்து எண்ணப் படுதலைப் பற்றிப் பெருமை கொள்வார், 'பேசப்பட்டேன் நின்னடியாரில்' என்றார். சிவனடியாரில் ஒருவராக இருத்தல் குறித்து மெய்யன்பர் பாராட்டுகிறார்கள், பூதலர் ஏசுகிறார்கள். அடிகள் தமது அருட்குரவரால் திருநீறு பூசப் பெற்றார். பூதலரால் ஏசப்பட்டேன் என்றதனால், மெய்யன்பரால் பேசப்பட்டார் என்பது பெற்றாம்.

வீட்டின்பத்தில் ஆசைப்பட்டவுடன் சிவபெருமான் ஆட்கொண்டான் என்பார், **ஆசைப்பட்டேன் ஆட்பட்டேன்** என்றார்; இனி உன் அடிமையே ஐயமில்லை என்பார் **அடியேனே** என்றார். ஏகாரம் தேற்றம்.

"**அத்தா உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே**"

என்று நம்பியாரூரர் தமது அடிமைப் பேற்றை வலியுறுத்தல்போல் மாணிக்கவாசகரும் **அடியேனே** என்று உறுதியாக உரைத்தார்.

**83 அடியே னல்லேன் கொல்லோ தானெனை**
**யாட்கொண் டிலைகொல்லோ**
**வடியா ரானா ரெல்லாரும்**
**வந்துன் றாள்சேர்ந்தார்**
**செடிசே ருடல மிது நீக்க மாட்டே**
**னெங்கள் சிவலோகா**
**கடியே னுன்னைக் கண்ணாரக்**
**காணுமாறு காணேனே.**

**பதப்பிரிவு :**

அடியேன் அல்லேன் கொல் ஓ: தான் எனை
ஆட்கொண்டிலை கொல் ஓ
அடியார் ஆனார் எல்லாரும் வந்து
உன் தாள் சேர்ந்தார்
செடி சேர் உடலம் இது நீக்கமாட்டேன்
எங்கள் சிவலோகா
கடியேன் உன்னைக் கண் ஆரக்
காணும் ஆறு காணேனே.

**உரைநடை :**

எங்கள் சிவலோகா! அடியார் ஆனார் எல்லாரும் வந்து உன் தாள் சேர்ந்தார். கடியேன் செடி சேர் உடலம் இது நீக்கமாட்டேன். உன்னைக் கண் ஆரக் காணும் ஆறும் காணேன். அடியேன் அல்லேன் கொல் ஓ தான் எனை ஆட் கொண்டிலை கொல் ஓ? (இன்னவென்று அறிந்திலேன்.)

**பொழிப்புரை :**

எங்கள் கயிலாய நாதனே! மெய்த் தொண்டரானவர் யாவரும் உன்னை அடுத்து உன் திருவடிகளை அடைந்தார்கள். பொல்லாதவனாகிய நான் துன்பத்தை இலக்காகக்கொண்ட உடம்பாகிய இதனை ஒழிக்க இயலாதவனாயிருக்கின்றேன். உன்னைக் கண் குளிரும்படி கண்டு மகிழும் வழியையும் அறிந்திலேன். நான் உன் தொண்டன் அல்லேனோ? நீ என்னை அடிமையாக ஏற்றுக்கொள்ளவில்லையோ? (யாதும் தெளிவாய் அறிந்திலேனே.)

**விளக்கம்**

"செடி—பாவமும் அதன் பயனாகிய துன்பமுமாம்."

(மு.க.செ.)

ஓகாரம் வினு. ஓகாரங்கள் எதிர் மறைப் பொருள் உணர்த்தியனவாகக்கொண்டு, "அடியேன் அல்லேன் கொல்லோ" — அடியேனே எனவும், "ஆட்கொண்டிலே கொல்லோ"—ஆட்கொண்டுள்ளாய் எனவும் பொருள் கொண்டு, "காணு மாறு காணேனே" என்பதற்கு உன்னைக் கண்டிருக்கிறேன்; ஆனால் இந்த அளவு போதாது, இன்னும் நிறைவாக உன்னைக்கண்டு இன்புறும் வழியைக் காட்டுவாய் என இறைவனை அடிகள் வேண்டுவதாகவும் பொருள்கொள்ளலாம்.

கொல் — அசை நிலை. உடலம் — அம் சாரியை.

**84 காணு மாறு காணே னுன்னை**
**யந்நாட் கண்டே னும்**
**பாணே பேசி யென்றன்னைப்**
**படுத்த தென்ன பரஞ்சோதி**
**யாணே பெண்ணே யாரமுதே**
**யத்தா செத்தே போயினே**
**னேணு ணில்லா நாயினே னென்கொண்**
**டெழுகே னெம்மானே.**

**பதப்பிரிவு:**

காணும் ஆறு காணேன் உன்னை
அந்நாள் கண்டேனும்
பாணே பேசி என்தன்னைப் படுத்தது
என்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே ஆர்அமுதே
அத்தா செத்தே போயினேன்,
ஏண் நாண் இல்லா நாயினேன்
என் கொண்டு எழுகேன் எம்மானே.

**உரைநடை :**

பரம் சோதி! ஆணே! பெண்ணே! ஆர் அமுதே! அத்தா! எம்மானே! காணும் ஆறு காணேன், உன்னை

அந்நாள் கண்டேனும் பாணே பேசி என் தன்னைப்படுத் தது என்ன? ஏண் நாண் இல்லா நாயினேன் செத்தே போயினேன் என் கொண்டு எழுகேன்?

**பொழிப்புரை :**

பேரொளிப் பிழம்பே! அருட்சத்தியாகிய பெண்ணின் நல்லாளோடிருந்த சிவப்பெருந்தகையே! நிறைந்த அமுதம் போலும் இன்பவடிவினனே! தந்தையே! எங்கள் தலைவனே! இப்பொழுது உன்னைக் கண்டு மகிழும் வழி அறியாத நான், திருப்பெருந்துறையில் அருள் ஞானம் பெற்ற அந்நாளில் உன்னைக் குருவடிவிற் காணப் பெற்றும் முகமனே உரைத்து எனக்கு ஆக்கிக் கொண்ட பயன் யாது? (ஒன்றுமில்லையே). வலிமையும் நாணும் இல்லாத நாய் போன்ற கடையேன் பயன் அடையாமை யின் இறந்த நிலையில் உள்ளவன் போலாகி விட்டேன். இனி எதன் துணை கொண்டு ஊக்கம் பெற்றுயர்வேன்? (அறியேன்.)

**விளக்கம் :**

பரஞ்சோதி — பேரறிவொளி; இறைவனது பேரறி வுப் பிழம்பாந்தன்மையைக் குறிப்பது. அறிவினில் அருளால் மன்னும் இயல்பு சொரூப இலக்கணம். ஆணே, பெண்ணே என்றமையின் உருவ இயல்பு; தடத்த இலக்கணம். சொரூப இலக்கணத்தில் அறிவினில் கண்டும் தடத்த இலக்கணத்தில் கண்களாற் பருகியும் இன்புறு தலின் ஆரமுது என்றார்.

பாண் — முகமன், இச்சகம்; ஏண் — வன்மை, திண்மை, உயர்ச்சி.

அந்நாள் — திருப்பெருந்துறையில் அருள் ஞானம் பெற்றபோது குருவடிவில் எழுந்தருளிய காலத்தில். அறிவொளி வடிவும், உருவத்திருமேனியும் அமுதம் போன்று இன்பமளிப்பன.

**85 மானேர் நோக்கி யுமையாள் பங்கா**
**மறையீ றறியா மறையோனே**
**தேனே அமுதே சிந்தைக் கரியாய்**
**சிறியேன் பிழைபொறுக்குங்**
**கோனே சிறிதே கொடுமை பறைந்தேன்**
**சிவமா நகர்குறுகப்**
**போனா ரடியார் யானும் பொய்யும்**
**புறமே போந்தோமே.**

**பதப்பிரிவு :**

*மான் நேர் நோக்கி உமையாள் பங்கா*
*மறை ஈறு அறியா மறையோனே*
*தேனே அமுதே சிந்தைக்கு அரியாய்*
*சிறியேன் பிழை பொறுக்கும்*
*கோனே சிறிதே கொடுமை பறைந்தேன்*
*சிவ மாநகர் குறுகப்*
*போனார் அடியார் யானும் பொய்யும்*
*புறமே போந்தோமே.*

**உரைநடை :**

*மான் நேர் நோக்கி உமையாள் பங்கா மறை ஈறு அறியா மறையோனே! தேனே! அமுதே! சிந்தைக்கு அரியாய்! சிறியேன் பிழை பொறுக்கும் கோனே! சிறிது கொடுமை பறைந்தேன். அடியார் சிவமாநகர் குறுகப்போனார்; யானும் பொய்யும் புறமே போந்தோம்.*

**பொழிப்புரை :**

*மானின் பார்வைபோலும் பார்வைகொண்டவளாகிய எம்மை ஆளுடைய உமையம்மையை ஒரு பாகத்திலுடையவனே! திரு மறை முடிவுகளும் தெரிந்து உணராத எளிதின் விளங்காத நுண்பொருளானவனே! தேன்போன்று கிடைத்தற்கரிய இன் சுவைப் பொருளே! அமுதம்போன்று அடைதற்கரிய அருஞ் சுவைப் பெருமானே! கருத்துக்கு எட்டாதவனே! சிறுவனாகிய்*

என்னுடைய குற்றங்களைப் பொறுத்தருளும் தலைவனே! சிறிதளவே கடுஞ்சொற் கூறினேன்: தொண்டர்கள் சிறந்த கயிலையம்பதியை அடையப்போனார்கள். நானும் எனது பொய்ம்மையும் உடன் செல்லாது வெளியே உலகிற் சென்றேம்.

**விளக்கம்:**

மறையீறு=வேதாந்தம் எனப்படுவது (ஆறன் தொகை); மறையும் ஈறும் அறியாத எனினும் அமையும். "மறை கன்மப் பகுதியையும் அதன் ஈறு ஞானப் பகுதியையும் விளக்குவனவாம்" (மு. க. செ.) அடியார்க்கு இனிமையும் உறுதியும் தருதலின் "தேனே, அமுதே" என்றார். அகக்கரணங்கட்கும் அறிய வொண்ணாத கடவுள் ஆதலின் "சிந்தைக் கரியாய்" என்றார். 'சிறுமை பெருமை ஆகிய இரண்டு குணங்களும் முறையே குற்றஞ் செய்தற்கும் அதனைப் பொறுத்தற்கும் ஏதுவாகும். ஆதலின் சிறியேனாகிய எனக்குப் பிழை செய்தலும், பெரியோனாகிய நினக்கு அதனைப் பொறுத்தலும் இயல்பாம் என்பார். "சிறியேன் பிழை பொறுக்குங் கோனே!" என்றார்.

> "வெறுப்பனவே செய்யும் என்சிறுமையை நின்பெருமையினாற்
> பொறுப்பவனே"
>
> (அடைக்கலப்பத்து-2)

"என்னையும் உடன் கொண்டு செல்லாமையின் சிறிது கொடுமொழி கூறினேன், மன்னித்தருள்க" என்பது கருத்து.

கொடுமை பறைந்ததாவது இறைவன் ஆணையின் படி அமைந்திராமல் யாக்கையை விடுவேன் என்பது

—30.

முதலாக் கூறினமை. இது பின் வரும் அடிகள் வாக்கால் விளங்கும்:—

"கண்ணார் நுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணு திரவும் பகலுநான்
அவையே எண்ணு மதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணு எண்ணக் கடவேனே
அடிமை சால அழகுடைத்தே."

(திருவாசகம்-குழைத்தபத்து-9)

86 புறமே போந்தோம் பொய்யும்
யானு மெய்யன்பு
பெறவே வல்லே னல்லா
வண்ணம் பெற்றேன்யா
னறவே நின்னைச் சேர்ந்த வடியார்
மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்து
சிவனே நின்றாள் சேர்ந்தாரே.

பதப்பிரிவு:

புறமே போந்தோம் பொய்யும்
யானும் மெய் அன்பு
பெறவே வல்லேன் அல்லா
வண்ணம் பெற்றேன் யான்
அறவே நின்னைச் சேர்ந்த அடியார்
மற்று ஒன்று அறியாதார்
சிறவே செய்து வழிவந்து சிவனே
நின் தாள் சேர்ந்தாரே.

உரைநடை:

சிவனே! நின்னை அறவே சேர்ந்த அடியார், மற்று ஒன்று அறியாதார். சிறவே செய்து வழிவந்து நின்

*தாள் சேர்ந்தார்; யானும் பொய்யும் புறமே போந்தோம். யான் மெய் அன்பு பெறவே வல்லேன் அல்லா வண்ணம் பெற்றேன். (என் செய்வேன்? காத்தருள்க.)*

**பொழிப்புரை :**

மங்கல வடிவினனே! உன்னையே நன்கு அணைந்த தொண்டர்கள் வேறு யாதொன்றையும் காணாதவராய் உயர்ந்த தவங்களைச் செய்து ஞான நெறி, அன்பு நெறி இவற்றின் வழியில் நடந்து உன்னுடைய திருவடிகளை அடைந்தார்கள். நானும் எனது பொய்த் தன்மையும் அருளினின்றும் வெளியே சென்று விட்டோம். (அன்றியும்) நான் மெய்யன்பைப் பெறுதற்கு ஆற்றலுடையேனல்லாத இயல்பையும் அடைந்துளேன். (என் செய்வேன்? காத்தருள்க.)

**விளக்கம் :**

*சிறவு — வு*: தொழிற் பெயர் விகுதி. சிறந்த செயல்களாகிய சரியை, கிரியை, யோகத்தவங்கள். *சிறவு — சிறந்த* செயல்கள். (Meritorious deeds) பொய்ம்மைக் குணம் தம்மை அடியார்க்கு வெளியே அழைத்துச் செல்லலின் " புறமே போந்தோம் பொய்யும் யானும் " என்றார்.

அறவே சேர்ந்த அடியார் – முழுதும் சேர்ந்த அடியார்.

அவர் உலகில் எங்கணும் சிவன் தோற்றமே காண்பராதலின் மற்றொன் றறியார்தார், என்றார்.

" நிட்டை புரிந்து ளோர்கள் சங்கரனோ(டு)
ஒக்க உறைந்(து) இவர் அவனை அவன் இவரை விடாதே
உடந்தையாய்ச் சிவன் தோற்றம் ஒன்றுமே காண்பர். "

(சிவஞான சித்தியார்)

அல்லா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

'அறவே நின்னைச்சேர்ந்த' – நின்னையே அறச் சேர்ந்த என ஏகாரத்தைப் பிரித்துக்கூட்டுக.

வழிவந்து — அன்புநெறி கைவரப்பெற்று.

**87 தாரா யுடையா யடியேற்**
**குன்ரு ளிணையன்பு**
**பேரா வுலகம் புக்கா ரடியார்**
**புறமே போந்தேன்யா**
**னூரா மிலைக்கக் குருட்டா மிலைத்தாங்**
**குன்ரு ளிணையன்புக்**
**காரா வடியே னயலே**
**மயல்கொண் டழுகேனே.**

**பதப்பிரிவு:**

தாராய் உடையாய் அடியேற்கு உன்
தாள் இணை அன்பு
பேரா உலகம் புக்கார் அடியார்
புறமே போந்தேன் யான்
ஊர்ஆ மிலைக்கக் குருட்டுஆ மிலைத்து ஆங்கு
உன்தாள் இணை அன்புக்கு
ஆரா அடியேன் அயலே
மயல் கொண்டு அழுகேனே.

உரைநடை:

உடையாய்! அடியார் பேரா உலகம் புக்கார் யான் புறமே போந்தேன். ஊரிலுள்ள ஆ மிலைக்கக் குருட்டு ஆ மிலைத்து ஆங்கு உன்தாள்களில் இணையும் அன்புக்கு ஆரா அடியேன் அயலே மயல் கொண்டு அழுகேன், அடியேற்கு உன் தாள் இணை அன்பு தாராய்.

**பொழிப்புரை:**

ஆண்டவனே! மெய்த்தொண்டர் மீளுதலில்லாத விட்டுலகினுட் புகுந்தார். நான் அதன் வெளியே போயி னேன். ஊர்ப் பசு தன் கன்றைக் கண்டு கனைக்கக்

குருட்டுப் பசுவும் அக்கனைப்பினைக் கேட்டுத் தானுங் கன்றினைக் கண்டதுபோன்று கனைக்கும். அதுபோல் உன்னுடைய இரண்டு திருவடியன்புக்குரிய பதிஞான ஒளி நிரம்பாத அடியேனாகிய நானும் பதிஞானக்கண் பெற்ற ஏனை மெய்யடியார்போலப் பக்கம் நின்று செய்வதறியாது மயங்கி வீடடையும் விருப்பங்கொண்டு அழுகின்றேன். அடியேனுக்கு நின் திருவடிப்பேற்றிற் குரிய நெறியாகிய மெய்யன்பு தந்தருள்வாயாக.

**விளக்கம் :**

மெய்யன்புள்ள அடியார் சிவபுரம் புகக்கண்டு அவ்வன்பில்லாத தாமும் புக விழைதல் உவமேயம்.

கன்றைக் கண்டு கனைக்கும் கண்ணுள்ள பசுவின் கனைப்பைக் கேட்டுக் குருட்டுப் பசுவுங் கனைத்தல் உவமானம். 'ஆராயடியேன்' என்றும் 'மலைத்திங்கு' என்றும் மலைத்தாங்கு என்றும் பாடங்கொள்வாரு முளர்.

88 **அழுகே னின்பா லன்பா**
**மனமா யழல் சேர்ந்த**
**மெழுகே யன்னார் மின்னார்**
**பொன்னார் கழல் கண்டு**
**தொழுதே யுன்னைத் தொடர்ந்தா**
**ரோடுந் தொடராதே**
**பழுதே பிறந்தே னென்கொண்**
**டுன்னைப் பணிகேனே.**

**பதப்பிரிவு**

அழுகேன் நின்பால் அன்பு ஆம்
மனம் ஆய் அழல் சேர்ந்த
மெழுகே அன்னார் மின் ஆர்
பொன் ஆர் கழல் கண்டு
தொழுதே உன்னைத் தொடர்ந்தா
ரோடும் தொடராதே
பழுதே பிறந்தேன் என் கொண்டு
உன்னைப் பணிகேனே.

**உரை நடை :**

நின்பால் அன்பு ஆம் மனமாய் மின் ஆர் பொன் ஆர் கழல் கண்டு அழல் சேர்ந்த மெழுகு அன்னார் தொழுதே உன்னைத் தொடர்ந்தாரோடும் தொடராதே அழுகேன். பழுதே பிறந்தேன். என் கொண்டு உன்னைப் பணிகேன்.

**பொழிப்புரை :**

உன்னிடத்து அன்புவண்ணமான உள்ளம் உடையராகி ஒளி பொருந்திய பொன்போலும் திருவடிகளை மெய்யுணர்வோடு பார்த்துத் தீயிடைப்பட்ட மெழுகை ஒத்தவராய் வழிபட்டு உன்னைப் பின்பற்றிய அடியாரோடு சேர்ந்து வராமல் (தனியே நின்று) வருந்துகின்றேன். வீணாக இவ்வுலகில் தோன்றிய நான் எதனைப் பற்றுக் கோடாகக்கொண்டு உன்னைத் தொழுவேன்?

**விளக்கம் :**

அன்பு ஆம் மனம் — குழைந்து அன்பு மயமான நெஞ்சம். மனமே அன்பு மயமானது என்பார் அன்புடை மனமாய் என்னாது **அன்பாம் மனமாய்** என்றார். அவ்வன்பும் சிவபெருமானிடத் தன்றி வேறொருவரிடத்தும் இல்லை யென்பார் **நின்பால் அன்பாம் மனமாய்** என்றார். அன்பினால் ஆகிய உருக்கத்தின் தன்மை கூறுவார் அழல் சேர்ந்த மெழுகே யன்னார் என்றார். உள்ளங் கசியும் அன்பின் பயன் திருவடிக் காட்சி, அக்காட்சிப் பயன் கழல் சேர்தல். அவ்வடியாரைப் பின்தொடர இயலாமைக்குத் தமக்கு அத்துணை அன்பின்மை காரணமாகக் கூறுகிறார். கண்ணப்பன் ஒப்பதோர் அன்பினை இறைவன் கழல் சேர்தற்கு ஓர் எல்லையாக மற்றோரிடத்து அருளியதும் காண்க. கடவுளிடத்து அன்பினைப் பெருக்குதலே உடம்பின் பயனாகும். கடவுளன்பைப் பெருக்காத உடற் பிறப்பு வீணாகும் என்பார் **பழுதே பிறந்தேன்** என்றார்.

அன்பினால் உள்ளம் உருகினாலன்றி இறைவனை அடைவது முடியாது.

"பண்ணிற் பொலிந்த வீணையர்
பதினெண் கணமும் உணரா நஞ்சு
உண்ணப் பொலிந்த மிடற்றினார்
உள்ளம் உருகின் உடனாவார்."

(திருஞானசம்பந்தர் தேவாரம்–
திருவாய்மூர்-3)

"உள்ளம் உருகின் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென்றுந் தீபற."

(திருவுந்தியார்-7)

89 பணிவார் பிணிதீர்த் தருளிப்
பழைய வடியார்க்குன்
னணியார் பாதங் கொடுத்தி
யதுவு மரிதென்றாற்
றிணியார் மூங்கி லனையேன்
வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லை
தாராய் பொய்தீர் மெய்யானே.

பதப்பிரிவு :

பணிவார் பிணி தீர்த்து அருளிப்
பழைய அடியார்க்கு உன்
அணி ஆர் பாதம் கொடுத்தி
அதுவும் அரிது என்றால்
திணி ஆர் மூங்கில் அனையேன்
வினையைப் பொடி ஆக்கித்
தணி ஆர் பாதம் வந்து ஒல்லை
தாராய் பொய்தீர் மெய்யானே.

**உரைநடை :**

பொய்யைத் தீர்க்கும் மெய்யானே! பண்டையராகிய பழைய அடியார்க்குப் பிணி தீர்த்து அருளி உன் அணி ஆர்ந்த பாதம் கொடுத்தி. அது அரிது என்றாலும் திணி ஆர்ந்த மூங்கில் அனையேன் வினையைப் பொடி ஆக்கி ஒல்லையில் வந்து தணி ஆர்ந்த பாதத்தைத் தாராய்.

**பொழிப்புரை:**

பொய்யுணர்வை நீக்கும் மெய்ப்பொருளாய் இருப்பவனே! (வினைதீர்ந்த) வழிபடுவோராகிய பண்டைத் தொண்டர்க்குப் பிறவி நோயை ஒழித்து அருள் புரிந்து, உனது அழகு நிறைந்த திருவடிகளை அளித்தருளினாய். அப்பேறு அடியேனுக்கு இல்லை எனினும், திட்பம் பொருந்திய மூங்கிலை ஒத்தவனாகிய என்னுடைய வினைகளை நீறாக்கி விரைவில் எழுந்தருளி வந்து குளிர்ச்சி பொருந்திய உன் திருவடிகளைத் தந்தருள்வாயாக.

**விளக்கம் :**

தன்னை உணர்ந்தார்க்குப் பழைய பாசபசு அறிவுகள் ஒளி முன் இருள் போலக் கழிதலின் **பொய்தீர் மெய்யானே** என்றார்.

பிராரத்த வினை தீர்ந்து நின்ற பழைய அடியார்க்குப் பாதங் கொடுத்தாய். அது தீராத தனக்கு அதனை விரைவில் தீர்த்துப் பாதந் தந்தருள வேண்டுகிறார்.

குழைந்த அன்பும் பணிவும் இல்லாதேன் என்பார் 'திணியார் மூங்கிலனையேன்' என்றார்.

தணி—தண்மை, குளிர்ச்சி; பிணி தீர்த்தல்—மல நோய் கெடுத்தல், பாசநீக்கம். பாதங் கொடுத்தல் – சிவப் பேறு. அதுவும் அரிது என்றால்—அது அரிது என்றாலும்

என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. நாலாம் வகை யாகிய தீவிரதர சத்திநி பாதம் உடையவராதலின் விரைந்து அடிசேர விரும்புவார் "ஒல்லை வந்துதாராய்" என்றார்.

"வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன்"

(திருவெண்பா 1)

என அடிகள் கூறுதலும் காண்க.

**90 யானே பொய்யென் னெஞ்சும்**
**பொய்யென் னன்பும்பொய்**
**யானால் வினையே னழுதா**
**லுன்னைப் பெறலாமே**
**தேனே யமுதே கரும்பின்**
**றெளிவே தித்திக்கும்**
**மானே யருளா யடியே**
**னுனைவந் துறுமாறே**

***பதப்பிரிவு :***

யானே பொய் என் நெஞ்சும்
பொய் என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால்
உன்னைப் பெறலாமே
தேனே அமுதே கரும்பின்
தெளிவே தித்திக்கும்
மானே அருளாய் அடியேன்
உனை வந்து உறும் ஆறே.

***உரைநடை :***

தேனே! அமுதே! கரும்பின் தெளிவே! தித்திக்கும் மானே! யானே பொய்; என் நெஞ்சும் பொய்; என் அன்பும் பொய்; ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே! அடியேன் உனை வந்து உறும் ஆறு அருளாய்:

**பொழிப்புரை :**

தேன்போலும் இனிமையானவனே! அமுதுபோலும் பயன் அளிப்பவனே! கருப்பஞ் சாற்றின் தெளிவுபோலத் தெவிட்டாதவனே! நயம் மிகுந்த பெரியோனே! நான் (செயலால், சொல்லால்) உண்மைத் தன்மையில்லாதவன்; என்னுடைய உள்ளம் வஞ்சகமுடையது; என் அன்பு போலியானது. அங்ஙனமாயினும் தீவினையை யுடைய யான் அன்புக்கண்ணீர் சொரிந்தால் உறுதியாய் உன்னை அடையமுடியும்; அவ்வாறு அழுது உன்னை வந்து சேர்வதற்கேற்ற வழியைக் காட்டியருள்வாயாக.

**விளக்கம்.**

மனம் மொழி மெய்களால் நேர்மையோடு தொண்டு செய்யமுடியாத தீவினையுடைமையின் ஒரு தகுதியு மின்றித் தாயிடம் அழுது பயன் பெறும் சேய்போல உனது திருவடிகளை அழுது பெறமுடியுமா என வேண்டி அது நடவாதாயின் நீயே வேறு வழிகாட்டி யருள்வாய் என இரங்கிக் கேட்கிறார் அடிகளார் எனவுங் கொள்ள லாம்.

மான் — மகான் என்ற வடசொல்லின் திரிபு என்பர்; மா — பெருமைப் பொருளுணர்த்தும் உரிச்சொல். அன் — என்னும் ஆண்பால் விகுதி பெற்று மான் என நின்றது என்றதே பொருந்தும். மாணிக்கவாசகர் அழுது அடி யடைந்த அன்பர். அவ்வாறு அழுதற்கும் வன்மை வேண்டும்.

"அழவல்லவர் ஆடியும் பாடி
எழவல்லவர் எந்தை யடிமேல்
விழவல்லவர் வீழ்ம் மிழலை
தொழவல்லவர் நல்லவர் தொண்டே."

(முதல் திருமுறை)

"தொழுமாறு வல்லார் துயர்தீ ரநினைந்
தெழுமாறு வல்லார் இசைபாட விம்மி
அழுமாறு வல்லார் அழுந்தை மறையோர்
வழிபா டுசெய்மா மடமன் னினையே."

(இரண்டாந் திருமுறை)

அழுதற்குரிய வன்மையை யளிக்க வேண்டுமென இறைவனை வேண்டுகிறார்.

"மிக்க அன்போடு
அழுவார்க்கு அமுதங்கள் காண்க ஐயாற னடித்தலமே."

(நான்காந் திருமுறை)

உருகி அழுவதற்குத் தடையாயிருப்பது தீவினை யென்பார். 'வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே' என்றார்.

## 10. ஆனந்தாதீதம்

### பேரின்பத்தெல்லை

"ஆனந்தம்—மெய்யுணர்வினால் துய்க்கப்படும் அழிவில்லாத இன்பம். அதீதம்—கடந்தது" ஆகவே அத்தொடர் அப்பேரின்பத்தின் கடந்த நிலையாகிய முடிந்த எல்லையைக் குறிக்கும். "இந்நிலையில், காண்பவன், காட்சி, காணப்படு பொருள் என்னும் பகுப்புணர்வு இல்லையாம்."

ஆனந்த பரவசம் என்றது தன்வயம் இழந்து அருள் வயப்பட்டு நிற்றலை. அந்நிலைக்கண் மலவாதனை நீங்கிய துணையானே சுகப்பிரபை மாத்திரையே விளங்கித் தோன்றும் ஈண்டு அதீதநிலைக் கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரம சுகந்தோன்றும். இருள் நீக்கத்தில் ஒளிவிளக்கம்போலப் பசுத்துவ நீக்கத்தில் அருள் விளக்கமாத்திரையே உடன் நிகழ்வதன்றி ஆனந்த விளக்கம் உடன் நிகழாது.

ஆனந்த விளக்கம் அதீத நிலையிலே நிகழும். இவ்வுண்மைகளைச் சிவஞானபாடியம் இனிது விளக்கும்.

"நிறைதலை உணர்த்தி நிற்கும் நந்தம் என்னுஞ் சொல் ஆ என்னும் உபசர்க்கத்தோடுகூடிய வழி இன்பம் என்னும் பொருளுணர்த்திநிற்கும். இன்பம், ஆநந்தம என்பன ஒரு பொருட் கிளவிகள்"

(சிவஞானபாடியம் சூத்திரம்-6, அதிகரணம்-2)

"ஆன்மாவின் வேருகிய மூலப்பகுதியின் கண்ணதாகிய சாத்துவிககுணம் ஆன்மாவின் மாட்டு மேற்பட்டு விளங்குதலே உலக இன்பம். அதுவதுவாய் நின்றறிதலே அநுபவமெனப்படுமாதலின், அதுபோல ஆன்மாவின் வேருய்ச் சிவன் கண்ணேயுளவாகிய முற்றுணர்தல்முதலிய எண்வகைக் குணங்களும் ஆன்மாவின்மாட்டு மேம்பட்டு விளங்கும் விளக்கமே சிவாநந்த இன்பம்; ஆன்மா அதுவாய் அழுந்தி நின்று அவ்விளக்கத்தை யறிதலே அநுபவம் எனப்படும்."

(சிவஞானபாடியம் சூத்திரம்-6, அதிகரணம்-2)

## எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**91 மாறி லாதமாக் கருணை வெள்ளமே**
**வந்து முந்திநின் மலர்கொ டாளிணை**
**வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்**
**மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினு**
**ரீறி லாதநீ யெளியை யாகிவந்**
**தொளிசெய் மானுட மாக நோக்கியுங்**
**கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்**
**கடைய னுயினேன் பட்ட கீழ்மையே.**

**பதப்பிரிவு:**

மாறு இலாத மாக் கருணை வெள்ளமே
வந்து முந்தி நின் மலர் கொள் தாள் இணை
வேறு இலாப் பதப் பரிசு பெற்ற நின்
மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை மேவினர்
ஈறு இலாத நீ எளியை ஆகி வந்து
ஒளி செய் மானுடம் ஆக நோக்கியும்
கீறு இலாத நெஞ்சு உடைய நாயினேன்
கடையன் ஆயினேன் பட்ட கீழ்மையே.

**உரை நடை :**

மாறு இலாத மாக் கருணை வெள்ளமே! மலர் கொள் நின்தாள் இணையில் வேறு இலாத பதப் பரிசு பெற்ற நின் மெய்ம்மை அன்பர் முந்தி வந்து ஈறு இலாத உன் மெய்ம்மை மேவினர். நீ எளியை ஆகி ஒளி செய் மானுடம் ஆக வந்து நோக்கியும், கீறு இலாத நெஞ்சு உடைய நாயினேன் பட்ட கீழ்மையால் கடையன் ஆயினேன்.

**பொழிப்புரை :**

(அளவாலும் தன்மையாலும்) வேறுபடுதல் இல்லாத பேர் அருளின் பெருக்கே! அன்பர் வழிபட்டு இடுகின்ற பூக்களைக் கொண்ட இரு திருவடிகளிடத்து இரண்டறக் கலக்கும் நிலைக் குரிய பக்குவத்தை உனது மெய்யடியார் முற்பட்டு அடைந்து உன் முடிவு இல்லாத நிலை பெற்ற திருவடி இன்பத்தை அடைந்தார். (தோற்றமும் ஈறுமில்லாத நீ ஒளி பொருந்திய தன்மை உடையை ஆகி ஞானசிரியனாய் எழுந்தருளி அருளொளி விளங்கும் மகனாகும்படி அருள் நோக்கம் செய்தும், அப்பேரருட் செயலை நினைந்து உனைப் பிரிந்த நிலையில் மனமுடைந் தவனாக வேண்டும். அவ்வாறு பிளக்கப் படாத வன்னெஞ்சுடைய நாய் போன்ற நான் அடைந்த இழிவால் மிகக் கீழானவன் ஆயினேன்.

**விளக்கம் :**

இறைவன் குணமாகிய அருள்வெள்ளம் வேறுபாடுகள் இன்றி, எக்காலத்தும் ஒரே படித்தாக நிறைந்து இருத்தலின் "மாறிலாத மாக்கருணை வெள்ளமே" என்றார். மலர்கொள் தாள்இணை என்பதற்கு,

"மங்கல மாகி யின்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே"

என்பதற்கிணங்க மலர் மாட்சி யெல்லாம் கொண்ட இரண்டு திருவடிகள் என உரைப்பினும் பொருந்தும. வேறு இலாப்பதம் இறைவனும் உயிரும் பிரிப்பற்று நிற்கும் நிலை. இது சுத்தாத்துவித நிலை எனப்படும். பரிசு — முறைமை; தன்மை — பக்குவம். மெய்ம்மை அன்பர் — மனம் மொழி மெய்கள் ஒருங்கியைந்த அன்பு உள்ளவர். நின்மெய்ம்மை — சிவபதம்; மெய்ம்மை — என்றும் நிலையுதலையுடைய வீடுபேறு. "ஈறிலாத நீ" என்றமையின் தோற்றம் இன்மையும் கொள்ளப்படும். அரியனாகிய இறைவன் அருளாற் காட்சி அளித்தமையின் "எளியையாகி" என்றார். 'ஒளி செய் மானுடம்' என்பதனை ஞான ஒளியை அடிகட்கு அருளும் ஞானசிரிய வடிவம் என்று உரைத்தலும் பொருந்தும். இரு பொருள் அதுவதுவாய் ஒற்றுமைப்பட்டுப் பொருண்மையால் இரண்டாய்க், கலப்பால் ஒன்றாய்ப், பிரிவின்றி உடனாய் நிற்றல் அத்துவிதமாகும். "தானாய் வேறாய் உடனானிடம் வீழிம்மிழலையே."

(திருஞானசம்பந்தர் தேவாரம்)

மானுட வடிவில் வந்த ஞானசிரியனுடைய திருவருள் நோக்கம் பொருந்தியவுடன் அடிகள் ஒளிசெய் மானுடமானார்:

"விரவும் அன்பொரு வடிவுகொண் டணைவார்
விழித்த பார்வையின் விளக்கின் முன்னிருள்போற்
சுருதி செந்தமி ழாக்கிய மொழியார்
தொலைவி லாதவெந் துயர்ப்பவம் ஒழிந்து
பரவி மென்பதம் பணிபவர் படிமேற்
படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர் பரிவான்
மருவு மிங்கிவர் சென்னியில் இருதாள்
மகிழ வைத்தனர் மதிநதி முடிப்பார்."

(திருவாதவூரடிகள் புராணம்)

பின்வரும் கண்ணப்பர் இயல்பு அடிகளுக்கும் பொருந்தும்.

"அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்தப்
பொங்கிய ஒளியின் நீழல் பொருவில்அன் புருவமானார்."

(திருத்தொண்டர் புராணம்)

கீறிலாத நெஞ்சு "கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை, வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியன்" நன்றியை மறந்தும் உடைபடாத மனம்.

**92 மையி லங்குநற் கண்ணி பங்கனே**
**வந்தெ னைப்பணி கொண்ட பின் மழக்**
**கையி லங்குபொற் கிண்ண மென்றலா**
**லரியை யென்றுனைக் கருது கின்றிலேன்**
**மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்**
**மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்**
**பொய்யி லங்கெனைப் புகுத விட்டு நீ**
**போவ தோசொலாய் பொருத்த மாவதே.**

**பதப்பிரிவு :**

மை இலங்கு நல் கண்ணி பங்கனே
வந்து எனைப் பணி கொண்ட பின் மழக்
கை இலங்கு பொன் கிண்ணம் என்று அலால்
அரியை என்று உனைக் கருதுகின்றிலேன்;
மெய் இலங்கு வெள் நீற்று மேனியாய்
மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை மேவினார்
பொய்யில் அங்கு எனைப் புகுதவிட்டு நீ
போவதோ சொலாய் பொருத்தம் ஆவதே.

**உரைநடை :**

மை இலங்குகின்ற நல்ல கண்ணியை (உடலில் ஒரு) பங்கில் உடையவனே! மெய்யில் இலங்குகின்ற வெண்மையான நீற்றைப் பூசிய மேனியாய்! வந்து எனைப் பணிகொண்டபின் (குழந்தையின் மழக் கையிலுள்ள பொன் கிண்ணம் (போல) என்று அலால் அரியை என்று உனைக் கருதுகின்றிலேன். மெய்ம்மை அன்பர் உன் மெய்ம்மை (வாழ்வை) மேவினர். எனைப் பொய்யிற் புகுத விட்டு நீ அங்குப் போவது பொருத்தம் ஆவதே? சொலாய்.

**பொழிப்புரை :**

அஞ்சனம் விளங்குகின்ற நல்லருள்சேர் விழிகளை யுடைய உமையம்மையை இடப்பாகத்துக்கொண்டவனே! நிலைபெற்று விளங்குகின்ற திருவெண்ணீறணிந்த திருமேனியனே! (ஞானுசிரியனாய்) எழுந்தருளி என்னை அடிமையாக்கி ஏற்றபிறகு குழந்தை தன் கையிலுள்ள ஒளி பொருந்திய பொற்கிண்ணத்தின் அருமையறியாதவாறுபோல உன்னை எளிய பொருள் என்றல்லாமல் பெறுதற்கு அரிய பொருளாக நினைக்கின்றேன் இல்லை. மெய்த்தொண்டர் உன் நிலைபேறான இன்பளிக்கும் திருவடியை விரும்பி அடைந்தனர். என்னை நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையிற் செல்லவிட்டு நீ சிவபுரத்திற்குச் சென்றருளுதல் தக்கதேயோ? சொல்லியருள்வாயாக.

**விளக்கம் :**

அம்மை திருவருள் நோக்கால் பிறவி நோய் நீங்கலின் நற்கண்ணி என்றார்.

> " கடைக் கண்ணால் மங்கை உமை நோக்கா என்மேல்
> ஊனமது வெல்லாம் ஒழித்தான் தன்னை. "
>
> (திருநாவுக்கரசர் தேவாரம்-திருஆலவாய்)

அடிகள் ஞானசிரியனைப் பெறுமுன் அவன் வருகையைப் பெரிதும் அவாவியிருந்தார் :

" ஞானசிரியன் என்று வரும்? நம் முள்ளுறையுஞ் சங்கையெலாம்
ஆன விருப்பின் வினைய் வினைய் அறையத் தெளிவ தெப்போது?
மான அவன் பே ரருட் கிலக்காய் வயக்கி அடிக்கீழ் வைப்ப தென்று
தேன தரிக்குஞ் சிவானந்தந் திளைத்தின்புற லென்றென நினைப்பார் "

(திருப்பெருந்துறைப் புராணம்)

ஆனால் ஞானசிரியனுலாட்கொள்ளப்பெற்ற பின் தம் முதல் குருவுமாய்த் தவத்தில் வந்து உண்மை உணர்த்திய அருமை பெருமை அறியாதவராய் ஒரு குழந்தை தன் கையில் பொற்கிண்ணத்தை வைத்துக்கொண்டு பொன்னின் பெருமையையும் மதிப்பினையும் அறியாதிருத்தல்போல் தாம் அவரைப் பிரிந்து அலட்சியமாக இருந்ததாகக் கூறுவார்,

" மழக்கையிலங்கு பொற் கிண்ணம் என்றலால் அரியை யென்றுனைக் கருது கின்றிலேன் " என்றார்.

மழக்கை —

" மழவுங் குழவும் இளமைப் பொருள " ஆதலின், பச்சைக்குழந்தையின் இளங்கை. பொய்யில் அங்கெனைப் புகுத விட்டுப் போவதோ? "பொய்யில் எனைப் புகுத விட்டு அங்குப் போவதோ? " எனக் கூட்டுக.

அங்கு—சிவலோகத்தில். 'பொய் இலங்கு எனை' எனப்பிரித்து– நிலையற்ற பொய்த்தன்மை விளங்குகின்ற எனவும் பொருள் கூறலாம்.

93 பொருத்த மின்மையேன் பொய்ம்மை யுண்மையேன்
போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
யரத்த மேனியா யருள்செய் யன்பரு
நீயு மங்கெழுந் தருளி யிங்கெனை
யிருத்தி னுய்முறை யோவெ னெம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே.

**பதப்பிரிவு:**

பொருத்தம் இன்மையேன் பொய்ம்மை உண்மையேன்
போத என்று எனைப் புரிந்து நோக்கவும்
வருத்தம் இன்மையேன் வஞ்சம் உண்மையேன்
மாண்டிலேன் மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள் செய் அன்பரும்
நீயும் அங்கு எழுந்தருளி இங்கு எனை
இருத்தினுய் முறையோ என் எம்பிரான்
வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே.

**உரைநடை:**

கமல மலர்ப் பாதனே! அரத்த மேனியாய்! என் எம்பிரான்! பொருத்தம் இன்மையேன்; பொய்ம்மை உண்மையேன். எனைப் போத என்று புரிந்து நோக்கவும் வருத்தம் இன்மையேன்; வஞ்சம் உண்மையேன்; மாண்டிலேன்; அருள் செய் அன்பரும் நீயும் அங்கு எழுந்தருளி இங்கு எனை இருத்தினுய்; முறையோ? வம்பனேன் வினைக்கு இறுதி இல்லையே?

**பொழிப்புரை:**

செந்தாமரைப் பூப்போன்ற திருவடிகளையுடையாய்! செந்நிறமுடையாய்! எனக்கு உரிமையுடைய எங்கள் தலைவனே! (திருவருட் பேற்றிற்குத்) தகுதியில்லாதவனும், பொய்யொழுக்கம் உள்ளவனுமாகிய என்னை

வருக என அழைத்து விரும்பிப்பார்க்கவும், உன்னை அடைதற்கு முயற்சி இல்லாதவனும் ஏமாற்றும் கள்ள முள்ளவனும் ஆகிய நான் இறந்தொழிந்தேனல்லேன். நீ திருவருள்புரிந்த தொண்டரும் நீயும் சிவபுரத்திற்குச் சென்றருளி இம்மண்ணுலகில் தங்குமாறு என்னைப் பணித்தாய், இது தகுதியாகுமா? வீணாகிய எனது கொடிய வினைகளுக்கு ஒழிவுகிடையாதா?

**விளக்கம் :**

அழகு எழுதலாகா அருட் சேவடியைக் கண்ணாரக் கண்டு திளைத்து, பின் இணையார் திருவடி தம்தலை மேல் வைத்தலுமே இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்பில்கி நனைந்தனைய திருவடிகளின் ஊற்றின்பத்தையும் உணர்ந்தவராதலின், "**மலர்க்கமல பாதனே**" என்றார். அடிகள் தம்மைத் தகுதியில்லாதவர், பொய்ம்மை உடைய வர் எனக்கூறி மிகத் தாழ்த்திக் கொள்கிறார்.

இப்பணிவு அவரது பெருமைக்குத் தக்க சான்றாகும். போத—வருக.

> "**வண்ணப்பணித் தென்னைவா வென்றவான் கருணைச்**
> **சுண்ணப் பொன்னீற்றன்**"

என்று மற்றோரிடத்துக் கூறி யாங்கு ஈண்டுப் "**போத என்று**" என்றார். "**வருக என்று பணித்தனை**" எனக் கூறியதுங் காண்க. வருத்தம்—முயற்சி, சாதனம். எனக்குத் திருவருள் பாலித்துப்பின் விட்டுப் பிரிந்த நின்னை அடைய முயன்றிலேன், பொய்ம்மையும் உடைய வனுயிருக்கின்றேன்; யான் சிவபுரம் புகுவது எவ்வாறு என இரங்குகிறார் அடிகள்.

இறைவனுடன் செல்வதற்குத் தடையாயிருக்கின்ற தீவினை என்று நீங்கும்? என்று இறைவனை வினவுவார். "**வம்பனேன் வினைக்கு இறுதியில்லையே**" என்கிறார். ஏகாரம் வினாப் பொருளில் வந்தது.

94 இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏல மேலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினா
யெல்லை யில்லைநின் கருணை யெம்பிரா
னேது கொண்டுநா னேது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னு முன்கழல்
காட்டி மீட்கவு மறுவில் வானனே.

**பதப்பிரிவு:**

இல்லை நின்கழற்கு அன்புஅது என்கணே
ஏலம் ஏலும் நல்குழலி பங்கனே
கல்லைமென் கனிஆக்கும் விச்சை கொண்டு
என்னை நின் கழற்கு அன்பன் ஆக்கினாய்
எல்லை இல்லை நின்கருணை எம்பிரான்
ஏது கொண்டு நான் ஏது செய்யினும்
வல்லையே எனக்கு இன்னும் உன்கழல்
காட்டி மீட்கவும் மறுஇல் வானனே.

**உரைநடை:**

மறுஇல் வானனே! ஏலம் ஏலும் நல்ல குழலியாகிய உமையம்மையை உடம்பில் ஒரு பங்கில் உடையவனே! எம்பிரான்! நின்கழற்கு அன்பு என்கண் இல்லை. கல்லை மென்கனி ஆக்கும் விச்சை கொண்டு என்னை நின்கழற்கு அன்பன் ஆக்கினாய். நான் ஏது கொண்டு ஏது செய்யினும் நின் கருணை எல்லை இல்லை. எனக்கு இன்னும் உன் கழல் காட்டி மீட்கவும் வல்லையே.

**பொழிப்புரை:**

மாசற்ற ஞான வெளியில் திகழ்பவனே! மயிர்ச் சாந்தை மேற் கொள்ளும் நல்ல கூந்தலையுடைய உமையம்மையை இடப்பாகமாகக் கொண்டவனே! எங்கள் தலைவனே! உன் திருவடிக்கு அன்பு செய்தல் என்னிடம்

இல்லை. (வன்மையுடைய) கல்லினை மென்மையுடைய கனிந்த பழமாகக் குழைக்கும் வித்தையைப் பயின்று கல்நெஞ்சனாகிய என்னை உன் திருவடிகளுக்கு அன்புள்ளங் கொண்டவனாகச் செய்தாய். உனது அருளுக்கு வரம்பில்லை. நான் எக்கருவி கொண்டு எச் செயலைச் செய்தாலும் இனிமேலும் உன் திருவடிகளைச் சிற்றறிவுடைய எனக்குக் காண்பித்து இவ்வூன வாழ்வி லிருந்து ஞான வாழ்விற்குத் திருப்பவும் ஆற்றலுடையை அல்லவா?

**விளக்கம் :**

மறுவில்வானன் – மாசற்ற தூய்மையான, தத்துவங் களின்முடிந்த எல்லையாகிய பரவெளியில் திருநடம் ஆடுபவன்; இவ் வானைச் **சிற்பர வியோமமாகுந் திருச் சிற்றம்பலம்** என்பர் சேக்கிழார்.

அன்பது — அன்பு+அது, அன்பாகிய அச்சிறந்த பொருள். அன்பு தொடர்புடையாரிடத்துக் காதலாகும்; என்றும்நிலைத்த தொடர்புடையவனாகிய கடவுளிடத்துச் செலுத்தும் அன்பு சிறந்த அன்பு; ஆதலால், அன்பு அது என்றார்: அது பண்டறிசுட்டு. உயிரின் அன்பும் இறைவன் அருளும் முத்திக்கு ஏதுவாவன வாதலின், இறைவனை அருள்வடிவான் அம்மை பங்கன் என்பார், 'ஏலமேலு நற்குழலி பங்கனே' என்றார். தம்முடைய நெஞ்சம் கடுமையாயிருந்தும் இறைவன் ஒருவித்தையி னால் நெஞ்சங் குழைத்தான் என்பார், "கல்லைமென்கனி யாக்கும் விச்சைகொண்டு" என்றார். திருக்கோவையாரில் "காய்சிலையாண்டு என்னையாண்டுகொண்டு" என் பதற்கு விளக்கங் கூறுங்கால் பேராசிரியர் பின்வருமாறு கூறுகின்றார்:—

"வலியனவற்றை வயமாக்கிப்பயின்று, பின் என்னை ஆண்டான் என்பது போதர "காய்சிலையாண்டு கொண்டு" என்றார். என்னைத்தனக்கு அடிமை

கொள்ளுதல் காரணமாகப் பிறிதொன்றின் மேலிட்டுக் கல்லை வளைத்தான். என்னெஞ்சை வளைத்தல் காரண மாக வல்லது தனக்கொருபகை யுண்டாய்ச் செய்ததன்று போலும் என்பது கருத்து."

"கல்லை மென்கனியாக்கும் விச்சைகொண்டு
என்னை நின்கழற் கன்பனுக்கிஞய்."

என்பதும் அது."

(திருக்கோவையார் 114 உரை)

கல் நெஞ்சுடைய என்னை உன் அன்பனுக்கினய்; உன் கருணைக்கு எல்லையில்லை. ஆதலால் யான் மன மொழி மெய்களாற் குற்றஞ் செய்யினும் குணமெனக் கொண்டு உன் திருவடி காட்டி மீட்டுக் கொள்ள வேண்டும் என்பது கருத்து.

95 வான நாடரு மறியொ ணுதநீ
மறையி லீறுமுன் ருெடரொ ணுதநீ
யேனை நாடருந் தெரியொ ணுதநீ
யென்னை யின்னிதா யாண்டு கொண்டவா
வூனை நாடக மாடு வித்தவா
வுருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே.

**பதப்பிரிவு**

வான நாடரும் அறி ஒணுத நீ
மறையில் ஈறும் முன் தொடர் ஒணுத நீ
ஏனை நாடரும் தெரி ஒணுத நீ
என்னை இன்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடுவித்தவா
உருகி நான் உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடுவித்தவா
நைய வையகத்து உடை அவிச்சையே.

**உரை நடை :**

வான நாடரும் அறிய ஒண்ணாத நீ, முன் மறையில் ஈறும் தொடர ஒண்ணாத நீ, ஏனை நாடரும் தெரிய ஒண்ணாத நீ, என்னை ஊனை நாடகம் ஆடு வித்தவா, இன்னிதாய் ஆண்டு கொண்டவா, நான் உருகி உன்னைப் பருக வைத்தவா, ஞான நாடகம் ஆடுவித்தவா, வையகத்து உடைய அவிச்சை நையவே (ஆம்).

**பொழிப்புரை :**

விண்ணுலகத் தவராலுங் காணமுடியாத நீ, பழைய மறை நூல் முடிவாகிய உபநிடதங்களும் பின்பற்றிச் சென்று தெளிய முடியாத நீ, மற்றை மண்ணுலகராலும் கீழுலகராலும் உணர முடியாத நீ, என்னை உடல் வாழ்க்கைக் கூத்தாட்டுவித்தவாறும், இனிமையாய் ஆட்கொண்டருளிய வாறும், நான் உள்ளம் நெகிழ்ந்து உன் அருளாரமுது அருந்தச் செய்தவாறும், அதனால் ஞான நெறி தலைப்பட்டு ஞானக் கூத்தாடுமாறு செய்த விதமும் இம்மண்ணுலகப் பிறவிக்குக் காரணமான உலக மயக்கம் ஒழியவே ஆகும்.

**விளக்கம் :**

வினைக்கு ஈடாக உடலைக்கொடுத்து உலகப் பொருள்களிலும் சுற்றத்தார்களிடத்தும் பாசமூட்டி நிலையுதலில்லா வாழ்க்கைக் கூத்து ஆடச்செய்தது இறைவனுடைய மறைப்புச் சத்தியின் செயல் ஆகும்.

அவிச்சையாவது அநித்தத்தை நித்தமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளைத் தானென்றும் திரியக் காணும் உணர்வு.

அந்தாதித் தொடையில் அடுத்த செய்யுள் " விச்சதின்றி " எனத்தொடங்கலின் இச்சைஎன்று பிரித்தலினும் " அவிச்சை " என்று பிரித்தல் பொருத்தமாகும்.

வான நாடரும் — உம்மை சிறப்பும்மை. வானவர் வழிபாடு அன்புகுறித்ததன்ருகலின் அவர்களால் அறியொணுதவன். அறியொணு, தெரியொணு பெயரெச்சத்து ஈறுகெட்டது. ஒணு ஒண்ணு என்பதன் தொகுத்தல். எவ்வுலகராலும் இறைவன் காணப்பெருதவன். ஈண்டு உலகர் என்றது சத்திநிபாதம் பெருதவரை.

**"ஆரண நூல்பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்.**
**நீதியினுல் உலகர்க்கும் சத்திநி பாதர்க்கும் நிகழ்த்தியது"**

உலகத்தார் உய்தற்பொருட்டுப், பொது நீதிகளைக் கூறுவது வேதம், ஆதலின் மறையில் ஈறும் இறைவனைத் தொடர இயலாதாயிற்று.

**"அருமறை முறையிட்டின்னும் அறிவதற்கரியான்"**

(**திருத்தொண்டர் புராணம்**)

'இன்னிது' — இனிது என்பதன் விரித்தல் விகாரம், மனித்தப் பிறவி என்பது போல. இனிய முறையில் அருளாசிரியனுக வந்து ஆட்கொண்டமையின் **இன்னிதா ஆண்டு கொண்டவா,** என்றுர்.

ஆண்டு கொண்டவா – ஆட்கொண்டவாறு ஆட்கொண்ட விதம். ஆடுவித்தவா — ஆடச் செய்த விதம். ஆறு — என்னும் சொல்லின் ஈறும், எண்ணும்மையும் தொக்கன. ஊனை நாடகம் ஆடுவித்தல் — உடற்ருெடர்புடைய சுற்றத்தாரோடு செல்லுமாறு உலகியற் செயல்களிற் செலுத்துதல். ஞான நாடகமாடுவித்தல் — ஞான நெறியைத் தலைப்பட்டுத் திருவடிப் பேற்றிற்குரிய செயல்களிற் செல்லுமாறு செலுத்துதல் "அவிச்சையே" என்பதிலுள்ள ஏகாரத்தைப் பிரித்து "நைய" என்பதனோடுங் கூட்டுக. இன்னிதா ஆண்டுகொண்டவாறு, ஊனை நாடகம் ஆடுவித்தவாறு முதலிய நான்கும் வையகத்து உடைய **அவிச்சை நையவே என முடிக்க.**

96 விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோவில் வாயிலிற்
பிச்ச னாக்கினாய் பெரிய வன்பருக்
குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமர மாயி னுங்கொலார்
நானு மங்ஙனே யுடைய நாதனே.

**பதப்பிரிவு :**

விச்சு அது இன்றியே விளைவு செய்குவாய்
விண்ணும் மண் அகம் முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்சகப் பெரும்
புலையனேனை உன் கோவில் வாயிலில்
பிச்சன் ஆக்கினாய் பெரிய அன்பருக்கு
உரியன் ஆக்கினாய் தாம்வளர்த்தது ஓர்
நச்சு மா மரம் ஆயினும் கொல்லார்
நானும் அங்ஙனே உடைய நாதனே.

**உரைநடை :**

(யாவற்றுக்கும் மூல காரணமாதலின் எல்லாம்) உடைய நாதனே! விச்சு அது இன்றியே விண்ணும் மண் அகமும் யாவையும் முழுதும் விளைவு செய்குவாய், வைச்சு வாங்குவாய்; வஞ்சகப் பெரும் புலையனேனை உனது கோவில் வாயில் முன்பில் பிச்சன் ஆக்கினாய்; பெரிய அன்பருக்கு உரியன் ஆக்கினாய். தாம் வளர்த்தது ஓர் நச்சு மாமரம் ஆயினும் கொல்லார். நானும் அங்ஙனே.

**பொழிப்புரை**

சிறியேனை அடிமையாகவும் எல்லாப் பொருள்களையும் உடைமையாகவும் கொண்ட தலைவனே! உற்பவத்திற்குக் காரணம் என நன்கு உணரப்படும் வினை இன்றியே முதல்

உற்பவத்தைச் செய்தோனே; பின் வரும் உற்பவங்களில் மேலுலகு மண்உலகு முதலிய யாவற்றையும் தோற்றி நிறுத்திப்பின் எல்லாவற்றையும் உன்னிடத்து வந்து ஒடுங்கச் செய்வோனே! கள்ளஉள்ளம் படைத்த மிகவும் கீழ்ப்பட்ட என்னை உனது திருக்கோவில் வாயில் முன்னர்ப்பித்தனுகச் செய்தாய்; பேரன்புடைய மெய்யடி யார்க்குத் தக்க அடியனுகச் செய்தாய்; தாங்கள் வைத்து வளரச் செய்தது ஒரு பெரிய நஞ்சு இயல்பு உள்ள பெரிய மரமாக வளர்ந்தாலும் அதனைத் தாமே வெட்டி அழிக்க மாட்டார். யானும் அத்தன்மை உடையேன். (ஆதலின் என்னை நீக்க வேண்டா.)

**விளக்கம் :**

"முதலுற்பவம் வருமாறுணர்த்தாது புனருற்பவம் வருமாறுணர்த்துவது என்னையெனின் பிரபஞ்சம் அநாதி யாகலின் அம்முதற்கோடி நம்மனோரான் அறியவாராமை யானும் ஒடுங்கியின் மீளஉளதாமாறே ஈண்டு அவாய் நிலையான் உணர்த்த நின்றதாகலானும் அதுவே கூறினர் என்பது.

**"விச்சதின்றியே விளைவு செய்குவாய்"**

எனவும் "விண்ணும் மண்ணும் முழுதும் யாவையும் வைச்சு வாங்குவாய்" எனவும் ஓதிய திருவாக்கானும் இவ்விருவேறு வகையும் கண்டு கொள்க.

**(சிவஞானபோதமாபாடியம் 2ம் சூத்திரம்)**

இதனுல், படைப்பு இருவகைப்படும். அவற்றுள் 'விச்சதின்றி விளைவு செய்தல்' முதலுற்பவம் 'விண்ணும்' மண்ணக முழுதும் யாவையும் வைச்சு வாங்குதல் புனருற்பவம் என்னும் அரியகருத்து உணரப்படும்.

"விச்சதின்றியே விளைவு செய்குவாய் என்பது திருமேனி கொள்ளுமுறைமை உணர்த்தியதூஉமாம்"

**(சிவஞானமாபாடியம்)**

வித்தின்றிப் பலபல வேடங்கொள்வாய் எனவும் பொருள் கூறலாம்.

"விச்சின்றி நாறு செய்வானும்"
(திருநாவுக்கரசர்-தேவாரம்)

பரமசிவன் ஒருவனே படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளல் ஆகிய ஐந்தொழிற்கும் உரியவன் என்பது கருத்து. பெரிய அன்பர்—பேரன்பர், நிலைபெற்ற மெய்யன்பர். மெய்யடியார்க்கு உரிமைத் தொண்டராக்குதல்; வழிவழியடிமையாக்கல் உரியனுக்கலாகும்.

மக்கள் தாம் வைத்து வளர்த்தது ஒரு பெரிய விடம் பயக்கும் மரமாக இருந்தாலும் அதனை வெட்ட மாட்டார்கள்: அதுபோல நான் உன்னால் எடுத்து ஆட்கொள்ளப்பட்டவனாதலின் என்னுடைய செயல்கள் தீயனவாயிருப்பினும் நீ என்னைத் தள்ளலாகாது என்பதாம்.

97 உடைய நாதனே போற்றி நின்னலாற்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
யுடைய னேபணி போற்றி யும்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினுங்
கடைய னாயினேன் போற்றி யென்பெருங்
கருணை யாளனே போற்றி யென்னைநின்
னடிய னாக்கினாய் போற்றி யாதியு
மந்த மாயினாய் போற்றி யப்பனே.

**பதப்பிரிவு :**

உடைய நாதனே போற்றி; நின் அலால்
பற்று மற்று எனக்கு ஆவது ஒன்று இனி
உடையனே பணி போற்றி உம்பரார்
தம் பராபரா போற்றி யாரினும்
கடையன் ஆயினேன் போற்றி என் பெருங்
கருணையாளனே போற்றி என்னை நின்
அடியன் ஆக்கினாய் போற்றி ஆதியும்
அந்தம் ஆயினாய் போற்றி அப்பனே.

**உரைநடை :**

ஆதியும் அந்தமும் ஆயினாய போற்றி; அப்பனே! உடைய நாதனே! போற்றி; உம்பரார்தம் பராபரா! போற்றி! யாரினும் கடையன் ஆயினேன், போற்றி; என் பெருங் கருணையாளனே! போற்றி; என்னை நினது அடியன் ஆக்கினாய், போற்றி; இனி நின் அலால் பற்று எனக்கு ஆவது மற்று ஒன்று உடையனோ? பணி.

**பொழிப்புரை :**

முதலும் முடிவுமானவனே! வணக்கம். தந்தையே! என்னை அடிமையாக்கொண்ட தலைவனே! வணக்கம். மேலுலகத்தேவர்களுக்கு மிக மேலானவனே! வணக்கம். நான் எல்லோரினும் கீழானவன் ஆனேன், காத்தருள்க. என்பால் மிகுந்த இரக்கங்கொண்டவனே! வணக்கம். கீழான என்னை உனதுதொண்டன் ஆகச்செய்தாய், வணக்கம். எனக்குத் துணையாகும் சார்பாக இப்பொழுது உன்னை அல்லாமல் வேறுஒன்றனை யான் உடையேனோ? கூறியருள்வாயாக. வணக்கம்.

**விளக்கம் .**

ஆதியும் அந்தம் ஆயினாய் போற்றி — அந்தமும் என்ற எண்ணும்மை தொக்கது. உலகிற்கு முதற் காரணம் மாயை. அதனின்று உலகம் தோன்றி அதில் ஒடுங்கும். அதனை இங்கு இறைவனிடத்தினின்றும் தோன்றியொடுங்குவதாகக் கூறியது முதற்காரண மாகிய மாயைக்கு இறைவன் சத்தி பேராதாரமாய் நிற்றல் பற்றியென்க. தாமரைக் கிழங்கினின்றுந் தோன்றும் தாமரையை அக்கிழங்கிற்கு ஆதாரமான சேற்றினின்றுந் தோன்றுவது என்னும் பொருள்படப் பங்கயம் என்று அதற்குக் காரணப் பெயர் கொடுத்தாற் போல;

"மாயையிற்றேன்றி யொடுங்கும் உலகம் அதற் காதாரமாய் நின்ற முதல்வன் உருவிற்றேன்றி யொடுங்கிய தூஉமாம் என்பது கிழங்கினின்றுந் தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனுனும் அறிக."

(சிவஞானசித்தியார் உரை-
சிவஞான முனிவர்)

தேவர் யாவர்க்கும் மிகமேலானவன் யாவர்க்கும் கீழான தம்மை ஆட்கொள்ளக் காரணம் அவனது பெருங் கருணேயே என்பார் "என் பெருங்கருணையாளனே" என்றூர். உடையநாதனே எனத் தொடங்கி அப்பனே என முடித்தமையின் ஆண்டான் அடிமைத் தொடர்போடு தந்தை மகன் தொடர்புங்கூறி இறைவனது பேரானந்தப் பெருஞ் செல்வம் முழுதும் நுகரும் உரிமை உயிர்க்கே உண்டு என்பதை உணர்த்துதற்கு. இறைவனுக்கு அடிமையாதலினுல் பேரின்பம் நுகரலாம் என்பதை:—

"மாசதற் றெளிர் நித்த சுத்த வளந்தரு சுகவாரி காண்
ஈசனுக்கடி மைத்திறத்தினில் இயைந்து நாம் பெறும்
இன்பமே."

என்றும்,

இறைவனே விடாது பற்றினுல் பேரின்பம் நுகரலாம் என்பதை:—

"பராவு தேவர் பராவுதூய பராபரனடி பற்றிநீ
விராவு மெய்யில் விடாத இன்பம் விளேந்திடுமிது மெய்ம்மையே"

என்றும், சிவஞானசித்தியார் பரபக்கச் செய்யுள்கள் விளக்குகின்றன.

98 அப்ப னேயெனக் கமுத னேயா
னந்த னேயக நெகவள் ளூறுதே
ெனப்ப னேயுனக் குரிய வன்பரி
லுரிய னுயுனேப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னேதுணே
யாள னேதொழும் பாள ரெய்ப்பினில்
வைப்ப னேயெனே வைப்ப தோசொலாய்
நைய வையகத் தெங்கண் மன்னனே.

**பதப்பிரிவு:**

அப்பனே எனக்கு அமுதனே
ஆனந்தனே அகம்நெக அள் ஊறு தேன்
ஒப்பனே உனக்கு உரிய அன்பரில்
உரியனாய் உனைப் பருக நின்றது ஓர்
துப்பனே சுடர் முடியனே துணை
யாளனே தொழும்பாளர் எய்ப்பினில்
வைப்பனே எனை வைப்பதோ சொலாய்
நைய வையகத்து எங்கள் மன்னனே.

**உரைநடை :**

அப்பனே! எனக்கு அமுதனே! ஆனந்தனே! அகம் நெக அள் ஊறு தேன் ஒப்பனே! உனக்கு உரிய அன்பரில் உரியனாய் உனைப் பருக நின்றதாகிய ஓர் துப்பனே! சுடர்கின்ற (சடை) முடியனே! துணை யாளனே! எனை நைய வையகத்து வைப்பதோ? சொலாய்.

**பொழிப்புரை :**

எனக்குத் தந்தையே! எனக்கு நல்ல மருந்துபோன்ற வனே! இன்பமயமானவனே! உள்ளம் உருகாநிற்ப வாயூறுதற்கு ஏதுவான தேன்போலும் இன்சுவைப் பொருளே! உனக்கு உரிமையுடையனாகி உன்னை நுகரும்படி நிலைபெற்ற ஒப்பற்ற நுகர்ச்சிப் பொருளே! ஒளிவீசும் திருமுடியுடையோனே! அடியேங்களுடைய அரசனே! சிறந்த தொண்டர்க்குத் துணையாக நிற்ப வனே! அவர்க்கு இளைத்த இடத்துச் சேமிப்புப் பொரு ளானவனே! இவ்வல்லல் மிக்க உலக வாழ்வில் என்னைத் துன்பத்தில் துவளும்படி இருத்துவதோ? கூறியருள் வாயாக.

விளக்கம்

எனக்கு என்பதை முன்னருங் கூட்டுக. முதல்வனை யன்றி உறவில்லை ஆதலால் அப்பனே என்றார். "உன்னை யொழிய உறவில்லை என்னுமது—தன்னை அறிவைத் தனியறிவை" நெஞ்சுவிடு தூது—25, 26 அடிகள்.

இறைவனைச் சிறந்த நிலைபெற்ற உறவாக உணர்தல் தலையாய உணர்வு. பிறவிப்பிணிக்குச் சிறந்த மருந்தா கலின் அமுதனே! என்றார்.

"மருந்துவேண் டில்லிவை மந்திரங்கள்ளிவை
புரிந்து கேட்கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவதே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே."

(திருஞானசம்பந்தர்-தேவாரம்)

இறைவன் இன்பவடிவினனுதலின் ஆனந்தனேயென்றார்.

"இன்பதனை எய்துவார்க் கீயும் அவற்குருவம்
இன்பகன மாதலினால் இல்."

(திருவருட்பயன்)

அவ்வின்பம் நினைத்தவுடன் வாயூறும் என்பார், அள்ளூறுதேன் ஒப்பனே என்றார். நினைக்க நினைக்க, காணக் காண, பேசப்பேச இறைவன் திருநடம் தித்திக்கும் இதனை

"நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்ற திருக்கோத்தும்பிச் செய்யுளிற் காண்க.

அன்பினுல் இன்பம் ஆரவல்லார் அடியார் :-

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்ருர்
ஒருமையால் உலகைவெல்வார் ஊனமேல் ஒன்றுமில்லார்
அருமையாம் நிலையில் நின்ருர் அன்பினுல் இன்பம் ஆர்வார்
இருமையுங்கடந்து நின்ருரிவரை நீயடைவாய் என்று."

என்னும் சேக்கிழார் அருள் உரையால் அடியார் இலக்கணம் விளங்கும். இத்தகைய அன்பரைப் போல் அடிகளையும் பேரின்ப நுகர்விற்கு உரியராக்கினுன் இறைவன். அன்பரில் — இல் ஐந்தனுருபு ஒப்புப் பொருள்; துப்பு—நுகர்பொருள். தனிமுடி கவித்தாளும் அருட்பேரரசாகலின் சுடர்முடியனே என்ருர். "வாழ்வே போற்றி, என் வைப்பே போற்றி" எனவும் "வைப்பு மாடென்றும் மாணிக்கத் தொளியென்றும் மனத்திடை யுருகாதே" எனவும் அடிகள் கூறிய இடங்களைக் காண்க. வைப்பதோ — ஓகாரம் விஞப் பொருட்டு.

"இவ்வாறு அல்லலுறச் செய்வது முறையாகுமா? நீயே சொல்வாயாக" என்று அடிகள் இறைவனையே கேட்கின்ருர்.

99 மன்ன வெம்பிரான் வருக வென்னெனை
மாலு நான்முகத் தொருவன் யாரினு
முன்ன வெம்பிரான் வருக வென்னெனை
முழுதும் யாவையு மிறுதி யுற்றநாட்
பின்ன வெம்பிரான் வருக வென் னெனைப்
பெய்க ழற்கணன் பாயென் ஞவினுற்
பன்ன வெம்பிரான் வருக வென் னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே.

பதப்பிரிவு :

மன்ன! எம்பிரான் வருக என்; எனை;
மாலும் நான் முகத்து ஒருவன் யாரினும்
முன்ன! எம்பிரான்! வருக என் எனை;
முழுதும் யாவையும் இறுதி உற்ற நாள்
பின்ன! எம்பிரான் வருக என் எனை;
பெய் கழற்கண் அன்பாய் என் நாவினுல்
பன்ன எம்பிரான்! வருக என் எனை
பாவ நாச நின் சீர்கள் பாடவே.

**உரை நடை :**

மன்னனே! எம்பிரானே! எனை வருக என்; மாலும் நால்முகத்து ஒருவனும் (ஆகிய) யாரினும் முன்னவனே! எம்பிரானே! எனை வருக என்; யாவையும் முழுதும் இறுதி உற்ற நாளுக்கும் பின்னவனே! எம்பிரானே! எனைவருக என்; எம்பிரானே! பாவநாசனே! (உன்னுடைய) பெய் கழற்கண் அன்பாய் என் நாவினால் நின் சீர்கள் பன்னவும் பாடவும் எனை வருக என்.

**பொழிப்புரை :**

அருள் அரசே! எங்கள் தலைவனே! என்னை வருக என்று அழைத்துக்கொள். திருமாலும் நான்கு முகத்தையுடைய பிரமனும் பிறதேவரும் ஆகிய யாவரினும் முன்னவனாகிய எங்கள் தலைவனே! என்னை வருகஎன்று ஏற்றருள்வாயாக. எல்லாக் கலைகளும் அவற்றிலுள்ள எப்பொருள்களும் முழுதும் முடிவடைந்த கடைநாளின் பின்னும் (அழிவின்றி) யிருக்கும் எங்கள் தலைவனே! என்னை வருக என்று ஏற்றருள்வாயாக. பாவத்தை ஒழிக்கும் எங்கள் தலைவனே! வீரக்கழல் அணிந்த திருவடிகளிடத்து அன்பு வடிவினனாய் உன்புகழை என்னுடைய நாக்கினால் நவிலவும் உன் சிறப்புக்களைப் பாடவும் என்னை வருக என்று அழைத்தருள்வாயாக.

**விளக்கம் :**

தம்மை விட்டுச்சென்ற பரமன் தம்மை வருக என்று அழைத்துக்கொள்ள வேண்டும் என வேண்டுவார் "எனைவருக என்" என்று பன்முறை விண்ணப்பிக்கின் றார். என் — என்று கட்டளையிட்டருள்வாயாக. வியங்

கோள் வினைமுற்று. எம்பிரான் மன்ன வருக என் — எனக்கூட்டி மன்ன என்பதற்கு நிலைபெற்ற வீட்டின்பம் நுகர எனவும் பொருள்கொள்ளலாம். யாரினும் — யாவரினும் — 'அடியேன் பன்னுவேன், பாடுவேன்; இவைகள் காரணமாக என்னை வருக என்று அருள் புரிவாயாக' என்பதாம். தம் உரையும் பாட்டும்முதல்வன் பொருள் சேர் புகழ் குறித்தே நிகழவேண்டும் என்பார். "என் நாவினாற் பன்ன" எனவும், 'நின் சீர்கள் பாட எனவும்' ஓதினார்.

"உரையும் பாட்டும் உடையோர் சிலரே"

(புறநானூறு-27-5)

"புகழ்தான் உரையும் பாட்டும் என இருவகைப்படும்"

(பரிமேலழகர் உரை
திருக்குறள், 232.)

100 பாட வேண்டுநான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டுநான் போற்றி யம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே.

பதப்பிரிவு :

பாடவேண்டும் நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந்து உருகி நெக்கு நெக்கு
ஆடவேண்டும் நான்போற்றி அம்பலத்து
ஆடும் நின்கழல் போது நாயினேன்
கூடவேண்டும் நான் போற்றி இப்புழுக்
கூடுநீக்கு எனைப் போற்றி பொய் எலாம்
வீடவேண்டும் நான் போற்றி வீடுதந்து
அருளு போற்றி நின் மெய்யர் மெய்யனே.

**உரைநடை :**

நின் மெய்யர் மெய்யனே! போற்றி. நின்னையே நான் பாட வேண்டும். நெக்கு நெக்கு உருகிப் பாடி நைந்து நைந்து நான் ஆட வேண்டும், போற்றி. நாயினேன் நான் அம்பலத்து ஆடும் நின்கழல் போது கூட வேண்டும், போற்றி, என்னை இப்புழுக்கூடு நீக்கு போற்றி. நான் பொய் எலாம் வீடவேண்டும்; போற்றி. வீடு தந்து அருளு போற்றி.

**பொழிப்புரை :**

உன்பால் உண்மை அன்புகொண்ட தொண்டர்தம் மெய்ப்பொருளே! வணக்கம். நான் உன்னையே பாடிப் புகழ வேண்டும். உள்ளம் இளகி இளகி நெகிழ்ந்து கசிந்து உன்னைப்பாடி மிகவும் மெய்ம்மறந்து நின்று ஆனந்தக் கூத்தாட வேண்டும்; வணக்கம். நாய் போன்றவனாகிய யான் திருச்சிற்றம்பலத்தில் திருவடி மலரை அணைய வேண்டும்; வணக்கம். என்னைப் புழுக்கள் வாழிடமாகிய உடலினின்று விடுவித்தருள்வாயாக; வணக்கம். நான் நிலையில்லனவாகிய பொய்ப்பொருள்களையெல்லாம் விட்டொழிக்க வேண்டும்; வணக்கம். பேரின்பமாகிய வீட்டு நிலையைத் தந்தருள்வாயாக; வணக்கம்.

**விளக்கம் :**

"பாடி ஆடக் கெடும் அருவினையே"

(தேவாரம்)

ஈண்டு அடிகள் பாச நீக்கமும் சிவப்பேறும் வேண்டுகிறார். 'பொய்யெலாம் வீட வேண்டும் நான் போற்றி' – பாச நீக்க வேண்டுகோள். 'வீடு தந்தருளு போற்றி' – சிவப்பேற்று வேண்டுகோள். இவ்விரு பேறுகளையும் வேண்டுவார் அவற்றிற்குரிய சாதனங்களையும் தமக்கு அருள்புரியுமாறு இறைவனிடம் வேண்டுகிறார். உடம்பு உள்ளளவும் சீவன் முத்தராக இருந்து மனம், மொழி, மெய்களால் உள்ளல், உருகல், பாடல், ஆடல்களைப் பல்காலுஞ்செய்து உணர்விற் பேரின்பத்தைத் தலைப்பட்டு அதற்குத்தடையாய் நிற்கும் உடம்பினின்று விரைவில் நீங்கவேண்டு மென வேண்டுகிறார்.

கழற்போது — திருவடிமலர்; கழல் ஆகுபெயர்.

'பொய்யெலாம்' என்றார் மறுமைப்பேறுகளையும் உவர்த்து விடுதற்கு, பொய்யெல்லாம் விடுதல் சிவப் பேற்றிற்கு இன்றியமையாத சாதனமாகும்.

"குறித்தடியின் நின்றட்ட குணம் எட்டுச் சித்தி
கோகநதன் முதல் வாழ்வு குலவுபத மெல்லாம்
வெறுத்து நெறி யறுவகையும் மேலொடு கீழ் அடங்க
வெறும் பொய்யென நினைந்திருக்க மேலொடு கீழ் இல்லான்
நிறுத்துவதோர் குணம் இல்லான் தன்னை ஒருவர்க்கும்
நினைப்பரியான் ஒன்றுமில்லான் நேர்படவந்துள்ளே
பொறுப்பரிய பேரன்பை அருளியதன் வழியே
புகுந்திடுவன் எங்குமிலாப் போகத்தைப் புரிந்தே."

'மெய்யர் மெய்யனே' என்னும் இறுதி 'மெய்தான் அரும்பி' என்னும் முதற் செய்யுளின்முதலோடு மண்டலித்து முடிந்தது.

---

உ
திருச்சிற்றம்பலம்.

## நீத்தல் விண்ணப்பம்.

" மையனைய கண்டத்தாய் மாலும் மற்றை
வானவரும் அறியாத வண்ணச் சூலக்
கையவனே கடியிலங்கைக் கோனை அன்று
கால்விரலாற் கதிர்முடியுந் தோளுஞ் செற்ற
மெய்யவனே அடியார்கள் வேண்டிற்றீயும்
விண்ணவனே விண்ணப்பங் கேட்டு நல்கும்
செய்யவனே திருச்சோற்றுத் துறையுளானே
திகழொளியே சிவனே உன் அபயம் நானே "

(அப்பர் திருத்தாண்டகம்)

உ
திருச்சிற்றம்பலம்

( கட்டளைக் கலித்துறை )

[ உலக வாழ்க்கையிற் பற்றறுதி, பிரபஞ்ச வைராக்கியம் ]
உத்தரகோசமங்கையில் அருளியது

## கட்டளைக் கலித்துறை

---

திருப்பெருந்துறையில் மாணவராக வந்த அடியார்கள் அனைவரும் சோதியிற் கலந்தார்கள். மணிவாசகர் தனித்து நின்று சிரமேற் கரங்குவித்துக் கண்ணீர் ததும்பி, " அடியேன் நிலை கண்டு ஆட்கொண்டருள வேண்டும் " என்று ஆண்டவன் திருவடிக்குத் திருச்சதகம் பாடினார்; பின் சிவபெருமான் இட்ட கட்டளைப்படி திருஉத்தரகோச மங்கைக்கு வந்தார்.

அங்கே தம்மை வந்து ஆட்கொண்ட திருமேனியினைக் காணாது கலங்கி "நீத்தல் விண்ணப்பம்" பாடினார். திருவாதவூரடிகள் புராணம் திருவம்பலச்சருக்கம்:—

செய்யுள் 27 பின் வருவது.

**உத்தரகோசமங்கையில் மணிவாசகர்.**

"சடையவர் கோவில் எய்தித் தம்மைவந் தடிமைகொண்ட
வடிவது காணாராகி மயங்கி வெய்துயிர்த்து வீழ்ந்து
விடுதிகொல் என்னை? என்று 'நீத்தல் விண்ணப்பம்' என்னும்
தொடைகெழு பாடல்ஓதக்காட்டினர் தொல்லை மேனி."

"அடியேனைத் தாம் நீத்துச்சென்றது தகுமா?' என்று விண்ணப்பஞ்செய்து ஐம்பது பாடல்களைப் பாடியருள்கிறார் மணிவாசகனார்; "அடியேனைத்தனியே விடுதி கண்டாய், விட்டிடுதிகண்டாய்" என்று பாடல் தோறும் கூறித் "தாங்கிக்கொள்ளே" என்று விண்ணப்பிக்கின்றார். "உலக வாழ்க்கையில் தமக்கு உள்ள பற்றினை அறுத்தருள்க" என்று மணிவாசகனார் ஒவ்வொரு பாட்டிலும் கூறுவதனால் உலக வாழ்க்கையிற் பற்று அறுதி (பிரபஞ்சவைராக்கியம்) என்று, நீத்தல் விண்ணப்பம் தலைப்பிடப்பெற்றது. திருவாசக உண்மை பின்வருமாறு கூறுகின்றது:—

"மித்தை உலகினை அகற்றி, விடாமல் எனை ஆண்டருள் என்று
அத்தர் அறிந்திட நீத்தல் விண்ணப்பம் அறைந்ததுவாம்."

விடுதி — என்னைக்கைவிட்டுத் தள்ளுகின்றாயோ; கைவிடாதே எனப்பொருள் கொள்ளப்படும்.

உ
மெய்கண்ட தேவன் மெல்லடி வாழிய.
திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்

## நீத்தல் விண்ணப்பம்

(திருவுத்தர கோசமங்கையில் அருளியது)

(திருச்சிற்றம்பலம்)

**கடையவ னேனைக் கருணையி**
**னாற்கலந் தாண்டுகொண்ட**
**விடையவ னேவிட் டிடுதிகண்**
**டாய்விறல் வேங்கையின்றோ**
**லுடையவ னேமன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**சடையவ னேதளர்ந் தேனெம்பி**
**ரானென்னைத் தாங்கிக் கொள்ளே.**

**பதப்பிரிவு :**

கடையவனேனைக் கருணையினால்
கலந்து ஆண்டு கொண்ட
விடையவனே விட்டிடுதி கண்டாய்
விறல் வேங்கையின் தோல்
உடையவனே மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
சடையவனே தளர்ந்தேன் எம்பிரான்
என்னைத் தாங்கிக் கொள்ளே.

**பொழிப்புரை :**

அடியார்கள் பலருள்ளும் கடைசி நிலையில் இருப்பவனாகிய என்னையும் திருவருளினால் எழுந்தருளி வந்து என்னுடன் இரண்டறக் கலந்து அடிமையாக்கி

எளியேனை அன்பர் வரிசையிற் சேர்த்துக்கொண்ட, காளையை ஊர்ந்து காட்சிதந்தருளிய பெருமானே! என்னைத் திருவடியிற் சேர்க்காது விட்டுவிடுவாயோ? உன்னைப் பிரிந்து துடிதுடிக்கும் என் நிலைகண்டு இரங்குவாயாக. வலிமையினால் புலியின் தோலை உரித்து ஆடையாக உடுத்தியிருப்பவனே! என்றும் அழியாது எங்கும் பொருந்தியிருக்கும் திரு உத்தரகோச மங்கைப் பதிக்கு அரசனே! சடையினை உடையவனே! நீ கைவிட்டு விடுவாயோ என்று சோர்ந்து போனேன். எம்பெருமானே அடியவனாகிய என்னைத் தாங்கி நின் திருவடியிற் சேர்த்துக் கொண்டருள்வாயாக.

**விளக்கம்:**

தம்மோடிருந்த மாணவ அடியார்கள் அனைவரையும் முதன்மையாக அழைத்துக் கொண்டு ஆண்டவன் தம்மை மட்டும் கடையானவன் எனக் கழித்து விட்டான் எனக் கருதி மணிவாசகனார் தம்மைக் கடையவன் என்று கூறுகின்றார். "திருப்பெருந்துறைக்குக் குதிரை வாங்கச் சென்ற என்னோடு, மாணவர் குழாத்துடன் வலிய வந்து கலந்து ஆண்டுகொண்ட கருணையாளனே! அக்கருணை இப்போது எங்கே போயிற்று? இன்றுபோல் என்றும் அடியேன் தனியே கதறி நிற்கும்படி விட்டுவிடுவாயோ? என் திக்கற்ற நிலையினைக் காண்பாயாக, கண்டு இரங்கு வாயாக" என்று விண்ணப்பம் செய்துகொள்கிறார் அடிகள்.

உடம்பிலுண்டாகும் எல்லா நோய்களுக்கும் மூல மாக இருப்பது மலமே. அது கழியும் வாயில் உண்டாகும் நோய் மூல நோய்; அது முளைத்துப் படாத பாடுகளை யெல்லாம் படுத்தும். அம்முளையைக் கருவறுப்பது கருணை யென்னும் கிழங்கே. அங்ஙனமே உயிர் படும்பாடுகளுக்கெல்லாம் மூலமாக இருப்பது ஆணவ மலம்; அதனைக் கருவறுப்பது ஆண்டவன் கருணையே.

விடையவன்—விடையை ஊர்தியாக உடையவன்; விடை—காளை. அறக்கடவுள் விடையாக நின்று சிவ பெருமானைத் தாங்கியது; அறவடிவாகிய காளையை ஊர்ந்த சிவபெருமானும் அறவடிவானவன்; ஆதலின் இரக்கங் கொண்டு தம்மைப் பெருமான் வலிய வந்து ஆண்டனன் என்பது குறித்தவாறு. மேலும், முப்புரம் எரித்த நாளில் திருமால் விடையாகி நின்று பெருமானைத் தாங்கினன். பெருமான் விடைமீது ஏறிய போது திருமால் "நான் விடையாகித் தாங்கவில்லையானால் சிவ பெருமான் முப்புரத்தோடு சென்று போரிடுவது யாங்ஙனம் அமையும்? " என எண்ணினனாக எங்கும் நிறைந்த பரம் பொருளாகிய பெருமான் அதனை அறிந்து "என்னே திருமாலின் சிறுமை எண்ணம் இருந்தவாறு?" எனச் சிரித்தனன். உடனே முப்புரங்களும் எரிந்தழிந்தன. **வேங்கை** கடவுளுண்மை கொள்ளாத தாருகவனத்து முனிவர் செய்த தீ வேள்வியினின்றெழுந்து எதிர்த்து வந்த புலி. சிவபிரான் அதனைக் கொன்று அதன் தோலை அரையில் உடுத்துக் கொண்டான்.

**2 கொள்ளேர் பிளவக லாத்தடங்**
**கொங்கையர் கொவ்வைச் செவ்வாய்**
**விள்ளே னெனினும் விடுதிகண்**
**டாய்நின் விழுத்தொழும்பி**
**னுள்ளேன் புறமல்லே னுத்தர**
**கோசமங் கைக்கரசே**
**கள்ளே னொழியவுங் கண்டுகொண்**
**டாண்டதெக் காரணமே.**

**பதப்பிரிவு :**

கொள் ஏர் பிளவு அகலாத் தடம்
கொங்கையர் கொவ்வைச்செவ்வாய்
விள்ளேன் எனினும் விடுதி கண்டாய்
நின் விழுத் தொழும்பின்
உள்ளேன் புறம் அல்லேன் உத்தர
கோச மங்கைக்கு அரசே
கள்ளேன் ஒழியவும் கண்டு கொண்டு
ஆண்டது எக்காரணமே.

உரைநடை :

உத்தரகோச மங்கைக்கு அரசே! ஏர்கொள் பிளவு அகலாத தடம் கொங்கையருடைய கொவ்வைப்பழம் போன்ற செவ்வாயை விள்ளேன் எனினும் விடுதி கண்டாய்; நின் விழுத்தொழும்பில் உள்ளேன், புறம் அல்லேன்; கள்ளேன் ஒழியவும் கண்டு கொண்டு ஆண்டது எக்காரணம்?

**பொழிப்புரை :**

உத்தரகோச மங்கைக்கு அரசே! அழகு பொருந்திய, இடைவெளிமிகாது நெருங்கிய பெரிய கொங்கைகளை யுடைய பெண்களின் கோவைப்பழம் போலச்சிவந்த வாயிதழ்களைத் துய்த்தலினின்று நீங்கேனாயினும் நீ என்னைக்கைவிடுவாயோ? அடியேன் உனக்குச்செய்ய வேண்டிய சிறந்த தொண்டுகளைச் செய்வேன்; உனக்குப் புறம்பானவன் அல்லேன். கள்ளத்தனத்தை உடைய வஞ்சிய யான் உன் விழுத்தொழும்பு செய்யாது விலகவும் நீ என்னைக் கண்டுபிடித்து வலிய வந்து திருவடி காட்டி மெய்யுரை அருளி உன் விழுத் தொழும்பன் ஆக்கிக்கொண்டதற்குக் காரணம் யாது?

விளக்கம் :

மாணிக்கவாசகர் மகளிர் இன்பத்தில் ஈடுபட்ட வரல்லர். மகளிரின்பத்தில் ஈடுபடும் நம்போன்றவர்கள் தங்கள் மயக்கத்தை இறைவனிடம்கூறி அதற்காக இரங்கித் தங்களைக் கைவிட்டுவிடலாகாதென இறைவனை வேண்டுவாராயின் இறைவன் அருள்புரிவான் என்ற உண்மையை விளக்க இவ்வாறு அருளிச்செய்துள்ளார். இதுபோன்ற ஏற்றுரைகளைப் பிறவிடங்களிலும் கண்டு உணர்க.

விள்ளல் — நீங்குதல். விழுத்தொழும்பு — உலகத் தொழும்பி னீக்குதற்கு **விழுத்தொழும்பின்** என்றார். 'மாயை மயக்கம் நீங்கிலனேனும் அரன் பணியினீங்கி

லேன்; ஆதலின் என்னைக் கைவிடலாகாதென' வேண்டுவார், 'விழுத்தொழும்பினுள்ளேன், புறமல்லேன்' என்றார். வஞ்சகனாகிய யான் நின்னைவிட்டு விலகியிருக்கவும் நீ என்னைக் கண்டுபிடித்து அடிமைகொண்டதற்குக் காரணம் நினது பேரருளேயாகும். அப்பெருங் கருணையே என்னை இப்போதும் என் உலக மயக்கங் காரணமாக விடாது என்பதாம்.

கொள் ஏர்பு இளவு அகலா எனப்பிரித்து எழுச்சி கொண்ட இளமைத்தன்மை நீங்காத எனவும் பொருள் கொள்ளலாம்.

**3 காருறு கண்ணிய ரைம்புல**
**னாற்றங் கரைமரமாய்**
**வேருறு வேனை விடுதிகண்**
**டாய்விளங் குந்திருவா**
**ரூருறை வாய்மன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**வாருறு பூண்முலை யாள்பங்க**
**வென்னை வளர்ப்பவனே.**

**பதப்பிரிவு:**

கார்உறு கண்ணியர் ஐம்புலன்
ஆற்றங்கரை மரமாய்
வேர்உறுவேனை விடுதி கண்டாய்
விளங்கும் திருவா
ரூர் உறைவாய் மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
வார்உறு பூண்முலையாள் பங்க
என்னை வளர்ப்பவனே

**உரைநடை:**

"விளங்கும் திருவாரூர் உறைவாய், மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, வார் உறு பூண்முலை

யாள் பங்க, என்னை வளர்ப்பவனே. கார்உறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங்கரை மரமாய் வேர் உறுவேனை விடுதி கண்டாய்.''

பொழிப்புரை :

பிறக்க முத்தி தரும் என்று புகழப் பெற்று விளங்கும் திருவாரூரை விட்டு அகலாது எழுந்தருளியிருப்பவனே! மன்னும் உத்தரகோச மங்கைப்பதிக்கு அரசே! கச்சினை அணிந்த அணிகலன் பொருந்தியுள்ள கொங்கையினளாகிய உமாதேவியாருக்கு உடலிற்பாதியைப் பங்கிட்டுக் கொடுத்தவனே! அந்த அருள் முறையிலேயே சிறியனாகிய என்னையும் வளர்ப்பவனே! கருமை நிறம் பொருந்திய கண்களையுடைய பெண்களிடம் ஓடிச் செல்கின்ற ஐந்துபுலன்களாகிய ஆற்றங்கரையில் மரம்போல வேர் ஊன்றி நிற்பவனாகிய என்னைக் கைவிட்டு விடுவாயோ?

விளக்கம் :

அடிகள் தம் உயிரை அருளினால் வளர்க்கவேண்டுகிறார். உலகத்தவர் தம் உடலைப் பொருளால் வளர்க்கிறதுபோல அருளினால் உயிரை வளர்த்தற்குரியவன் இறைவன். அருட் கொடைவள்ளலாகிய தியாகராசர் எழுந்தருளி யிருப்பதாகலின், '**திருவாரூர் உறைவாய்**' என்றார். ஆற்றங்கரைமரம் நீர்வளத்தால் ஓங்கி வளர்ந்தாலும் எந்நேரமும் வேரோடு அரித்து வீழ்த்தப்படும். அதுபோல ஐம்புல ஆறு இன்பத்தைக் குறைவின்றிக் கொடுத்தாலும் உயிரை அடியோடு அழித்து வீழ்த்து விடும் என்பார், ஐம்புலன் ஆற்றங்கரை மரமாய் வேருறுவேனை' என்றார். அருளன்னையால் வளர்க்கப்பெறுதல் காட்டுவார் 'வாருறு பூண் முலையாள் பங்க' என்றார். அருளன்னையின் இரு தனங்களினின்றும் பரஞான அபர ஞான அமுதினை, ( அருளறிவு, கலையறிவுகளை ) ஊட்டி உயிரை அருளன்னை வளர்ப்பாள் என்பதாம். அஃது ஆற்றங்கரை மரம் போலன்றி நிலையான முத்தி. வளத்தையும் நல்கும் என்பதாம்.

" ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே "

(நல்வழி 12)

4 வளர்கின்ற நின்கரு ணைக்கையில்
வாங்கவு நீங்கியிப்பால்
மிளிர் கின்ற வென்னை விடுதிகண்
டாய்வெண் மதிக்கொழுந்தொன்
றொளிர் கின்ற நீண்முடி யுத்தா
கோசமங் கைக் கரசே
தெளி கின்ற பொன்னுமின் னும்மன்ன
தோற்றச் செழுஞ்சுடரே.

**பதப்பிரிவு :**

வளர் கின்ற நின் கருணைக்கையில்
வாங்கவும் நீங்கி இப்பால்
மிளிர் கின்ற என்னை விடுதி கண்டாய்
வெண்மதிக் கொழுந்து ஒன்று
ஒளிர் கின்ற நீள் முடி உத்தர
கோச மங்கைக்கு அரசே
தெளி கின்ற பொன்னும் மின்னும்
அன்ன தோற்றச் செழுஞ்சுடரே.

**உரைநடை :**

. வெண்மதிக் கொழுந்து ஒன்று ஒளிர் கின்ற நீள்முடி உத்தரகோச மங்கைக்கு அரசே தெளிகின்ற பொன்னும் மின்னும் அன்ன தோற்றச் செழுஞ்சுடரே. நின் வளர் கின்ற கருணைக்கையில் என்னை வாங்கவும் அதைவிட்டு நீங்கி இப்பால் மிளிர்கின்ற என்னை விடுதி கண்டாய்"

**பொழிப்புரை :**

வெண்மை நிறமான இளந்திங்கள் ஒன்று விளங்கு கின்ற நீண்ட சடைமுடியினை உடைய உத்தரகோச மங் கைக்கு அரசே! மாசு நீங்கித்தெளிகின்ற பொன்னையும்

மின்னலையும் போன்ற தெளிவான காட்சியையுடைய மிக்க ஒளி வடிவானவனே! (நான் எங்கெங்கு விலகி ஒளித்தாலும் விடாது) நீண்டு கொண்டு வருவதாகிய உன் அருட் கையினாலே என்னைப்பிடித்துக் கொண்டாய். நானோ அந்தப் பிடிப்பினின்றும் என்னை விடுவித்துக் கொண்டு இந்த உலகப்பாசத்தில் அழுந்தி (அதுவே நிலையான இன்பம் தருவது என்று) இறுமாந்திருக்கிறேன். என்றாலும் இத்தகைய என்னையும் விட்டு விடுவாயோ? (என் நிலைகண்டு இரங்கியருள்க).

**விளக்கம் :**

அன்பர்க்கு வழங்க வழங்கக் குறைவின்றிப் பெருகுதலின் வளர்கின்ற கருணையைக் கையாக உருவகப் படுத்தி அதனால் இறைவன் அன்பரை வளைத்து அணைத்துத் தன்னோடு சேர்ப்பதாக அடிகள் கூறுகின்றார். பேரின்பம் அளிப்பதற்காக அருட்கையால் வளைத்து இழுக்கவும் அவனிடம் செல்லாது இவ்வுலக போகத்தில் திளைப்பதாகக் கூறுவார் ‘இப்பால் மிளிர்கின்ற என்னை’ என்றார். இப்பாலைப் பொய்யுலக வாழ்வில் திளைக்கின்றேன் என்பார் மிளிர்கின்ற என்றார். இத்தவறு குறித்தும் தன்னைக் கைவிடலாகாது என்று அடிகள் இறைவனிடம் விண்ணப்பஞ் செய்கிறார். பொன் தயங்கு ஒளிர் சடையில் பிறைச் சந்திரனது தண்ணிலவொளியும் சேர்ந்து இலங்குகின்ற ஒளி விளக்கமாக இறைவன் முடியினை அடிகள் காட்டுகிறார். பொன்வண்ணத்தோடு மின்னொளியும் கூடிய திருவுருவம் என்க. பேரொளிப் பிழம்பு என்பார் செழுஞ்சுடரே என்றார். அன்ன—உவம உருபு. மதிக்கொழுந்து—கொழுந்து மதி (பின்மொழி நிலையல்). பொன்னைத் திருமேனிக்கும் சடையை மின்னுக்கும் ஒப்பிடலாம்.

**“பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந் திலங்கும்**
**மின்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் வீழ்சடை”**

[பொன்வண்ணத்தந்தாதி]

5 செழிகின்ற தீப்புகு விட்டிலிற்
சின்மொழியா ரிற்பன்னுள்
விழுகின்ற வென்னை விடுதிகண்
டாய்வெறி வாயறுகா
லுழுகின்ற பூமுடியுத்தர
கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு
தூட்ட மறுத்தனனே.

பதப்பிரிவு:

செழிகின்ற தீப்புகு விட்டிலின்
சின்மொழியாரில் பல் நாள்
விழுகின்ற என்னை விடுதிகண்டாய்
வெறிவாய் அறுகால்
உழுகின்ற பூமுடி உத்தர
கோச மங்கைக்கு அரசே
வழி நின்று நின் அருள் ஆர்
அமுது ஊட்ட மறுத்தனனே.

உரைநடை :

வெறிவாய் அறுகால் உழுகின்ற பூவை முடித்த உத்தரகோச மங்கைக்கு அரசே! நீ என் வழியில் நின்று நின் அருள் ஆளும் அமுதினை ஊட்டவும் உண்ண மறுத்தனன். செழிகின்ற தீயிற்புகும் விட்டிலில் சின்மொழி யாரில் பல்நாள் விழுகின்ற என்னை விடுதி கண்டாய்?

பொழிப்புரை :

தேன் தேரும் வாயினையும் ஆறு கால்களையுமுடைய வண்டுகள் வந்து கிளறுகின்ற கொன்றைப் பூவைச் சூடிய உத்தரகோச மங்கைக்கு அரசே! நீ என்னை வழி யில் நின்று மறித்து உன்னுடைய அருள் நிரம்பிய அமுதத்தை எனக்கு ஊட்டினுய்; ஆனுல் நான் அதை உண்ணமாட்டேன் என்று தடை கூறிமறுத்தேன்

மிகுதியாகப் பிடித்து எரியும் தீயிலே விழும் விட்டிற் பூச்சியைப்போல, சிலவாகிய சொற்களையுடைய பெண்களிடத்தே பலமுறையும் விரும்பிக் கிடக்கின்ற என்னை நீ கைவிட்டு விடுவாயோ.

**விளக்கம்**

சின்மொழியாரிற் பன்னாள் — முரண் தொடை; ஊட்டுதல் — அன்போடு உண்பித்தல். வழங்க, கொடுக்க என்னாது ஊட்ட என்றதிலுள்ள தாயன்பு காண்க. பூவினை வண்டுகள் உண்ணவில்லை, இறைவனுக்குச் சூட்டப் பெறுகின்றமையின். தேன் மிகுதி பற்றியும் மகரந்தப் பொடியோடு கலத்தல் பற்றியும் நீரும் சேறும் கலந்த வயலை உழுதற்கு ஒப்பிட்டார். காம மிகுதியால் அழிதல் ஒருதலை என்பதுணர்த்துவார் 'செழிகின்ற தீப்புகு விட்டிலில்' என்றார். அறுகால்— பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. விட்டில் சூடு கண்டும் மீட்டும் மீட்டும் சென்று விழுதல் போல காம இன்பத்தோடு துன்பமும் விரவிவரினும் மேலும் மேலும் அதில் விழுந்து முடிவர் என்பதாம்.

**6 மறுத்தனன் யானுன் னருளறி**
**யாமையி லென்மணியே**
**வெறுத்தெனை நீவிட் டிடுதிகண்**
**டாய்வினை யின்றொகுதி**
**யொறுத்தெனை யாண்டு கொளுத்தர**
**கோசமங் கைக்கரசே**
**பொறுப்பரன் றேபெரி யோர்சிறு**
**நாய்கடம் பொய்யினையே.**

**பதப்பிரிவு :**

மறுத்தனன் யான்உன் அருள்
அறியாமையில் என்மணியே
வெறுத்து எனை நீ விட்டிடுதி கண்டாய்
வினையின் தொகுதி
ஒறுத்து எனை ஆண்டுகொள் உத்தர
கோச மங்கைக்கு அரசே
பொறுப்பர் அன்றே பெரியோர்
சிறு நாய்கள்தம் பொய்யினையே.

உரை நடை :

"என் மணியே! உத்தரகோச மங்கைக்கு அரசே! யான் உன் அருள் அறியாமையில் மறுத்தனன். என்னை வெறுத்து விட்டிடுதி கண்டாய், வினையின் தொகுதி ஒறுத்து எனை ஆண்டுகொள்; பெரியோர் சிறு நாய்கள் தம் பொய்யினைப் பொறுப்பர் அன்றே."

**பொழிப்புரை :**

என் மாணிக்க மணியே! உத்தரகோச மங்கைக்கு அரசே! நீ ஊட்டிய அருளார் அமுதத்தை அறிவின்மையினால் உண்ண மறுத்துவிட்டேன். அதனால் நீ என்னை வெறுத்துக் கைவிட்டு விடுவாயோ? நான் இது வரை தேடியுள்ள நல்வினை தீவினைப் பெருக்கினைக் கடிந்து என்னை அடிமையாக்கிக் கொள்வாயாக. பெரியாராயினார் சிறுநாய்கள் போன்றார் செய்யும் பொய்யான செயல்களைப் பொறுத்துக் கொள்வார்கள் அல்லவா?

**விளக்கம் :**

வேற்றுப்பொருள் வைப்பணி. நின் திருவருளின் பெருமையறியாமையின் வழிநின்று அருளமுது ஊட்டவும் மறுத்தனன் என்றார். எனக்கு நீ திருவருளின் பெருமை அறிதற்குரிய அறிவு அளிக்க வேண்டுமேயன்றி யான் மறுத்ததனால் என்னை வெறுத்துக் கைவிடலாகாது என்பது கருத்து. இருவினைப் பாசத்தால் அதன் பயனாகிய உலக இன்பத்தில் நாட்டம் எழும் ஆதலின், திருவருளின்பம் துய்த்தற்கு இருவினைத்தளை நீக்கப்படல் வேண்டுமென்பார், 'வினையின் தொகுதி ஒறுத்து என்னை ஆண்டு கொள்' என வேண்டினார். முதலில் இருவினை விருப்பு வெறுப்புக்களை உண்டாக்கும், விருப்பு வெறுப்பு உண்டாகவே ஏகதேசப் பொருள் காட்சிப்படும்; உடனே விபரீத உணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்தும். ஆதலின் வினை, மாயை, மலம் என்பவை இம்முறையிற் படிப்படியாகத்

தலைப்படும். சிறியோ ரென்றது சிறு நாய்கள் என்றார், அசுத்தமான பொய் உலக இன்பத்தை விரும்பலின்.

"பிழைத்த தெலாம் பொறுத்தருள்செய் பெரியோய்."

(திருத்தாண்டகம், திருவாரூர்-5)

**7 பொய்யவ னேனைப் பொருளென வாண்**
**டொன்றுபொத் திக்கொண்ட**
**மெய்யவ னேவிட் டிடுதிகண்**
**டாய்விட முண்மிடற்று**
**மையவனே மன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**செய்யவ னேசிவ னேசிறி**
**யேன்பவந் தீர்ப்பவனே.**

**பதப்பிரிவு:**

பொய்யவனேனைப் பொருள் என ஆண்டு
ஒன்று பொத்திக் கொண்ட
மெய்யவனே விட்டிடுதி கண்டாய்
விடம் உண் மிடற்று
மையவனே மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
செய்யவனே சிவனே
சிறியேன் பவம் தீர்ப்பவனே.

**உரைநடை:**

பொய்யவனேனைப் பொருள் என ஆண்டு ஒன்று பொத்திக் கொண்ட மெய்யவனே விடம் உண் மைமிடற்றவனே மன்னும்உத்தரகோச மங்கைக்கு அரசே செய்யவனே சிவனே சிறியேன் பவம் தீர்ப்பவனே, விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை:**

பொய்யான ஒழுக்கத்தையுடைய என்னை ஒரு பொருளென்று எண்ணி ஆளாகக் கொண்டு, உன்னுடன் வேறின்றி ஒன்றாக அணைத்து அடக்கிக் கொண்ட மெய்ப்பொருளே! நஞ்சினை உண்டு கறுத்த கழுத்தினையுடையவனே! நிலைபெற்ற திரு உத்தரகோச மங்கைக்கு அரசே! செம்மேனி எம்மானே! பேரின்ப காரணனே! சிறியவனாகிய அடியேனுடைய பிறவிப் பிணியை நீக்கியருள்பவனே! நீ என்னைக் கைவிட்டு விடுவாயோ?

**விளக்கம் :**

மிடற்றுமையவனே என்பதனை மைமிடற்றவனே எனக் கூட்டுக. திருநீலகண்டம் அடியார் இடர் களைதற்கு அறிகுறியாதலின் "விடமுண்மிடற்றுமையவனே" என்றார். செய்யவன் செம்மேனியன். சிவன் மங்கலப் பொருளானவன். பிறவி நீக்குதற்கு உரியவன் பிறப்பில் பெருமானாகிய சிவபெருமான் ஒருவனே. நிலையில்லாத உலக இன்பத்தினரையும் ஒரு பொருளாகக் கருதிச் சிவபெருமான் ஆட்கொள்வன் என்பார் "பொய்ய வனேனைப் பொருள் என ஆண்டு" என்றார். அடியார் குற்றத்தையும் மறைத்து மேலும் பொய் வாராமல் தம்முடைய அருள் நிறைவில் அடக்கலின் "ஆண்டு ஒன்று பொத்திக்கொண்ட" என்றார்.

ஒன்று என்பதற்கு முத்தியெனப் பொருள்கொண்டு முத்தியை எனக்கு மறைத்துக்கொண்ட எனவுங் கூறலாம். ஒப்பற்ற நின்னருட் பெருக்கால் என் பொய்ம்மையை மறைத்து என்னையேற்றுக் கொண்ட மெய்ப் பொருள் எனவும் பொருள் கூறலாம். இப்பொருளுக்கு ஒன்று—ஒப்பற்ற அருட்பெருக்கு எனக் கொள்க.

8 தீர்க்கின்ற வாறென் பிழையைநின்
சீரரு ளென்கொலென்று
வேர்க்கின்ற வென்னை விடுதிகண்
டாய்விர வார்வெருவ
வார்க்கின்ற தார்விடை யுத்தர
கோசமங் கைக்கரசே
யீர்க்கின்ற வஞ்சொடச் சம்வினை
யேனை யிருதலையே.

**பதப்பிரிவு :**

*தீர்க்கின்ற ஆறுஎன் பிழையை*
*நின்சீர் அருள் என்கொல் என்று*
*வேர்க்கின்ற என்னை விடுதி கண்டாய்*
*விரவார் வெருவ*
*ஆர்க்கின்ற தார்விடை உத்தர*
*கோச மங்கைக்கு அரசே*
*ஈர்க்கின்ற அஞ்சொடு அச்சம்*
*வினையேனை இருதலையே.*

**உரைநடை :**

*விரவார் வெருவ ஆர்க்கின்ற தார்விடை உத்தர கோசமங்கைக்கு அரசே! வினையேனை அஞ்சொடு அச்சம் இருதலை ஈர்க்கின்ற நின்சீர் அருள் என் பிழையைத் தீர்க்கின்ற ஆறு என் கொல் என்று வேர்க்கின்ற என்னை விடுதி கண்டாய்.*

**பொழிப்புரை :**

*பகைவர்கள் அஞ்சும்படி ஒலிக்கின்ற கிண்கிணி மாலையினை அணிந்த காளையினை ஊர்தியாக உடைய உத்தரகோச மங்கைக்கு அரசே, பாவியாகிய என்னை ஐம்புலன்களும் அச்சமும் இருபுறத்தும் நின்று இழுக்கின்றன. உன்னுடைய சிறப்பு மிக்க திருவருள் நான் செய்திருக்கும் குற்றங்களைப் போக்கும் வழி என்ன என்று அச்சத்தால் வேர்த்து நிற்கும் என்னை விடுதி கண்டாய்.*

**விளக்கம் :**

ஐம்புலன்கள் ஒருபுறமும், புலன் வழிச் செல்ல லாகாதே என்ற அச்சம் ஒருபுறமும் இழுக்கின்றன. அஞ்சு — தொகைக் குறிப்புச் சொல். எண்ணலளவை யாகு பெயர்.

> "அஞ்சுவது (ஒரும்) அறனே ஒருவனை
> வஞ்சிப்ப தோரும் அவா."

ஆதலின் அச்சம் ஒருதலையான் வேண்டப்படுவதாகும். அஞ்சிக் காக்கினும் ஐம்புல அவா என்னைத் தன்னிடத் தீர்க்க யான் பெரிதும் பிழைபட்டேன். உன்னுடைய திருவருள் என் குற்றத்தை எவ்வாறு நீக்கும்? எனது அச்சத்தை எவ்வாறு அகற்றும்? என்று கருதி நடுங்குவார், என் பிழையை நின் சீர் அருள் "தீர்க் கின்றவாறென்கொல் என்று வேர்க்கின்ற என்னை" என்றார். சிவபெருமானுடைய காளை ஊர்தியின் கிண்கிணி மாலை ஒலியைக் கேட்டவுடன் பகைவர் அஞ்சுவர். தான் இவ்வாறு அலமருதற்குக் காரணம் பழவினையே யென்பார் **வினையேனை** என்றார். கொல்— ஐயப் பொருட்டு.

**9 இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்**
**பொத்து நினைப்பிரிந்த**
**விரிதலை யேனை விடுதிகண்**
**டாய்வியன் மூவுலகுக்**
**கொருதலை வாமன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**பொருதலை மூவிலை வேல்வல**
**னேந்திப் பொலிபவனே.**

**பதப்பிரிவு**

இருதலைக் கொள்ளியினுள் எறும்பு ஒத்து
  நினைப்பிரிந்த
விரிதலையேனை விடுதி கண்டாய்
  வியன் மூஉலகுக்கு
ஒருதலைவா! மன்னும் உத்தர
  கோச மங்கைக்கு அரசே
பொருதலை மூஇலை வேல்
  வலன் ஏந்திப் பொலிபவனே.

**உரை நடை :**

வியன் மூஉலகுக்கு ஒரு தலைவா மன்னும் உத்தர கோச மங்கைக்கு அரசே பொருதலை மூஇலைவேல் வலன் ஏந்திப் பொலிபவனே இருதலைக் கொள்ளியினுள் எறும்பு ஒத்து நினைப்பிரிந்த விரிதலையேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

பெரிய மூன்று உலகங்களுக்கும் இணையில்லாத தலைவனே! என்றும் நிலைபெற்றிருக்கும் உத்தரகோச மங்கைக்கு அரசே! போர் செய்தற்கு உரிய இலை வடிவான மூன்று தலைகளையுடைய வேலாகிய சூலாயுதத்தை வலக்கையின் ஏந்தி விளங்குகின்றவனே! இரண்டு முனையிலும் எரிகின்ற கொள்ளிக் கட்டைக் குழலினுள் நடுவே அகப்பட்டுக் கொண்ட எறும்பினைப் போல உன்னைப் பிரிந்ததனால் தலைவிரி கோலனாகித் தவிக்கின்ற என்னை விடுதி கண்டாய்.

**விளக்கம் :**

சிவபெருமானே உலகு மூன்றினுக்கும் ஒப்பற்ற தலைவர். அவருடைய படை மூன்று நுனிகளையுடைய சூலப்படை. இச்சூலப்படை அவருடைய வலக்கையில் தாங்கப்பெற்று விளக்கமுறுகின்றது. ஆற்றொணாத் துயரில் மக்கள் தலைவிரி கோலமாய்த் திரிவர்.

கண்ணகியின் துன்ப நிலையை விளக்கும் இளங்கோ

"காவியுகு நீருங் கையிற் றனிச்சிலம்பும்
ஆவிகுடி போன அவ்வடிவும் — பாவியேன்
காடெலாஞ் சூழ்ந்த கருங்குழலுங் கண்டஞ்சிக்
கூடலான் கூடாயி னான்"

என விளக்குகிறார்.

இறைவனைப் பிரிந்த வாழ்வு உலக அல்லலிற்பட்டு அலங்கோலமடையும் என்பதாம். உட்டுளையுள்ள ஒரு மூங்கில்; அதனுள் ஒரு எறும்பு தங்கியிருந்தது. இரு நுனிகளிலும் தீப்பற்றி விட்டால் அது தப்புவதற்கு வழியேயில்லை. மூங்கிலில் புறத்தேயிருந்தால் அதற்கு ஆதாரமாயிருக்கும் தரையில் சென்றுவிடலாம். அது போல இறைவனது பிரிவாற்றுமை ஒருபுறம், அல்லல் வாழ்க்கை ஒருபுறம். இவர்க்குத் தரை போன்று தாரக மாகிய இறைவன் திருவடியிருந்தால் தப்பிக்கொள்ள லாம். இறைவனையோ பிரிந்து விட்டார், வேறு வழி யின்றி அல்லலில் அழுந்தி நோவுறுகிறார். உவமை பாராட்டற்குரியது.

மூவிலைச் சூலம் முதல்வன் மும்மூர்த்திகளிடத்துத் தன் சத்தியை வைத்து முத்தொழில் நடத்துவதையும் மும்மல அழுக்கை நீக்குவதையும் உணர்த்தும்.

"மூன்று மூர்த்தியுள் நின்றிய லுந்தொழில்
மூன்றும் ஆயின மூவிலைச் சூலத்தன்"

(திருநாவுக்கரசர் தனித்திருக்
குறுந்தொகை-3)

"அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்."

(திருவாசகம், கீர்த்தித்திருவகவல்-109, 110)

"மூவிலை யொருதாட் சூலம் ஏந்துதல்
மூவரும் யானென மொழிந்த வாறே."

(திருமுறை 11 பட்டினத்தடிகள்,
திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது-6)

"அருள் பொழியுந் திருமுகத்தின் அணி முறுவல் நிலவெறிப்ப
மருள் பொழியும் மலஞ்சிதைக்கும் வடிச்சூலம் வெயிலெறிப்பப்
பொருள் பொழியும் பெருகன்பு தழைத்தோங்கிப் புவியேத்தத்
தெருள் பொழிவண் தமிழ்நாட்டுச் செங்காட்டங்
குடிச்சேர்ந்தார் "

(திருத்தொண்டர் புராணம், சிறுத்தொண்டர்-25)

10 பொலிகின்ற நின்றுள் புகுதப்பெற்
றுக்கையைப் போக்கப் பெற்று
மெலிகின்ற வென்னை விடுதிகண்
டாயளி தேர்விளரி
யொலிநின்ற பூம்பொழி லுத்தர
கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித்
தாய்புர மாறுபட்டே.

புதப்பிரிவு:

பொலிகின்ற நின்தாள் புகுதப் பெற்று
ஆக்கையைப் போக்கப் பெற்று
மெலிகின்ற என்னை விடுதிகண்டாய்
அளிதேர் விளரி
ஒலி நின்ற பூம் பொழில் உத்தரகோச
மங்கைக்கு அரசே
வலி நின்ற திண் சிலையால்
எரித்தாய் புரம் மாறுபட்டே.

உரைநடை :

அளிதேர் விளரி ஒலி நின்ற பூம்பொழில் உத்தர கோச மங்கைக்கு அரசே, மாறுபட்டு வலி நின்ற திண்சிலையால் புரம் எரித்தாய், பொலிகின்ற நின் தாள் புகுதப் பெற்றும் ஆக்கையைப் போக்கப் பெற்றும் மெலிகின்ற என்னைவிடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

வண்டுகள் தமக்கு இசைந்தது இது என்று தேர்ந்து பாடுகின்ற விளரி என்னும் பெயரையுடைய இசை ஒலி நீங்காது ஒலிக்கப் பெற்ற அழகிய சோலைகளையுடைய உத்தரகோச மங்கைக்கு அரசே! பகைகொண்டு, வலிமை நிலை பெற்றிருக்கிற திட்பமான மேருமலையாகிய வில்லினாலே முப்புரங்களை எரித்தாய். விளங்குகின்ற உன்னுடைய திருவடிகளிலே அடைக்கலமாக அடையப் பெற்றும் அதன் பயனாக உடம்பின் மேலுள்ள ஆசையை நீக்கப் பெற்றும் வீட்டின்பம் பெறாது கலங்கிக் கொண்டிருக்கின்ற அடியேனை விடுதி கண்டாய்.

**விளக்கம் :**

விளரி — ஏழிசைகளில் ஒன்று. நெய்தற்குரிய இரங்கற் பண்ணும் ஆம். பொலிகின்ற — விளங்கு கின்ற; அறிவொளியும் அருளொளியும் விளங்குகின்ற. புகுதப் பெற்று — அடங்கப் பெற்று. பெற்றும் — உம்மைகள் தொக்கன. ஆக்கை — உடற் பற்றுக் காதலின் ஆகுபெயர். இறைவன் திருவடியடைந்து அடங்கப் பெற்றும் உடற்பற்று நீங்கப் பெற்றும் வீட்டின்பத்தில் நிலைபெறவில்லை. மேலும் மேலும் உலக வாதனையால் மெலிகின்றேனென நம் போன்றா ரியல்பைத் தம் மேல் ஏற்றிக் கூறுகின்றார் அடிகள்.

மாறுபடுதல் — திரிபுரத்தை எரித்தற்காகக் கருணை யின் மாறுபட்ட வேகவடிவங் கொள்ளுதல்.

**11 மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப**
**யானுன் மணிமலர்த்தாள்**
**வேறுபட் டேனை விடுதிகண்**
**டாய்வினை யேன்மனத்தே**
**யூறுமட் டேமன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**நீறுபட் டேயொளி காட்டும் பொன்**
**மேனி நெடுந்தகையே.**

**பதப்பிரிவு :**

மாறுபட்டு அஞ்சுஎன்னை வஞ்சிப்ப
யான்உன் மணிமலர்த்தாள்
வேறுபட்டேனை விடுதி கண்டாய்
வினையேன் மனத்தே
ஊறும் மட்டே மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
நீறுபட்டே ஒளிகாட்டும்
பொன்மேனி நெடுந்தகையே.

**உரைநடை :**

வினையேன் மனத்தே ஊறும் மட்டே, மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, நீறுபட்டு ஒளி காட்டும் பொன்மேனி நெடுந்தகையே, அஞ்சுமாறுபட்டு என்னை வஞ்சிப்ப யான்உன் மணி மலர்த்தாள் வேறுபட்டேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

தீவினையினேனாகிய அடியேன் உள்ளத்திலே ஊற்றெடுக்கும் தேனே! மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே! திருநீறு பூசப் பெற்றதனால் வெண்மையான ஒளியுடன் விளங்குகின்ற பொன் மயமான திருமேனியை உடைய பேரருளாளனே, ஐம்புலன்களும் பகைகொண்டு என்னை ஏமாற்றின. அதனால் அடியேன் உன் அழகான செந்தாமரை மலர் போன்ற திருவடிகளுக்குச் செய்யும் திருத்தொண்டினை மறந்து புறமான வழிகளிலே நடந்தேன். அத்தன்மை யுள்ள அடியேனைக் கைவிடுவையோ?

**விளக்கம்:**

அஞ்சு — ஐம்புலன்கள், ஆகுபெயர்; மாறுபட்டு — எனது கருத்திற்கு வேறாகி "மாறிநின்றென்னை மயக்கிடும் வஞ்சப்புலன் ஐந்தின் வழியடைத்து" என

அடிகள் கூறியதும் காண்க. வஞ்சித்தல் — கள்ளத்தனமாகக் கடவுளுணர்வினின்று பிரித்து உயிரறிவை ஆறலைத்துச் செல்லல். வஞ்சித்தல் காரணமாக இறைவன் திருவடிகளினின்று வேறுபடுத்தலின், வஞ்சிப்ப, காரணப்பொருட்டாய வினையெச்சம். இறைவனடிகளைப் பிரிந்தமைக்குக் காரணம் ஐம்புலன்களேயன்றி நானல்லேன் ஆதலின் என்னைக் கைவிடல் முறையன்று எனக் கூறுகிறார். தாம் தீவினையுடையராய் இருப்பினும் அவர் உள்ளத்தில் இறைவன் எழுந்தருளியிருந்து இன்பத்தேன் அளித்தலின் "வினையேன் மனத்தே ஊறும் மட்டே" என்றார்.

"என்னுள்ளத் துள்ளேயூ றும்
அத்தேனை அமுதத்தை ஆவின்பாலை
அண்ணிக்குந் தீங்கரும்பை அரனை"

(திருத்தாண்டகம்
திருப்புள்ளிருக்கு வேளூர்)

சிவபெருமானுடைய பொன்னார் திருமேனி எப்போதும் திருநீறு பூசப் பெற்றே இலங்கும் என்பதாம். நீற்றுக்கோலம் நிமிர்ந்து காட்டியும் என வேறிடத்தும் அடிகள் அருளிச் செய்தமை காண்க.

நெடுந்தகையே — பெருந்தகுதியாளனே.

ஐம்புலன்களும் சிவன்பாற் செல்லுதல் நேர்மை. சிவனைவிட்டு உலகிற் செல்லுதல் வஞ்சனை. திருநீற்றின் விளக்கமே இறைவன் திருமேனியில் விளங்கும்.

"பால் திருநீறுபூத்த பவழவெற்பனைய பச்சைக்
கோல் தொடி மணந்த மேனிக்குழகனே"

(சிவஞான சுவாமிகள்
இளசைப் பதிற்றுப் பத்தந்தாதி)

12 நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள
யானைம் புலன்கள்கொண்டு
விடுந்தகை யேனை விடுதிகண்
டாய்விர வார்வெருவ
வடுந்தகை வேல்வல்ல வுத்தர
கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேனுண்ணுந் தெண்ணீ
ரமுதப் பெருங்கடலே.

**பதப்பிரிவு:**

நெடுந்தகை நீஎன்னை ஆட்கொள்ள
யான் ஐம்புலன்கள் கொண்டு
விடுந்தகையேனை விடுதி கண்டாய்
விரவார் வெருவ
அடுந்தகை வேல்வல்ல உத்தர
கோச மங்கைக்கு அரசே
கடுந்தகையேன் உண்ணும் தெண்ணீர்
அமுதப் பெருங்கடலே.

**உரைநடை :**

விரவார் வெருவ அடும் தகை வேல் வல்ல உத்தர கோச மங்கைக்கு அரசே, கடும்தகையேன் உண்ணும் தெள் அமுதநீர்ப் பெருங்கடலே, நெடுந்தகை, நீ என்னை ஆட்கொள்ள யான் ஐம்புலன்கள்கொண்டு விடும்தகை யேனை விடுதிகண்டாய்.

**பொழிப்புரை :**

பகைவர் நடுநடுங்கும்படி அவர்களைக் கொல்லும் தன்மையையுடைய முத்தலை வேலாயுதத்தைச் செலுத்து வதில் திறமை பூண்ட உத்தரகோச மங்கைக்கு அரசே, கொடிய வேட்கையுடையவனாகிய அடியேன் உண்ணும் பொருட்டு நிரம்பிக்கிடக்கும் தெளிந்த தன்மையுள்ள அமுதம் நிறைந்த பெரிய கடல்போன்றவனே,

பேரருளாளனே, நீ அடியேனை வலியவந்து ஆளாகக் கொள்ளவும் அடியேன் ஐம்புலன்களினுல்வரும் சிற்றின்பப்பற்றைப் பெரிதாகக்கொண்டு உன் திருவருட் பற்றை மறந்திருக்கின்றேன், விடுதிகண்டாய்.

**விளக்கம் :**

அடும்தகை — கொல்லுந் தன்மை, வேல் ஈண்டு முத்தலைவேலாகிய சூலப்படை. உன்னை விடுந்தன்மை எனக்கு ஐம்புலன்களாலாயது. ஆதலின் நீ என்னை விடலாகாது என விண்ணப்பிக்கிருர். நெடுந்தகை— பேரருள் தன்மையன், பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. இறைவனே நீ என்னை அடிமை யாக்கிஞய். நான் உன் அடிமை. என்ஞல் வெல்ல முடியாதன ஐம்புலன்கள். நீ முத்தலைவேற் படையில் வல்லவன். உனது படையைக் கண்டதும் பகைவர் அஞ்சுவர். ஆதலின் முத்தலைச் சூலப்படையால் அடிமை யாகிய என்னை ஆறலைக்கும் ஐம்புலப் பலகையை வெல்வாயாக. என்னை விட்டுவிடாதே என விண்ணப்பிக் கிருர்.

சூலப்படை மும்மலங்களை அழிக்கும் என்பதை

''கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றுரை வெல்லும் படைபகராய்—ஏற்றுர்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்
கழுக்கடைகாண் கைக்கொள் படை''

(திருத்தசாங்கம்)

உயிர்க்குச் சிவபோகத்தில் கடுந்தாக மிருக்க வேண்டும்; உயிர்க்குச் சிவபோகத்தாக மிக்கிருந்தால் இறைவனும் தெண்ணீர் அமுதப் பெருங்கடலாக விளங்குவான். பருகினவர்களுக்கு ஞானத்தெளிவளித் தலின் தெண்ணீர் என்கிருர்.

இப்பாட்டுச் சிவஞான பாடியத்தில் "திருவடி ஞானத்தைப்பெற்ற உயிர் ஒரோவழிப்பயிற்சி வயத்தான் பாசஞானத்தில் மீளுமாயின் மீளாது செய்து" கோடற்கு உபாயங்கூறுமிடத்து எடுத்தாளப்படுகிறது.

(சூ. 8, அதி. 4, 2. வெ. 3)

**13 கடலினு ணாய்நக்கி யாங்குன்**
**கருணைக் கடலினுள்ளம்**
**விடலரி யேனை விடுதிகண்**
**டாய்விட லில்லடியா**
**ருடலில மேமன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**மடலின் மட்டேமணி யேயமு**
**தேயென் மதுவெள்ளமே.**

*பதப்பிரிவு :*

கடலினுள் நாய் நக்கியாங்கு உன்
கருணைக் கடலின் உள்ளம்
விடல் அரியேனை விடுதி கண்டாய்
விடல் இல் அடியார்
உடல் இலமே மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
மடலின் மட்டே மணியே அமுதே
என் மது வெள்ளமே.

*உரை நடை :*

விடல் இல் அடியார் உடல் இலமே மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, மடலின்மட்டே, என் மணியே, அமுதே, மது வெள்ளமே, கடலினுள் நாய் நக்கியாங்கு உன் கருணைக் கடலின் உள்ளம் விடல் அரியேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

("சிக்கெனப் பிடித்தேன் எங்கு எழுந்தருளுவது இனியே?") என்று விடாமல் திருவடிகளைப் பற்றி நிற்கும் அடியார்களுடைய உடலாகிய கோவிலிலே நிலைபெற்று நிற்கும் உத்தரகோச மங்கைக்கு அரசே, பூ இதழ்களிலே விளையும் தேனே! என் கண்மணியே! என்வினைகளை யெல்லாம் போக்கும் அமுதமே! பேரின்பத் தேன் பெருக்கே! கடலிலே உள்ள நீரை நாய் நக்கிக் குடிப்பது போல உன் அருட்பெருங் கடலினுள்ளே உள்ளத்தைப் புகுதவிட்டுத் திளைக்கச் செய்வது அரிதாக இருக்கின்ற சிறியேனை விடுதி கண்டாய்.

**விளக்கம் :**

கடுந்தன்மை காரணமாக உள்ளங் குழைதலின்மை யின் கருணைக் கடலில் ஆர்வத்தோடு அருள் நீர் பருக இயலாதவனுயிருக்கின்றேன். கடல்போன்ற நீர்ப் பெருக்கிருப்பினும் நாய் நக்கியே குடிக்கும். அள்ளிப் பருகுந்தன்மை அதற்கில்லை. அதுபோல் அருள் நீர் பொங்கித்ததும்பி வெள்ளமாயிருந்தாலும் அதனை நிறையப் பருகாது சிறிதே சுவைத்துக்கொண்டிருக் கிறேன். அள்ளிப்பருகாதகாரணத்தால் தன்னைக் கைவிட்டுவிடலாகாதென அடிகள் விண்ணப்பித்துக் கொள்கிறார்கள். உன்னை எந்நாளும்விடாது பற்றிப் பிடிக்கும் மெய்யன்பர் — இடையறாது சிந்தித்துக் கொண்டேயிருக்கும் அடியார். அவர்தம் காயமே கோயி லாக் கொண்டுள்ளாய் நீ; ஆண்டு நிலைபெற்றிருப்பாய். பூ இதழ்த்தேன் மிகவும் தூய்மையானது; சுவைமிக்கது. ஆதலின் இறைவன் தாள் மலரின்பத்தை மடலின் மட்டே என்றார்.

கண்ணில் மணிபோன்று உள்நின்று பொருள் களைக் காட்டி உபகரித்தலின் மணியே என்றார். அழிவின்றி நிலைபெறுதற்கேதுவாதலின் திருவடி யின்பத்தை அமுதேஎன்றார்.

இறைவன் அடியார் உடலை இல்லமாக்கோடற் சிறப்பினை விளக்குவன பின்வருந் திருமுறை வாக்குகள். —

"இறைவனே நீ என் உடலிடங்கொண்டாய்
இனி உன்னை என்னிரக்கேனே?"

(திருவாசகம் கோயிற்றிருப்பதிகம் 5)

"அடியேன்
வினைபடு உடல் நீ புகுந்து நின்றமையால்
விழுமிய விமானமா யினதே"

(கருவூர்த்தேவர் திருவிசைப்பா,
திருமுகத்தலை 6)

14 வெள்ளத்து ணாவற்றி யாங்குன்
னருள்பெற்றுத் துன்பத்தின்றும்
விள்ளக்கி லேனை விடுதிகண்
டாய்விரும் பும்மடியா
ருள்ளத்துள் ளாய்மன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கரு ளாய்களி
யாத களியெனக்கே.

பதப்பிரிவு :

வெள்ளத்துள் நாவற்றி ஆங்கு உன்
அருள் பெற்றுத் துன்பத் தின்றும்
விள்ளக்கி லேனை விடுதி கண்டாய்
விரும்பும் அடியார்
உள்ளத்து உள்ளாய் மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
கள்ளத்துளேற்கு அருளாய்
களியாத களி எனக்கே.

**உரை நடை :**

விரும்பும் அடியார் உள்ளத்துள்ளாய் மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, வெள்ளத்துள் நாவற்றி ஆங்கு உன் அருள் பெற்றும் துன்பத்து இன்றும் விள்ளக்கிலேனை விடுதி கண்டாய். கள்ளத்துளேற்கு எனக்குக் களியாத களி அருளாய்.

**பொழிப்புரை :**

உன் திருவடிப் பேற்றை விரும்புகின்ற மெய்த் தொண்டர்களுடைய நெஞ்சமே கோவிலாக வீற்றிருப் பவனே! மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே! நிறைந்த தண்ணீருக்குள்ளே இருப்பவனுடைய நாக்கு அதனைப் பருகாது வறண்டு போதல் போன்று உன்னுடைய திருவருளைப் பெற்றிருந்தும் உலகத் துன்பத்திலிருந்து இன்றுவரை விலகும் ஆற்றல் இல்லாமல் இருக்கின்ற என்னை விடுதி கண்டாய். ஐம்புல வஞ்சனையுட்பட்ட எனக்குப் பொறி புலன்கள் கண்டு இன்புற்றறியாத பேரின்பத்தைத் தந்தருள் வாயாக.

**விளக்கம் .**

"செங்கணவன்பால் திசை முகன்பால் தேவர்கள் பால் எங்கும் இலாத தோரின்பம் நம்பாலதா" என்று அடிகள் வேறிடத்துக் கூறுகிறபடி ஏனையோர் கண்டறியாத பேரின்பத் தன்மையை ஈண்டுக் "களியாத, களி" என்றார், எனவும் பொருள் கொள்ளலாம்.

தலையால் தாள் பணிந்தும், கண்களாற் கழல் கண்டும், செவியால் சிவன் புகழ் கேட்டும், வாயால் வாழ்த்தியும், காலால் திருக்கோயில் வலம் வந்தும், கைகளால் மலர் தூவி அடியார் பணி புரிந்தும் இறை வனைச் சிக்கெனப் பிடித்தாரையும் விடல் இல் அடியார்

எனக்கூறி உடற் பணி புரிந்தமைக்கேற்ப அவர் உடலிடங் கொண்டாய் என முன்பாட்டில் அருளினார். இச் செய்யுளில் "உள்ளத்தால் விரும்பும் அடியார் உள்ளத் துள்ளாய்" என்று உள்ளப் பணிக்கேற்பக் கூறினார். அடிகள் "அடியேன் உடல் இடங்கொண்டாய், இனி உன்னை என்னிரக்கேனே" என்றும் "சிந்தையே கோயிலாக் கொண்ட எம்பெருமான் திருபெருந்துறையுறை சிவனே" என்றும் மேற்கூறுவன காண்க.

அருள் வெள்ளம் உண்ணீராகப் பொங்கித் ததும்பிக் கரை புரண்டு ஓடுகிறது. அப்படியிருந்தும் உயிர்கள் அருளைப் பருகாது இருளிற் கிடக்கின்றன. இறைவன் அருளிற் குறையில்லை. உயிர்களின் அறியாமையே அருளைப் பருகாமைக்குக் காரணமாகும்.

> "வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
> கள்ளத் திறைவர் கடன்"

(திருவருட் பயன்)

துன்பத்து—நீக்கப்பொருள் இன்உருபு தொக்கது.

விள்ளுதல்—நீங்குதல்; கிலேனை—ஆற்றலற்ற என்னை; அடிகள் கில் என்னும் இடைச்சொல்லை வைத்துக் கிற்றிலேன், கிற்பன் என்ற சொற்கள் அமைத்தமை காண்க.

> "கிற்றிலேன் கிற்பன் உண்ணவே"

செய்யுள் : 45.

அறியாமை காரணமாக உயிர் தன்னைத் துன்பத்தினின்றும் விடுதலை செய்து கொள்ளவும் இயலாததாயிருக்கின்றது. வஞ்ச வாழ்க்கை வாழ்கின்றது. அறியாமை காரணமாக ஏற்பட்ட இப்பிழைகளுக்காகத் தம்மை இறைவன் விட்டு விடலாகாது. அவனே துன்ப நீக்கமாகிய வீடும் களியாத களியாகிய பேரின்பப் பேறும் தமக்குக் கொடுத்தருள வேண்டுமென்று இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிறார் அடிகள்.

களியாத களி, உயிர் பேரின்பம் நுகரும் போது தான் இறைவனுக்கு வேருக இருந்து அவன் இன்பங் கொடுக்கிறுன். தான் துய்க்கின்றது என எண்ணுது அவனிடத்து அடங்கி ஒற்றித்துக் கலந்து நின்று போகந் துய்க்கு மாதலின் களியாத களி என்ருர். மேலும் பேரின்பம் களித்தொழித்த இன்பமாகாது. மென்மேலும் மகிழ்வினைத் தருகிற இன்பமாதலின் களியாத களி என்ருர். தோன்றும் பேரின்பம் ஐம்புலனிற் புலப்படாமையை,

> "காண்டலுந்தொழுது வீழ்ந்துடன் எழுந்து
> கரையிலன் பென்பினை யுருக்கப்
> பூண்டஐம் புலனிற் புலப்படா இன்பம்
> புணர்ந்து மெய்யுணர்வினிற் பொங்கத்
> தாண்டவம் புரியுந் தம்பிரா னுரைத்
> தலைப்படக் கிடைத்தபின் சைவ
> ஆண்டகை யாருக் கடுத்த அந்நிலைமை
> விளைவையார் அளவறிந்துரைப்பார்."

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுளால் அறிக. அது மேன்மேலும் புதிதாய் வளரும் என்பதை,

> "உணர்ந்தார்க் குணர்வரியோன் தில்லைச் சிற்றம்பலத் தொருத்தன்
> குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாய் இக்கொடி
> யிடைதோள்
> புணர்ந்தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய்
> மணந்தாழ் புரிகுழலா ளல்குல் போல வளர்கின்றதே."

என்னுந் திருக்கோவையார்ச் செய்யுளால் உணர்க.

15 களிவந்த சிந்தையொ டுன்கழல்
கண்டுங் கலந்தருள
வெளிவந் திலேனை விடுதிகண்
டாய்மெய்ச் சுடருக்கெல்லா
மொளிவந்த பூங்கழ லுத்தர
கோசமங் கைக்கரசே
யெளிவந்த வெந்தைபி ரானென்னை
யாளுடை யென்னப்பனே.

**பதப்பிரிவு :**

களிவந்த சிந்தையொடு உன்கழல்
கண்டும் கலந்தருள
வெளிவந்திலேனை விடுதி கண்டாய்
மெய்ச்சுடருக்கு எல்லாம்
ஒளிவந்த பூங்கழல் உத்தர
கோசமங்கைக்கு அரசே
எளிவந்த எந்தைபிரான் என்னை
ஆளுடை என் அப்பனே.

**உரைநடை :**

மெய்ச்சுடருக்கெல்லாம் ஒளிவந்த பூங்கழல் உத்தர கோசமங்கைக்கு அரசே, எளிவந்த எந்தைபிரான் என்னை ஆளுடை என் அப்பனே களிவந்த சிந்தையோடு உன் கழல் கண்டும் கலந்து அருள வெளி வந்திலேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

மெய்யான (இயற்கையான) ஒளிகளுக்கு எல்லாம் ஒளி வரும்படி செய்த அழகிய திருவடிகளையுடைய உத்தரகோச மங்கைக்கு அரசே! எளியனுகக் காட்சி தந்தருளிய, என் தந்தைக்கும் பெருமானே, என்னை அடிமையாகக் கொண்டருளிய என் தந்தையே! மகிழ்ச்சி பொருந்திய மனத்தோடு உன் திருவடிகளைக் காணப் பெற்றும், என்னேடு நீ கலந்து எனக்குப் பேரின் பங்கொடுத்தருள் புரியும்படி நான் பரவெளியில் வந்து உன்னேடு சேராத என்னைக் கைவிட்டுவிடுவையோ!

**விளக்கம் :**

இயற்கை ஒளிப் பொருள்களாகிய ஞாயிறு, திங்கள் தீ இவற்றிற்கெல்லாம் ஒளியைக் கொடுப்பது இறைவனது சத்தி வடிவாகிய திருவடிகளே என உணர்த்துவார்,

"மெய்ச் சுடருக்கெல்லாம் ஒளி வந்த பூங்கழல்."

என்றார். மெய்ச் சுடர் — இயற்கை ஒளிப் பொருள்கள். இவ்வியற்கைப் பொருள்களுக்கும் ஒளி தானாக அமைய வில்லை; இறைவன் கொடுத்ததே.

"அருக்கனிற் சோதி அமைத்தோன்; திருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன்; திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன்."

(திருவண்டப்பகுதி)

"நாயகன் கண்ணயப்பால் நாயகி புதைப்ப எங்கும்
பாயிருளாகி மூடப் பரிந்துலகினுக்கு நெற்றித்
தூயநேத் திரத்தினாலே சுடரொளி கொடுத்த பண்பின்
தேயமா ரொளிக ளெல்லாம் சிவனுருத்தேச தென்னார்."

(சிவஞான சித்தியார்)

குருவடிவில் வந்து ஆட்கொண்டமையின் "எளி வந்த எந்தைபிரான்" என்றார்.

இறைவன் திருவடிகளை மகிழ்ச்சி மலர்ந்த உள்ளத் தால் தொழுதலின் 'களிவந்த சிந்தையோடுன் கழல் கண்டும்' என்றார். அவ்வாறு அன்பு மலர்ந்த சிந்தை யராய் இறைவனைத் தொழுதும் வணங்கியும் அவனோடு சேர்ந்து கலந்தருளத்தான் வெளிவந்திலேனை என்கிறார். ஞானசிரியன் திருவுருவம் கண்டாரெனினும், தம் உள்ளம் அவர்தம் திருவடியையே பற்றிநின்றது என்பார், 'களிவந்த சிந்தையொடுன்கழல் கண்டும்' என்றார்.

"திருவடியே சிவமாவது தேரிற்
திருவடியே சிவலோகஞ் சிந்திக்கில்
திருவடியே செல்கதியது செப்பில்
திருவடியே தஞ்சம் உள் தெளிவார்க்கே"

(திருமந்திரம்)

16 என்னையப் பாவஞ்ச லென்பவ
ரின்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண்
டாயுவ மிக்கின் மெய்யே
யுன்னை யொப்பாய் மன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
யன்னையொப் பாயெனக் கத்தனொப்
பாயென் னரும்பொருளே.

**பதப்பிரிவு:**

என்னை அப்பா அஞ்சல் என்பவர்
இன்றி நின்று எய்த்து அலைந்தேன்
மின்னை ஒப்பாய் விட்டிடுதி கண்டாய்
உவமிக்கின் மெய்யே
உன்னை ஒப்பாய் மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
அன்னை ஒப்பாய் எனக்கு அத்தன் ஒப்பாய்
என் அரும் பொருளே.

**உரைநடை:**

மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, என் அரும் பொருளே, மின்னை ஒப்பாய், உவமிக்கின் மெய்யே உன்னை ஒப்பாய் எனக்கு அன்னை ஒப்பாய், அத்தன் ஒப்பாய், என்னை அப்பா அஞ்சல் என்பவர் இன்றி நின்று எய்த்து அலைந்தேன் விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை:**

மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே! எனக்குக் கிடைப்பதற்கு அருமையான பொருளே! நீ மின்னலைப் போன்ற ஒளியுடையவனாவாய். உனக்கு உவமை கூறினால் உண்மையாக உனக்கு நீ தான் ஒப்பாவாய். நீ எனக்குத் தாய் போன்றவன்; தந்தையும் போன்றவன்.

அப்படியிருந்தாலும் என்னைப் பார்த்து 'அப்பா அஞ்சாதே' என்று ஆறுதல் கூறுபவர் வேறு யாரும் இல்லாமல் கலங்கி நின்று அலைந்து இளைத்துப் போனேன். விட்டிடுதி கண்டாய்.

**விளக்கம் :**

அடிகளுக்குப் பெருந்துறைப் பெம்மான் குருமூர்த்தியாக எழுந்தருளிவந்து ஞானச்சுடராய்க் காட்சிகொடுத்து மறைந்தமையின், மின்னை ஒப்பாய்என்றார்; உருவஉவமும் தொழுலுவமுமாம். இறைவனுக்குக் கூறும் இவ்வுவமைகளெல்லாம் ஓரளவு முதல்வனை உலகத்தவர் உளங்கொண்டு உணர்தற்பொருட்டேயாம். மெய்ம்மையாக அவனுக்கு வேறு உவமைகூற இயலாது; அவன் தனக்குத்தானே நிகராவான்.

'' தன்னது ஒப்புவே றின்மையிற் சங்கரன்
இன்ன தன்மையை ஏது எடுத்துக்காட்டு
அன்னவற்றுல் அளப்பிலன் என்றதாம் ''
(திருத்தொண்டர் புராணம்)

'' நின்னுவார் பிறரின்றி நீயே யானுய் ''
(ஆவார் — ஒப்பார்)

'' ஒப்புடையனல்லன் ஓர் உவமன் இல்லி '' என்ற தேவார அடிகளில் இவ்வுண்மை காண்க.

'' அப்பா அஞ்சவேண்டா '' என்றுகூறி அச்சந்தீர்ப்பார் ஒருவருமில்லை என்கிறார். இக்கருத்தினை,

'' அருளா தொழிந்தால் அடியேனை
அஞ்சேல் என்பா ராரிங்கு ''
(கோயில் மூத்ததிருப்பதிகம்-8)

என அருளிய பாடலிலும் காண்க. அபயம் அளிக்கக் கூடியவர் சிவபெருமான் ஒருவரே. நான் பிறவி அல்லலிற் பட்டுச் சுழலும்போது "அப்பா அஞ்சாதே" என்று கூறிக் கைதூக்கி எடுத்து அருளாரமுதூட்டும் தாயும் நீயே

என்றார். தனக்கு அருளுரை பகர்ந்து தன்னைக் காத்தலின் அத்தன் ஒப்பாய் என்றார். சிவன் கிடைத்தற்கரிய துணைப்பொருள், இன்பப்பொருள்; ஆதலின் அரும் பொருளே என்றார். அஞ்சேல் என்று அருள் செய்வாரைத் தேடித்தேடித்திரிந்து இளைத்தேன் என்பார், 'எய்த்து அலைந்தேன்' என்றார்.

அன்னை யொப்பாய் அத்தனொப்பாய் :

" தாயுநீயே தந்தைநீயே சங்கரனே அடியேன்
ஆயுநின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்ற துள்ளம். "

(திருஞானசம்பந்தர்-திருவலிவலம்)

" தாயுமா யெனக்கேதலை கண்ணுமாய்ப்
பேயனேனையும் ஆண்ட பெருந்தகை
தேயநாதன் சிராப்பள்ளி மேவிய
நாயனு ரென நம்வினை நாசமே. "

(அப்பர் திருமுறை-5)

" அன்னையையும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை ஆளாக்கொண்ட
தென்னெறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேனே.

(திருத்தாண்டகம்)

17 பொருளே தமியேன் புகலிட
மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண்
டாய்மெய்ம்மை யார் விழுங்கு
மருளே யணிபொழி லுத்தர
கோசமங் கைக்கரசே
யிருளே வெளியே யிகபர
மாகி யிருந்தவனே.

**பதப்பிரிவு :**

பொருளே தமியேன் புகல் இடமே
நின்புகழ் இகழ்வார்
வெருளே எனை விட்டிடுதி கண்டாய்
மெய்ம்மையார் விழுங்கும்
அருளே அணிபொழில் உத்தர
கோசமங்கைக்கு அரசே
இருளே வெளியே இகபரம்
ஆகி இருந்தவனே

**உரைநடை :**

பொருளே, தமியேன் புகல்இடமே, நின்புகழ் இகழ்வார் வெருளே, மெய்ம்மையார் விழுங்கும் அருளே, அணிபொழில் உத்தரகோச மங்கைக்கு அரசே, இருளே, வெளியே, இகபரம் ஆகி இருந்தவனே, எனை விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

மெய்ப்பொருளே, ஆதரவுஅற்ற எனக்குப் புகலிடமாக இருப்பவனே, உன்னுடைய பெருமையை அறியாது பழித்துப் பேசுபவர்களுக்கு அச்சம் பொருந்திய கலக்கம் தருபவனே! உண்மை இது என அறிந்து உன் திருவடிக்கு அன்பு செய்யும் மெய்யடியார் ஆர்வத்துடன் முழுமையும் உண்ணும் அருளமுதே! அழகான சோலைகளால் சூழப்பெற்றிருக்கும் உத்தரகோச மங்கைக்கு அரசே, உலகப்பற்றில் திளைத்து அருட்கண்ணாற் காணாதார்க்கு இருள்போன்றவனே! உன் திருவடியே தஞ்சம் என்று உணர்பவருக்கு வெளிப்படையாகவே இம்மைப்பயனும் மறுமைப்பயனும் ஆகிப் பெரிய தவத்தினாலே அடையக்கூடியவனே! என்னை விட்டிடுதி **கண்டாய்.**

**விளக்கம் :**

சிவபெருமான் ஒருவனே மெய்ப்பொருள் ஆகலின், பொருளே என்றார்.

"திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்குன் சீருடைக் கழல்கள் என்றெண்ணி"— சுந்தர மூர்த்தி சுவாமிகள் தேவாரம். நிலைபெற்ற துணை இறைவ னன்றியின்மையின் "தமியேன் புகலிடமே" என்றார். இறைவனுடைய புகழை இகழ்வார்க்கு அவன் அச்சந் தரும் பொருளாயிருத்தலின், 'இகழ்வார் வெருளே' என்றார். சிவன் அருள் அமுத வடிவினனாயிருக்கின்றா னாதலின், 'மெய்ம்மையார் விழுங்கும் அருளே' என்றார்.

இறைவன் மெய்யன்பர்களால் விழுங்கப்படும் இன்சுவைப் பொருளாதலைப் பின்வரும் திருநாவுக்கரசர் திருவாக்குப் புலப்படுத்தும் :

"மாலைத் தோன்றும் வளர்மதியை மறைக்காட்டுறையும் மணாளனை
ஆலைக்கரும்பின் இன்சாற்றை அண்ணாமலை யெம்மண்ணலை
சோலைத்துருத்தி நகர்மேய சுடரிற்றி கழுந்துளக்கிலியை
மேலைவானோர் பெருமானை விருப்பால் விழுங்கி யிட்டேனே."

பொய்யர்க்குப் பொய்யனாய்க் காணப்படாது நிற்றலின், இருளே என்றார். மெய்யன்பர்க்கு வெளிப்படத் தோன்றலின் **வெளியே** என்றார். இம்மை வாழ்விற்கும் மேலான வீட்டின்பத்திற்கும் காரணனாயிருத்தலின் இகபரமாகி நின்றானை என்றார்.

"இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்
அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும்
எம்மை ஆளும் இடைமரு தன்கழல்
செம்மையே தொழு வார்வினை சிந்துமே."

(ஐந்தாம் திருமுறை)

இறைவன் இருளும் ஒளியுமாய் நிற்றல்:

"அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்(கு)
இருட்கண்ணே பாசத்தார்க் கீசன் — அருட்கண்ணாற்
பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோல்
நேசத்தில் தன்னுணர்ந்தார் நேர்"

(சிவஞானபோத வெண்பா
சூத்திரம் 11. அதிகரணம் 2)

18 இருந்தென்னை யாண்டு கொள் விற்றுக்கொ
ளொற்றிவை யென்னினல்லால்
விருந்தினனேனை விடுதிகண்
டாய்மிக்க நஞ்சமுதா
வருந்தின னேமன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப்
பட்டு மடங்கினர்க்கே.

**பதப்பிரிவு:**

இருந்து என்னை ஆண்டுகொள் விற்றுக்கொள்
ஒற்றிவை என்னின் அல்லால்
விருந்தினனேனை விடுதி கண்டாய்
மிக்க நஞ்சு அமுதா
அருந்தினனே மன்னும் உத்தர
கோச மங்கைக்கு அரசே
மருந்தினனே பிறவிப் பிணிப்பட்டு
மடங்கினர்க்கே.

**உரைநடை:**

மிக்க நஞ்சு அமுதா அருந்தினனே, மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, பிறவிப் பிணிப்பட்டு மடங்கினர்க்கு மருந்தினனே, விருந்தினனேனை என்னை இருந்து ஆண்டுகொள், விற்றுக்கொள், ஒற்றிவை என்னின் அல்லால் விடுதி கண்டாய்.

பொழிப்புரை :

திருப்பாற்கடலில் அளவின்றி எழுந்த நஞ்சை அமுதமாக உண்டவனே, மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, பிறப்பு என்ற நோயில் அகப்பட்டு வலிகுன்றியவர்க்கு மருந்தாகிக் காப்பவனே 'உன் திருவருளுக்குப் புதியவனாக இருக்கும் அடியேனை, நெஞ்சமே கோவிலாகக் கொண்டு எழுந்தருளியிருந்து அடிமையாக ஆக்கிக்கொள், விற்றுக்கொள், ஒற்றியாக வை' எனச்சொல்வதே அல்லாமல் வேறு யாதும் கூற அறியேன். அறியேனாகிய என்னைக் கைவிட்டு விடுவாயோ? கைவிடலாகாது.

**விளக்கம் :**

அடிமை ஆண்டானுக்குப் பணிபுரிதற்கும், ஆண்டவன் ஏவுதற்கும் உடனிருத்தல் இன்றியமையாதது; ஆதலின் எப்போதும் உள்ளத்தமர்ந்து என்னோடு இரண்டறக் கலந்திருந்து பணி ஏவுவாயாக, நான் உன் அருள் வழி நின்று பணிபுரிவேனாக என்பார் 'இருந்து' என்றார். '**கசிந்த தொண்டினொடு உள்ளத் தவன் தான் நின்ற கலப்பாலே**' என்ற சிவஞான சித்தியார் திருவிருத்தக் கருத்தும் இதனை விளக்கும். அடிகள் ஆண்டவனுக்கு அடிமையானபின் தமக்கென ஒரு சிறிதும் உரிமைகொள்ளார்; அவரை விற்கவோ ஒற்றி வைக்கவோ இறைவனுக்கு உரிமையுண்டெனக் கருது வார் 'விற்றுக்கொள், ஒற்றிவை' என்றார். யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கென ஒன்றின்றி நிற்கும் அஃது அதற்கு அடிமையாம்

(சிவஞானபோதச் சிற்றுரை
சிவஞான சுவாமிகள்)

விருந்து — புதுமை. விருந்தினனேன் — புத்தடியேன்.

"புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ"

(திருவெம்பாவை)

"வார்ந்த நஞ்சயின்று வானோர்க்கு அமுதம் ஈ வள்ளல் போற்றி" என்று மற்றோரிடத்துக் கூறியது போல, ஈண்டும் இறைவனுடைய வள்ளல் தன்மையைக் குறித்தமை தனக்குக் குறைவின்றி அருள் வழங்க வேண்டும் என்ற கருத்துக்கொண்டேயாம்.

முடக்குவாத நோயினர் போல் உயிர், பிறவி நோயினால் வியாபக அறிவு முடங்க, கருவியறிவாகிய ஏகதேச அறிவைத் தலைப்பட்டுக் கிடக்கும். ஏகதேச அறிவை விளக்குவன பாசஞான பசு ஞானங்களாகும். பாசஞான பசுஞானங்களை நீக்குதற்குப் பதிஞானமே மருந்தாகும். உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச் செல்வான் என்ற நான்கும் மருந்தாவது போல், வைத்திய நாதனாகிய இறைவனும் பிறவி நோய்க்கு மருந்தாவான்.

விற்றுக்கொள் ஒற்றிவை :—

அடிமையாகிய உயிரை விற்றுக் கொள்ளல் ஒற்றி வைத்தலாகிய இரண்டு உரிமைகளும் ஆண்டானாகிய இறைவனுக்கு உள.

**விற்றுக் கொள்ளல்**

"விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன்
விரும்பி ஆட்பட்டேன்."

(சுந்தரர்–திருமுறை 7)

*ஒற்றி வைத்தல்*

"ஏன்று கொண்டாய் என்னை எம்பெருமான் இனிஅல்லம் என்னில்
சான்றுகண்டாய் இவ்வுலக மெல்லாம் தனியேனென் றென்னை
ஊன்றிநின்றார் ஐவர்க்கு ஒற்றி வைத்தாய் பின்னை ஒற்றியெல்லாம்
சோன்று கொண்டாய் கச்சிஏகம்பமேய சுடர்வண்ணனே.

(திருநாவுக்கரசர் திருமுறை 4,
கச்சிஏகம்பம்)

19 மடங்கவென் வல்வினைக் காட்டைநின்
மன்னருட் டீக்கொளுவும்
விடங்கவென் றன்னை விடுதிகண்
டாயென் பிறவியைவே
ரொடுங்களைந் தாண்டுகொ ளுத்தர
கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித்
தாய்வஞ்சிக் கொம்பினையே.

பதப்பிரிவு :

மடங்க என் வல்வினைக் காட்டை
நின்மன் அருள் தீக்கொளுவும்
விடங்க என்றன்னை விடுதி கண்டாய்
என் பிறவியை
வேரொடும் களைந்து ஆண்டுகொள் உத்தர
கோச மங்கைக்கு அரசே
கொடுங்கரிக் குன்று உரித்து அஞ்சு வித்தாய்
வஞ்சிக் கொம்பினையே.

உரைநடை :

வல் என் வினைக்காட்டை மடங்க நின்மன் அருள் தீக் கொளுவும் விடங்க உத்தரகோச மங்கைக்கு அரசே, கொடுங் கரிக்குன்று உரித்து வஞ்சிக் கொம்பினையே அஞ்சுவித்தாய், என்றன்னை விடுதி கண்டாய், என் பிறவியை வேரொடும் களைந்து ஆண்டு கொள்.

பொழிப்புரை :

பிறரால் அழிக்க இயலாத வன்மையை யுடைய என்னுடைய வினையாகிய காட்டினை அழியும்படி உன்னுடைய நிலை பெற்ற அருளாகிய தீயினால் கொளுத்தியருளும் வீரனே, உத்தரகோச மங்கைக்கு அரசே, மலைபோன்ற கொடிய யானையைத் தோல்

உரித்து வஞ்சிக் கொடிக்கு ஒப்பான உமையம்மையை அஞ்சுமாறு செய்தாய், என்னை விடுதி கண்டாய், என் பிறவிப் பிணியை வேரோடு நீக்கி என்னை அடிமை யாகக் கொண்டருள்வாயாக.

**விளக்கம்:**

**கரிக்குன்று** – முன் பின்னாகத்தொக்க உவமைத் தொகை.

வலிய பழவினையைக் காடாக உருவகஞ் செய்தார். அதனைக்கொழுத்தும் அருளைத்தீயாக உருவகஞ்செய்தார். பழவினையாகிய சஞ்சிதவினை அருட்டீயால் எரிக்கப்படும். தீக்கை என்னுஞ்சொற்கு அருட்டீயால் சஞ்சிதவினையை அழிப்பது என்பது பொருள். அவ்வினையைத் தொலைத்தல் இறைவனருளானன்றி இயலாதாகலின் வல்வினையென்றார்.

"மலையென நிலனென வளைகடல் வானெனத்
தொலைவரும் வல்வினைத் தொகுதி யனைத்தையும்
கணத்திடை யொழித்தருள் காட்டுங் கணபதி
துணைப்பதம் முடிமிசைச் சூட்டி வணங்குவாம்"

(நமச்சிவாயமூர்த்தி மும்மணி மாலை)

**விடங்கன்** – உளியாற் செய்யப்பெறாத சுயம்பு மூர்த்தி, ஆண்மை மிக்கவன்.

வஞ்சிக்கொம்பு — பண்புத்தொகை அன்மொழி.

வலியயானையை யுரித்து, மெல்லிய கொம்பு போன்ற அம்மையை அஞ்சச் செய்தவனுக்கு வினைகளை எரித்தும் கடுமையான துன்பங்களைக் கொடுத்தும் அருள் தீயால் அத்துவ சோதனை செய்தும் உயிர்களுக்கு மறக்கருணை புரிதல் கடமையாகும்.

பிறவியைக் களைந்து ஆண்டுகொள் என்றுலும் ஆண்டுகொண்டு என் பிறவி களைவாயாக என்பது கருத்து. பிறவிவேர் -- மூலகன்மம்; நல்வினை தீவினைகட்கு மூலகன்மம் ஒன்று உண்டு.

'கன்மமும் மூலங்காட்டிக் காமிய மலமாய் நிற்கும்'

(சிவஞானசித்தியார்)

**20 கொம்பரில் லாக்கொடி போலல**
**மந்தனன் கோமளமே**
**வெம்புகின் றேனை விடுதிகண்**
**டாய் விண்ணர் நண்ணு கில்லா**
**வும்பருள் ளாய் மன்னு முத்தர**
**கோசமங் கைக்கரசே**
**யம்பரமே நிலனே அனல்**
**காலொடப் பானவனே.**

பதப்பிரிவு:

கொம்பர் இல்லாக் கொடிபோல்
அலமந்தனன் கோமளமே
வெம்புகின்றேனை விடுதிகண்டாய
விண்ணர் நண்ணு கில்லா
உம்பர் உள்ளாய் மன்னும் உத்தர
கோசமங்கைக்கு அரசே
அம்பரமே நிலனே அனல் காலொடு
அப்பு ஆனவனே

உரைநடை :

கோமளமே, விண்ணர் நண்ணுகில்லா உம்பர் உள்ளாய், மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே, அம்பரமே, நிலனே, அனல் காலொடு அப்பு ஆனவனே, கொம்பர் இல்லாக் கொடிபோல் அலமந்தனன், வெம்புகின்றேனை விடுதிகண்டாய்.

**பொழிப்புரை :**

அழகு திகழும் பெருமானே, தேவர்களும்அடையும் ஆற்றல் இல்லாத அவ்வளவு உயர்ந்த மேல் இடத்தில் இருப்பவனே, நிலைபெற்ற உத்தரகோச மங்கைக்கு அரசே, விண்ணாகி இருப்பவனே, மண்ணும்ஆகி இருப்பவனே, தீ காற்றோடு நீரும்ஆகி விளங்குபவனே, படர்வதற்கு ஆதரவாகக் கொம்புஒன்றும் இல்லாத கொடியினைப்போலத் தளர்ந்து தவிக்கின்ற என்னை விடுதிகண்டாய்.

**விளக்கம் :**

சிவன் தத்துவாதீதன். முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த இடத்து உறைபவன். வானுலகு மிகக்கீழான மண்ணுலகுக்கு மேலுள்ளது. உம்பர் என்பது விண்ணுலகினையும் குறிக்கும். வானுலகை நீக்குதற்கு விண்ணவர் நண்ணுகில்லா என்ற அடைகொடுத்தோதினார்.

"ஒன்றும் இன்று எம்மிறைக்கே" என்ற சிவஞான சித்தியார் அடிக்குச் சிவஞான சுவாமிகள் "சித்தாந்த சைவத் தெய்வமாகிய சுத்த சிவம் தத்துவங்கள் முப்பத்தாறையுங் கடந்து நிற்கும்" எனப் பொருள் காண்கின்றார்கள்.

கொம்பர் — ஈற்றுப்போலி, கொம்பு — மரக்கிளை. தனக்குப் பற்றுக்கோடான, தன் அருள் வளர்ச்சிக்கு ஆதாரமான இறைவனைப் பிரிந்த அடிகள் பிரிவாற்றாது அலமந்தனனாய் வெம்புகின்றேனை எனக் கூறுகிறார். அலமந்தனன் — முற்றெச்சம்.

இறைவன் ஐம்பூதங்களோடுங் கலந்து நிற்கின்றானாதலின் "அம்பரமே, நிலனே, அனல், காலோடு அப்பு ஆனவனே" என்றார்.

21 ஆனை வெம் போரிற் குறுந்தூ
றெனப்புல னலைப் புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண்
டாய்வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை
யுமமு தத்தையுமொத்
தூனையு மென்பினை யும்முருக்
காநின்ற வொண்மையனே.

பதப்பிரிவு:

ஆனைவெம் போரில் குறுந்தூறு எனப்
புலனுல் அலைப்புண்
டேனை எந்தாய் விட்டிடுதி கண்டாய்
வினையேன் மனத்துத்
தேனையும் பாலையும் கன்னலையும்
அமுதத்தையும் ஒத்து
ஊனையும் என்பினையும் உருக்காநின்ற
ஒண்மையனே.

உரைநடை :

வினையேன் மனத்துத் தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து ஊனையும் என்பினையும் உருக்கா நின்ற ஒண்மையனே! எந்தாய், ஆனை வெம்போரில் குறுந்தூறு எனப் புலனுல் அலைப் புண்டேனை விட்டிடுதி கண்டாய்.

பொழிப்புரை :

தீவினையுடைய எளியேன் மனத்துள்ளே தேனையும் பாலையும் கரும்பையும் அமுதத்தையும் போலப் புகுந்து இனிமை தந்தருளி என் உடலில் உள்ள இறைச்சியையும் எலும்பையும் உருக்கி அருள்கின்ற அறிவொளி யானவனே! என் தந்தையே யானைகளின் கொடிய சண்டையிலே அகப்பட்ட சிறு செடியைப்போல ஐம் புலன்களின் போரினுலே தாக்குண்டு துயரத்துள் ஆழும் அடியேனை விட்டிடுதி கண்டாய்.

விளக்கம் :

அடிகள் தம்முடைய மனம் இறைவன் எழுந்தருளுதற்கேற்றதன்று; தீவினை வயப்பட்டதாக உள்ளது; அப்படியிருந்தும் இறைவன் தம்மை நினைப்பித்து இன்புறச்செய்கிறான் எனக்கூறுகிறார். இறைவனை ஒண்மையன் என்கிறார், மெய்யொளி வடிவினனாதலின். இவ்வொளி வினையைப்போக்கும்; ஐம்புலனால் அலைப்புறுதற் கேதுவான மயக்கத்தை நீக்கும்; அக இருளாகிய அறியாமையை ஓட்டும்; தன்னைச்சிந்திக்கச் சிந்திக்கப் பேரன்பை விளைத்துத்தேனையும் பாலையும் கரும்பையும் அமுதத்தையும் போன்று இனிக்கும்.

"தம்மையே சிந்தியா" எனும் தன்மைதான்
மெய்ம்மை யாகி விளங்கொளித் தாமென
இம்மை யேநினை வார்தம் இருவினைப்
பொய்ம்மை வல்லிருள் போக்குவர் என்றதாம்."

(திருத்தொண்டர் புராணம்)

உள்ளத்தில் இன்பமும் ஒளியும் பெருகப்பெருக உடம்பும் என்பும் உருகும்.

"ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச்சொரிந்து" என அடிகளே கூறுதலையும் ஆராய்க.

ஐம்புலனால் அலைப்புறுதலை ஓர் உதாரணத்தால் ஆசிரியர் விளக்குகிறார். யானைகள் போர்புரியும் போது அவைகளின் உரற்காலில் அகப்பட்ட சிறு புதர் நசுக்குண்டு போதல் போல ஐம்புலனால் உயிர் அறிவு கலங்கிச் சிதைந்து போகிறது என்பதாம். இவ்வாறு ஐம்புலனால் அறிவு சிதைந்து கிடக்கிற தம்மை விட்டு விடலாகாது என விண்ணப்பித்துக் கொள்கிறார். ஐம்புலப்பாச நீக்கத்துக்கும் அறிவினில் தேன், பால், கன்னல், அமுதம் இவைகளைப்போல் இன்சுவைப்பேரின்பம் துய்த்தற்கும் உள்ளொளிப் பெருக்கிற்கும் இறைவன் துணையை

வேண்டுகிறார். தீவினை காரணமாக ஐம்புலன் அலைக்கும்; உள்ளொளி அன்பினைப் பெருக்கித்தீவினையும் புலனலைப் பையும் நீக்கும் என்பதை,

"அரிச்சி ராப்பகல் ஐவரால் ஆட்டுண்டு
சுரிச்சி ராதுநெஞ்சே ஒன்று சொல்லக்கேள்
திருச்சி ராப்பள்ளி என்றலும் தீவினை
நரிச்சிராது நடக்கும் நடக்குமே"

(திருநாவுக்கரசர்)

பிள்ளையைக் கைவிடாது அதன் துயர்களைந்து தனது செல்வத்தைக் கொடுத்தல் தந்தைக்குக்கடனுதல் போல உயிரின் ஐம்புலத்துயர்களைந்து பேரின்பச்செல்வம் கொடுத்தல் இறைவனுக்குக் கடனுகுமாதலின் எந்தாய் எனவிளித்தார்.

**22 ஒண்மைய னேதிரு நீற்றையுத்**
**தூளித் தொளிமிளிரும்**
**வெண்மைய னேவிட் டிடுதிகண்**
**டாய்மெய் யடியவர்கட்**
**கண்மைய னேயென்றுஞ் சேயாய்**
**பிறர்க்கறி தற்கரிதாம்**
**பெண்மையனே தொன்மை யாண்மைய**
**னேயலிப் பெற்றியனே.**

***பதப்பிரிவு :***

ஒண்மையனே திருநீற்றை உத்தூளித்து
ஒளிமிளிரும்
வெண்மையனே விட்டிடுதி கண்டாய்
மெய் அடியவர்கட்கு
அண்மையனே என்றும் சேயாய் பிறர்க்கு
அறிதற்கு அரிதுஆம்
பெண்மையனே தொன்மை ஆண்மையனே
அலிப் பெற்றியனே.

**உரை நடை:**

ஒண்மையனே, திருநீற்றை உத்தூளித்து ஒளி மிளிரும் வெண்மையனே, மெய் அடியவர்கட்கு என்றும் அண்மையனே. பிறர்க்கு என்றும் சேயாய் அறிதற்கு அரிதாம் தொன்மைப் பெண்மையனே ஆண்மையனே அலிப் பெற்றியனே, விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை:**

ஒளிதிகழும் சிவந்த நிறமுடையவனே, அதன் மேலே திருநீற்றைப் பொடியாகப் பூசி ஒளியோடு விளங்கும் வெண்ணிறம் உடையவனே! உண்மையான அன்பர்களுக்கு எக்காலத்திலும் விலகாமல் நெருங்கி இருப்பவனே! மற்றவர்களுக்கு எக்காலத்திலும் அணுக முடியாத தூரத்தில் இருப்பவனே, எதனாலும் இன்ன தன்மையன் என்று அறிய முடியாதபடி எவற்றிற்கும் முற்பட்ட பழமையாகிய பெண்ணுருவாக இருப்பவனே, ஆணாக இருப்பவனே, அலித்தன்மையை உடையவனே, என்னைக் கைவிடுவாயோ! கைவிடுதல் உனக்குத் தக்கதன்று.

**விளக்கம்:**

இறைவன் அன்பர்க்கு அண்மையன் ஏனோர்க்கு எட்டாத் தூரத்தினன். இறைவன் அறிவொளி தானாகவே விளங்கி உயிர்களின் அறிவையும் விளக்குவ தாகலின், இறைவனை ஒண்மையன் என்றார். ஒளியான திருமேனியில் திருநீற்றின் உத்தூளனம் ஒளி விளக்கத்தைப் பரப்புகின்றது. இறைவன் பேராற்றலில் ஆண்மையன், பெருங்கருணையில் பெண்மையன் மக்களைத் தீமையினின்று திருத்துதற்கண் ஆற்றல் மிகுந்து அருள் குறையும் நிலையிலும், அடியார் குற்றஞ் செயயினும் குணமெனக் கருதுங்கால் அருள் மிகுந்து ஆற்றல் குறையும் நிலையிலும் அலிப்பெற்றியன். கருதுவார் கருத்திற்கு ஏற்பச் சிவன் எனவும், சத்தி எனவும், பிரமம் எனவும் கருத நின்றவன் என்பதாம்.

"இறைன் சத்தியுஞ் சிவமுமெனத் தன்னுள்ளே இரு வேறு வகைப்பட்ட தன்மைகள் வைத்தலானன்றே, பலவேறுவகைப்பட்ட உயிர் வடிவங்களனைத்தும் குறியானும் குணத்தானும் ஆண் பெண்ணென இரு வேறு வகையாயடங்கித் தம்முட் கூடிக்களித்து வாழா நின்றன; ஈண்டுக் கூறிப்போந்த வாழ்வுகளெல்லாம் சிவசத்தி மணந்ததனுல் ஆகிய வாழ்வென்பது அறியப் படும்"

(சிவஞான சுவாமிகள்-சித்தியார் பொழிப்புரை)

"ஆண் எனத்தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்தும்."

(திருஅண்டப்பகுதி 134-135)

**23 பெற்றது கொண்டு பிழையே**
**பெருக்கிச் சுருக்குமன்பின்**
**வெற்றடியேனை விடுதிகண்**
**டாய்விடி லோகெடுவேன்**
**மற்றடி யேன்றன்னைத் தாங்குந**
**ரில்லையென் வாழ்முதலே**
**யுற்றடி யேன்மிகத் தேறிநின்**
**றேனெனக் குள்ளவனே.**

**பதப்பிரிவு:**

பெற்றதுகொண்டு பிழையே பெருக்கிச்
சுருக்கும் அன்பின்
வெற்று அடியேனை விடுதிகண்டாய்
விடிலோ கெடுவேன்
மற்று அடியேன்றன்னைத் தாங்குநர்
இல்லை என் வாழ்முதலே
உற்று அடியேன் மிகத் தேறி நின்றேன்
எனக்கு உள்ளவனே.

உரைநடை :

என் வாழ்முதலே, எனக்கு உள்ளவனே, பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்கும் வெற்று அன்பின் அடியேனை விடுதி கண்டாய்; விடிலோ கெடுவேன். அடியேன் றன்னைத் தாங்குநர் மற்றுயாரும் இல்லை. அடியேன் உற்று மிகத் தேறிநின்றேன்.

**பொழிப்புரை :**

என் வாழ்முதலே, எனக்கு என்றும் பொன்றுத் துணையாக என் உள்ளத்து உறைவோனே! எனை ஆளும் உரிமையுடையவனே! நீ அடியேனுக்குத் தந்தருளிய இவ்வுடலைக் கொண்டு குற்றங்களையே மிகுதியாகச் செய்து உன்னிடத்து அன்பைக் குறைவு படக்கொண்டுள்ள வீணன அடிமையாகிய என்னைக் கைவிடுவையோ! நீ கைவிட்டுவிடுவாயேயானுல் அழிந்தே போவேன். அடியேனை ஆதரிப்பவர் வேறு யாரும் இலர். அடியேன் இவ்வுண்மையை உன்னை அணுகிப் பெரிதும் தெளிந்து உன் திருவருளை எதிர் நோக்கி நிற்கின்றேன்.

**விளக்கம் :**

உயிர்களின் வாழ்க்கைக்கு உறுதுணை முதல்வ ஞகலின் 'வாழ் முதலே' என்றுர். பிற இடத்தும் "போற்றியென் வாழ்முதலாகிய பொருளே" எனக் கூறுவது காண்க.

பெற்றது—இறைவனுல் தரப்பெற்ற பொருள்கள் — சாதியொருமை. சாதியொருமையாவது ஒரு சொல் தானே பன்மைப் பொருளையுணர்த்துவது பெற்றது என்பது மனம் மொழி மெய்களை உணர்த்தியது. கடவுளை வழிபட்டு உயிர் உய்தற் பொருட்டு உயிர்க்குக் கொடுக்கப்பெற்றவை உடல் முதலிய பொருள்கள் :

"வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீர்அடியார் கூட்டமும் வைத்து"

என்றவாறு இறைவன் இவைகளைக் கொடுத்ததின் திரு நோக்கம் தன்னிடத்து அன்பைப் பெருக்குதற் பொருட்டாம். அடிகள் இவைகளைக்கொண்டு தீச்செயல்கள் செய்து குற்றங்களைப் பெருக்கிக்கொண்டு கடவுளன்பைச் சுருக்கிக் கொள்வதாகக் கூறுகிறார். இக்காரணத்தால் தம்மைப் போலி அடியாராகக் கொள்கிறார். இறைவன் கைவிடுதற்குத் தம்மிடத்துக் குற்றங்கள் காரணமாக இருப்பினும் "கைவிட்டுவிட்டால் மேலும் கெட்டுப் போவேன்" என்பார்; 'விடிலோ கெடுவேன்' என்கிறார். தம்மை இறைவனே திருத்த வேண்டுமென விண்ணப் பிக்கிறார். "விடிலோ கெடுவேன்" ஓகாரம் அசைநிலை சிவபெருமானே, தம்வாழ்முதல் என்ற உண்மையையும் வேறு தமக்கு உறுதுணை இல்லை என்பதனையும் நூலறி வானும் அனுபவ அறிவானும் அடிகள் ஆராய்ந்து தெளிந்தாராதலின் "உற்றடியேன் மிகத் தேறி நின்றேன்' என்றார். 'நீ என்னுள்ளத்துள்ளே எப் போதும் நிற்றி ஆதலின் என்நிலைமையை நீயும் அறி வாய்' என்ற குறிப்புத் தோன்ற 'எனக்கு உள்ளவனே' என்றார்.

இவ்விண்ணப்பப் பகுதி முதற் செய்யுளிலேயே என்னைத் தாங்கிக்கொள்ளே என்று அடிகள் இறை வனிடம் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

உள்ளவன் :

"அமுதமொத்து
நீயுமென் னெஞ்சினுள்ளே நிலாவினாய் நிலவிநிற்க
நோயவை சாருமாகில் நோக்கிநீ அருள்செய்வாயே."

(திருநாவுக்கரசர், திருமுறை 4)

24 உள்ளன வேநிற்க வில்லன
செய்யுமை யற்றுழனி
வெள்ளன லேனெ விடுதிகண்
டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய்
புலனின்கட் போத லொட்டா
மெள்ளன வேமொய்க்கு நெய்க்குடந்
தன்னை யெறும் பெனவே.

**பதப்பிரிவு :**

உள்ளனவே நிற்க இல்லன
செய்யும் மையல் துழனி
வெள்ளன் அலேனை விடுதி கண்டாய்
வியன் மாத் தடக்கைப்
பொள்ளல் நல் வேழத்து உரியாய்
புலன் நின் கண் போதல் ஒட்டா
மெள்ளனவே மொய்க்கும் நெய்க்குடம்
தன்னை எறும்பு எனவே.

**உரைநடை :**

வியன் மாத்தட பொள்ளல் கை நல் வேழத்து உரியாய் நெய்க்குடம் தன்னை மொய்க்கும் எறும்பு எனவே நின்கண் போதல் ஒட்டா புலன் மெள்ளனவே மொய்க்கும். உள்ளனவே நிற்க இல்லனசெய்யும் மையல் துழனி வெள்ளன் அலேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

மிகப் பெரிய தொளையுள்ள, தும்பிக்கையையுடைய, கயாசுரனாகிய யானையின் அகன்ற தோலை உரித்துப் போர்த்துக்கொண்டவனே! நெய்க்குடத்தை எறும்புகள் மொய்த்தல் போன்று புலன்கள் என் நெஞ்சினை நின்னிடத்துச் செல்லவிடாது மையப் பைய நெருங்கிச்

சூழ்கின்றன. நிலையான பயன் தருஞ்செயல்கள் உளவாகவும் பயனற்ற செயல்களையேசெய்யும் மயக்கத்தையும் ஆரவாரத்தையுமுடைய வஞ்சனேனை விட்டுவிடுவாயோ? விடவேண்டா.

**விளக்கம் :**

வெள்ளன் அலேனை எனப் பிரித்து வெள்ளையுள்ளமின்றிக் கள்ள உள்ளம் படைத்த என்னை எனப் பொருள் கொள்க. உள்ளன – நிலையுள்ள பயன் தரும் செயல்கள்; இல்லன பயனில் செயல்கள். தடக்கை– உரிச் சொற்றொடர். சிந்தையைச் சிவனிடம் சேர வொட்டாமல் ஐம்புலன்களும் தாம் பற்றித் தின்னும். இதற்கு உவமானம் நெய்க்குடத்தை எறும்பு மொய்த்தல். குடத்திலுள்ள நெய்யைப் பயன்படாதவாறு எறும்புகள் மொய்த்திருப்பது போல, ஐம்புலன்கள் உயிரின் அறிவை நிலையான கடவுளின்பத்தைத் துய்த்தற்குப் பயன் படாதவாறு தடுத்துத் தம் வழியே இழுக்கின்றன என்பதாம். தொழிலுவமையணி, நெய்க்குடந்தன்னை — தன்சாரியை. நான் புலன்களின் செயல்களைத் தடுக்க வல்லேன் அல்லேன். நான் யாது செய்வேன்? அவைகளை உன் அருளாலேதான் வாட்டமுடியும். ஆதலின் அவைகளின் வழிச் சென்று இல்லன செய்தல் பற்றி என்னைக் கைவிடலாகாது என்று அடிகள் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

துழனி வெள்ளன் எனக் கூட்டி ஆரவாரப் பெருக்கினேன் எனவும், அல் ஏன் எனப் பிரித்து அறியாமை இருளில் அகப்பட்டேனை எனவும் பொருள் கூறலாம். மாத்தடக்கை ஓங்குயர் வெற்பு என்பது போல மீமிசைச் சொல்; ஒருபொருட்பன்மொழி. வியன் என்னும் அடையை உரி என்பதனோடு கூட்டுக.

25 எறும்பிடை நாங்கூ ழெனப்புல
ஞலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண்
டாய்வெய்ய கூற்றொடுங்க
வுறுங்கடிப் போதவை யேயுணர்
வுற்றவ ருப்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய
ராத பெருமையனே.

**பதப்பிரிவு :**

எறும்பிடை நாங்கூழ் எனப் புலஞல்
அரிப்புண்டு அலந்த
வெறும்தமி யேனை விடுதி கண்டாய்
வெய்ய கூற்று ஒடுங்க
உறும்கடிப் போது அவையே உணர்வு
உற்றவர் உம்பர் உம்பர்
பெறும் பதமே அடியார் பெயராத
பெருமையனே.

**உரைநடை :**

வெய்ய கூற்று ஒடுங்க உறும்கடி போது அவையே உணர்வு உற்றவர் பெறும் உம்பர் உம்பர் பதமே, அடியார் பெயராத பெருமையனே, எறும்பிடை நாங்கூழ் எனப் புலஞல் அரிப்புண்டு அலந்த வெறும் தமியேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

கொடிய எமன் அடங்கும்படி அவனைத் தாக்கவந்த, அடியார்க்குப் பொருந்திய பாது காவலாகிய திருவடி மலர்களாகிய அவைகளையே இடைவிடாது எண்ணிக் கொண்டிருக்கும் **தொண்டர்கள் பெறும், தேவர்கள் பதவிகளுக்கும் மேலான, சாலோக சாமீபசாருப பதமுத்திப்பேருக இருப்பவனே.** மெய்ஞ்ஞான அடியார்

மீளாது அடையும் பரமுத்தி மேன்மையாளனே! பல எறும்புகளின் இடையிலே அகப்பட்ட நாங்கூழ்ப் புழு எங்ஙனம் வதைக்கப்பட்டு அரித்துத் தின்னப்படுமோ அங்ஙனமே ஐம்புலன்களால் அரிக்கப்பட்டுத் துன்புறு கின்ற, ஒன்றுக்கும் பற்றாத, ஆதரவற்ற அடியேனைக் கை விடுதியோ, கைவிடலாகாது.

**விளக்கம் :**

உணர்வுற்றவர் — திருவடிகளையே அறிவினில் பொருந்தியவர்களாகிய தொண்டர்கள்; சரியை, கிரியை, யோக நெறியினர். உம்பர் உம்பர்பெறும் பதமே — தேவர்களுக்கும் மேலான சரியை கிரியா யோகத்தன்மை யாளர் அடைகின்ற பதமுத்தி நிலையினனே! அடியார் பெயராத பதம் — சிவஞானம்பெற்ற அடியார் விட்டு நீங்காத அடிசேர் முத்தியாகிய மேலானமுத்தி. பதமே என்பதனைப்பின்னும் கூட்டுக. பதம் — பதவி, திருவடி நாங்கூழ்ப்புழு — ஈரமுள்ள மண்ணில்தோன்றும் நீள மான புழு. உருவத்தில் பெரிய நாங்கூழ்ப்புழுவினையும் சிறிய எறும்புகள் பல கூடி இழுத்து அரித்தல்போல ஐம்புலன்களும்சேர்ந்து என் அறிவை அரித்துத் தின் கின்றன. நான் அவைகளினின்றும் தப்பும் வழியின்றித் தவிக்கிறேன். துணைஒன்றுமில்லை. ஆதலின் என்னைக் கைவிடலாகாது என விண்ணப்பித்துக்கொள்கிறார்.

சிவபெருமான் திருவடிமலர் யமனுடைய வலியை ஒடுங்கச்செய்து அடியார்களுக்குப் பாதுகாவலாக இருக்கும்.

''சாட எடுத்தது தக்கன் றன்வேள்வியிற் சந்திரனை
வீட எடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட எடுத்தது தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்
ஆட எடுத்திட்ட பாதம் அன்றோ நம்மை ஆட்கொண்டதே'

(திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்)

காலனைக் காலால் உதைத்தலை மார்க்கண்டேயர் வரலாறு விளக்கும்.

" 'சங்கரனை யடையும்
நன்மார்க்கம் நால் அவைதாம் ஞான யோக
நற்கிரியா சரியையென நவிற்று வதுஞ்செய்வர்
சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பிய
சாரூப்பிய சாயுச்சியம் என்று சதுர்விதமாம்
முன்மார்க்க ஞானத்தால் எய்தும் முத்தி
முடிவென்பர் மூன்றினுக்கும் முத்திபதம் என்பர்."

(சிவஞானசித்தியார்-270)

**26 பெருநீ ரறச்சிறு மீன்றுவண்**
**டாங்கு நினைப்பிரிந்த**
**வெருநீர்மை யேனை விடுதிகண்**
**டாய்வியன் கங்கை பொங்கி**
**வருநீர் மடுவுண் மலைச்சிறு**
**தோணி வடிவின் வெள்ளைக்**
**குருநீர் மதிபொதி யுஞ்சடை**
**வானக் கொழுமணியே.**

*பதப்பிரிவு:*

பெருநீர் அறச்சிறுமீன் துவண்டு
ஆங்கு நினைப் பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண்டாய்
வியன்கங்கை பொங்கி
வரும் நீர் மடுவுள் மலைச்சிறு
தோணி வடிவின் வெள்ளைக்
குருநீர் மதிபொதியுஞ் சடை
வானக் கொழுமணியே.

**உரைநடை :**

பொங்கி வரும் வியன் கங்கை நீர்மடுவுள் மலைச் சிறு தோணிவடிவில் வெள்ளைக் குருநீர்மதி பொதியும் சடை வானக் கொழுமணியே, பெரு நீர் அறச் சிறு மீன் துவண்டாங்கு நினைப் பிரிந்த வெருநீர்மையேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

மிகுதியாகி வழிந்தோடி வரும் பெரிய கங்கையாகிய நீர் நிறைந்த குளத்தில் அலைகளால் மோதுதலைப் பெறும் சிறிய தோணியைப் போன்ற உருவத்திலே காணப்படுகின்ற வெள்ளை நிறமுடைய குளிர்ந்த பிறைமதி அடங்கியுள்ள சடையினைக் கொண்டுள்ள, ஞான வெளியில் விளங்கும் செழுமையான மாணிக்கமணி போன்ற பெருமானே, மிக்க தண்ணீர் வற்றிப் போக அதிற்கிடந்த சிறிய மீன் துடிதுடித்தாற் போலக் கொழு கொம்பாகிய உன்னைப் பிரிந்தமையாலே அஞ்சி நடு நடுங்கும் தன்மையை அடைந்துள்ள அடியேனை விடுதி கண்டாய்.

**விளக்கம்** :

பகீரதன் கடுந்தவம்புரிந்து கங்கையை வானின்றும் வரவழைத்தான். கடுவேகமாக வரவே உலகந்தாங்காதென்று சிவபெருமான் அதனைச் சடைமுடியில் தாங்கினுன். முடித்துக்கட்டிய திருச்சடை குளக்கரை போன்றிருக்கிறது. அதிற் கங்கை மடு. தலையில் கங்கையுடன் திங்களும்சேரவைத்திருக்கிருர். திங்கள் சிறுதோணி போன்ற பிறைமதி. கங்கையிற் பிறைத்திங்கள் மிதந்து கிடந்து அங்குமிங்கும் அசைதல் ஆழமான நீர் மடுவுட் தோணி அசைந்து கொண்டிருப்பதுபோற் காணப்படுகிறது என அழகொழுகக் காண்கிருர் அடிகள். இறைவனை வானக்கொழுமணி என்ருர், ஞானப்பரவெளியில் அருளொளி பரப்புகின்ற அண்ணலாதலின். ஒளி மழுங்கி அடிபணிந்த குறைமதியை முடியணிந்து கலை வளரச் செய்தல்போல அறியாமையால் அறிவு குறைந்தவரும் அடிபணியின் மெய்யறிவு வளரப்பெறுவர் என்பதாம்.

மீன், உருவிற் சிறிதாயினும் வாழ்தற்குப் பெருநீர் வேண்டும். மிகச் சுருங்கிய நீரில் உயிர் வாழ இயலாது.

குளத்தில் நீர் நிறைந்திருக்கும்போது மீன் மகிழ்ச்சியாக வாழும். நீர் குறைந்து வற்றி அற்றுப் போனால் உயிர் வாழ இயலாது துடிக்கும். அச்சத்தோடு துடிக்கும் அடிகள் திருப்பெருந்துறையில் குருமணியின் அருள் வெள்ளத்தில் திளைத்திருந்து அருளுரை கேட்டார்கள். ஞானசிரிய உருக்கரந்ததும் இறைவனைப்பிரிந்து வாழ ஆற்ருராய் மீன் துடித்ததுபோல் துடிப்பதாகக் கூறு கிருர். அச்சத்தோடு வாழ்கிறேன் என்பார் **வெருநீர்மை யேனை** என்ருர். இவ்வாறு வருந்துகிற தன்னை விடலாகாதென இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்ளுகிருர்.

வெரு — அச்சம், முதனிலைத் தொழிற்பெயர்.

பெருநீர் அறச்சிறுமீன் துவண்டாங்கு -- முரண் தொடை. வடிவின் — இன் ஐந்தனுருபு ஒப்புப் பொருள் மலை - முதனிலைத் தொழிற் பெயர், மலைதல் - பொருதல் குரு — நிறம்

பெருநீரறச் சிறுமீன் துவண்டாங்கு-தொழிலுவமை. தோணிவடிவின்மதி — வடிவுப்பண்புவமை

**27 கொழுமணி யேர்நகை யார்கொங்கைக்**
**குன்றிடைச் சென்றுகுன்றி**
**விழுமடியேனை விடுதிகண்**
**டாய்மெய்ம் முழுதுங் கம்பித்**
**தழுமடி யாரிடை யார்த்துவைத்**
**தாட்கொண் டருளி யென்னைக்**
**கழுமணி யேயின்னுங் காட்டுகண்**
**டாய்நின் புலன் கழலே.**

**பதப்பிரிவு :**

கொழுமணி ஏர்நகையார் கொங்கைக்
குன்றிடைச் சென்று குன்றி
விழும் அடியேனை விடுதிகண்டாய்
மெய் முழுதும் கம்பித்து
அழும் அடியாரிடை ஆர்த்து வைத்து
ஆட்கொண்டருளி என்னைக்
கழுமணியே இன்னும் காட்டு கண்டாய்
நின் புலன்கழலே.

**உரை நடை :**

மெய் முழுதும் கம்பித்து அழும் அடியாரிடை ஆர்த்து வைத்து ஆட்கொண்டு அருளி என்னைக் கழுவும் மணியே கொழுமணி ஏர்நகையார் கொங்கைக் குன்றிடைச் சென்று குன்றிவிழும் மடியேனை விடுதி கண்டாய். நின்புலன்கழல் இன்னும் காட்டு கண்டாய்.

பொழிப்புரை :

உடம்பு முழுதும் நடு நடுங்கி அன்பினால் உன் திருவருளை எதிர்பார்த்து அழுகின்ற தொண்டர்களிடையே என்னையும் பிணித்து வைத்து அடிமையாக்கிக் கொண்டு அருள்செய்து என் தீவினைகளை ஞானநீரால் கழுவி என்னைப் புனிதனாக ஆக்கிச் சிவ ஒளி பரப்பும் குருமணியே! வளமையாக முதிர்ந்த முத்துமணி போன்ற அழகான பற்களையுடைய பெண்களின் தனங்களாகிய மலைகளிலே போய் அறிவு குறைந்து மயங்கி விழுந்து பாழாகும் அடியவனாகிய என்னை விடுதி கண்டாய். உன்னுடைய அருள் ஞானமாகிய திருவடி மலர்களை மேலும் காட்டியருள்வாயாக.

**விளக்கம் :**

அடிகளுக்கு இறைவன் ஞானாசிரியனாக வந்து தீக்கைசெய்து அத்துவ சுத்தி பண்ணி ஆண்டமையின் இறைவனை **'என்னைக் கழுமணியே'** என்றார். ஞான

வண்ணமான திருவடிகளை இன்னும் ஒருமுறை காட்ட வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொள்கிறார். கொழுமணி—ஒளி வளமிக்க முத்து. ஏர்—அழகு; நகை—பல். குன்றிடைச் சென்று குன்றி — சொற்பின் வருநிலை யணி, குன்றி—அறிவு குறைந்து.

" குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். "

(திருக்குறள்-965)

காமப்படுகுழியிலிருந்து கரையேறல் அருமையாத லின், 'விழும் அடியேனை' யென்றார். தரையில் இடறி விழுந்தாலே துயராம். குன்றிலிருந்து விழுந்தாற் படுதுயராகும்; காமப்படுகுழியில் விழுந்து கலங்கும் உயிரைக் கைவிடலாகாது என விண்ணப்பித்துக் கொள்கிறார். உள்ளன்பு முதிர்ச்சியின் மெய்ப்பாடு கூறுவார், 'மெய்ம் முழுதும் கம்பித்து அழும் அடியார்' என்றார். அடியார் கூட்டத்திற் சேர்ந்து அதினின்று நீங்காமை வேண்டுவார் 'ஆர்த்துவைத் தாட்கொண் டருளி' என்றார். உடல் உறுப்புக்கள் யாவும் நடுநடுங்கும் என்பார் 'மெய்ம்முழுதும் கம்பித்து' என்றார்.

28. புலன்க டிகைப்பிக்க யானுந்
திகைத்திங்கொர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனை விடுதிகண்
டாய் விண்ணு மண்ணுமெல்லாங்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய்
தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை
யாயென் றொழுகுலமே.

**பதப்பிரிவு :**

புலன்கள் திகைப்பிக்க யானும் திகைத்து
இங்கு ஓர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின்றேனை விடுதி கண்டாய்
விண்ணும் மண்ணும் எல்லாம்
கலங்க முந்நீர் நஞ்சு அமுது செய்தாய்
கருணாகரனே
துலங்குகின்றேன் அடியேன் உடையாய்
என் தொழுகுலமே.

**உரைநடை :**

கருணாகரனே, உடையாய், என் தொழுகுலமே, புலன்கள் திகைப்பிக்க யானும் திகைத்து இங்கு ஓர் பொய்ந் நெறிக்கே விலங்குகின்றேனை விடுதி கண்டாய், விண்ணும் மண்ணும் எல்லாம் கலங்க முந்நீர் நஞ்சு அமுது செய்தாய், அடியேன் துலங்குகின்றேன்.

**பொழிப்புரை :**

அருளுக்கு உறைவிடமானவனே, தலைவனே, என் குலதெய்வமே, என்னுடைய ஐம்புலன்களும் மயக்கத்தை உண்டாக்குகின்றன; அதனால் நானும் மதிமயங்கி அழிவைத் தருகின்ற தீய வழியிலே விலகிச் செல்கின்றேன். என்னை விடுதியோ? விண்ணுலகத் தாரும் மண்ணுலக உயிர்களும் யாவும் செய்வது இன்ன தென்று அறியாது நடுநடுங்கும்படி கடலில் தோன்றிய நஞ்சினை நீ உண்டாய், உன் அடியவனாகிய நானும் நிலைகலங்குகின்றேன்.

**விளக்கம்.**

முந்நீர் நஞ்சு விண்ணும் மண்ணும் எல்லாங் கலங்க எழுந்தது:—

"துன்றியதீஞ் சுவையமிழ்தந் தோன்றுது விடந்தோன்றி
இன்றுசரா சரமனைத்தும் எரிசெய்து நீருக்கிற்(று)
அன்றினரு ரெரித்தாயுன் னருளன்றி முயல்வதெலாம்
ஒன்றொழிய ஒன்றும்என் றுரைக்குமொழி மெய்யாமே"

(காஞ்சிப்புராணம்
மணிகண்டேச்சரப் படலம்)

சிவபெருமானே தமக்குக் குலதெய்வம் என்பார் "என் தொழுகுலமே" என்றார்.

"ஆனே றுயர்த்தருளி அன்றிரு ரூரெரித்த
கோனே எனக்குக் குலதெய்வ மாம்பேற்றால்
யானே பெருஞ் செல்வன் யானே பெருஞ் செல்வன்
யானே பெருஞ் செல்வன் எல்லா உலகிலுமே."

(காஞ்சிப் புராணம், தழுவக்குழைந்த படலம்)

சிவபெருமானைக் குலதெய்வமாப் பெறுதல் சிறந்த பேறெனை அகத்தியர் கொள்ளுதல் காண்க.

புலன்கள் மயக்குதலான் பெருநெறியாகிய வீட்டு நெறியினின்றும் விலகித் தானும் மயங்கி நிலையில்லாத உலக இன்பநெறியிற் செல்வதாகக் கூறுகிறார். புலன்களின் மயக்கத்தைத் தடுக்கத் தமக்கு ஆற்றலின்மை கூறி இம்மயக்கம் காரணமாகத் தம்மை விட்டுவிடலாகா தென அடிகள் விண்ணப்பித்துக்கொள்கிறார். விடங் கண்டபொழுது விண்ணவரும் மண்ணவரும் கலங்க நீ அதனை உண்டு அவர்கள் மயக்கந் தீர்த்தாய்; ஆதலின் நீ அருட்கடல்; நானும் ஐம்புல மயக்கத்தாற் கலங்குகின்றேன். என்னைக் கைவிட லாகாது; காப்பாற்றவேண்டும் என வேண்டுகிறார்.

29. குலங்களைந் தாய்களைந் தாயென்னைக்
குற்றங்கொற் றச்சிலையாம்
விலங்கலெந் தாய்விட் டிடுதிகண்
டாய்பொன்னின் மின்னுகொன்றை
யலங்கலந் தாமரை மேனியப்
பாவொப்பி லாதவனே
மலங்களைந் தாற்சுழல் வன்றயி
ரிற்பொரு மத்துறவே.

**பதப்பிரிவு :**

குலம் களைந்தாய் களைந்தாய் என்னைக்
குற்றம் கொற்றச் சிலையாம்
விலங்கல் எந்தாய் விட்டிடுதி கண்டாய்
பொன்னின் மின்னு கொன்றை
அலங்கல் அம் தாமரை மேனி அப்பா
ஒப்பு இலாதவனே
மலங்கள் ஐந்தால் சுழல்வன் தயிரில்
பொரு மத்து உறவே.

**உரைநடை :**

பொன்னின் மின்னு கொன்றை அலங்கல் அம் தாமரை மேனி அப்பா, ஒப்பு இலாதவனே, விலங்கல் ஆம் கொற்றச்சிலை எந்தாய், மத்து உறப் பொரு தயிரின் மலங்கள் ஐந்தால் சுழல்வன்; குலம் களைந்தாய் என்னைக் குற்றம் களைந்தாய் விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

பொன்னைப் போல் மின்னுகின்ற கொன்றை மலர் மாலையை அணிந்துள்ள அழகிய செந்தாமரை மலர் போன்ற சிவந்த திருமேனியை உடைய என் தந்தையே, வெண்டாமரை போன்ற வெண்ணீறு பூசிய, ஒப்பற்ற பெருமானே! மாமேருமலையாகிய வெற்றி வில்லை உடைய என் தந்தையே! மத்தினுல் மிகுதியாகத் தாக்கிக் கடையப்படும் தயிரைப் போல ஐந்து மலங்களாலும் தாக்கப்பட்டுக் கலங்குகின்றேன். என்னுடைய குல உணர்ச்சியைப் போக்கினுய்; என்னைக் குற்றம் அற்றவன் ஆக்கினுய். என்னைக் கைவிடல் தகுதி யாகுமா?

**விளக்கம் :**

மத்து உறப் பொருதயிரின் எனக் கூட்டுக. சிவன் செம்மேனி யெம்மானுதலின் அவன் திருமேனிக்குச்

செந்தாமரை உவமையாயிற்று. திருமேனிமேல் வெண்ணீற்று விளக்கத்திற்கு வெண்டாமரை உவமை யாயிற்று. இவ்விரு நிறத் தாமரைகளையும் உளப் படுத்தி 'அம்தாமரை மேனி அப்பா' என்றார்.

குலம் களைந்தாய் — குலப்பெருமையாற் செருக் குறுதலை நீக்கினாய்.

> "சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
> ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
> பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
> கோதிலமு தானேனைக் குலாவுதில்லை கண்டேனே.
>
> (திருவாசகம். கண்டபத்து-5)

என அடிகள் குலப்பெருமைபற்றிய செருக்கினை,மக்களைத் தன்னுள் ஆழ்த்தும் பெருநீர்ச்சுழியாகக் கூறுகிறார். குலப்பெருமையாற் செருக்குறுதல் ஆணவ மல காரியங் களுள் ஒன்று எனச் சிவஞானபாடியங் கூறும்:—

மூலமலம்காரியவேறுபாட்டான் எழு வகைப்படும்.

அவையாவன- மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம்.

மோகமாவது கொள்ளற்பாலது இது, தள்ளற்பாலது இது என நூன்முகத்தானுணர்ந்தும் அரிவையர் முதலிய விடயங்களின் மயங்குதற் கேதுவாயது.

மதமாவது, தன்னாலெய்தப்படும் அரிவையைத் தானே கொண்டாடிப் புகழ்ந்து இவளின் மேற்பட்ட மகளிர் உலகத்தில்லை என மதித்தற்கு ஏதுவாயது.

அராகமாவது அவள்மேல் மேன்மேலும் ஆசை மிகுதற்கு ஏதுவாயது.

கவலையாவது ஊழ்வலியால் அவளைத் தணந்தவழிக் கண்ணீர்விட்டு அழுது பெரிதுந் துன்புற்றுக் கவலுதற் கேதுவாயது.

தாபமாவது அதனால் உள்வெதும்பித் தபித்தற்கு ஏதுவாயது.

வாட்டமாவது அங்ஙனம் அலறியும் ஆற்றியும் உள் வெதும்புதலான் மூர்ச்சையுற்று உள்ளமும் உடம்பும் வாடுதற்கு ஏதுவாயது.

விசித்திரமாவது தான்பெற்ற உலக வாழ்க்கையை நோக்குந் தோறும் இவர் எமக்கு உரிமைச் சுற்றத்தார்; இவள் உரிமையுடைய மனைவி; ஆடை, அணி, பொன் முதலிய செல்வங்களிற் குறைவில்லை; மனை, கழனி முதலிய நிலங்களிற் குறைவில்லை; ஆகலான் எனக்கு இனிப்பெறக்கடவது என்னை? யெனவும் என் குடும்பத்தைப் புரப்போர் யாவர்? எனவும் இவ்வாறு பலவேறு வகைப்படச் சிந்தை செய்தற் கேதுவாயது.

அரிவையர் மேல் வைத்துக் காட்டியது உபலக்கணமாதலின் விடயந்தோறும் இவ்வாறு கண்டு கொள்க. கொற்றச் சிலையாய் — முப்புரம் எரிக்குங்கால் சிவபெருமான் மேருமலையை வில்லாக வளைத்தான்.

முக்குற்றங்கள் —காமம், வெகுளி, மயக்கம்.

மலங்கள் ஐந்தாவன :

ஆவணம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி.

**ஆணவம்** ஒன்று. அதன் சத்திகள் எண்ணிறந்தன. எண்ணிறந்த சத்திகளான் எண்ணிறந்த உயிர்களினும் செம்பிற்களிம்புபோல் அநாதியே விரவிநின்று அறிவின்மைக்குக் காரணமாகும்.

**மாயை** தன் காரியங்களால் ஆணவமல சத்தியைக் குறைத்து உயிர்க்குச் சுட்டறிவைக்காட்டி அதன் அறிவை மயக்கவுஞ்செய்யும்.

**கன்மம்** இருவினைகள். அவை இன்பதுன்பங்கட்குக் காரணமாகும். மாயேயம் — மாயையின் காரியங்கள்; உடம்பு, அகப்புறக்கருவிகள், உலகம், நுகர்ச்சிப் பொருள் என நால்வகைப்படும். திரோதாயி – இம்மலங்களைத் தொழிற்படுத்தும் இறைசத்தி.

"மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப் போல்
மம்மர் செய்து அணுவின் உண்மை வடிவினை மறைத்து நின்று
பொய்ம்மைசெய் போகபந்த போத்திருத் துவங்கள் பண்ணும்
இம்மலம் மூன்றினோடும் இருமலம் இசைப்பன் இன்னும்."

"மாயையின் காரியத்தை மாயேய மலம தென்றும்
ஏயுமும் மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வர் இம்மலங்கள் ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும்."

(சிவஞான சித்தியார்.)

**30. மத்துறு தண்டயி ரிற்புலன்**
**தீக்கது வக்கலங்கி**
**வித்துறு வேனை விடுதிகண்**
**டாய்வெண் டலைமிலைச்சிக்**
**கொத்துறு போது மிலைந்து**
**குடர்நெடு மாலைசுற்றித்**
**தத்துறு நீறுட ளுரச்செஞ்**
**சாந்தணி சச்சையனே.**

**பதப்பிரிவு**

*மத்துறு தண்தயிரின் புலன்*
*தீக்கதுவக் கலங்கி*
*வித்துஉறுவேனை விடுதிகண்டாய்*
*வெண்தலை மிலைச்சிக்*
*கொத்துஉறு போது மிலைந்து*
*குடர் நெடுமாலை சுற்றித்*
*தத்துறு நீறுடன் ஆரச்செஞ்*
*சாந்துஅணி சச்சையனே.*

**உரைநடை :**

வெண்தலை மிலைச்சிக் கொத்துஉறு போது மிலைந்து குடர் நெடுமாலை சுற்றி தத்துறு நீறுடன் செம்மை ஆரச் சாந்துஅணி சச்சையனே, புலன் தீக்கதுவ மத்துஉறு தண் தயிரின் கலங்கி வித்துஉறுவேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை:**

வெண்மையான தலைமாலையை முடியினில் அணிந்து கொத்தாகப் பொருந்தியுள்ள, மலர்கின்ற கொன்றைப்பூ மாலையினைச் சூடிக் குடராகிய நீளமான மாலையினையும் கழுத்தில் சுற்றி அணிந்து உடம்பெல்லாம் பரவும்படி பூசிய திருநீற்றுடன் சிவந்த சந்தனக் குழம்பினையும் பூசி விளங்குகின்ற அழியாத உண்மைப் பரம்பொருளே! ஐம்புலன்களாகிய தீப்பிடித்து வெதுப்புவதனுல் மத்தினைப் பொருந்தி அதனுற் கடையப்படுகின்ற குளிர்ந்த தயிரைப் போலக் கலங்கி அக்கலக்கத்துக் கெல்லாம் விதைபோல மூலமாய்ப் பொருந்தி இருக்கின்ற என்னைக் கைவிட்டு விடுவாயோ?

**விளக்கம் :**

தாருகவனத்து முனிவர் வளர்த்த வேள்வியில் தோன்றிய வெண்டலையைச் சடையிற் சூடிக்கொண்டார் எனினும் அமையும். சச்சையன் — சத்துப் பொருளாக உள்ளவன், என்றும் ஓரியல்பினனுயுள்ளவன்.

"எங்குஞ் செறிசிவம் சித்தொடு சத்தாய் நிற்கும்"

(சிவஞான சித்தியார்)

சச்சையன் — சத்தையன், சத்தை+அன். உயிர் சத்தாகிய சிவத்தினிடத்தும் அசத்தாகிய உலகப் பொருள்களினிடத்தும் மலரின்கண் நாற்றம் போல் அதுவதுவாய் நிற்றலின் சதசத்து.

"சத்தசத் தறிவதான்மாத் தான்சத்தும் அசத்தும் அன்று
நித்தனுய்ச் சதசத் தாகி நின்றிடும் இரண்டன் பாலும்
ஒத்துடன் உதித்து நில்லா துதியாதும் நின்றிடாது
வைத்திடும் தோற்றம் நாற்றம் மலரினில் வருதல் போலும்."

(சிவஞானசித்தியார்)

ஐம்புலன்களும் உயிரைப் பற்றிப் பிடித்து வெதுப்புகின்றன. ஆதலின் புலன் தீ என்ருர். ஐம்புலன்களை உயிர் நல்வழியிற் செலுத்தாது போனுல் தீயபயக்குமாதலின் அவை தீயினும் அஞ்சப்படும்.

வித்துறுதல் — மூலமாகப் பொருந்துதல்

தத்துதல் — பரவுதல், ஒளிவீசுதல். திருநீற்றை நீரில் குழைக்காமல் மேலெங்கும் பரப்பிப் பூசுதலை உத்துளனம் என்பர். உறுதயிர் — வினைத்தொகை.

புலனுற் கலக்கமுறுதற்குக் காரணம் உயிர் அதனைத் தன்வழி நிறுத்தாது அதன்வழி தான் நிற்றலேயாகலின் வித்துறுவேனை என்ருர், ஐம்புல அவாவிற்கும் காரணமான ஆணவ மலத்தோடு அன்றே பொருந்திய என்னை எனவும் பொருள் கொள்ளலாம். நீறு அப்பன் அணிந்து கொள்வது; செஞ்சாந்து அம்மை அணிந்து கொள்வது. தன்னை விட்டு விடலாகாது என்று அம்மை அப்பர் திருக்கோலத்தை வேண்டிக்கொள்கிருர்.

31. சச்சைய னேமிக்க தண்புனல்
விண்கா னிலநெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண்
டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய
னேயொண் படவரவக்
கச்சைய னேகடந் தாய்தடந்
தாளவடற் கரியே.

**பதப்பிரிவு:**

சச்சையனே மிக்க தண்புனல்
விண் கால் நிலம் நெருப்பு ஆம்
விச்சையனே விட்டிடுதிகண்டாய்
வெளியாய் கரியாய்
பச்சையனே செய்ய மேனியனே
ஒண்பட அரவக்
கச்சையனே கடந்தாய் தடம்
தாள அடல் கரியே.

**உரைநடை:**

சச்சையனே, மிக்க தண்புனல், கால், விண், நிலம், நெருப்பாம் விச்சையனே, வெளியாய், கரியாய், பச்சையனே, செய்யமேனியனே, ஒள்பட அரவக்கச்சை யனே தடம் தாள அடல்கரி கடந்தாய் விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

அழியாத உண்மைப்பொருளே! மிக்க குளிர்ச்சியை உடையதாகிய நீராகவும் விசும்பாகவும் காற்றாகவும் நிலனாகவும் தீயாகவும் உள்ள வித்தையனே! வெண்மை நிறமும் கருமையும் பச்சையும் சிவப்பும் பொருந்திய திருமேனியை உடையவனே! ஒளி பொருந்திய படத்தை உடைய பாம்பை அரைக்கச்சையாகக் கட்டியிருப்ப வனே! பெரியகால் அடிகளை உடைய வலிமிக்க கயாசுரனாகிய யானையைக் கொன்றவனே அடியேனைக் கைவிட்டு விடுவாயோ ?

**விளக்கம்:**

இறைவன் பச்சை வடிவான அம்மையோடு கூடி இருத்தலின் பச்சையனே என்றும், செந்நிற மேனிய னாதலின் செய்ய மேனியனே என்றும் கூறப்படுகிறான். மேலும், அம்முதல்வன் பதிஞானத்தால் வெளிப்பட

உணரப்படுபவன்; பசுஞான பாச ஞானங்களால் உணரப் படாத இருளினன். வெளிப்பட உணரப்படுதலின் வெளியாய் என்றும், பசுபாச ஞானங்களால் அறியப் படாமையின் கரியாய் என்றும் விளிக்கப்பட்டான்.

"அருக்கன்நேர் நிற்பினும் அல்லிருளே காணுர்க்
கிருட் கண்ணே பாசத்தார்க் கீசன்."

இறைவன் ஐம்பூதங்களிலும் அவையவையாக் கலந் திருத்தல் வித்தையாதலின் விச்சையனே என்ருர். பாம்பினை உயிருடன் அரைக்கச்சாக அரன் அணிந்து கொண்டான். மிக்க தண்பூனல்—மிகுதியான குளிர்ச்சி யும் மிகுதியான அளவுமுள்ள நீர்.

32. அடற்கரி போலைம் புலன்களுக்
கஞ்சி யழிந்தவென்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண்
டாய்விழுத் தொண்டர்க்கல்லாற்
ருெடற்கரி யாய்சுடர் மாமணி
யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு
தாக்குங் கறைக்கண்டனே.

பதப்பிரிவு:

அடல் கரிபோல் ஐம்புலன்களுக்கு
அஞ்சி அழிந்த என்னை
விடற்கு அரியாய் விட்டிடுதி கண்டாய்
விழுத் தொண்டர்க்கு அல்லால்
தொடற்கு அரியாய் சுடர் மாமணியே
சுடுதீச் சுழலக்
கடற்கு அரிதாய் எழுநஞ்சு அமுது
ஆக்கும் கறைக் கண்டனே.

**உரைநடை :**

விழுத்தொண்டர்க்கு அல்லால் தொடற்கு அரியாய், சுடர் மாமணியே, சுடு தீச்சுழல அரிதாய் கடற்கு எழு நஞ்சு அமுது ஆக்கும் கறைக் கண்டனே, ஐம்புலன் களுக்கு அஞ்சி அடல் கரிபோல் அழிந்த என்னை விடற்கு அரியாய் விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

சிறந்த அடியார் அல்லாத மற்றவர்களால் நெருங்க முடியாதவனே! ஒளி வீசுகின்ற பெரிய மாணிக்கமே! உலகினைச்சுட்டு அழித்து விடும் வடவைத்தீயும் கலங்கும்படி எவராலும் தாங்குவதற்கு முடியாததாகிக் கடலின் கண்ணே தோன்றிய ஆலகாலத்தையும் அமுது போல உணவாகக் கொண்டு உண்டு, உலகினைக் காத்தருளிய நீலகண்டப் பெருமானே, ஐம்புலன்களின் தொல்லைகளுக்கு அஞ்சி அவைகளின் வயப்பட்டு மத யானைபோல அலைந்து கெட்டுப்போன என்னை விட்டுப் பிரிவதற்கு அருமையானவனே! கைவிட்டு விடுவாயோ?

**விளக்கம் :**

ஐம்புலன்களையும் அடக்குதல் அருமை நோக்கி அடற்கரி (கொல் யானை) போல் ஐம்புலன்களுக்கென்றார். அவைகளை இறைவன் அருளைத் துணையாகக்கொண்டு திண்மை அறிவு என்னும் தோட்டி கொண்டு அடக்காது அவைகளோடு சேர்ந்து தானும் மதயானைபோல் திரிந்து கெட்டமையின் அழிந்த என்றார். திருவள்ளுவரும் புலன்களை யானைகளாக உருவகஞ்செய்கிறார்.

"உரனென்னும் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து."

(திருக்குறள் 24)

விடற்கு அரியாய் — எக்காலத்தும் விட்டு நீங்காது உடன் உறைபவனே. நம்பி ஆரூரர் போன்ற சிறந்த தொண்டரன்றி வேறு யாரும் சிவபெருமானைப் பின் தொடரமுடியாது.

"ஆவணம் பறிக்கச் சென்ற அளவினில் அந்தணன்
காவணத் திடையேஓடக் கடிதுபின் தொடர்ந்துநம்பி
பூவணத் தவரை யுற்றார் அவரலால் புரங்கள் செற்ற,
ஏவணச் சிலையினாரை யார் தொடர்ந் தெட்ட வல்லார்?

(திருத்தொண்டர் புராணம்)

சிவபெருமானைப் பின் தொடர்ந்தவர்களுக்கு அவன் சிறந்த ஒளி விளக்கமாயிருந்து அவர்களுடைய இருள் போக்குதலின் "சுடர் மா மணியே" என்றார்.

'கடற்கு எழுநஞ்சு' மணற்கு ஈன்ற முளை என்பது போல வேற்றுமை மயக்கம்.

கடல் கரிதாய் எனப்பிரித்துக் கடலில் கருமை நிறத்தோடு தோன்றிய எனவும் பொருள்கூறலாம். சிவ பெருமான் கடலில் எழுந்த அரிய நஞ்சினைத் தனக்கு அமுதாக்கினான்; அப்பர் பெருமானுக்குச் சமணர் இட்ட நஞ்சினை அமுதாக ஆக்கிக்கொடுத்தான்.

"துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திராதே
அஞ்செழுத் தோதின் நாளும் அரனடிக் கன்பதாகும்
வஞ்சனைப் பாற்சோ றாக்கி வழக்கிலா அமணர்தந்த
நஞ்சமுதாக்கு வித்தார் நனிபள்ளி யடிகளாரே."

(அப்பர்-திருநேரிசை-திருநனிபள்ளி)

தொண்டர்க்கன்றி ஏனையோர்க்குத் தொடற்கரிய வனாயினும் உயிர்களின் படுதுயர் களையும் பரமன் என்ற உண்மையைக் கூறுவார் நஞ்சமுதாக்குங்கறைக் கண்டன் என்றார். தேவர்களை நஞ்சு தாக்காது காத்தது போலத் தன்னையும் புலன்களினின்றும் காக்க வேண்டும், கைவிடலாகாது என அடிகள் விண்ணப்பித்துக் கொள் கிறார்கள். விழுத்தொண்டு—கசிந்த தொண்டு. கசிந்த தொண்டாவது முனைத்து நின்று பணி செய்யாது அருளில் அடங்கி நின்று பணி செய்தல். முனைந்து நின்று செய்யும் உலகத் தொண்டின் நீக்குதற்குக் கசிந்த தொண்டு என்றார். விடற்கு அரியாய் இறைவனை

விட்டு உயிர் ஒரு போதும் நீங்கி நிற்பதில்லை. கட்டு நிலையினும் வீட்டு நிலையினும் இறைவன் எப்போதும் உயிருடன் ஒன்றியேயிருக்கிறான்.

"எவ்விடத்தும் இறையடியை யின்றியமைந்தொன்றை
அறிந்தியற்றி யிடாஉயிர்கள் ஈசன் தானுஞ்
செவ்விதினில் உளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்துநிற்பன்
இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்றா
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர் போல் நினைறிடுவன் ஆதலான் நாம்
அரனடியை அகன்று நிற்பதெங்கே யாமே."

(சிவஞான சித்தியார்)

33. கண்டது செய்து கருணைமட்
டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண்
டாய்நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போற் பணித்துப்
பணிசெயக் கூவித்தென் னைக்
கொண்டெனெந் தாய்களை யாய்களை
யாய குதுகுதுப்பே.

**பதப்பிரிவு:**

கண்டது செய்து கருணை மட்டுப்
பருகிக் களித்து
மிண்டுகின்றேனை விடுதிகண்டாய்
நின் விரைமலர்த்தாள்
பண்டு தந்தாற்போல் பணித்து
பணிசெயக் கூவித்து என்னைக்
கொண்டு என் எந்தாய் களையாய்
களையாய குதுகுதுப்பே.

உரை நடை:

என் எந்தாய்! கருணை மட்டுப் பருகிக் களித்துக் கண்டது செய்து மிண்டுகின்றேனை விடுதிகண்டாய்.

பண்டுநின் விரைமலர்த் தாள் தந்தாற்போல் என்னைக் கொண்டு பணித்துப் பணிசெயக் கூவித்துக் களையாய குதுகுதுப்புக் களையாய்.

என் குதுகுதுப்பே எனக் கூட்டுக.

**பொழிப்புரை :**

என் தந்தையே! நின் திருவருளாகிய தேனைக் குடித்து அதனாற் செருக்குற்று மெய்ம்மறந்து, நான் என் மனத்தில் தோன்றிய செயல்களை யெல்லாம் நல்லனவா? தீயனவா? என்று நாடாது செய்து மதம் பிடித்து அலைகின்ற என்னைக் கைவிட்டு விடுவாயோ? முன் அடியேனை ஆட்கொண்ட போது மணம் பொருந்திய செந்தாமரை மலர்போலுந் திருவடிகளை முன்னர்த் தந்து அருள் செய்தது போல இப்போதும் ஞானசிரிய வடிவங்காட்டி என்னை ஆளாகக் கொண்டு திருவடிகொடுத்து நின் திருவடித் தொண்டு செய்யும்படி கூவி அழைத்து நான் பணி செய்வதற்குத் தடையாக இருக்கின்ற என்னுடைய உலக ஆசையை நீக்கி யருள்வாயாக.

**விளக்கம் :**

பணித்தல் — ஏகனாகி நிற்கும்படி அடங்கச்செய்தல்; கொடுத்தல் எனவும் பொருள்கொண்டு திருவடிகளைக் கொடுத்தருளி எனவும் கூறலாம். பணி செய — இறை பணி நிற்க.

"ஏகனாகி இறைபணி நிற்க
மலமா யைதன் னொடு
வல்வினை யின்றே."

(சிவஞானபோதம்)

முன்பு ஞானசிரியனாக வந்து திருவடிப்பேறளித்ததுபோல் அளித்து, மேலும் இறைபணிசெய்யும்படி கூவி அழைக்க வேண்டுகிறார்.

"மாயை கன்மங்களின் வாசனையறுத்தற்கு உபாயம் இதுவே யாகலான், இறை பணிநிற்றல் ஒரு தலையாக வேண்டப்படும்." கண்டது—வரையரையின்றி மனத்தில் தோன்றியது. மிண்டுதல்—செருக்கிப் பேசுதல். தான் கண்டதைச் செய்தாலும் செருக்கோடு பேசினாலும் தன் தந்தையாகிய இறைவன் பெருங்கருணையாளனாதலின் அருளாகியதேன் ஊட்டுகின்றான். கண்டது செய்தல் காரணமாக என்னை விட்டு விடாதே. உன் திருவடிகளை இதற்கு முன் தந்தருளியதுபோல் மேலுந்தந்தருளு வாயாக என வேண்டுகிறார் அடிகள். உலக வாழ்க்கையிலுள்ள பற்று இறைபணி நிற்றற்குத் தடையாகலின் களையாய் களையாய குதுகுதுப்பே என்றார். குதுகுதுப்பு—ஆசை.

**34. குதுகுதுப் பின்றிநின் றென்குறிப்**
**பேசெய்து நின்குறிப்பில்**
**விதுவிதுப் பேனை விடுதிகண்**
**டாய்விரை யார்ந்தினிய**
**மதுமதுப் போன்றென்னை வாழைப்**
**பழத்தின் மனங்கனிவித்**
**தெதிர்வதெப் போது பயில்விக்**
**கயிலைப் பரம்பரனே.**

**பதப்பிரிவு :**

குதுகுதுப்பு இன்றி நின்று என்குறிப்பே
செய்து நின் குறிப்பில்
விதுவிதுப்பேனை விடுதி கண்டாய்
விரை ஆர்ந்து இனிய
மதுமதுப் போன்று என்னை வாழைப்
பழத்தின் மனம் கனிவித்து
எதிர்வது எப்போது பயில்விக்
கயிலைப் பரம் பரனே.

உரை நடை :

வீ பயில்கயிலைப் பரம்பரனே! நின் குறிப்பில் குதுகுதுப்பு இன்றி என் குறிப்பே செய்து நின்று விதுவிதுப்பேனை விடுதி கண்டாய். விரை ஆர்ந்து இனியமதுமதுப் போன்று வாழைப் பழத்தின் என்னை மனம்கனிவித்து எதிர்வது எப்போது?

**பொழிப்புரை :**

பூக்கள் நிறைந்த திருக்கயிலைமலையில் எழுந்தருளி யிருக்கும் மிக்குயர்ந்த பொருளே! உனது திருவுள்ளக் கருத்தின்படி நடக்கும் விருப்பில்லாமல் என் மனம் காட்டுகின்ற தீய கருத்தின்படியே நடந்து அத்தீய வழி களில் நிலைத்து நின்று உன் திருவருளைப் பெற மிக விரைகின்ற ஏழையேனைக் கைவிட்டுவிடுவாயோ? நறு மணம் பொருந்தி இனிமையான பூந்துகளோடு கூடிய தேனைப்போன்று என்னுடைய மனத்தை வாழைப் பழத்தைப் போலக் கனியச்செய்து அடியேனுக்கு இனிமையான காட்சியருள்வது என்றோ?

**விளக்கம் :**

மது—பூந்துகள், வீ பயில்—பூக்கள் நிறைந்த; பயில் வீகயிலை—செறிந்த பூக்களையுடைய கயிலை. '**நன்றென் றேன்றியேன்**' என்புழிப் போல வீக்கயிலை என்பது விக்கயிலை எனக்குறுக்கல் விகாரமாயிற்று. வி—ஆகாயம் எனப் பொருள் கொண்டு ஆகாயத்தை அளாவிய வான் கயிலை எனவும் பொருள் கொள்ளலாம். "மானக்கயிலை மலையாய் போற்றி"

(திருவாசகம்-போற்றித் திருஅகவல்)

"வான் கயிலை மேவினாய் நீயே என்றும்"

(தேவாரம்)

மதுமது—இனியதேன் எனவும் பொருள் கூறலாம். இனிய தேன் போன்ற இனிமை பயக்கும் காட்சி என

முடிக்க. பயில்—சொல். பயில்வி எனப் பிரித்தால் சொல்வாயாக எனப்பொருள் கொள்ள வேண்டும். இறைவன் திருவுள்ளக் கருத்துக்கியைய நடப்பதில் விருப்பமில்லை. ஆனால் திருவருள் பெற விதுவிதுக் கின்றேன்—விரைகின்றேன்; என்னுடைய கருத்தின் படியே செய்கின்றேன். இறைவன் திருவுள்ளக் கருத்தின்படி நடத்தல் அவனருளாலல்லது உயிர் தனது முனைப்பால் ஒன்றையுஞ் செய்யாதிருத்தல்.

"அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான் இனிஇறைபணி வழுவாது நிற்கஎன மேற்கொண்டது என்றார்."

(சிவஞான பாடியம்)

குதுகுதுப்பு—ஆசைப்படுதல் இரட்டைக்கிளவி.

விதுவிதுப்பு — விரைதல். இரட்டைக் கிளவி. விதுப்பு விதுப்பு — விதுவிதுப்பு. திருவருளைப் பெற என்பது அவாய் நிலையான் வந்தது. என் குறிப்பே — ஏகாரம் பிரிநிலை.

உயிரின் கொள்கை தவறு எனக் கண்டவிடத்தும் கைவிடாது நிற்றலின், **நின்று** என்றார். இறைவன் காட்சி குன்றா, ஒழியா, இனிமைபயத்தலின், **மது மதுப் போன்று எய்துவது** என்றார்.

35\. பரம்பர னேநின் பழவடி
யாரொடு மென்படிறு
விரும்பர னேவிட் டிடுதிகண்
டாய்மென் முயற்கறையி
னரும்பர நேர்வைத் தணிந்தாய்
பிறவியை வாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மன
மஞ்சிப் பொதும்புறவே.

*பதப்பிரிவு :*

பரம்பரனே நின்பழ அடியா ரொடும்
என் படிறு
விரும்பு அரனே விட்டிடுதி கண்டாய்
மென் முயல் கறையின்
அரும்பு அர நேர் வைத்து அணிந்தாய்
பிறவி ஐவாய் அரவம்
பொரும் பெருமான் வினையேன் மனம்
அஞ்சி, பொதும்பு உறவே.

*உரைநடை :*

பரம்பரனே, நின் பழஅடியா ரொடும் என்படிறும் விரும்பும் அரனே, முயல் கறையின் மேல் அரும்பு அர நேர்வைத்து அணிந்தாய், வினையேன் மனம் அஞ்சி பொதும்பு உறவே ஐவாய் பிறவி அரவம் பொரும் பெருமான், விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை:**

மிக்குயர்ந்த பொருளாக இருப்பவனே! உன்னுடைய களங்க மற்ற பழமையான அடியார்களோடு பொய் ஒழுக்கத்தையுடைய என்னையும் விரும்பி ஏற்றுக் கொண்டருளும் அழித்தற் கடவுளே! முயலைப் போன்ற உருவினதாகிய களங்கத்தையுடைய திங்களின் மெல்லிய முளையாகிய பிறையினை அதன் பகையாகிய பாம்புடன் ஒருங்கே வைத்துச் சடையிலே அணிந் திருப்பவன் அல்லவா நீ, தீவினை உடையவனாகிய அடியேன் உள்ளம் நடுநடுங்கி ஒளிந்து கொள்ள ஒரு மறைவிடத்தினை அடையும்படி ஐந்து தலைகளையுடைய பிறவி என்னும் பாம்பு தாக்குகின்றது. எம் பெருமானே! அடியேனைக் கைவிட்டுவிடுவாயோ?

**விளக்கம் :**

மேலான பொருள்களுக்கெல்லாம் மேலானவனுதலின் சிவபெருமான் பரம்பரன் எனப்பட்டான். பரம்பரன் என்ற சொல்லை ஏனையோர்க்குக் கூறுதல் உபசாரம். சிவபெருமான் ஒருவனுக்கே உண்மையாகும். பழைய மெய்யடியாருடைய உண்மை ஒழுக்கத்தை விரும்புவ தோடு தனது கள்ளத்தன்மையையும் இறைவன் விரும்பித்தன்னை ஆட்கொண்டதாக அடிகள் கூறு கிறார்.

முயற்கறை—உவமைத்தொகை அன்மொழி.

"அர" "குறியதன்கீழ் ஆக்குறுகியது" (நன்னூல்)

நேர்வைத்தல் பகைநீக்கி ஒருங்கு வைத்தல்.

"ஒற்றி ஊரும் ஒளிமதி பாம்பினை
ஒற்றி ஊரும்அப் பாம்பும் அதனையே
ஒற்றி யூர வொருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை ஓயுமே."

(அப்பர் சுவாமிகள்-திருக்குறுந்தொகை)

பிறவியாகிய ஐந்தலை நாகத்தை, நான் மனத்தாற் கருதும்போது மனமானது நடுநடுங்கி மறைவிடத்தை நாடி ஒளிந்து கொள்கிறது, பிறவியானது அடிகளுக்கு அவ்வளவு அச்சந் தருகிறது. பிறவிக்கு அஞ்சுகின்ற தம்மை இறைவன் கைவிடாது காக்க வேண்டுமென அடிகள் விண்ணப்பித்துக் கொள்கிறார்; பாம்பின் பகை கெடுத்து மதியைக் காத்த இறைவன் பிறவிப் பகையை நீக்கித் தன்னைக் காக்கவேண்டுமென வேண்டுகிறார்.

அரன—அழிப்பவன். தன்னுடைய படிற்றொழுக்கத் தையும் பிறவிப் பகையையும் அழிக்க வேண்டுமென்ற குறிப்போடு சிவபெருமானை அரனே என விளித்தார். ஐம்பொறி வாயிலாக வரும் ஐம்புல ஆசை உள்ளளவும்

பிறவி நீங்காதாதலின் பிறவியை ஐவாயரவம் என்றார். பொதும்பு—பொந்து, குகை, குழி. உற – வினையெச்சம், காரியப் பொருட்டு.

36 பொதும்புறு தீப்போற் புகைந்தெரி
யப்புலன் றீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண்
டாய்விரை யார்நறவந்
ததும்புமந் தாரத்திற் றாரம்
பயின்றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தே னவிர்சடை
வானத் தடலரைசே.

**பதப்பிரிவு**

பொதும்பு உறு தீப்போல் புகைந்து
எரி அப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதி கண்டாய்
விரை ஆர் நறவம்
ததும்பும் மந்தாரத்தில் தாரம் பயின்று
மந்தம் முரல் வண்டு
அதும்பும் கொழுந்தேன் அவிர்சடை
வானத்து அடல் அரைசே.

**உரைநடை :**

விரைஆர் நறவம் ததும்பும் மந்தாரத்தில் தாரம் பயின்று மந்தம் முரல் வண்டு அதும்பும் கொழுந்தேன் அவிர்சடை வானத்து அடல் அரைசே பொதும்பு உறுதீப் போல் புகைந்து எரி அப்புலன் தீக்கதுவ வெதும்புறு வேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

நறுமணம் பொருந்திய தேன் வழியும் மந்தாரப்பூவில் எடுத்தல் இசையினைப் பாடிப்பழகிப் படுத்தல் இசைபாடும் வண்டுகள் அழுந்தும்படி நிரம்பிய தேனையுடைய

கொன்றை மலர் மாலையை அணிந்து விளங்கும் சடை யுடனே, சிதாகாயத்திலே எழுந்தருளியிருக்கும் வெற்றி வேந்தனே! மரப்பொந்திலே பற்றிய தீயைப் போலப் புகைந்து எரிகின்ற அந்தப் புலன்களால் விளைந்த தீவினை பற்றிக் கொள்ள அதனுல் வெம்பி வாடுகின்ற அடியேனை விட்டு விடுவாயோ?

**விளக்கம் :**

மந்தாரம் ஒரு விண்ணுலக மரம். ஈண்டு ஆகு பெயராய் மந்தாரப் பூவை உணர்த்தியது. மந்தாரப் பூவில் நறுமணம் கமழ்கிறது; தேன் ததும்புகிறது. மந்தார மணம் வண்டுகளைத் தன்பால் இழுக்கிறது. வண்டுகள் பூவின் வெளிப்புறத்தை உச்ச சுரமாகிய தார இசை முரன்று கொண்டு சுற்றுகின்றன. பின் பூவினுட்சென்றவுடன் மந்த இசை முரல்கின்றன. தேனைப் பருகிக் களித்து இசை முரலலை விட்டுவிட்டுக் களிப்பில் அழுந்தும்படி பூக்கள் மதுவை மிகுதியாகப் பொழிகின்றன. இத்தகைய மந்தாரப் பூவை அணிந்த அவிர் சடையனுகிய சிவபெருமான் சிதாகாயப் பரவெளி நடன வெற்றிவேந்தன். வண்டுகள் இவ்வாறு திருமுடி மந்தார மலர்த் தேன் உண்டுகளித்தல் போல மெய் யன்பர்கள் உனது திருவடித்தாமரை மலர்த் தேனைப் பேச்சற்று அசைவற்றுப் பருகிப்பேரின்பந்துய்க்கிருர்கள். அடியேனைப் புலன்கள் வெதுப்புகின்றன. காட்டு மரப் பொந்தினுள் எரியும் தீயானது காற்றுல் அணையாது கனிந்து கொண்டேயிருந்து புகைந்து மரத்தைப் பற்றி எரித்து விடும். அதுபோலப் புலன்கள் என்னுடைய ஐம்பொறிகளுளிருந்து கனிந்து கனிந்து என்னறிவைப் பற்றி என்னைச் சுடுகின்றன. ஆதலின் என்னைக் கைவிடலாகாது; காப்பாற்றுவாய்: என அடிகள் விண்ணப்பித்துக் கொள்கிருர்.

37. அரைசே யறியாச் சிறியேன்
பிழைக்கஞ்ச லென்னினல்லால்
விரைசேர் முடியாய் விடுதிகண்
டாய்வெண் ணகைக் கருங்கட்
டிரைசேர் மடந்தை மணந்த
திருப்பொற் பதப் புயங்கா
வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை
தான்வந் தடர்வனவே.

பதப்பிரிவு:

அரைசே அறியாச் சிறியேன் பிழைக்கு
அஞ்சல் என்னின் அல்லால்
விரைசேர் முடியாய் விடுதி கண்டாய்,
வெண்நகை கருங்கண்
திரைசேர் மடந்தை மணந்த
திருப்பொன் பதம் புயங்கா
வரைசேர்ந்து அடர்ந்து என்ன
வல்வினைதான் வந்து அடர்வனவே

**உரை நடை :**

வெண்நகை கருங்கண் திரைசேர் மடந்தை மணந்த திருப்பொன் பதப்புயங்கா, வரை சேர்ந்து அடர்ந்து என்ன வல்வினை தான் வந்து அடர்வனவே, அரைசே, அறியாச் சிறியேன் பிழைக்கு அஞ்சல் என்னின் அல்லால் (வேறு கதியில்லை) விரைசேர் முடியாய் விடுதி கண்டாய்,

**பொழிப்புரை :**

வெண்மையான பல் வரிசையினையும் கரிய கண்களாகிய கடலினையும் உடைய உமையம்மையார் தழுவிய அழகிய பொன்போலும் திருவடிகளையுடைய, பாம்பணி பெருமானே! மலைகள் ஒன்று சேர்ந்து தாக்குதல் போலக் கொடுவினைகள் வந்து தாக்குகின்றன. அம்பலத்தரசே! செய்வது இன்னதெனத் தெரியாத சிறுவன் செய்த

பிழைக்கு 'அஞ்சாதே' என்று கூறி ஆதரித்தருளினு லல்லாமல் வேறு போக்கிடம் காண்கிலேன். நறுமணம் பொருந்திக் கமழும் திருமுடியினை உடையவனே! கைவிட்டுவிடுவாயோ?

**விளக்கம் :**

திரு — வீட்டுச் செல்வம் எனவும் பொருள்கொள்ள லாம்.

**'முத்தி நான்ற மலர்ப்பதத்தே நாடு,'** (உண்மை விளக்கம்)

அம்மை அடியார்க்கு அருள்புரியுங்கால் தன்னுடைய புன்முறுவலாலும் கடைக்கண் பார்வையாலும் , மலம் ஒழித்து ஞானம்வழங்குவாளாதலின், 'வெண்ணகைக் கருங்கட்டிரை சேர்மடந்தை' என்றார். வெண்ணகைக் கருங்கண் முரண்தொடை. திரை ஆகு பெயராய்க் கடலை யுணர்த்திற்று. அம்மையின் கண்கள் கருணைப்பெருக்க முள்ளன. அன்பர்க்கு அருள் பாலித்தற்கே சிவன் அம்மையை மணந்து அம்மையப்பனாக விளங்குகிறான்.

திருப்பொற்பதம் என்பதற்குத் திருவும் பொன்னும் கொடுக்கின்ற திருவடிகள் எனவும் பொருள் கூறலாம். திரு என்பது மெய்ப்பொருள்; பொன் செல்வம்.

**"பொன்னும் மெய்ப்பொருளுந் தருவானை"**

(சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்)

ஞானப்பூங்கோதை அம்மையின் பூங்குழலுக்கு இயற்கைமணம் உண்டு; அதுபோல் சிவபெருமானுடைய பொன்னவிர் சடைக்கும் இயற்கைமணம் உண்டு என்பார் 'விரைசேர் முடியாய்!' என்றார். இரண்டு மலைகள் ஒருபொருளை மத்தியில்வைத்து நெருக்குவனபோன்று நல்வினையும் தீவினையும் அடிகளை நெருக்குகின்றன; அவைகள் நீக்குதற்கு அரியன என்பார். வல்வினை என்றார். மணிமுடி சூடி மண்ணாளும் வேந்தனுக்குக்

குடிகளின் அச்சந் தீர்த்தல் கடமையாகும்; அதுபோலச் சடைமுடி புனைந்து அருளாட்சிபுரியும் ஞான அரசினுக்கு அடியார் பிழைபொறுத்துப் பிழையை நீக்கி அச்சந் தீர்த்தல் கடமையாகும் என வேண்டுவார், 'அரைசே' என விளித்தார்.

"பின்னை என் பிழையைப் பொறுப்பானைப்
பிழையெல்லாந் தவிரப் பணிப்பானை."

(சுந்தரமூர்த்தி சுவாமிகள்)

38 அடர்புல னிற் பிரிந்தஞ்சி
யஞ்சொனல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண்
டாய்விரிந் தேயெரியுஞ்
சுடரனை யாய்சுடு காட்டர
சேதொழும் பர்க்கமுதே
தொடர்வரி யாய்தமி யேன்றனி
நீக்குந் தனித்துணையே.

பதப்பிரிவு :

அடர்புலனால் நின்பிரிந்து அஞ்சி
அம் சொல் நல்லாரவர்தம்
விடர்விடலேனை விடுதிகண்டாய்
விரிந்தே எரியும்
சுடர் அனையாய் சுடுகாட்டு அரசே
தொழும்பர்க்கு அமுதே
தொடர்வரியாய் தமியேன் தனி
நீக்கும் தனித் துணையே.

உரைநடை :

விரிந்தே எரியும் சுடர் அனையாய், சுடுகாட்டு அரசே, தொழும்பர்க்கு அமுதே, தொடர்வு அரியாய் தமியேன் தனி நீக்கும் தனித் துணையே, அடர்புலனால் நின்பிரிந்து அஞ்சி அம்சொல் நல்லார் அவர்தம் விடர் விடலேனை விடுதி கண்டாய்.

பொழிப்புரை:

எங்கும் பரந்து ஒளிவீசுகின்ற தீப்பிழம்பு போன்றவனே! சுடுகாட்டில் ஆடுகின்ற அரசனே! அடியார்களுக்கு அமுதம் போன்றவனே! எவராலும் பின் தொடர்ந்து பற்றமுடியாதவனே! திக்கற்றவனாகிய அடியேனுடைய துணையற்ற நிலைமையைத் தீர்த்தருளும் ஒப்பற்ற துணைவனே! தாக்குகின்ற புலன்களினால் இழுக்கப்பட்டு உன்னைப் பிரிந்து என் இரங்கத்தகுந்த அந்நிலையை அறிந்து அச்சங் கொண்டு இனிய சொல்லையுடைய பெண்களினுடைய பக்கவிடத்திற் கிடந்துவிட்டு நீங்கமாட்டாமல் தட்டழிகின்ற அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? (விடலாகாது)

விளக்கம்:

சுடுகாடு — உலகு முற்றும் அழிந்த இடம் இறைவன் பேரூழிக் காலத்துத் தானொருவனே வீணை வாசித்துக் கொண்டிருப்பனெனத் தேவாரத் திருமுறை கூறும்

"பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும் போய்
இருங்கடல் மூடி இறக்கும் இறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன் களேபரமும் கொண்டு கங்காளராய்
வருங்கடல் மீள நின்று எம்மிறை நல்வீணை வாசிக்குமே."

(திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்)

இக்கருத்துக் கொண்டு "சுடுகாட்டரசே" என்றார்.

"கோயில் சுடுகாடு"

(திருவாசகம்)

"விரிந்தே எரியும் சுடர் அனையாய்"
"சுடர் விடுசோதி யெம்பெருமான்"

எனத் தேவாரம் கூறும்.

(திருஞானசம்பந்தர்)

"சோதியே, சுடரே, பரந்ததோர் படரொளிப் பரப்பே"

(திருவாசகம்)

உளங்கனிந்த தொண்டர்க்குச் சிவன் அமுதம் போல்வான். சுடர்த் திருமேனியனுயினும் சுடுகாட்டரசனுயினும் அடியார்க்கு அமுதம் போன்றினிப்பவன். அடிகளுடைய தனிமையைத் தவிர்த்து ஒப்பற்ற துணேவனுவான். தனி நீக்குந் தனித்துணைத் தன்மையை அப்பர் சுவாமிகள்,

> "ஈன்றுளு மாய்எனக் கெந்தையுமாய் உடன்தோன்றினராய்
> மூன்றுய் உலகம்படைத் துகந்தான்மனத் துள்ளிருக்க
> ஏன்றுன் இமையவர்க் கன்பன் திருப்பாதிரிப் புலியூர்த்
> தோன்றுத் துணையா யிருந்தனன் தன்னடி யோங்களுக்கே."

என் விளக்குகிறுர்கள். இத்தகைய தனித்துணையை அடிகள் புலன்வழிச் சென்று பெண்களின்பத்தை விட்டாமையின், பிரிந்தமைக்குப் பெரிதும் இரங்கித் தம்மைக் கைவிடலாகாது என இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிறுர்.

39. தனித்துணை நீநிற்க யான்றருக்
 கித்தலை யானடந்த
வினைத்துணை யேனை விடுதிகண்
 டாய்வினை யேனுடைய
மனத்துணை யேயென் றன் வாழ்முத
 லேயெனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்றுய
 ராக்கையின் றிண்வலையே.

பதப்பிரிவு:

தனித்துணை நீநிற்க யான் தருக்கித்
 தலையால் நடந்த
வினைத்துணையேனை விடுதி கண்டாய்
 வினையேனுடைய
மனத்துணையே என் தன் வாழ்முதலே
 எனக்கு எய்ப்பில் வைப்பே
தினைத்துணையேனும் பொறேன் துயர்
 ஆக்கையின் திண் வலையே.

**உரை நடை :**

வினையேனுடைய மனத்துணையே, என் தன் வாழ் முதலே, எனக்கு எய்ப்பில் வைப்பே நீ தனித்துணை நிற்க, வினைத்துணையேன் யான் தருக்கித் தலையால் நடந்தேனை விடுதிகண்டாய் திண்வலை ஆக்கையின் துயர் தினைத் துணையேனும் பொறேன்.

**பொழிப்புரை :**

தீவினை வயத்தனாகி இருந்தும் என் மனத்தில் எப்போதும் துணையாக நிற்பவனே! என் நல்வாழ் வினுக்கு முதற்காரணமானவனே! நான் தளர்ந்து போன காலத்தில் நான் தேடி வைத்த பொருட் புதையல் போல எனக்கு முன் தோன்றித் தளர்ச்சியை நீக்கியருள்பவனே! இங்ஙனமாக நீ எனக்கு ஒப்பற்ற துணையாக நின்று ஆதரித்தலை அறிவாயாக. என் துன்பங்களுக்கெல்லாம் காரணமான வினையினையே துணையாகக் கொண்டு என்னிற் பெரியார் எவரும் இலர் என்ச் செருக்குக் கொண்டு தலைகுப்புறத் தீயவழிகளில் நடக்கின்ற பாவியேனைக் கைவிட்டு விடுவாயோ? எளிதாக அறுத்துக் கொள்ள இயலாமல் மிக்க வலிமையாக இருக்கும் வலை போன்றதாகிய இந்த உடலில் அகப் பட்டுப் படுங் கொடுந்துயரில் ஒரு சிறு தினையளவுந் தாங்கமாட்டாதவனாகத் தவித்து நிற்கின்றேன்.

**விளக்கம் :**

நல்வினை தீவினை என்னும் இருவினை வயப்பட்டு நிற்றலின் வினைத்துணையேனை என்றார். வினைகள் அறிவற்றன வாதலின் தாமே பயன் கொடா. உயிரும் தான் செய்த வினைகளை அறிய முடியாது; தானே அனுபவப் பொருள்களையும் படைத்துக்கொள்ள முடியாது. ஆதலின் இறைவனே மனத்தில் தோன்றாத் துணையாயிருந்து வினைப்பயனுக்கேற்ப மனத்தைச் செலுத்திப் பயனளிப்பன். ஆதலால், வினையேனுடைய மனத்துணையே என்றார்.

" இருவினை யின்பத் துன்பத் திவ்வுயிர் பிறந்திறந்து
வருவது போவதாகும் மன்னிய வினைப்பலன்கள்
தருமரன் தரணியோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவுங் கன்ம பலன்களும் மறுமைக் கண்ணே "

(சிவஞானசித்தியார்)

நமது சுற்றம் உடம்போடு வாழுங்கால் மட்டும் துணையாகும். ஆனால் இறைவன் கட்டு நிலையினும் வீட்டு நிலையினும் இம்மையிலும் மறுமையிலும் கருவினுள்ளும் பிறக்கும் போதும் இறக்கும் போதும் துணையாய் நிற்றலின் ' தனித்துணை ' என்றார். உயிர்க்கு இவ்வுலக வாழ்விலும் வீட்டு நெறி நிற்றற் கண்ணும் தளர்வு வந்துழி ஏமப்பொருளாயிருந்து துணைபுரிதலின் " எய்ப்பினில் வைப்பே " என்றார்.

" எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலா யெனையும் ஆள உரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே "

(இரண்டாந் திருமுறை)

இவ்வுடல் துயர் நிறைந்த உடல்

" அருந்துயர்க்குரம்பை "

(சிவஞானபோதம்)

இவ்வுடலினுள் அகப்பட்டு உயிர் தனது வியாபக அறிவு விளங்காது ஏகதேசப்பட்டு நிற்றலின் திண்வலை என்றார். இவ்வுடலை ஒரு சிறையாகக்கொண்டு

" காராகிருகக் கலியாழ்வேனை "

என்றார் **அருணந்திசிவம்.**

துயரக்கூட்டில் தினையளவு நேரங்கூட அடிகள் வாழத்தரியார். ஆக்கையின் திண்வலை ஆக்கைத் திண்வலை. இன் — அல்வழிச்சாரியை.

**40. வலைத்தலை மானன்ன நோக்கியர்**
**நோக்கின் வலையிற்பட்டு**
**மிலைத்தலைந் தேனை விடுதிகண்**
**டாய்வெண் மதியினொற்றைக்**
**கலைத்தலை யாய்கரு ணாகர**
**னேகயி லாயமென்னும்**
**மலைத்தலை வாமலை யாண்மண**
**வாளவென் வாழ்முதலே.**

**பதப்பிரிவு**

*வலைத்தலை மான்அன்ன நோக்கியர்*
*நோக்கின் வலையில் பட்டு*
*மிலைத்து அலைந்தேனை விடுதி கண்டாய்*
*வெள் மதியின் ஒற்றைக்*
*கலைத்தலையாய் கருணாகரனே*
*கயிலாயம் என்னும்*
*மலைத்தலைவா மலையாள் மணவாள*
*என் வாழ்முதலே.*

**உரை நடை :**

வெண்மதியின் ஒற்றைக் கலைத்தலையாய், கருணாகரனே, கயிலாயம் என்னும் மலைத்தலைவா, மலையாள் மணவாள, என் வாழ்முதலே வலைத்தலைமான் அன்ன நோக்கியர் நோக்கின் வலையில் பட்டு மிலைத்து அலைந் தேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

வெள்ளை நிறமான திங்களின் ஒரு கலையைத் தலையில் அணிந்தவனே! திருவருளுக்கு இருப்பிடமானவனே! கயிலாயம் என்று அடியார் அனைவரும் புகழும் மலைக்குத் தலைவனே! மலைமகளுக்குக் கணவனே! என் நல்வாழ்வுக்கு மூலகாரணம் ஆனவனே! வலையிலே அகப்பட்டமானின் மருண்ட பார்வை போல நோக்கும் கண்களையுடைய பெண்களின் பார்வையாகிய வலையிலே அகப்பட்டு மயங்கித் திரிந்து கொண்டிருக்கும் அடியேனைக் கைவிட்டு விடுவாயோ?

**விளக்கம் :**

வலைத்தலை மான் பார்வை அச்சத்தோடு கூடிய மருண்ட பார்வையாதலின், பெண்களுக்கு அமைய வேண்டிய குணமாகிய அச்சத்தோடு கூடிய மருண்ட பார்வை என்பார் வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கு என்றார். அச்சத்தோடு கூடிய மருண்ட பார்வை ஆடவரை மயக்குவதோடு ஆடவர் உதவி நாட்டத்தையும் புலப்படுத்தும். ஆதலின் மய்க்க நோய்க்கு மருந்துமாகும்.

> " இருநோக்கு இவள்உண்கண் உள்ள தொருநோக்கு
> நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. "

இவ்வாறு மயங்கித் திரிந்தேனை விடலாகாது என வேண்டிக் கொள்கிறார்.

வலைத்தலை — தலை ஏழனுருபு.

தக்கன் சாபத்தாற் பதினைந்து கலைகளும் தேய்வுற்று ஒற்றைக் கலையிருக்கும் போது சந்திரன் சங்கரன் தாளடைந்தான். சிவன் இளமதியின் ஒற்றைக் கலையைக் கருணை காட்டித் தலைமேல் தாங்கிக் கலைவளரச் செய்தமை அவன் அடைந்தாரைக் காக்கும் தன்மையைப் புலப்படுத்தும். ஒற்றைக் கலையிருக்கும் போதும் மதி இருளவில்லை யென்பார் வெண்மதி ஒற்றைக் கலை என்றார். கயிலாய மலைத் தலைவன் இமயமலை யரையன் மகளை மணந்து உயிர்களின் வாழ்முதலானான் என்பது நயம். நோக்கின்வலை — இன், அல்வழிச் சாரியை; நோக்காகிய வலையெனப் பண்புத் தொகையில் சாரியை வந்தமையின் அல்வழிச் சாரியை.

41. முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந்
நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண்
டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்சிவ
னேமுறை யோமுறையோ
திதலைச் செய் பூண்முலை மங்கைபங்
காவென் சிவகதியே.

பதப்பிரிவு :

முதலைச் செவ்வாய்ச்சியர் வேட்கை
வெங்நீரில் கடிப்ப மூழ்கி
விதலைச் செய்வேனை விடுதி கண்டாய்
விடக்கு ஊன் மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்
சிவனே முறையோ முறையோ
திதலைசெய் பூண்முலை மங்கை பங்கா
என் சிவ கதியே.

உரை நடை :

சிவனே திதலைச்செய் பூண்முலை மங்கை பங்கா, என் சிவகதியே, செவ்வாய்ச்சியர் முதலை கடிப்ப வேட்கை வெங்நீரில் மூழ்கி விதலைச் செய்வேனை விடுதி கண்டாய்; விடக்கு ஊன்மிடைந்த சிதலைசெய் காயம் பொறேன் முறையோ முறையோ.

**பொழிப்புரை :**

சிவபெருமானே! தேமல் படர்ந்த, அணிகள் அணியப்பெற்ற மார்பினள்ஆகிய அம்மையை இடப் பாகத்தில் உடையவனே! நான் அடைய இருக்கும் முத்திப் பெரும் பேருக விளங்குபவனே! சிவந்தவாயினை யுடைய பெண்களாகிய முதலை விடாது பற்றக் காமம் ஆகிய வெங்நீரில் அமிழ்ந்து அதனுல் நடுநடுங்கும்

அடியேனைக் கைவிட்டுவிடாதே. முடைநாற்றமுடைய புலால் பொதிந்த நோய் விளைக்கும் இந்த உடலைத் தாங்கும் ஆற்றல் இல்லாதவனாயினேன். இத்துன்ப வாழ்க்கையில் அடியேனை ஆழ்த்துதல் முறையாகுமா, முறையாகுமா?

**விளக்கம் :**

காமத்தீ உள்ளினும் சுடுமாதலின் வேட்கை வெந்நீர் என்றார்.

"வாய்ச்சியர்" — சினையான் வருபெயர். முதலை பற்றிப்பிடித்து எவ்வளவு பெரிய விலங்கினையும் நீர் நிலையுள் இழுப்பது போலப் பெண்கள் தம் பிடியில்அகப்பட்டவரைக் காமவெள்ளத்துள் அழுத்துவர் என்பதாம். ஆதலின் அடிகள் பெண்களை முதலையாகக் கூறினார். முதலை என்னுஞ் சொற்குச் செங்கிடை எனப் பொருள் கொண்டு செந்நிறக் கிடைச்சுப் போன்ற வாய் எனவும் பொருள் கொள்ளலாம்.

விதலைச் செய்தல் — நடுங்குதல்

கடிப்ப என்பதற்குக் கடி என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சமாக்கொண்டு அச்சந்தரும்படி எனவும பொருள்கொள்ளலாம். என் சிவகதியே என்றார் தம்மை ஞானாசிரியனாகவந்து சிவபெருமான் ஆண்டு கொண்ட முறைமைபற்றி. செவ்வாய்ச்சியர் கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயிதழ்களையும் ஆடவரை வசப்படுத்துங் குயில்போன்ற இனியமொழியையும் உடைய பெண்கள்.

விடக்கு ஊன்மிடைந்த சிதலைச்செய்காயம் — மக்களுடம்பு தோல், இரத்தம், இறைச்சி, எலும்பு முதலிய தீநாற்றமுள்ள பொருள்களாலாயது; மேலும் நடுங்கத் தக்க பிணிகளிக்கும் இருப்பிடமானது; ஆதலின் விடக்கூன் மிடைந்த சிதலைச்செய்காயம் என்றார். சிவன்-

மலமற்ற மங்கல வடிவினன்; இன்பவடிவினன். ஆதலின் தமது புன்புலால் யாக்கையை ஒழித்து இறைவனடி நீழலில் அடிகள் இருக்க விரும்புகின்றார். காயம் பொறேன் என்பதில் பாச நீக்கமும், சிவகதியே யென்பதில் சிவப்பேறும் அமைந்துள்ளன. செவ்வாய்ச் சியராகிய முதலே கடிப்ப வேட்கை வெங்நீரில் மூழ்கி எனக்கூட்டுக.

முதலைச் செவ்வாய்ச்சியர் வேட்கை வெங்நீரில் கடிப்ப மூழ்கி — முதலை கடிப்ப வெங்நீரில் மூழ்கியென நிரனிறையாகக் கொள்க.

வெம்மை — விருப்பு; வேட்கை வெங்நீர் — வேட்கை யாகிய விருப்பந்தரும் நீர்: விருப்பந்தருவதாயினும் தன்னுட்படிந்தாரது அறிவை அழிக்கும் என்பதாம்.

வெங்நீர் — தீக்குணம் எனக் கொள்ளின் காமத் தீக்குணத்தழுந்தி யென்பது கருத்தாகும்.

**42 கதியடி யேற்குன் கழறந்**
**தருளவு மூன் கழியா**
**விதியடி யேனை விடுதிகண்**
**டாய்வெண் டலைமுழையிற்**
**பதியுடை வாளரப் பார்த்திறை**
**பைத்துச் சுருங்கவஞ்சி**
**மதிநெடுநீரிற் குளித்தொளிக்**
**குஞ்சடை மன்னவனே.**

**பதப்பிரிவு** ·

கதி அடியேற்கு உன் கழல் தந்து அருளவும்
ஊன்கழியா
விதி அடியேனை விடுதி கண்டாய்
வெள்தலை முழையில்
பதி உடை வாள் அரப் பார்த்து
இறை பைத்துச் சுருங்க அஞ்சி
மதி நெடு நீரில் குளித்து ஒளிக்கும்
சடை மன்னவனே.

**உரை நடை :**

வெண்தலை முழையில் பதி உடை வாள் அர (மதியைப்) பார்த்து இறைபைத்து அஞ்சிச்சுருங்க மதி அஞ்சி நெடு நீரில் குளித்து ஒளிக்கும் சடை மன்னவனே அடியேற்குக் கதி உன் கழல் தந்து அருளவும் ஊன் கழியா விதி அடியேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

வெண்டலையிலுள்ள துளையில் தங்குதலையுடைய ஒளி பொருந்திய பாம்பு தன் அருகே உள்ளே திங்களைப் பார்த்துத்தனக்கு இயற்கையாக உள்ள பகைமையினாலே அதனைத்தாக்குமாறு சிறிது படம் எடுத்தபின் தம் இருவருக்கும் தலைவன் அருகிருத்தலை உணர்ந்து அடங்கிக்கொள்ள, பாம்பு தன்னை விழுங்கி விடுமோ என்று அஞ்சித் திங்கள் ஆழமான கங்கை நீரில் மூழ்கி ஒளித்துக் கொள்ளும் சடை முடியை உடைய தலைவனே! நின் அடியவனாகிய எனக்குப் புகலிடமாக உன்னுடைய திருவடிகளை நீ தந்தருளியுங் கூட உடலை விட்டு நீங்க முடியாது அதனுடன் வாழும் தீவினையுடைய அடியேனைக் கைவிட்டுவிடுவாயோ ?

**விளக்கம் .**

தாருக வனத்து முனிவர் இயற்றிய வேள்வியிற் றோன்றிய வெண்டலையைச் சிவபெருமான் சடையில் தரித்துக்கொண்டான். அங்குத் தோன்றிய பாம்புகளையும் கருடனுக்கு அஞ்சித் தன்னை வழிபட்ட பாம்புகளையும் சிவன் அணிந்து கொண்டான்.

சிவபெருமான் அணிந்து கொண்ட பாம்புகள் சிவனை வழிபடவரும் திருமாலின் கலுழனைப் பார்த்துக் "கருடா சுகந்தானா" என்று பயமின்றி வினவின.

"பன்னகங்களைப் பணியெனத் தாங்கினன் பன்னகாபரணன்றன்
இன்னருட் பெறும் மதுகையான் மற்றவை யெந்தைபால்
அரியோடுந்
துன்னுவெம்பகைக் கலுழனைக்கலுழனே சுகங்கொல் என்றஞ்
சாமே
பன்னிமேன்மையின் வினயின இம்மொழிபாரெலாம்
எடுத்தோதும்."

"சிறியராயினர் சார்பினைவிழையன் மின்திறல்கெழு பெரியோராம்
அறிஞரா யினர்சார்பினைவிழை மினேஅலரிதழ் விரிகொன்றை
வெறிநறுந் தொடைஎம்பிரான் சார்பினைவிழைதலால் உரகங்கள்
மறுவில்ஆற்றல் சால்கலுழனை வினயின 'வாழ்ந்தனையோ'
என்ன."

(காஞ்சிப்புராணம்-சிவஞான சுவாமிகள்)

பாம்பு வெண்தலை முழையில் தங்கும்; தன் வழக்கம் போல முழையிலிருந்து தலையை நீட்டும், சிறிது படம் விரிக்கும். தான் சார்ந்திருக்கும் இடம் நோக்கிச் சிவபெருமானுக்கு அஞ்சி உடனே படத்தைச் சுருக்கி விடும். இதனைத் தலையிலுள்ள மதி கண்டு அஞ்சிக் கங்கையிற் குளித்து மறைந்து கொள்ளும்.

முன் திங்களையும் அரவினையும் நேர்வைத்துப் பகைமை தீர்த்ததாகக் கூறினர்; ஈண்டு இவ்வாறு கூறலாமோ எனின் முத்தர்களுக்குச் சிவனைச் சார்ந்த இடத்தும் சிறிது பாச வாசனை தாக்கும், உடனே அவர் சிவனை நினைத்துப் பழக்கம்பற்றி வரும் தீய எண்ணத்தை மாற்றிக் கொள்வர் என்ற உண்மை விளக்குவார் இவ்வாறு கூறினர்.

"ஐம்பொறியி னல்லையெனும் அந்தரா சிவனை
ஐம்பொறியை விட்டங் கணைசகலன் — ஐம்பொறியின்
நீங்கான் நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்
நீங்கானை நீங்கு நினைந்து."

(சிவஞானபோதம்)

திருவடிஞானத்தைத் தந்து எனக்குச் சீவன் முத்த நிலையருளினுய்; மேலும் பசுஞான பாசஞானங்கள் விதியாகிய வினைகாரணமாக வாசனைபற்றித் தாக்கினும் கைவிடலாகாது என அடிகள் விண்ணப்பித்துக்கொள்கிருர்.

பதி — தங்குதல்.

இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

பைத்து – பைஎன்னும் பெயரடியாகப்பிறந்த வினையெச்சம். சுருங்க என்னும் வினைகொண்டது.

**43 மன்னவ னேயொன்று மாறறி**
**யாச்சிறி யேன்மகிழ்ச்சி**
**மின்னவ னேவிட் டிடுதிகண்**
**டாய்மிக்க வேதமெய்ந்நூல்**
**சொன்னவ னேசொற் கழிந்தவ**
**னேகழி யாத்தொழும்பர்**
**முன்னவ னேபின்னு மானவ**
**னேயிம் முழுதையுமே.**

**பதப்பிரிவு :**

மன்னவனே ஒன்றும்ஆறு அறியாச்
சிறியேன் மகிழ்ச்சி
மின்னவனே விட்டிடுதி கண்டாய்
மிக்கவேதம் மெய்ந்நூல்
சொன்னவனே சொல்கழிந்தவனே
கழியாத் தொழும்பர்
முன்னவனே பின்னும் ஆனவனே
இம் முழுதையுமே.

**உரைநடை :**

மிக்கவேதம் மெய்ந்நூல் சொன்னவனே, சொல்கழிந்தவனே, கழியாத் தொழும்பர் முன்னவனே. பின்னும்

இம்முழுதையும் ஆனவனே, மன்னவனே ஒன்றும் ஆறு அறியாச் சிறியேன் மகிழ்ச்சி மின்னவனே விட்டிடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

பலபடியான கருத்துக்கள் நிரம்பிய மறையினையும், உண்மைப் பொருள் கூறும் நூலாகிய ஆகமத்தினையும் அருளிச் செய்தவனே! இத்தன்மையன் எனச் சொல்ல முடியாதவனே! எப்போதும் தொண்டு செய்தலை விட்டு நீங்காதிருக்கும் அடியார்களுக்கு முன்னே தோன்றியருள் பவனே! அடியார்களுக்குப் பின்புறத்திலும் மற்றும் எல்லாப் பக்கங்களிலும் பொருந்தி நின்று அவர்களைப் பாதுகாப்பவனே! எங்கும் பொருந்தியிருப்பவனே! உன்னோடு பொருந்தும் வழிஅறியாத அற்பனாகிய அடியேனுக்கு இன்பம் உண்டாக்கும் ஒளிமயமானவனே! என்னைக் கைவிட்டு விடுவாயோ?

**விளக்கம்.**

வேதம் — மறை, மெய்ந்நூல் — ஆகமம். வேதம் உலகர்க்குச் செய்யப்பட்டது. ஆகமம் அருள் வழி நாடும் சத்திநிபாதர்க்கு அருளிச் செய்யப் பெற்றது.

"வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அநாதி அமலன் தருநூல் இரண்டும்
ஆரணநூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்
நீதியினல் உலகர்க்குஞ் சத்திநி பாதர்க்கும் நிகழ்த்தியது."

(சிவஞான சித்தியார்)

"உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதும்
நிலவு மெய்ந் நெறி சிவ நெறிய தென்பதும்"

(திருத்தொண்டர் புராணம்)

இறைவன், வாக்கு மனாதீத கோசரன், ஆகலின் சொற்கழிந்தவன் என்றார். இறைவன்,

"பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்"

"வேத சாத்திரம் மிருதி புராண கலை ஞானம்
விரும்பசபை வைகரியாதித்திறங்கள் மேலாம்
நாத முடிவான வெல்லாம் பாச ஞானம்."

(சிவஞான சித்தியார்)

பதிஞானந்தலைப்பட்டு இடைவிடாமல் திருத் தொண்டுபுரிபவர் எப்பக்கமும் சிவத் தோற்றங் காண்பர்.

முழுதையும் — ஐகாரம் சாரியை

ஒன்றியிருத்தல் – இறைவன் அறிவோடு உயிரறிவானது, அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் (ஞாதிரு, ஞான, ஞேயம்) என்ற பகுப்பின்றி ஒற்றித்து நின்றுணர்தல்.

மன்னவன் என்பதற்கு நிலைபெற்றிருப்பவன் என்றும் பொருள்கொள்ளலாம்.

"ஆன்மாவின் வேறுய்ச் சிவன் கண்ணேயுளவாகிய முற்றுணர்தல் முதலிய எண்வகைக்குணங்களும் ஆன்மாவின் மாட்டு மேம்பட்டு விளங்கும் விளக்கமே சிவாநந்தஇன்பம்; ஆன்மா அதுவதுவாய் அழுந்தி நின்று அவ்விளக்கத்தை அறிதலே அனுபவம்."

(சிவஞான பாடியம்)

இக்குணங்களை விளங்கச்செய்பவன் சிவன். 'மகிழ்ச்சி மின்னவனே' என்றார், குருவடிவில்வந்து சிவானந்த இன்பங்காட்டிப்பின் மின்போல் மறைந்தமையின்.

"தேவாதி தேவன் சிவன் என் சிந்தை சேர்ந்திருந்தான்
எண்குணத்துளோமே."

(திருநாவுக்கரசு சுவாமிகள்-திருத்தாண்டகம்.)

44. முழுதயில் வேற்கண் ணியரென்னு
மூரித் தழன்முழுகும்
விழுதனே யேனை விடுதிகண்
டாய்நின் வெறிமலர்த்தா
டொழுதுசெல் வானத் தொழும்பரிற்
கூட்டிடு சோத் தெம்பிரான்
பழுது செய் வேனை விடேலுடை
யாயுன்னைப் பாடுவனே.

பதப்பிரிவு ?

முழுது அயில் வேல் கண்ணியர் என்னும்
மூரித்தழல் முழுகும்
விழுது அனையேனை விடுதி கண்டாய்
நின் வெறி மலர்த்தாள்
தொழுது செல்வானத் தொழும்பரில்
கூட்டிடு சோத்து எம்பிரான்
பழுது செய்வேனை விடேல் உடையாய்
உன்னைப் பாடுவனே.

உரைநடை :

எம்பிரான், உடையாய், உன்னைப் பாடுவனே, அயில்வேல் கண்ணியர் என்னும் மூரித்தழல் முழுதும் முழுகும் விழுது அனையேனை விடுதி கண்டாய் நின்வெறி மலர்த்தாள் தொழுது செல்வானத் தொழும்பரில் கூட்டிடு, சோத்து; பழுது செய்வேனை விடேல்.

பொழிப்புரை:

எம்பெருமானே! என்னை அடிமையாய் உடையவனே! உன்னைப் பாடுவேன். கூர்மையான வேலாயுதம் போன்ற கண்ணையுடைய பெண்கள் என்னும் மிக்க தீயிலே

விழுந்து முழுதும் உருகி ஒழிந்து போகும் வெண்ணெய் போல அழிந்து கெடும் எளியேனைக் கைவிட்டு விடு வாயோ? உன்னுடைய மணம் மிக்க சிவானந்தத் தேன் நிறைந்த மலர் போன்ற திருவடிகளைக் கும்பிட்டுச் செல் கின்ற மேலான அடியார் கூட்டத்திலே அடியேனையும் சேர்த்தருள். உனக்கு வணக்கம். குற்றமே செய் திருக்கும் அடியேனைக் கைவிட்டு விடாதே.

**விளக்கம் :**

எல்லா உயிர்களும் சிவபெருமானுக்கு அடிமை. எல்லாப்பொருள்களும் அவனுடைய உடைமை. ஆதலின் உடையாய் என்றார். இயற்பகைநாயனார் கொண்டது போலப் பெண்ணுடலும் சிவபெருமானுக்கு உடைமை எனக்கொள்ளின் தனக்கு இச்சை குறையும். பெண்டிர்தம் நோக்கே ஆடவரை மயக்குவது: ஆதலின், அ.யில்வேற் கண்ணியர் என்றார்.

> **"பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்**
> **பெண்தகையாற் பேரமர்க் கட்டு."**

**(திருக்குறள்)**

'வேட்கைத்தீயில் விழுந்தோர் தப்பவே முடியாது; அவர்கள் அழிதல் ஒருதலை' யென்பதை இவ்வுவமையாற் கூறினார். பெருநெருப்பில் விழுந்த வெண்ணெய் முழுதும் உருகி அழிதலைப் போல், பெண்கள் வேட்கைத் தீயிற் பட்டு அழிகின்ற தம்மைக் கைவிடலாகாதெனக் கூறுகிறார் அடிகள். "அவர் உலகப் பற்றுச் சிறிதும் இல்லாதவர் என்பது தெளிவு. ஆதலால், உலகர்க்கு அறிவுறுத்தும் பொருட்டுத் தம்மேல் ஏற்றிக் கூறினார்" எனக்கொள்க. ஞான மணம் கமழ்ந்து அருளாகிய தேன் பொழிகின்ற சிவன் தாள் மலரை வணங்கித் திருவடி சேர்கின்ற சிவனடியார் இணக்கத்தை யருளும் படி இறைவனை அடிகள் வேண்டுகிறார். பாசவாதனை தீர்தற்கு மெய்யடியாரை அறிந்து விரும்பிச் சேரின் அவ்விணக்கத்தாற் பாசப்பற்று அறவே ஒழியும்.

இழிந்தோர் உயர்ந்தோரை எவ்வாறு வணங்குவாரோ அவ்வளவு பணிவுடன் இறைவனை வணங்க வேண்டுமென்பார் 'சோத்தெம்பிரான்' என்றார். "எம்பிரானே" வணக்கம்! சோத்து-சோத்தம், இழிந்தோர் செய்யும் வணக்கம்.

"சோத்தெம்பிரானென்று சொல்லிச் சொல்லி."

(திருப்பொற்சுண்ணம் 8)

சிறந்த அடியார் திருக்கூட்டம் வேண்டுமென வேண்டுவார் 'வானத்தொழும்பரிற் கூட்டிடு' என்றார். திருவாரூர்ச் சிவபெருமான் நம்பி ஆரூரரை அடியார் இலக்கணம்கூறி அவரை நீ அடைவாயெனப் பணிக்கிறார்:

"பெருமையால் தம்மை ஒப்பார், பேணலால் எம்மைப் பெற்றார்,
ஒருமையால் உலகை வெல்வார், ஊனம் மேல் ஒன்று மில்லார்,
அருமையாம் நிலையில் நின்றார், அன்பினால் இன்பம் ஆர்வார்,
இருமையும் கடந்து நின்றார்; இவரை நீ அடைவாய் என்று."

மூரி – பெருமை.

விழுது – வெண்ணெய்.

45 பாடிற்றி லேன்பணி யேன்மணி
நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண்
டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றி லேன்சிவ னெவ்விடத்
தானெவர் கண்டனரென்
றோடிற்றி லேன்கிடந் துள்ளுரு
கேனின் றுழைத்தனனே.

பதப்பிரிவு

பாடிற்றிலேன் பணியேன் மணி
நீ ஒளித்தாய்க்குப் பச்சூன்
வீடிற்றிலேனை விடுதி கண்டாய்
வியந்து ஆங்கு அலறித்
தேடிற்றிலேன் சிவன் எவ்விடத்தான்
எவர் கண்டனர் என்று
ஓடிற்றிலேன் கிடந்துஉள் உருகேன்
நின்று உழைத்தனனே.

**உரை நடை :**

மணி, நீ ஒளித்தாய்க்குப் பாடிற்றிலேன் பணியேன் பச்சூன் வீடிற்றிலேனை விடுதி கண்டாய் ஆங்கு வியந்து அலறித் தேடிற்றிலேன் "சிவன் எவ்விடத்தான் எவர் கண்டனர்" என்று ஓடிற்றிலேன் கிடந்து உள்உருகேன் நின்று உழைத்தனனே.

**பொழிப்புரை :**

மாணிக்கமே! அடியேனுக்குக் காட்சியளித்து மறைந்து கொண்ட உன்னைப்பாடி அழைத்தேன் இல்லை. பணிந்து கூவினேன் இல்லை, பச்சைத்தசையால் ஆகிய உடம்பினை ஒழித்தேன் இல்லை. என்னைக் கைவிட்டு விடுவாயோ? நீ மறைந்து போன உடனே உன்னுடைய திருவருளை வியந்து, ஓ என அலறி உன்னைத் தேடினேன் இல்லை, " சிவபெருமான் எவ்விடத்தில் மறைந்திருக்கிறான்? அவனைக்கண்டவர் யார்?" என்று எங்கும் ஓடிப் பார்த்தேன் இல்லை. ஓரிடத்தில் அழுத்துக் கிடந்து உள்ளம் உருகினேன் இல்லை. ஆனால் உலகப் பற்றுக்களைக் கண்டு திகைத்து ஈடுபட்டுப் பாவம் பெருகுமாறு உழைக்கின்றேன்.

**விளக்கம் :**

மணி — குரு மணி. குருவடிவில் வந்த ஒளியான திருமேனி அடிகள் கண்ணுள் நிற்றலின் மணி என்ருர். "நின் ஆசிரியக்கோலத்தைக் கரந்தாய்; உடனே இஃது எக்காலத்தும் நிகழாத செயலென வியப்புற்று அவ்விடத்திலேயே கதறி அழுது தேட வேண்டும். உன்னைத் தேடித் திரிந்து பிரிவாற்ருமை குறித்துச் செய்ய வேண்டிய அன்பிற்குரிய செயலொன்றுஞ் செய்யாது உடல் ஓம்புதற் பொருட்டு இடைவிடாது உலக முயற்சியைத் தலைப்பட்டேன்" என அடிகள் வருந்துகிருர்.

பாடிற்றிலேன் – பாடு – பகுதி, இற்று – சாரியை, இல் – எதிர்மறை இடைநிலை, ஏன் – தன்மை ஒருமை வினைமுற்று விகுதி.

ஆசிரியன் திருமேனியை 'மணி' யென்றும் தன்னுடலை இழிவான பச்சூன் என்றும் அடிகள் கூறுதல் குருமூர்த்தியின் உயர்வினையும் அடிகளின் பணிவினையும் புலப்படுத்தும்.

ஆங்கு -- அவ்விடத்தே, அப்பொழுதே.

ஒரு தாய் தப்பவிட்ட தன் குழந்தையைத் தேடுங்கால் அலறுவாள்; கண்டவர்களையெல்லாம் 'என் பிள்ளையைக் கண்டீர்களா?' என்று வினவுவாள். அதுபோல ஆசிரியனைத் தாம் தேடவில்லையே என்று அடிகளார் இரங்குகிருர். ஞானுசிரியனிடத்து அடிகளுக்கிருந்த தலைசிறந்த அன்பு ஈண்டுப் புலனுகிறது.

**46 உழைதரு நோக்கியர் கொங்கைப்**
**பலாப்பழத் தீயினெப்பாய்**
**விழைதரு வேனை விடுதிகண்**
**டாய்விடின் வேலைநஞ்சுண்**
**மழைதரு கண்டன் குணமிலி**
**மானிடன் தேய்மதியன்**
**பழைதரு மாபர னென்றென்**
**றறைவன் பழிப்பினையே.**

பதப்பிரிவு :

உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப்பழத்து ஈயின் ஒப்பாய்
விழைதருவேனை விடுதிகண்டாய்
விடின் வேலை நஞ்சுஉண்
மழைதரு கண்டன் குணம்இலி
மானிடன் தேய்மதியன்,
பழைதரு மாபரன் என்று என்று
அறைவன் பழிப்பினையே

உரைநடை :

பலாப்பழத்து ஈயின் ஒப்பாய் உழைதருநோக்கியர் கொங்கை விழைதருவேனை விடுதிகண்டாய்; விடின் "வேலைநஞ்சு உண் மழைதரு கண்டன், குணம்இலி, மானிடன், தேய்மதியன், பழைதரு மாபரன்" என்று பழிப்பினையே என்றும் அறைவன்.

பொழிப்புரை :

பலாப் பழத்திற்சென்று மொய்த்து உண்ணும் ஈயைப்போல மான்விழிபோன்ற விழிகளையுடைய பெண்களின் நகிலை விரும்பிக்கிடக்கின்ற என்னைக் கைவிட்டு விடுவாயோ? கைவிட்டுவிடுவாயேயானால் "கடலிலே தோன்றிய ஆலகாலத்தை உண்ணும் மேகம்போன்ற கரிய கழுத்தினன், குணம் இல்லாதவன், மனிதன், குறைந்த அறிவினன், பழைய பெரிய பரதேசி" என்று உன்பழிகளை எக்காலத்தும் பலரும் அறிய எடுத்து மொழிவேன்.

விளக்கம் :

பின் இரண்டடிகள் பழித்தல்போன்ற புகழ்தல்ஆம். மானிடன் — மானை இடக்கையில் ஏந்தியவன், கலை மான்போன்ற உமையை இடப்பாகம் உடையவன்.

தேய்மதியன் – குறைந்த பிறைச்சந்திரனை அணிந்தவன். குணமிலி — முக்குணங்களைக் கடந்தவன்.

"முக்குணங்களின் மூவரைத் தோற்றி
மூவருக்கும் முத்தொழில் வகுத்தருளி
அக்குணங் களுக்கதீதமாய் நிறைவாய்
அத்து வாக்களைக்கடந்தவன்."

(சிவஞான முனிவர்)

பழை—கள். மா – வெறுப்பு. பரன் — அயலான்; கள்ளினைப் போன்று வெறுக்கத்தக்க அயலான்.

பழைதரு மாபரன — பழைய பெரிய பரம் பொருள். முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய சிறந்த மேலான பொருள். தனக்குமேல் ஒருவருமின்றித் தான் யாவர்க்கும் மேலாக விளங்குபவன் முழுமுதற் கடவுள். உழை – மான் தரு – உவமைச்சொல். மழை தருஎன்புழியும் தருஉவமைச்சொல். மகளிர் தம் கடைக் கண்ணின் மருண்ட பார்வையாலும் கொங்கைப்பணைப் பாலும் ஆடவரை மயக்குவர். பலாப்பழத்தின் மணமும் சுவையும்பற்றி ஈக்கள் தாமாகச்சென்று மொய்த்தல் போல ஆடவர் தாமாகக் காணுதற்கும் தோய்தற்கும் மகளிர் விரும்புறுவர் என்பதாம். விழை தரு – விழைதா– பகுதி, விரும்பு. அடிகள் மக்கள்பாற் காணப்படும் இக் காமவிழைவின் காரணமாக இறைவன் அவர்களைக் கைவிட்டுவிடலாகாது, கருணைப்பெருக்கினால் அவர்கள் பிழை பொறுத்துத் தவிர்த்து ஆட்கொள்ள வேண்டு மென இறைவனைத் தமக்கு வேண்டுவது போன்று உயிர்களுக்காக வேண்டுகிறார்.

பழித்தல்போன்று புகழ்கிறார்.

செம்மேனியனுக்குக் கண்டங்கறுத்தது அழகு மிகுவதற்கே. விடத்தைக் கண்டத்தில் நிறுத்தியமை இறைவன் பேராற்றலை விளக்கும்.

"நாரணுதியர் கிளர்ச்சியை நோக்கிநன் கருளிக்
கோரவல்விட மிடற்றிடை யமைத்தனன் குழகன்
ஆரவாயிடை வயிற்றிடை யன்றிமற் றிடைக்கண்
ஆரமைத்திட வல்லவர் அமிழ்தமே யானும்."

(காஞ்சிப்புராணம்)

குணமிலி – பிரகிருதி காரணமான முக்குணங்கள் இல்லாதவன் இஃது இறைவனுக்குப் புகழே. இம் முக்குண விளக்கம் உலக அனுபவித்திற்கே ஏற்றது. சிவனே தனக்கே உரிய எண்குணங்களை உடையவன்.

**47 பழிப்பினின் பாதப் பழந்தொழும்**
**பெய்தி விழப்பழித்து**
**விழித்திருந் தேனை விடுதிகண்**
**டாய்வெண் மணிப்பணிலங்**
**கொழித்துமந் தாரமந் தாகினி**
**நுந்தும்பந் தப்பெருமை**
**தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ்**
**சேர்தரு தாரவனே.**

பதப்பிரிவு:

பழிப்புஇல் நின் பாதப் பழம்தொழும்பு
எய்தி விழப் பழித்து
விழித்திருந்தேனை விடுதி கண்டாய்
வெண்மணிப் பணிலம்
கொழித்து மந்தாரம் மந்தாகினி
நுந்தும் பந்தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலம்
சேர்தரு தாரவனே.

உரைநடை:

பந்தப் பெருமை தழீஇ வெண்மணிப் பணிலம் கொழித்து மந்தாரம் நுந்தும் மந்தாகினிச் சிறைநீரில் பிறைக்கலம் சேர்தருதாரவனே பழிப்பு இல் நின்பாதப்

பழந் தொழும்பு எய்தி, விழ, பழித்து விழித்திருந்தேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

கட்டுக்கு அடங்கிய பெருமையைப் பெற்று வெள்ளை நிறமான முத்துக்களையுடைய சங்குகளைச் செழிப்புற ஒதுக்கி மந்தாரப் பூக்களையும் கரை சேர்க்கும் கங்கை யாறு அடங்கிய பேரணைக்கட்டு நீரில் பிறையாகிய தோணி சேர்ந்திருக்கும் மாலையை அணிந்தவனே! குற்றம் அற்ற நின் திருவடிக்குச் செய்யும் பழமையான தொண்டினை மேற்கொண்டு பின் அந்நிலை தவறி விடுத லால் அத்திருவடித் தொண்டினைக் குறைகூறி இன்னது செய்வது என்று அறியாமல் திகைத்திருக்கும் அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? (கைவிடலாகாது)

**விளக்கம் :**

பிறையைச் சிவபெருமான் தலைக்கு மாலையாக அணிந்துள்ளான்.

"மாதர் பிறைக்கண்ணி யானை"
(திருநாவுக்கரசர் தேவாரம்)

மந்தாகினி—கங்கையாறு. நுந்தும்—கரை சேர்க்கும்; கங்கையாறு அருள் வெள்ளத்தைக் குறிக்கும். கலை குறைந்த மதிபோல மெய்யுணர்வுக் குறையுடைய உயிர் களும் சிவன் தாள் வணங்கிற் சிவன் அருள் வெள்ளத் தில் மிதக்கச் செய்து மெய்யுணர்வுக் குறை தீர்ப்பான் என்பதாம்.

தழீஇ என்னும் சொல்லிசை அளபெடை எதுகை நோக்கி விகாரத்தால் தொக்கது. திருவடித் தொண்டில் அடிகள் தலைப்பட்டார்; உலகியல் தோய்வினுல் அத் தொண்டு சிறிது நழுவுமாயின் தன்னை உலகியல் ஈடு பாட்டிற்காகப் பழித்துத் திருவருள் மீள எப்போது பதியும் என்று விழித்துக் கொண்டே இருப்பார். உலகியலில்

நம் போன்று மயங்கித் திருத் தொண்டினைக் கைவிட மாட்டார்; சிறிது நழுவினதற்காகத் தம்மைக் கைவிடலாகாதென இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிறார். 'கங்கைச் சிறை நீரிற்பிறைக்கலம்' உருவகஅணி; முன் 130வது செய்யுளில் "மதியை நீர்மடுவுள் மலைச் சிறுதோணியாக" உருவகஞ் செய்தார். ஈண்டுச் சிறை நீரிற் கலமாக உருவகஞ் செய்கிறார். இறைவன் சடை அணையாகும். மந்தாகினி—கங்கை.

48. தாரகை போலுந் தலைத்தலை
 மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண்
 டாய்விடி லென்னை மிக்கா
ராரடி யானென்னி னுத்தர
 கோசமங் கைக்கரசின்
சீரடியாரடி யானென்று
 நின்னைச் சிரிப்பிப்பனே.

பதப்பிரிவு :

தாரகை போலும் தலைத்தலை மாலை
 தழல் அரப் பூண்
வீர என் தன்னை விடுதிகண்டாய்
 விடில் என்னை மிக்கார்
ஆர் அடியான் என்னின்
 உத்தரகோச மங்கைக்கு அரசின்
சீர் அடியார் அடியான் என்று
 நின்னைச் சிரிப்பிப்பனே.

**உரை நடை :**

தலை தாரகைபோலும் தலைமாலை தழல் அர பூண் வீர! என்தன்னை விடுதிகண்டாய்? விடில், என்னை மிக்கார் "ஆர் அடியான்?" என்னின் "உத்தரகோச மங்கைக்கு அரசின் சீர் அடியார் அடியான்" என்று நின்னைச் சிரிப்பிப்பன்.

**பொழிப்புரை :**

தலையில் விண்மீன்கள்போன்ற வெண்தலைமாலையினையும் தீப்போன்ற நஞ்சுடைய பாம்பாகிய அணிகலன்களையும் அணிந்த வீரனே! என்னைக் கைவிட்டுவிடுவாயோ? கைவிட்டுவிடுவாயேயானால், என்னுடைய சீரழிந்த நிலையைப்பார்த்து என்னினும் சிறந்த அடியார்கள் "நீ யாருக்கு அடியான்" என்று கேட்டால் "நான் உத்தரகோசமங்கைப் பதிக்கு அரசனாகிய சிவபெருமானுடைய சிறந்த அடியார்க்கு அடியவன்" என்று மறுமொழி கூறி உன்னை அவர்கள் இகழ்ந்து நகைக்கும்படி செய்வேன்.

**விளக்கம் :**

பிரமாக்கள் எண்ணில் கோடிப்பேர். நாராயணர்களுக்கும் எண்ணிக்கையில்லை. இவர்கள் எல்லாரும் உயிர்கள்; இறந்தொழிவர். தான் ஒருவனே ஈறில்லாதவன் என்பதை உணர்த்த இவர்கள் தலைகளையெல்லாம் மாலையாக அணிந்துள்ளான் சிவபெருமான்.

"செத்தவர்தந் தலைமாலை கையிலேந்திச் சிரமாலைசூடிச் சிவந்த மேனி"

(அப்பர்பெருமான் திருமுறை-6)

தழல் ஈண்டு நஞ்சு. நச்சுப் பாம்பினை அணியாக அணிந்துள்ளான். எல்லா உயிர்களையும் அழித்து மாசங்காரக் கடவுளாக விளங்குகிற நீ, பாம்புகளை அணியாகப் பூணுகிற நீ, பெரிய வீரன். அவ்வாறிருந்தும்

சிறியேனைக் கைவிடலாமா? மிக்கார் அறிவு, ஒழுக்கம், இறையன்பு இவற்றில் தன்னை விடச் சிறந்தவர். "திருஉத்தர கோசமங்கை பூலோக சிவபுரம். அதற்கு அரசராகிய சிவபெருமானுக்கு அடிமை, இவ்வாறு கை விடப்பட்டுத் திரிகிறான் எனில் உலகம் உன்னை இகழுமே யன்றி எனக்கு ஒன்றுமில்லை. உன்னை உலகம் சிரிப்ப தற்கு நீ என்னைக் கைவிடல் காரணமாகும். ஆதலின் கைவிடாதே" என வேண்டுகிறார்.

**49. சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்**
**தொழும்பையு மீசற்கென்று**
**விரிப்பிப்ப னென்னை விடுதிகண்**
**டாய்விடின் வெங்கரியி**
**னுரிப்பிச்சன் றோலுடைப் பிச்சனஞ்**
**சூண்பிச்ச னூர்ச்சுடுகாட்**
**டெரிப்பிச்ச னென்னையு மாளுடைப்**
**பிச்சனென் றேசுவனே.**

பதப்பிரிவு :

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்
தொழும்பையும் ஈசற்கு என்று
விரிப்பிப்பன் என்னை விடுதிகண்டாய்
விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் தோல் உடைப் பிச்சன்
நஞ்சு ஊண்பிச்சன் ஊர்ச்சுடுகாட்டு
எரிப்பிச்சன் என்னையும் ஆள் உடைப்பிச்சன்
என்று ஏசுவனே:

உரைநடை :

சீறும் பிழைப்பைச் சிரிப்பிப்பன், தொழும்பையும் ஈசற்கு என்று விரிப்பிப்பன், என்னை விடுதிகண்டாய், விடின் "வெங்கரியின் உரிப்பிச்சன், தோல் உடைப்

பிச்சன், நஞ்சு ஊண்பிச்சன், ஊர்ச் சுடுகாட்டு எரிப் பிச்சன், என்னையும் ஆள்உடைப் பிச்சன்" என்று ஏசுவனே

பொழிப்புரை :

வெறுக்கத் தகுந்த நிலையில் உள்ள என் உலக வாழ்க்கையை எல்லாரிடமும் எடுத்துச் சொல்லி இகழச் செய்வேன், நான் தொண்டு பூண்டிருப்பதும் சிவபெருமானுக்கே என்று பலரும் அறிந்து விரித் துரைக்கச் செய்வேன்; என்னைக் கைவிட்டுவிடுவாயோ? கைவிடுவாயேயானால் நான் உன்னைக் "கொடிய யானையின் தோலைப் போர்த்துள்ள பித்தன், புலித் தோலை உடுத்துள்ள பித்தன், ஆலகாலத்தை உண்ட பித்தன், ஊரூர்தோறும் சுடுகாடுகளிலே உள்ள தீயில் கூத்தாடும் பித்தன், இழிநிலையிலுள்ள அடியேனையும் தொண்டருள் ஒருவனாக உடைய பித்தன்" என்று கூறி இகழ்ந்துரைப்பேன்.

**விளக்கம் :**

இச்செய்யுளில் கைவிடில் தாமே இகழ்வதாக அடிகள் கூறுகிறார். இறைபணி செய்தற்கு உரித்தாக்கப்படாது உலகியலுக்கே ஆக்கப்பட்ட வாழ்க்கை வெறுக்கத் தக்கதாகும். அவ்வாழ்க்கையை எல்லோரும் எள்ளி நகையாடுவர். ஆதலின் 'சீறும் பிழைப்பைச் சிரிப்பிப்பன்' என்றார். "எங்கை உனக்கல்லாது எப்பணியுஞ் செய்யற்க" என்றபடி, என்னுடைய தொண்டினையும்

இறைவனுக்கே யாக்கி அதனை எடுத்து விரித்துரைக்கச் செய்வேன். ஈசற்கே என்ற பிரிநிலை ஏகாரந் தொக்கது; தொழும்பையும் — உம்மை இசை நிறை. உலக நெறி வெறுக்கத்தக்கது; வீட்டு நெறி விரும்பத்தக்கது. இவ்வுண்மைகளை அடிகள் கடைப்பிடிப்பது மல்லாமல் பிறரையும் கைக்கொள்ளச் செய்வதாகக் கூறுகிறார். என்னையும் — உம்மை இழிவு சிறப்பு; ஒன்றுக்கும் பற்றாத என்னையும்.

சிவபெருமானுடைய ஈறின்மையையும் அளவி லாற்றலையும் விளக்குகின்ற சொற்றொடர்களைக் கூறிப் பழிப்பது போன்று புகழ்கிறார்.

**50. ஏசினு மியானுன்னை யேத்தினு**
**மென்பிழைக் கேகுழைந்து**
**வேசறு வேனை விடுதிகண்**
**டாய்செம் பவளவெற்பிற்**
**றேசுடை யாயென்னை யாளுடை**
**யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்**
**காய்சின வாலமுண் டாயமு**
**துண்ணக் கடையவனே.**

*பதப்பிரிவு.*

*ஏசினும் யான் உன்னை ஏத்தினும்*
*என்பிழைக்கே குழைந்து*
*வேசறுவேனை விடுதிகண்டாய்*
*செம்பவள வெற்பின்*
*தேசுடையாய் என்னை ஆளுடையாய்*
*சிற்றுயிர்க்கு இரங்கிக்*
*காய்சின ஆலம் உண்டாய் அமுது*
*உண்ணக் கடையவனே.*

**உரைநடை :**

செம்பவள வெற்பின் தேசுடையாய், என்னை ஆள் உடையாய், கடையவனே, சிற்றுயிர்க்கு இரங்கி அமுது உண்ணக் காய்சின ஆலம் உண்டாய். ஏசினும் யான் உன்னை ஏத்தினும் என்பிழைக்கே குழைந்து வேசறு வேனை விடுதி கண்டாய்.

**பொழிப்புரை :**

சிவந்த பவழமலை போன்ற ஒளிவிசும் திருமேனியை உடையவனே! சிறியவனுகிய என்னையும் உன் பெருந் தன்மையால் அடிமையாகக் கொண்ட பெருமையனே! மாசங்கார முதல்வனே! சிறிய உயிர்களெல்லாம் அழிந்து போகாவண்ணம் திருவுளம் இரங்கி, அவை அமு துண்ணும் பொருட்டு, அனைவரையும் அழித்தொழிக்கும் கொடுமையினையுடைய ஆலாலத்தை உண்டருளினுய். உன் அடியவனுக இருந்தும் இவ்வளவு இழிநிலையுடைய வனுக இருக்கிருனே என்று பிறரெல்லாம் இகழ்ந்து பேசினுலும், அது கண்டு எனக்கு உற்ற துணையாகிய உன்னை நான் என்னைக் காப்பாற்றும்படி போற்றிப் புகழ்ந்தாலும் நான் என் சிறுமைக்குக் காரண மாகிய என்னுடைய தீவினையை எண்ணி யெண்ணி மனம் கரைந்து துன்புறுகிறேன். அடியேனைக் கைவிட்டு விடுவாயோ? காத்தருள்க.

**விளக்கம் :**

இறைவன் திருமேனி செம்பவளம் போன்ற செம்மேனி.

"பவளமே மகுடம் பவளமே திருவாய், பவளமே திருஉடம்பு,
அதனில், தவளமே களபம் தவளமே புரிநூல், தவளமே
முறுவல்.

(திருவிசைப்பா)

தாம் இறைவனை இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் தம் தவற்றினையே நினைந்து வருந்துவதாக அடிகள் கூறுகிறார்.

காய்சினம்—வினைத்தொகை.

கடையவன்—எல்லா உலகும் தன்கண் ஒடுங்கத் தான் ஒன்றிலும் ஒடுங்காது ஈறாய் நிற்போன்; மாசங்காரக் கடவுள் என்பது கருத்து.

"ஈறாய் முதல் ஒன்றாய்."

(திருஞான சம்பந்தர்)

"ஒன்றலா ஈறே முதல்."

(சிவஞானபோதம் சூ-1, அதி-3
உதாரணவெண்பா)

சிற்றுயிர்க்கிரங்கி அவை அமுதுண்ணற் பொருட்டுத் தான் நஞ்சுண்டமை அவனது பேரருளை விளக்குவதாகும்.

"தொல்லை யாரமுதுண்ண நஞ்சுண்டதோர் தூமணி மிடறு!"

(சம்பந்தர் திருமுறை-3)

"களனில் விடம்வைத் தளித்த அமுதன்றி மன்றிற் கழல்
வைத்து.
வளருந் திருக்கூத் தமுதுலகுக் களித்தகருணை வழுத்தினர்,"

(திருத்தொண்டர் புராணம்-
சேரமான் பெருமாள் நாயனார்)

கடையவன் என்பதைக் கடமை உடையவன் என உரைத்து அமுதுண்ணக் கடவோயாகிய நீ எனவும், கடையவன் அமுதுண்ண எனக் கூட்டி, கடைந்தவனாகிய திருமால் அமுதுண்டு வாழும்படி சிவனே நீ நஞ்சுண்டனை எனவும் பொருள் கூறுவர். தேவர்கள் அமுதுண்ணும்படி எல்லாவற்றிற்கும் ஈருகிய முதல்வனே, நீ நஞ்சுண்டாய். கடையவன் — ஈற்றுத் தொழிலாகிய சங்காரத்தைச் செய்யுங் கடவுள்.

மணிவாசகர் நீத்தல் விண்ணப்பத்தின் தொடக்கத்தில் தன்னைக் கடையவனென வைத்துத் தொடங்கினர். முடிவில் இறைவனைக் கடையவனுக வைத்து முடிக்கிருர். இவ்வாறு பிரபந்தத்தின் ஈறு அதன் முதலோடு ஒன்றி முடிவதனை மண்டலித்து முடிகிறது என்பர்.

(இதன் தொடர்ச்சியை இரண்டாவது பகுதியிற் காண்க)

திருச்சிற்றம்பலம்.

---